# தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு

(மெக்கன்சி சுவடி 3180)

கே.எம். வேங்கடராமையா



# தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு

(மெக்கன்சி சுவடி டி 3180)

(ஒப்பீட்டாய்வு)

## வரலாற்றாராய்ச்சிக் குறிப்புக்களுடன்


பதிப்பாசிரியர்

கே.எம். வேங்கடராமையா

சிறப்புநிலைப் பேராசிரியர்

அரிய கையெழுத்துச்சுவடித் துறை


# History of the Maratha Rulers of Thanjavur

(Mackenzie Manuscript D 3180)

Edited with Historical Notes


By

K. M. VENKATARAMIAH

Emeritus Professor

Department of Rare Paper Manuscripts





தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

Tamil University, Thanjavur

ISBN 81-7090-075-1

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 69

திருவள்ளுவர் ஆண்டு: 2018 தை — பிப்ரவரி 1987

நூல் : தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு

ஆசிரியர் : கே.எம். வேங்கடராமையா

விலை : உரூ.165-00

பதிப்பு : முதற்பதிப்பு

அச்சு : தமிழ்ப் பல்கலைக் கழக மறுதோன்றி
அச்சகம், தஞ்சாவூர்.

# இதனுள் —

# முன்னுரை

உலகத்திலேயே மிகப்பெரிய கல்வெட்டாகத் திகழ்வது, தஞ்சைப் பெரிய கோயிலில் காணப் பெறுவதும் மராட்டிய அரசர்களது வரலாற்றைக் கூறுவதும் ஆகிய மராட்டிய மொழிக் கல்வெட்டே என்பது பலர் அறிந்த செய்தியாகும். இம் மராட்டியக் கல்வெட்டுக்குரிய தமிழாக்கச் சுவடிகள் பற்றி அன்பர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள் சில ஆண்டுகட்கு முன் எழுதிய கட்டுரையொன்று என் நினைவுக்கு வந்தது. அதுபற்றிச் சிந்தித்தபொழுது தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டுத் துறையில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றும் அன்பர் புலவர் செ. இராசு அவர்கள், சென்னை, அரசினர் கிழக்கியல் சுவடிகள் நூலகத்தில்[1] உள்ள மெக்கன்சி சுவடித் தொகுப்புக்களுள் தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு - வமிசாவளி பற்றியுள்ள ஐந்து சுவடிகளின் பெயரும் அவற்றின் நூலக எண்ணும் குறித்துக் கொடுத்தார். சென்னைக்குச் சென்று பார்த்தபொழுது டி. 3762 என்ற எண் கொண்ட சுவடி எளிதில் படிக்க முடியாதவாறிருந்தது; டி 3180 என்ற சுவடி படிப்பதற்கெளிதாக இருந்தது. இதன் காப்பீடு (Restored) சுவடியொன்று, டி 3119 என்ற எண் உடையது, குறைச் சுவடி, தெளிவாகப் படித்தற்கியன்ற வண்ணமிருந்தது. டி 3119ஐப் பெற்றுப் படித்துப் பார்த்தபொழுது, அச்சுவடியும், தஞ்சைப் பெரிய கோயிலில் மராத்தி மொழியில் கல்வெட்டாக இருப்பதும், தமிழில் பெயர்த்து ஆங்கிலச் சுருக்கத்துடன் தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தார் வெளியிட்டிருப்பதுமான போன்ஸ்லே வமிச சரித்திரம் தமிழாக்கம், செய்திகள் கூறுவதிலும் அவற்றின் வரிசையிலும் ஒத்திருத்தல் காணப்படலாயிற்று; சில இடங்களில் சிறிது மாறுபட்டிருத்தலும் அறியவந்தது. போ. வ. ச. வில்[2] பக்கம் பதினேழில் உள்ள அடிக்குறிப்பில் கண்ட ஐயத்தை (பிழையை) இச்சுவடி போக்குமா என்ற நோக்குடன் பார்த்தபொழுது போ. வ. ச. வில் கண்ட பிழையைப் போக்குவதாக இச்சுவடி அமைந்தமை மிக்க மகிழ்ச்சி தருவதாயிற்று. ஆகவே, பிற சுவடிகளைச் சென்னைச் சுவடிகள் நூலகத்தினின்று பெற முயற்சிகள் எடுக்கப் பட்டன. மற்ற இரண்டு முழுச்சுவடிகளும் நுண்படச் சுருள் (Micro Film) எடுத்து அச்சிட்டுப் பார்த்தபொழுது, இறுதியில் சுவடிகளின் நாட்குறிப்பு,

"சாலியவாகன சகம் 1725 ருத்ரோத்காரி வருஷம், 1803 மார்ச்சி மீ 25"

என்றும், மராத்தி கல்வெட்டின் தமிழாக்க இறுதியில்,

---

1. Madras Government Oriented Manuscripts Library.

2. போ. வ. ச. – போன்ஸ்லே வமிச சரித்திரம். இந்நூலில் யாண்டும் போ. வ. ச.என்று குறிக்கப்பட்டு வரும். இது சரசுவதி மகால் வெளியீடு எண் 46, இரண்டாம் பதிப்பு, 1980.

"சகம் 1725 ருத்ரோத்காரி வருஷம் மார்க்கசிரிஷ அமாவாசைக்குச் சரியான கி.பி. 1803 டிசம்பர் 13உ"

என்றும் அறியலாயிற்று. இதனான் கல்வெட்டினும் தமிழ்ச் சுவடி முந்தியதாகலாம் என்று கருதுவதற்கிடம் தந்தது.

இந்நிலையில் மராத்தியக் கல்வெட்டின் தமிழாக்கமாகிய போ. வ.ச வையும், மராத்தியர் வரலாறு கூறும் சுவடியையும் ஒப்பீடு செய்து வரலாற் றாராய்ச்சிக் குறிப்புக்களுடன் தமிழ்ச் சுவடியைப் பதிப்பிக்கலாம் என்ற முடிவுக்கு வந்து, புலக்குழுக் கூட்டத்திலும் ஒப்புதல் பெற்று, இப்பணி மேற் கொள்ளப் பெற்றது.

இதுகாறும் நடந்தேறிய மெக்கன்சி சுவடிகளின் தொகுப்பு ஆய்வுப் பணிபற்றிச் சிறிது கூறுவது இங்குப் பொருத்தமாகலாம்.

மெக்கன்சி தொகுத்த சுவடிகளை அவர் மனைவியிடமிருந்து விலைக்குப் பெற்ற பின்னர்த் தென்னிந்தியப் பகுதியைச் சேர்ந்த சுவடிகள் கி.பி. 1828 செப்டம்பர்த் திங்களில் சென்னைக் கல்லூரி நூலகத்துக்குக் கொண்டு வரப் பட்டன.[3] பின்னர் வில்லியம் டெய்லர் என்பார் இவற்றை ஆய்வு செய்வதற்கு 10-5-1837இல் நியமிக்கப்பட்டார். அவர் மெக்கன்சி சுவடிகளை ஆய்ந்து 'தமிழ் மொழியிலுள்ள கீழ்த்திசை நாடுகளின் வரலாற்றுச் சுவடிகள்'[4] என்ற பெயரில் இரு நூல்களை வெளியிட்டார். பின்னர் இத் தொகுதிகள் சென்னைக் கல்விச் சங்கத் துக்கு மாற்றப்பட்டன. அந்நாளில் கிழக்கிந்தியக் கம்பெனியின் இங்கிலாந்து அலுவலகத்தில் கிடந்த சுவடிகளைப் பிரௌன் என்பார் கண்டு, சுருக்கமான பட்டியல் தயாரித்துச் சென்னைக் கல்விச் சங்கத்துக்கு 1844 இல் கொண்டுவரச் செய்தார். சென்னைக் கல்விச் சங்கம் உரிய கவனம் செலுத்தாமையால் அவை சென்னைக் கல்லூரி நூலகத்துக்குக் கொண்டுவரப்பட்டன. அங்கு வால்டர் எலியட், டெய்லர் என்பார் அட்டவணை தொகுக்கும் பணியில் ஈடுபட்டவர். பின்னர் அவை கல்வித்துறை இயக்குநர் அலுவலகக் கிடங்கில் வைக்கப்பட்டன. எனினும் அவை சீரழிந்து கிடந்தமையின் 6-2-1869 இல் தொகுப்புக்களை அழியாது காக்கும் வழிமுறைகளை ஆய்தற்கு ஒரு குழு நியமிக்கப்பட்டது சென்னை மாநிலக் கல்லூரியின் வடமொழிப் பேராசிரியர் மெக்கன்சியின் தொகுப் புக்களுக்குப் பொறுப்பாளராக நியமனம் செய்யப் பெற்றார். ஆகவே, இத் தொகுப்புக்கள் புதிய மாநிலக் கல்லூரிக் கட்டடத்துக்குக் கொண்டு செல்லப் பட்டன. பின்னர் 1895 இல் செயின்ட் ஜியார்ஜ் கோட்டையில் ஒரு சிறிய அறைக்கும்,

---

3. இராசேந்திரன், பக்கம் 48, அடிக்குறிப்பு 58.
4. Oriental Historical Manuscripts in the Tamil Language, Translated with Annotations by William Taylor, Two Volumes, 1835.

1896இல்-எழும்பூரில் உள்ள அருங்காட்சியகத்துக்கும் மாற்றப்பட்டு, 1939 ஜனவரியில் இப்பொழுதுள்ள கிழக்கியல் சுவடிகள் நூலகமாக அமைக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு ஆய்வாளர்கட்குப் பெரிதும் பயன்பட்டு வருகின்றன.[5]

தமிழ்ச் சுவடிகள் 1379 என்று மேற்கண்ட அரசினர் கிழக்கியல் சுவடிகள் நூலகத்தினின்று 1951இல் வெளியான பட்டியிலிலிருந்து தெரிகிறது. இவை வெவ்வேறு சுவடிகளாக இருப்பினும் வெவ்வேறு நூல்கள் அல்ல. ஒரு சுவடிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சுவடிகளும் உண்டு. உதவியாளரின் வழி படியெடுத்துப் பெறப்பட்ட சுவடிகள் பலவற்றையும் மெக்கன்சி மீண்டும் படியெடுக்கச் செய்தமையால் சுவடிகள் பல்கிக் காணப்படுகின்றன.[6]

வில்லியம் டெய்லர் 1835இல் வரலாற்றுச் சுவடிகள் என்ற நூலை இரு பகுதிகளாக வெளியிட்டதுடன்,[7] கி.பி. 1857 இல் ஒரு பெரிய பட்டியலை விளக்கக் குறிப்புக்களுடன் வெளிப்படுத்தினார்.[8]

வில்சன் என்பார் மெக்கன்சி தொகுப்புக்கள் என்ற நூலை 1882இல் வெளியிட்டார்.[9] இதில் ஒவ்வொரு சுவடி பற்றியும் குறிப்பு உண்டு.

மெக்கன்சியின் தமிழ்ச் சுவடிகளுக்குரிய அகரவரிசைப் பட்டியல் 1951இல் அச்சிடப்பெற்றது. அச்சுவடிகளுக்குரிய விளக்கமான குறிப்புக்கள் 1948 இல் வெளியான ஏழாவது தொகுதியிலும், 1953-இல் வெளியான எட்டாவது தொகுதியிலும், 1954இல் வெளியான ஒன்பதாம் தொகுதியிலும், 1955இல் வெளியான பத்தாவது தொகுதியிலும், 1960இல் வெளியான பதினொராம் தொகுதியிலும் காணப்படுகின்றன. இவ்விளக்க அட்டவணையால் அகரவரிசைப் பட்டியலில் இடம்பெறாத 155 சுவடிகள் காணப்பெறுகின்றன என்று முனைவர் ம. இராசேந்திரன் தன் ஆய்வேட்டில் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார்.[10]

மெக்கன்சி சுவடிகளுட் சில, கிழக்கியல் சுவடிகள் நூலக வாயிலாக அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டுள்ளன. கர்நாடக ராசாக்கள் சவிஸ்தார சரித்திரம்,[11] கேரள தேச வரலாறு,[12] கொங்க தேச ராசாக்கள் சரித்திரம்,[13] சோழன் பூர்வ பட்டயம்,[14] தென்னிந்தியக் கோயில் சாஸனங்கள் என்பவை அவை.

---

5. இராசேந்திரன், பக்கம் 51-53. 6. ,, பக்கம் 61. 7. அடிக்குறிப்பு 4 காண்க.
8. William Taylor, Catalogue, Raisonnee, Oriental Manuscripts, Madras, 1857.
9. Wilson, H.H., Wilson's Mackenzie Collection, 1882.
10. இராசேந்திரன், பக்கம் 288-294.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 11. | அகரவரிசைப் பட்டியல் | வரிசை | எண் | 125; | டி 2768 | வெளியீடு ஆண்டு | 1952 |
| 12. | ,, | ,, | ,, | 219; | ஆர் 401 | ,, | 1960 |
| 13. | ,, | ,, | ,, | 227; | டி 3158 | ,, | 1950 |
| 14. | ,, | ,, | ,, | 1073; | டி 2981 | ,, | 1950 |

தென்னிந்தியக் கோயில் சாஸனங்கள் மூன்று தொகுதிகளாக[15] விளக்கக் குறிப்புக்களுடனும் ஆராய்ச்சி யுரைகளுடனும் வெளிவந்துள்ளமை ஆராய்ச்சி யுலகு நன்கறியும்.

தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத் துறையின் வெளியீடாகப் பாளையப் பட்டுக்களின் வமிசாவளி[15அ] என்ற தலைப்பில் நான்கு தொகுதிகள் வெளிவந்துள் ளன.

சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக மெக்கென்சி தொகுதிகள் என்ற நூல் 1972இல் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இதில் 341 தமிழ்ச் சுவடிகளுக்கு விளக்கக் குறிப்புக்கள் உண்டு.[15ஆ]

மெக்கன்சி தொகுப்பில் பெரும்பாலும் வரலாறு பற்றிய சுவடிகளே உள்ளன. அத்தகைய வரலாற்றுச் சுவடிகளுள் தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு பற்றிய சுவடிகள் சிறப்பிடம் பெறுவனவாகும்.

தஞ்சை மராட்டிய மன்னர்களைப் பற்றிக் காகிதக் கையெழுத்துச் சுவடிகள் இருந்தபோதிலும், அச் செய்திகளையே கூறும் மராத்திக் கல்வெட்டு இருத்தல் வரலாற்றாய்வாளர்கட்குப் பெருவிருந்தாக அமைகின்றது.

மராட்டியர் வரலாறு கூறும் தமிழ்ச் சுவடி பாபுராவ் என்பவரால் 1803 மார்ச்சுத் திங்கள் 25ஆம் நாள் எழுதி முடிக்கப்பட்டது. டி 3762 என்ற சுவடி தரங்கம்பாடியில் இருந்த வேறொரு சுவடியைப் பார்த்து 4-1-1804இல் எழுதப் பட்டது என்று அச்சுவடியில் காணும் குறிப்பால் அறியப்பெறும். டி 3762 எதைப் பார்த்துத் தரங்கம்பாடியில் எழுதப்பட்டதோ அதுவே முதல் சுவடி யாதல் கூடும் என்றும், பாபுராவ் மெக்கன்சியின் உதவியாளர்களுள் ஒருவர் என்று அறியப்பெறுதலால் அவர் தரங்கம்பாடியில் இருந்திருத்தல் கூடும் என் றும், அவர் எழுதி வைத்திருந்த தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு நோக் கியே, வேதநாயகர் சேகரித்த டி 3762 என்ற சுவடி 4-1-1804இல் எழுதப்பட் டிருக்கலாம் என்றும் ஊகித்தறிய வாய்ப்பு இருக்கிறது.

---

15. தி. ந. சுப்பிரமணியம் - தென்னிந்திய கோயில் சாஸனங்கள் பகுதி I 1953; பகுதி II 1954; பகுதி III பாகம் I 1955; பகுதி III 1 பாகம் II 1957

15அ. தொகுதி I 1981; தொகுதி II 1981; தொகுதி III 1981

15ஆ. மேலும் "மெக்கன்சியின் தமிழ்ச்சுவடிகள் ஓராய்வு" என்ற முனைவர்பட்டம் ஆய்வேட்டில், செஞ்சி ராசாக்கள் கைபீது (டி3819); அளகேசுவர ராசன் கதைச் செய்யுளுரை (டி 2096; டி 2764); தெய்வீகராசன் கைபீது டி 3026; டி 3421) என்ற மூன்று நூல்களை ஆய்வுக் குறிப்புக் களுடன் புலவர் ம. இராசேந்திரன் தந்துள்ளார்.

இம்மராட்டியர் வரலாறு கூறும் சுவடியை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொள்ளலாம்:—

1. ஷாஜியின் முன்னோர் பற்றியவை;
2. ஷாஜி, சிவாஜி, அவர் வழியினர் ஆகியோர் வரலாறு;
3. தஞ்சையைக் கைப்பற்றிய ஏகோஜி, அவர் வழியினர் வரலாறு.

பாபுராவ் இம்மராட்டியர் வரலாறு எழுதுவதற்கு ஆதாரமாக இருந்த நூல்களுள் முதலிடம் பெறத் தகுதியுடையது சிவபாரதம் என்பதாகும். இது வடமொழியில் கவீந்திர பரமானந்தர் என்பவரால் எழுதப்பட்டது. இதில் நான்கு சுவடிகள் தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் உள்ளன.[16] இதன் தமிழாக்கம் ஒரு சுவடிமட்டும் சரசுவதி மகால் நூல் - நிலையத்தில் உள்ளது.[17] சிவபாரதம் சிவாஜியின் வரலாற்றில் ஒருபகுதிமட்டும் கூறுவது. மேலும் கி.பி. 1697 இல் கிருஷ்ணாஜி அனந்த் சபாசத் என்பார் எழுதிய சிவச்சத்திரபதி என்ற நூலும், கி.பி. 1685இல் முற்றுப்பெற்ற ஸஹானவ் கால்மி வரலாறும், கி.பி. 1718 இல் எழுதப்பெற்ற சிவதிக்விஜய என்ற நூலும், 1760-1770இல் எழுதப்பெற்ற சித்ரகுப்தா எழுதிய வரலாறும், ஜேதேசாகாவளியும் பயன்பட்டிருத்தல் கூடும் என்று ஊகிக்கலாம்.

தஞ்சை மராட்டிய மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக்குத் தஞ்சை அரண்மனையிலிருந்த ஆவணங்கள் பயன்பட்டிருக்கலாம் என்பது உறுதி; செவி வழிச் செய்திகளும் உதவியாக இருந்திருத்தல் கூடும்.

"தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு" எழுதியவர்களில் திரு கே. ஆர். சுப்பிரமணியன் அவர்கள் மெக்கன்சி சுவடிகளை ஓரளவு பயன்படுத்தி இருத்தல் கூடும் என்றுதெரிகிறது.[18] மெக்கன்சி சுவடிகளைச் சென்னைத் தமிழ்ச் சுவடிகள்[19] என்று தன் நூலில் குறித்துள்ளார். சீனிவாசன் அவர்கள் இச் சுவடிகளை ஆறு

---

16. டி 4223 - டி 4226.

17. இது தஞ்சைச் சரசுவதி மகாலில் உள்ள டி 630 எம் 214 என்ற எண் உடைய ஓலைச் சுவடியாகும். இதன் முதற் பக்கம் இறுதிப்பக்கம் நிழற்படம் பிற்சேர்க்கையில் காணலாம். இச் சுவடி மிக நல்ல முறையில் இருக்கிறது. இச்சுவடி 1710-1728 வரை ஆட்சி செய்த சரபோஜி மன்னர் காலத்தது என்று இதனைப் பதிப்பித்த திரு. சிராளன் அவர்கள் முன்னுரையில் எழுதியுள்ளார். எனவே அவ்வேடு இற்றைக்கு ஏறத்தாழ 255 ஆண்டுகட்கு முற்பட்டதாதல் வேண்டும். அவ்வேடு இவ்வளவு பழமையுடையதாகத் தோன்றவில்லை. ஒருவேளை பாபுராவ் பயன்படுத்துவதற்காகப் படியெடுக்கப்பட்ட சுவடியோ என்றெண்ணத் தோன்றுகிறது. எனின் மூலச் சுவடியெங்கே என்றற்கு விடை பகர்தல் இயலாததாயுள்ளது.

18. சுப்பிரமணியன், பக்கம் 11.fn. 16,19,28,40,41,43,45,46,49.

19. The Madras Tamil Manuscripts, Subramanian, page 16.

இடங்களில் குறிப்பிட்டுள்ளார்[20]. அன்னோர் தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு எழுதுங்கால் இச்சுவடிகளையோ, மராத்தியக் கல்வெட்டுக்களையோ ஆதரவாக ஏற்றுக் கொண்டதாகத் தோன்றவில்லை.

எனினும் இச்சுவடிகள் வரலாற்றாய்வுக்குத் துணை புரியும் என்ற கருத்தாலும், தென்னாட்டு அரசியலிலும் சமுதாய வாழ்க்கையிலும் மராட்டிய அரசர்களின் பங்கு மதிப்பிடற்கு இச்சுவடிகள் பயன்படும் என்று கருதியமையாலும் இச்சுவடிகளுள் ஒன்று ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

கிடைத்த மூன்று சுவடிகளுள் டி 3119 குறைச்சுவடி;[21] டி. 3762[22] படிப்பதற்கு எளிமையாக இல்லை; டி 3180,[23] டி 3762 போன்று பிழைகள் மலிந்ததாயினும், படித்தற்கு எளிமையாய் இருக்கிறது. ஆகவே டி 3180 எண் உள்ள சுவடி இங்குப் பதிப்பித்தற்கு ஏற்றதாகக் கொள்ளப்பட்டது.

பதிப்பிங்குங்கால் சுவடியில் உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளது எனினும் நிறுத்தக் குறியீடுகள் சேர்க்கப்பட்டுள்ளன. போன்ஸ்லே வமிச சரித்திரம் ஒப்பீடு செய்யப்பெற்று இவற்றிடையே காணப்பெறும் வேறுபாடுகள் ஆங்காங்கே அடிக்குறிப்பாகத் தரப்பட்டுள்ளன. டி 3762, டி 3119 ஆகியவற்றுடனும் வேண்டிய இடங்களில் ஒப்பு நோக்கப்பட்டுள்ளது. மிகக் கடினமான, - வழக்குவீழ்ந்த - அந்நாளில் வழக்கிலிருந்த சொற்றொடர்களுக்கு - சொற்களுக்கு அடிக்குறிப்பில் பொருள் தரப்பெற்றுள்ளது; அல்லது போ. வ. ச. வில் பயன்படுத்திய சொல் - சொற்றொடர் தரப்பட்டுள்ளது. இது ஓரளவு பெரிய சுவடியாகையால் 16 தலைப்புக்கள் கொடுத்து அச்சிடலாயிற்று. இதன் சுருக்கமும், கால்வழிமுறையும் அடுத்துத் தரப்பட்டுள்ளன. மகாராஷ்டிரத்து வரலாற்றுப் பேராசிரியர்கள் தம் நூல்களுட்கூறிய செய்திகளோடு மாறுபட்ட இடங்களும், இச்சுவடியில் உள்ள செய்திகளுக்கு ஆதரவுகளும் இன்றியமையாத இடங்களில் தரப்பட்டுள்ளன.

திருமுடி சேதுராமன் சுவடி என்றொரு சுவடி தஞ்சைச் சரசுவதி மகாலில் உள்ளது. இதன் மூலச்சுவடி 15—8—1849இல் எழுதி முடிக்கப்பட்டது. இது போ. வ. ச. வைப் பெரிதும் பின்பற்றியது என்னலாம். திருவிடைமருதூரிலுள்ள அமர்சிங்கின் சார்புடைய சுவடி ஆகையாலும், 1849-இல் எழுதப்பட்டமையாலும், அமர்சிங்கைப்பற்றியும் அவர் வழியினரைப் பற்றியும் சில செய்திகள் அதிகமாகக் காணப்படுகின்றன. இச்சுவடி, பெரும்பாலும் போ. வ. ச.

---

20. சீனிவாசன், பக்கம் 13,134,168f.n., 219,231f.n., 236.f.n.
21. பட்டியல் வரிசை எண் 695.
22. ,, ,, 361.
23. ,, ,, 364.

மெக்கன்சி சுவடி ஆகியவற்றினோடு ஒத்திருப்பினும், வேறுபட்ட இடங்களும் உண்டு; அதிகமான செய்திகளும் உண்டு; விடுபட்டவையும் உண்டு. இவை ஆங்காங்கு உரிய இடங்களிற் சுட்டப்பட்டுள்ளன.

பதிப்பெய்தும் சுவடி 19-ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் எழுதப்பட்டதாதலின், அந்நாளைய மக்களின் பேச்சுமொழி - எழுதும்மொழி பற்றி அறிய, இச்சுவடி மொழியியல் ஆய்வாளர்க்குப் பெரிதும் பயன்படும் என்பது உறுதி. இந்நோக்கில் முழுச் சொல்லடைவும் இணைக்கப்பட்டுள்ளது.

**நன்றியுரை**

இச்சுவடியைப் பதிப்பிக்கலாம் என்று ஒப்புதல் அளித்து வேண்டிய அளவு விளக்கங்களையும் தந்த சுவடிப்புலக்குழு, அரிய கையெழுத்துச் சுவடித் துறை ஆய்வுக்குழு ஆகியவற்றின் உறுப்பினர்கட்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

இப்பணியை மேற்கொள்வதற்கு ஏற்ற நிலையில் பணி நீட்டிப்பு அளித் தருளியதுடன், சுவடிகள் முதலியவற்றைப் பெறுவதற்கு உடனுக்குடன் வேண் டிய பொழுதெல்லாம் இசைவாணைகளை வழங்கி, ஆய்வுரைகளைக் கண்டு அவ்வப்பொழுது ஊக்கியருளிய தமிழ்ப் பல்கலைக் கழகத்துத் துணைவேந்தர், முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மராட்டியர் வரலாறு தொடர்புடைய எல்லாச் சுவடிகளையும் நுண் படம் எடுத்துக் கொள்ள அனுமதித்தும், காப்பீடு சுவடிகளைத் தந்தும், இச் சுவடியை அச்சிட இசைவு நல்கியும் ஊக்கமளித்த சென்னை அரசினர் கிழக்கியல் சுவடிகள் நூலகத்துப் பாதுகாவலர் அவர்களுக்கும், சிறப்பாகத் தமிழ்நாடு அரசு தொல்பொருள்துறை இயக்குநர் முனைவர் இரா. நாகசாமி அவர்கட்கும் நன்றி.

சென்னைக் கிழக்கியல் சுவடிகள் நூலகத்து அன்பர்கள் திரு. சௌந்தர பாண்டியன், முனைவர் ம. இராசேந்திரன் ஆகியவர்கட்கும் நன்றியுரியன.

தஞ்சை, சரசுவதி மகால் நூல் நிலையத்து நூலகர், உதவி நூலகர்கள், தமிழ், வடமொழி, தெலுங்கு, மராத்தி மொழிப் புலவர்கள் ஆகியவர்கள் அவ்வப்போது அளித்து வரும் உதவிகட்கு மனமார்ந்த நன்றி.

புலவர் செ. இராசுவுக்கு ஆசியொடு கூடிய நன்றியுரியதாகுக.

அரிய கையெழுத்துச் சுவடித்துறை
24—1—1986

கே. எம். வேங்கடராமையா
சிறப்பு நிலைப் பேராசிரியர்

## குறியீடுகளும் விளக்கங்களும்

1. போ. வ. ச. - போன்ஸ்லே வமிச சரித்திரம் (தமிழாக்கம்)
2. சென் (Sen) - Siva Chatrapati
3. கி. பா. (Kincaid) - A History of the Maratha People
4. டஃப் (Duff) - A History of the Marathas
5. சர்தேசாய் (Sardesai) - New History of the Marathas
6. சர்க்கார் (1) - Sarkar (1) - Shivaji & His Times
7. சர்க்கார் (2) - Sarkar (2) - House of Shivaji
8. தகாகாவ் - (Takakhav) - Life of Shivaji Maharaj
9. சிவபாரதம் - கவீந்திரபரமானந்தர், சிவபாரதம் - தமிழாக்கம்
10. திருமுடிசேதுராமன் - திருமுடிசேதுராமன் சுவடி, இராஜசரித்திர வமுஷாவளி
11. சாமிக்கண்ணுப்பிள்ளை - இந்தியன் எஃபிமரிஸ், பகுதி VI
12. சீனிவாசன் - (Srinivasan) - Maratha Rule in the Carnatic
13. அவுரங்கசீபு (Aurangazeb) - Jadunath Sarkar, History of Aurangazeb Vol. I to V
14. சுப்பிரமணியன் (Subramanian) - The Maratha Rajahs of Tanjore
15. The Maratha Supremacy - The History & Culture of the Indian People Vol. VIII, The Maratha Supremacy.
16. Rajayyan - Rajayyan K. A History of British Diplomacy in Tanjore.
17. Pearson - Memoirs of the Life and Correspondence of the Rev. Christian Frederick Swartz.
18. G. O. M. L. - Government Oriental Manuscripts Library, Madras
19. Mahalingam - Mackenzie Manuscripts, Part I Madras University
20. இராசேந்திரன் - Rajendran - மெக்கன்சியின் தமிழ்ச்சுவடிகள் – ஓர் ஆய்வு, சென்னைப் பல்கலைக்கழகம் (அச்சாகாத ஆய்வேடு)
21. கே. எம். வே – கே.எம். வேங்கடராமையா, தஞ்சை மராட்டி மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு (1984)

# தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு

## (மெக்கன்சி சுவடி எண் 3180; எம் 79)

(1) ஹாஜியின் முன்னோர்

ஸ்ரீமது போசலெ வம்சத்தின்[1] ஆதிமூலபுருஷர் ஸ்ரீமன் நாராயணன் அவர் பரம்பரையாய் ஸ்ரீ சூரிய ஞுருயணன் அவரிடத்திலுண்டானவர் மனு[2] மனுவுடைய சந்ததியில் யிக்ஷவாக்கு[3] அந்த ருஜாவினுடைய சந்ததிகள் கிறேதாயுகம்[4] திறேதாயுகம் துவாபரயுகம் யிந்த மூணுயுகத்திலேயும் பிறக்கியாதியான புண்ணியசாலிகளான ருஜாக்களா யிருந்தார்கள். அந்த வம்சத்தில் யிப்போ கலியுகத்தில் ஸெம்பு பறுவத[5] பிருந்தத்தில் மஹறுருஷ[6] தேசாதிபதி சவுரிய அவதாரிய

---

1. 'போன்ஸ்லே வமிசம்' என்று போ. வ. சவில் உள்ளது.

வைத்திசுவரன் கோயில் தீர்த்தக்குளக்கரை மண்டபத்தில் சகாப்தம் 1692 க்கும் 1689 க்கும் உரிய துளசா காலத்திய கல்வெட்டுக்களில் போஸலே போஸால என்று இவ்வமிசம் குறிக்கப்பட்டுள்ளது. (திரு செ. ராசு அவர்களிடம் உள்ள கையெழுத்துப் பிரதி எண் 59, எண் 60). வெண்ணாற்றங் கரையிலுள்ள இரண்டாம் சிவாஜி காலத்துப் 'பூஷண பத்திரம்' ஒன்றில் 'ஸ்ரீமத் போஸல குலோத்பவ' என்றுள்ளது (மோடி தமிழாக்கம் 5 - பக்கம் 236). திரு இராசு அவர்கள் பதிப்பித்த 'தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் 50' என்ற நூலிலும் பக்கம் 77, 106, 185 இல் போசலகுலம் என்றும், பக்கம் 35, 129 இல் போசலவமிசம் என்றும், பக்கம் 98 இல் போசல வமிச திலகர் என்றும், பக்கம் 83, 90 இல் போசல நீசுவரன் என்றும் வருதல் காணப்பெறும்.

ஆனால், டஃப் என்பார் இவர்களை 'போன்ஸ்லே' என்றே கூறுகிறார் (பக்கம் 43).

உதையபுரத்தில் லக்ஷ்மண்சிங்கு என்றொருவர் இருந்தார். அவருடைய பெயரர் ஸஜனாசிங்கு; அவர் வழியில் வந்தவர் ஷாஹாஜிபோஸ்லே; இவருடைய முன்னோர்களில் ஒருவர் தேவராஜ்ஜி என்பவர் ஆவர். அவர் உதையபுரத்து ராணாவுடன் சண்டையிட்டுத் தக்காணத்துக்கு ஓடினார். அங்கே அவரும் அவர் வழியினரும் போஸ்லே என்று வழங்கப்படலாயினர் (கி. பா. பக்கம் 112-113). போஸ்லே என்பது கோஸ்லே (ஓரிடம்) என்றதினின்று வந்தது என்று கூறப்படுகிறது (கி.பா. பக்கம் 133 அடிக்குறிப்பு).

2. சூரியனிடத்தில் தோன்றியவர் மனு:

''மண்டிலஞ்சேர்
செய்ய தனியாழித் தேரோனும் - மையல்கூர்
சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரின்
மைந்தனை யூர்ந்த மறவோனும் - விக்கிரம சோழனுலா (வரி 5-8).
(தனியாழித் தேரோன் — சூரியன். தேரின் மைந்தனையூர்ந்த மறவோன் - மனு).
இராசராச சோழனுலா வரி 3-5; கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியம் 10—ஆகியவற்றிலும் சூரியன்மகன் மனு என்று கூறப்பட்டுள்ளது.

3. யிக்ஷவாக்கு - இட்சுவாகு. மனுவின் மகன் இக்குவாகு என்று கலிங்கத்துப்பரணி, தாழிசை 10 பகரும்.

4. கிறேதாயுகம்-கிருதயுகம்

5. ஸெம்பு பறுவதம் - செம்பு பர்வதம்; இது சதாரா மாவட்டத்திலுள்ளது (சென், பக்கம் 2 இல் அடிக்குறிப்பு எண் 2)

6. மஹறுருஷ-மாருஷ்ட (டி3119)

குணப்பிறக்கியாதியுள்ள ருஜா ஸெம்பு[7] யென்கிறவர் அவதாரமானுர்.[8] அந்தருஜா தம்முடைய சுவதற்ம்மயுக்த்த[9] மாற்க்கமாய் ருச்சியபரிபாலனம் பண்ணிக் கொண்டு ஸேம்பு[10] பறுவதத்தில் ஸ்ரீ ஸாம்பசிவ[11] பிற ஸாதாற்த்த மாய்[12] அனுஷ்டானம் பண்ணிக்கொண்டு வந்தார். அவர் பண்ணின அனுஷ்ட் டானத்துக்கு ஸ்ரீஸாம்பசிவன் சந்தோஷமாய் அந்த ருஜாவினுடைய[13] சொற் பனத்திலே பிறசன்னமாய்[14] உமக்கு சந்ததி சம்பத்துகள் விசேஷமாக உண்டாகு மென்று பிறசாதம் பண்ணினுர். உடனே கொஞ்ச நாளைக்கு பிற்ப்பாடு அவருக்கு பிறதம யெகொஜி[15] ருஜா பிறந்தார். அந்த யெகொஜி ருஜாவானவர் ஸெம்பு பறுவத பிருந்தத்தில் ஷஹித மாற்கமாய்[16] ருச்சியபாரமாண்டு கொண் டிருக்கச்சே சாம்பசிவன் அனுக்கிறகத்தினுலே அவருக்கு முதல் சறபருஜா[17] என் கிற சத்குமாரன்[18] பிறந்தான் = 2 =

அந்த சறபருஜா[19] சாறவகாலமும் விபூதிருத்திராட்சம் தரித்துக் கொண்டு[20] ஸ்ரீ ஸொமஸ்கந்தமூற்த்தி உபாசனையுடையவராய்[21] ருச்சிய பரிபாலனம் பண் ணிக்கொண்டுயிருக்கச்சே அந்த சோமஸகந்த மூற்த்தி சொற்பனத்தில் பிறசன்ன மாய் மந்திர உபதேசம் பண்ணினுர். அந்த மந்திர பிறபாவத்தினுலே தெற்க்கு பிருந்தியபாதஷாவுக்கு சந்தோஷமாயி[22] பிந்தளிபுரம்[23] என்கிறத்துக்கு

---

7. ஸெம்பு-செம்பு (டி3119)

8. 'அவதாரமானுர்' என்றவிடத்து 'ராஜ்யபரிபாலனம் செய்துவந்தார்' என்று போ. வ. ச. வில் பக்கம் 1 இல் உள்ளது.

இதனுல் போசலே (போன்ஸ்லே) வமிசத்துக்கு மூல அரசர் சம்பு என்பது பெறப்படும்.

9. யுக்த்த என்பது யுகுத்த என்று 3119 இல் உள்ளது. இதற்கடுத்து 'விகுத' என்ற சொல்லும் அங்குளது. இங்கு 'நீதிமுறைப்படி' என்று போ. வ. ச. கூறும்.

10. ஸேம்பு-சம்பு (டி3119)

11. ஸ்ரீ ஸாம்பசிவ - ஸ்ரீ சாம்பசிவ (டி3119)

12. பிற ஸாதாற்த்தமாய் - அருளைவேண்டி (போ. வ. ச. பக். 2)

13. ருஜாவினுடைய - ராசாவுட (டி3119)

14. பிறசன்னமாய் - பிரத்தியட்சமாய் (டி3119)

15. பிறதம யெகொஜி - முதல் ஏகோஜி

16. ஷஹித மாற்கமாய் - விகசித மார்க்கமாய் (டி3119); நேர்மையாக (போ. வ. ச.)

17. முதல் சறபருஜா - முதசர்ப்பராசா (டி3119); சரபராஜன் (போ. வ. ச. பக். 2) போ. வ. ச. வில் சரபராஜன் என்றிருப்பதால் டி3119 இல் சர்ப்பராசா வென்பது தவறு; 'சறப' (டி 3180) என்பதைச் 'சற்ப' (டி3119) என்று படித்தமையால் நேர்ந்த பிழையாதல் கூடும்.

18. 'என்கிற சத்குமாரன்' என்ற விடத்தில் டி 3119 இல் 'என்கிறவர்' என்பது மட்டுமுளது.

19. சறபருஜா (மேல் அடிக்குறிப்பு 17 காண்க)

20. தரித்துக்கொண்டு - அலங்கிருதமாய் (டி3119)

21. ஸ்ரீ ஸொமஸ்கந்த மூற்த்தி உபாசனையுடையவராய் - சிவபூசனை செய்து கொண்டு (போ. வ. ச. பக். 2). ஸொமஸ்கந்த - சோமாஸ்கந்தர் - உமை கந்தனேடு கூடிய சிவன்.

22. சந்தோஷமாயி - சந்தோஷமாய்

23. பிந்தளிபுரம் – பிர்தலிபுரம் (போ. வ. ச. பக். 2)

பிறதிநாமம் பிதளூரென்கிறத்தை சரபருஜாவுக்கு ஜாகீர்[24] குடுத்தார். அந்த சறபருஜாவுக்கு மஹா சேனர் என்கிற ருஜா பிறந்தார் = ௩ =

அந்த மஹாசேனருஜா[24அ] அன்பதினுயிரம் சுவாரஸ்தோமத்தோடே[25] அம்பீர்[26] பாதுஷாவுக்கு உயித்தத்தில் கும்மக்குப்[27] பண்ணினுர். அதின் பிற்பாடு அந்த ருஜா ருச்சியத்தை பரமநீதியாக நடப்பிவித்துக் கொண்டிருந்த புண்ணிய விசேஷத்தினுலே அவருக்கு அன்பது பிள்ளைகள் பிறந்தார்கள். அதில் மூத்த குமாரன் எக்கசிவருஜா[28] என்கிறவர் ருச்சியத்துக்குடையவரானுர்.[29] அந்த எக்க சிவருஜா ஸ்ரீசாம்ப சிவனுடைய பக்த்தி விசேஷம் பண்ணினபடியினுலே சாம்பசிவன்[30] பிரத்திக்ஷமாகி[31] சொன்னது. உனக்கும் உன்னுடைய வம்ச பரம் பரைக்கும் மஹாருஜாக்களென்று எல்லா பிறபஞ்சத்திலும் பிறக்கியாதி யாகு மென்று கட்டளையிட்டார்.[32] அதின் பிற்ப்பாடு அந்த எக்க சிவறாஜாவுக்கு ராமசந்திர றாஜா பிறந்தார் = ௪ =

---

24. ஜாகீர் – இது கி. பி. 1200 இல் கொடுக்கப்பெற்றது என்றும், அது முதல் இவர் சாகீர்தார் ஆனுர் என்றும் திருமுடிசேதுராமன் சுவடியில் (பக். 8) உள்ளது.

24அ. 'மஹாசேனருஜா' என்கிறவிடத்தில் டி3762இல் சறபருஜா என்றுளது.

25. சுவாரஸ்தோமம்–சுவராஸ்தோமம் (டி3119); குதிரைப்படை (போ. வ. ச. பக். 2)

26. அம்பீர்-ஹம்பீர் (போ. வ. ச. பக். 2)

27. கும்மக்கு - குமுக்கு (டி3119); உதவி (போ. வ. ச. பக். 2)

28. எக்கசிவருஜா-ஏகசிவராசா (டி3119)

29. உடையவரானுர்-அதிபதியானுர் (போ. வ. ச. பக். 2); இதற்குப் பிறகு ''வமிசாதிபதியாகவும் ஆனுர்'' என்று போ. வ. ச. வில் உள்ளது.

30. சாம்பசிவன் - உமையொடு கூடிய சிவன்

31. பிரத்திக்ஷமாகி - பிறத்தியக்ஷியமாக (டி3762)

32. இதற்குப் பிறகு பின்வரும் செய்திகள் போன்ஸ்லே வமிச சரித்திரத்தில் (பக்கம் 2–4) உள் ளன:- ''உன் கீர்த்தியும் உன் சந்ததியாரின் கீர்த்தியும் மகாராசா என்ற பெயருடன் எங்கும்பரவும். அந்தப் பதவிக்குரிய அநேக விருதுகளையும் சம்பாதிப்பீர்கள் என்று திருவாய் மலர்ந்தருளினார். அவ் விதமே ஏகசிவ மகாராஜா பல அரசர்களை வென்று அநேக விருதுகளைச் சம்பாதித்தார். அவைக ளோடு ஹம்பீர் ராஜனும் தனக்கு ஏகசிவ மகாராசாவின் தந்தையான மஹாசேன மகாராஜா செய்த உதவிக்காகவும், ஏக சிவ மகாராஜாவே கீர்த்தி வாய்ந்த பல வீரச் செயல்களைச் செய்து தானாகவே ஒரு சேனையைச் சேர்த்து வைத்திருப்பதை முன்னிட்டும், மேலும் ஏகசிவ மகாராஜா வுக்குத் தன் யானை குதிரை முதலிய விருதுகளில் சிலவற்றை வழங்கினார்.

இவ்விருதுகள் எல்லாவற்யையும் சேர்த்து அவைகளைத் தம்மிடம் வேலையில் அமர்ந்தவர்க ளில் சிறந்து விளங்கியவர்களிடம் ஒப்புவித்த விவரம் பின்வருமாறு:-

முக்கிய மந்திரியாகிய பேஷ்வாவையும், முதல் சேனைத் தலைவரும் 'ஸர்நோபத்' என்ற பட்டம் பெற்றவருமான தேவகராஜனுடைய வம்சத்தாரையும், இரண்டாவது சேனைத்தலைவரான போவார் வம்சத்தைச் சேர்ந்தவரையும், ஆக இம்மூவரையும் விருதுகளைப் பாதுகாக்கும் வேலை யில் அமர்த்தினார். குதிரைகளுக்கும் யானைகளுக்கும் விருதுகளைக் கட்டும்போது போவார் என்பவர் அந்த விருதுகளை எடுத்துப் பேஷ்வா கையில் கொடுக்கப் பேஷ்வா தேவகரிடம் கொடுத்துக் கட்டச்செய்ய வேண்டும். இதேமாதிரியாக மற்ற விருதுகளுக்கும் அவைகளுக் கென்று சில வம்சத்தார்கள் ஏற்படுத்தப்பட்டார்கள். அந்த வம்சத்தார்கள் இன்றும் அதே வேலையைச் செய்து வருகிறார்கள்.

அந்த ருமசந்திரருஜா ஞாயத்தோடே ருச்சியபரிபாலனம் பண்ணிக் கொண்டிருக்கையில் அவருக்கு பீம ருஜா என்கிறவர் பிறந்தார் = ரு =

அந்த பீமருஜா தற்மத்தோடேயும் நீதி யோடேயும் பிறசேகளை[33] பரிபாலனம் பண்ணிக் கொண்டிருக்கிற போது அவருக்கு ரெண்டாம் யெகொஜீ ருஜா பிறந்தார் = சூ =

அந்த யெகொஜீருஜா தம்முடைய புசபெல பராக்கிறமத்தினுலே சாத்தார கெடியை[34] சுவாதினமாக்கிக் கொண்டார். அதின் பிற்பாடு பாதஷாவுக்கும் இவருக்கும் உயித்திய பிறசங்கம் வந்த படியினுலே[35] யிந்த துற்க்கத்திலே வாசம் பண்ணிக் கொண்டிருந்தார். அந்த ருஜாவுக்கு வராஹருஜா என்கிறவர் பிறந்தார் = எ =

---

முக்கியமான ஆயுதங்களைத் தேவகரே சுத்தம் செய்து அரசரிடம் கொடுப்பார். ஆயுதங்களுக்குப் பூஜை செய்யும் போது, வலப் பக்கத்தில் போவாரும் இடது பக்கத்தில் தேவகரும், மத்தியில் அரசர் பேஷ்வாவோடும், உட்கார்ந்து பூஜை செய்வார்கள்.

மஹாராஜா சிம்மாசனத்தில் தர்பாரில் வீற்றிருக்கும் சமயத்தில், வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும், முறையே போவாரும் தேவகரும், எதிரில் பேஷ்வாவும் உட்காருவார்கள்.

விருதுகளில் பாக்கியுள்ள, யானைமேல் வைத்து முழங்கும் டமாரமும், யானையின் பேரில் ஏற்றியிருக்கும் பொற்பந்துகளுக்கிடையில் இலங்கும் பொன்மீனும், மற்ற ஆடம்பரமான எடுபிடிகளும் பக்கத்திலும் பின்பக்கத்திலும் வரவேண்டியது.

தமக்குக் கிடைத்த இந்த விருதுகளைத் தவிரத் தம்மனதுக்குப் பிடித்த சில விருதுகளைத் தாமே ஏற்படுத்திக் கொண்டார்.

மகாராஷ்டிர தேசத்துக்கும் மகாராஷ்டிர ஜாதிக்கும் முக்கியமான வாகனம் பல்லக்காகையால் அப்பல்லக்குக்கு அலங்காரம் செய்யப்படும் சில விருதுகளை இதனடியில் எழுதுகிறேன்:-

யானைத் தந்தத்தினால் செய்யப்பட்ட பல்லக்கின் பக்கங்களும், வளைவுகளும், ஒரே வெண்ணிறப் பளபளப்புடன் பிரகாசித்தன. பல்லக்கின் மேல் விரிக்கும் பட்டும், பட்டுக் கயிறுகளும் பல்லக்கின் கொம்பில் முன்னும் பின்னும் தங்கத்தினால் அமைந்த யாளி முகமும், புலியின் வாயும், பல்லக்குக் கூண்டின் இரு கோடிகளிலும் கல்லிழைத்த வாழைப்பூப் போன்ற கலசங்களும், நான்கு மூலைகளிலும் கல்லிழைத்த நான்கு குஞ்சங்களும், ஜாலர்களும் இரண்டு பக்கங்களிலும் உள்ள தண்டுகளுக்கு வெள்ளிக் கவசமும், அவற்றிலிருந்து தொங்கும் ஜரிகைக் குஞ்சங்களும், தொங்கட்டான்களும், பல்லக்கை அலங்கரித்தன. பல்லக்குக் கொம்புகளுக்குச் சில முக்கிய சந்தர்ப்பங்களில் பயன்படுத்துவதற்காக நவரத்தினக் கவசமும், தங்கக் கவசமும் அவற்றோடு விலையுயர்ந்த ஜரிகைக் குஞ்சங்களும் இருந்தன. பல்லக்கின் உட்புறத்தில் நிலைக்கண்ணாடியும், திண்டுகளும் வளைந்த கொம்பிலிருந்து தொங்கும் மயில் விசிறிகளும், வெள்ளித் தகடுகள் பதித்த உட்புறமும் அதன்மேல் பரப்பப்பட்ட வெண்மையான புஷ்பங்களும், தட்டுகளும் விளங்கின. கொம்பின் முன்புறத்தில் யாளி முகமும், அதன் மேல் புஷ்ப ஹாரங்களும், கல்லிழைத்த முத்துக் குஞ்சங்களும் கல்லிழைத்த கவசமும், சில சமயங்களில் தங்கக் கவசமும் அழகு செய்தன. இரண்டு பக்கங்களிலுமுள்ள கொம்புகளுக்கு வெல்வெட்டினால் செய்யப்பட்ட உறைகள் உண்டு.

இவ்விருதுகளைத் தவிர முக்கியமான சந்தர்ப்பங்களில் விசேஷ விருதுகளும் இருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.''

(குறிப்பு: இவை திருமுடி சேதுராமன் சுவடியில் இல்லை; மெக்கன்சி சுவடிகள் மூன்றிலும் இல்லை)

33. தற்மத்தோடேயும் நீதியோடேயும் பிறசேகளை - தர்மமார்க்கமாய்ப் பிரசைகளை (டி3119)

34. கெடி - கோட்டை; சாத்தார் கெடியை வென்றது கி.பி. 1434 என்று திருமுடி சேதுராமன் சுவடி கூறும்.

35. ''உயித்திய பிறசங்கம் வந்தபடியினுலே'' என்று விடத்துச் ''சண்டை ஏற்படும் என்று'' என்பது போ. வ. ச. (பக். 5) இல் உள்ளது.

அந்த வராஹருஜா மஹாசவுரிய நியாயத்தோடே[36] ருச்சிய பரிபாலனம் பண்ணிக் கொண்டு வரச்சே அன்பத்தைய்யாயிரம் சுவரா வைச்சு[37] பாதஷாவுடனே உயித்தம்பண்ணி செயத்தை அடைஞ்சு கீற்த்தியுள்ளவரானர். அந்த ருஜா வயத்திலே[38] மூணுவது யெகொஜிருஜா பிறந்தார் = அ =

அந்த யெகொஜிருஜாவுக்கு பிறம்மாஜிருஜா பிறந்தார் = கூ =

அந்த பிறம்மாஜிருஜாவுடைய ஸ்ரீ[39] அனுசாவு என்கிறவள்; அவர்களுக்கு முதல் சஹஜிருஜா[40] பிறந்தார் = ௰ =

அந்த சஹஜிருஜாவுடைய பட்டபுருணி[41] உமாவு[42] அவர்களுக்கு அம்பாஜி ருஜா[43] பிறந்தார் — ௰க —

அந்த அம்பாஜிவுடைய ஸ்ரீ ரெணுகாவு அவர்களுக்கு பறசோ ஜி ருஜா பிறந்தார் — ௰உ —

அந்த பறசோஜி ருஜா வுடைய ஸ்ரீ[44] உமாவு[45] அவர்களுக்கு பாபாஜி[46] ருஜா பிறந்தார் — ௰கூ —

---

36. மஹாசவுரிய நியாயத் தோடே - மகாசவுரியத்தோடே (டி3119)

37. ''வைச்சு'' என்ற சொல் டி 3119 இல் இல்லை

38. வயத்திலே - கெர்ப்பத்தில் (டி3119)

39. ஸ்ரீ - தர்மபத்தினி (டி3119)

40. முதல் சஹஜி - முதச்சகாசி (டி3119)

41. பட்டபு ருணி - பட்டஸ்திரீ (டி3119)

42. உமாவு - உமாலூ (போ. வ.ச. பக்.4)

43. ருஜா - ராவு (3119)

44. ஸ்ரீ - ஸ்திரீ (டி3119)

45. உமாவு - உமாஹூ (போ. வ. ச. பக். 4)

46. பாபாஜி - Babaji (டி 3180): பாவாஜி என்று போ. வ. ச. கூறும். பாப்ஜி போன்ஸ்லே (டஃப், பக்கம் 43) இவரது முன்னோர்கள் வெரோல் என்ற இடத்தில் இருந்தனர். வெரோல் என்பது எல்லோரா: தவுலதாபாது மலையடிவாரத்திலுள்ளது (சர்க்கார் (1) பக்கம் 15). பாபாஜி போன்ஸ்லே என்பது இவர் பெயர் என்றும், வேளாண்மைத் தொழிலில் இவர் ஈடுபட்டிருந்தார் என்றும், இவர் படீல் (ஊர்த்தலைவன்) ஆக இருந்தவர் என்றும் அறியப்பெறும் (சர்க்கார் (1) பக்கம் 15). பாபாஜியின் தந்தை பரசோஜி என்று மெக்கன்சி சுவடியும், போ. வ. ச. வும் கூறியிருக்கப் பாபாஜியின் தந்தை மால்கர்னாஜி என்றும், மால்கர்னாஜிக்குக் கேல்கர்னாஜி என்று தமையன் இருந்தார் என்றும், மூத்தவர் ஒரு போரில் இறக்க இளையவர் ஆகிய மால்கர்னாஜி ஆற்றில் மூழ்கி யிறந்தார் என்றும், இவர் மகனே பாபாஜி என்றும் கூறப்பெறும் (கி. பா. பக்கம் 113). இச்செய்திகள் வேறு எந்நூலிலும் குறிக்கப்படவில்லை.

இதுகாறும் சம்பு முதல் பாவாஜி வரை 15 தலைமுறைகள் கூறப்பட்டன. இப்பதினைந்து தலைமுறைகளைப் பற்றி மெக்கன்சி சுவடிகளும், போன்ஸ்லே வமிச சரித்திரம் என்ற தஞ்சை மராட்டியக் கல்வெட்டும் கூறுகின்றன.

அந்த பாபாஜிருஜாவுடைய ஸ்ரீ ரெக்காவு[47] அவர்களுக்கு ரெண்டு பிள்ளைகள் பிறந்துது. அதில் மூத்தவன் மாளோஜி[48] ருஜா யிளையவன் விட்டொஜிருஜா -டுச-

---

**பாவாஜி ராஜா வரையுள்ள வமிசாவளி பின்வருமாறு:**

**அட்டவணை - I**

சம்பு (1127)
முதல் ஏகோஜி (1152)
சர்ப்பராஜா (சரபராஜா) (1188)
மகாசேனர் (1216)
50 பேர்; மூத்தவர் ஏகசிவராஜா (1248)
ராமச்சந்திர ராஜா (1304)
பீமராஜ (1358)
இரண்டாவது ஏகோஜிராஜா (1407)
வராஹராஜா (1429)
மூன்றாம் ஏகோஜி (1445)
பிரம்மாஜி ராஜா (1461) × அனஸாவு
முதல் ஷாஹாஜிராஜா (1479) × உமாவு
அம்பாஜி (1501) × ரேணுகாவு
பரசோஜி (1524) × உமாஹூ
பாபாஜி (1544) × ரேகாவு

(குறிப்பு: பிறை வளைவுக்குள் பிறந்த ஆண்டு குறிக்கப் பெற்றுள்ளது)

1849க்குரியதும், அமர்சிங்கர் மகன் பிரதாப சிங்கர் காலத்தில் அவருடைய ஒன்றுவிட்ட அம்மானாகிய சிவாஜி சுப்பராவு காடேராவு அவர்களால் எழுதப்பட்டதும் ஆன "இராஜ சரித்திர வமுஷாவளி" என்ற திருமுடி சேதுராமன் சுவடியில் மேலே குறித்த வண்ணமே வமிசாவளி கொடுக்கப் பெற்றமையோடு மேலே பிறை வளைவுக்குள் கொடுக்கப்பட்ட ஆங்கில ஆண்டுகளும் அன்னோர் பிறந்த ஆண்டுகளாகச் சகர ஆண்டுகளும் குறிக்கப்பட்டுள்ளன.

*பிரம்மாஜி ராஜா தொடங்கி ஐந்து பேருக்குரிய மனைவியர் பெயர் அதில் கொடுக்கப் பெற வில்லை. மேலும் கி.பி. 1142 இலிருந்து செம்பு மகாராஜா அம்பீர் பாதுஷாவின் நகரத்தில் தங்கி யிருந்தார் என்றுள்ளது.

சரபராஜர் பெற்ற மந்திரோபதேசத்தின் மகிமையால் பாதுஷா "பிர்தலிபுரத்"தைக் கொடுத்தார் என்று மெக்கன்சி சுவடியிலிருக்க, இச் சுவடியில் மந்திரோபதேசத்தோடு பாதுஷாவின் பகைவர் களை இவர் வென்றமையால் இவருக்குக் கி.பி. 1200இல் "பிதிலியூர்" என்ற ஊர் ஜாகீராக விடப்பட்டது என்றுள்ளது. ஆனால் போரில் உதவிசெய்தது சரபராஜாவின் மகன் மகாசேனன் என்று மெக்கன்சி சுவடியும் போ. வ. சவும் கூறும்.

சிவபாரத சரித்திரத்தில் பாபாஜி வரையிலுள்ள அரசர்கள் பற்றிக் கூறப்படவில்லை. பாபாஜியின் மகன் மாலோஜிதான் முதலில் கூறப்பெறுகிறார். "தெற்குப் பிராந்தியத்திலே மால் வர்மா என்று சூரியவமிசத்திலே ஜெனித்து சூரியனுக்குச் சமானமாயிருக்கப்பட்ட காந்தியையுடைத்தான ஒரு ராஜா இருந்தார்" (சிவபாரதம் தமிழாக்கம் பக்கம் 3) என்பது காண்க.

கிருஷ்ணாஜி அனந்த் ஸபாஸத் எழுதிய நூலிலும் பாபாஜியின் மக்கள் தாம் முதலில் கூறப்பெற்றுள்ளனர்; முன்னவர்கள் சொல்லப்படவில்லை (சென். பக்கம் 1).

பாபாஜி கி.பி. 1580இல் இறந்தார் என்று திருமுடி சேதுராமன் சுவடியிலுள்ளது (பக்கம் 14); கி.பி. 1597 என்று சர்தேசாய் (பக்கம் 46) கூறுவர்.

47. ரெக்காவு-ரேகா (டி 3119); ரேகாவு (போ. வ. ச.)

48. மாளோஜி-மாலோஜி (போ. வ. ச); இவர் கி.பி. 1552இல் பிறந்தார் என்பது கி. பா. பக்கம் 113 அடிக்குறிப்பில்,

இளையவன் விட்டொஜிருஜாவினுடைய பத்தினி ஆவு பாயி சாயபு அவர்களுக்கு மூத்தகுமாரத்தி அம்பாபாயி அதின் பிற்பாடு எட்டு பிள்ளைகள் பிறந்துது[49] அதில் முதல் சம்பாஜிருஜா ரெண்டாவது கெலொஜிருஜா மூணுவது மாளொஜிருஜா நாலாவது பறஹொஜிருஜா அஞ்சாவது ஞகொஜிருஜா ஆருவது மம்பாஜிருஜா ஏழாவது கக்காஜிருஜா எட்டாவது திறியம்பகருஜா. இவர்கள் பாபாஜிருஜாவுடைய இளையகுமாரன் விட்டோஜிருஜாவினுடைய சந்ததி.[50] இவர்களுடைய சவவீஸ்த்தாரம்[51] யிதற்கு கீழ் எழுதப்பட்டுவரும்.

இப்போ பாபாஜிருஜாவுடைய மூத்த குமாரன் மா்ளோஜி ருஜா வுடைய சரித்திரம்: யிந்த மாளோஜிருஜா உமாபுாயி[52] சாயபு என்கிறவளை கலியாணம் பண்ணிக்கொண்டு உத்தம[53]தற்மத்தோடே ருச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார். அந்த சமையத்திலே தேவகிரி துற்கத்திலே நிஜாம் பாத்ஷா[54] என்கிறவரும் விசைய துறுக்கத்திலே[55] இபுருயிம்[56] பாத்ஷாவினுடைய பிள்ளை யெதில்ஷா என்கிற பாச்சாவும் ருச்சியம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அந்த யெதில்ஷா என்கிறவனுக்கு பிறதிநாமம் அல்லி ஷா எண்ணு பிறக்கியாதியாக யிருந்தது. யிப்படி யிருக்க தேவகிரி துற்க்கத்து நிஜாம் ஷாவுக்கும் விசையதுற்கம் அல்லி யெதல்ஷா[57]வுக்கும் உயித்தபிறகடமாய் அந்த உயித்

---

'Maloji was born, according to the Shedgawkar genealogical tree, in A.D. 1552'' 'என்றுள்ளமையான் அறியப்பெறும்.

பாபாஜி 1533 இலும் மாலோஜி 1550இலும் விட்டோஜி 1555இலும் பிறந்தனர் என்று தகாகாவ் (பக்கம் 5) கூறுவர்.

மாலோஜி 1568இலும் விட்டோஜி 1571இலும் பிறந்தனர் என்று திருமுடி சேதுராமன் சுவடியிலுள்ளது.

49. போ. வ. ச. (பக்கம் 6) எட்டு மக்களின் பெயரைக் கூறும்; ஆனால் அதில் ஆருவது மானோஜி என்றும், ஏழாவது கங்காஜி என்றும், சிவபாரதத்தில் 3ஆவது மல்லோஜி, ஆருவது மாணேஜி, ஏழாவது கங்கோஜி என்றுமுள்ளன.

50. சந்ததி - வமிசம் விருத்தியாயிற்று (போ. வ. ச)

51. சவவிஸ்தாரம் - சவிஸ்தாரம் (டி3119)

52. மாலோஜியின் மனைவி உமாபாயி என்று போ. வ. சவும், சிவபாரதமும் கூறும். ஆனால் மாலோஜி ''தீபாபாயி'' என்றவரை மணந்தார் என்றும், அத் தீபாபாயி, வணங்குபால் நீம்பால்கர் என்பவருடைய உடன் பிறந்தவர் என்றும் தெரிகிறது (கி. பா. பக்கம் 114; டஃப் பக்கம் 43; தகாகாவ் பக்கம் 6).

53. உத்தம - தம் (டி3119)

54. நிஜாம் பாதுஷா ஆண்ட பகுதியின் தலைநகர் அஹமத் நகர் ஆகும். சிவபாரதமும் (பக்கம் 3) போ. வ. சவும் தேவகிரி துர்க்கம் என்று கூறும். அந்நாளில் இருந்தவர் முர்டாஜா (மோர்டிஜா) நிஜாம்ஷா I

55. விஜய துருக்கம் என்பது பீஜப்பூர் ஆகும்

56. இபுருயிம்-இபராம் (டி3119); இவர் 1535 முதல் 1558 வரை ஆட்சி செய்தவர் (கி. பா. பக்கம் 101)

57. அல்லி யெதில் ஷா - Ali Adil Shah; இவர் 1558 முதல் 1580 வரை பீஜப்பூர் பாதுஷாவாக இருந்தவர் (கி. பா, பக்கம் 101)

த்திலே பாபாஜிருஜாவினுடைய பிள்ளை மாளோஜிருஜா மஹாசூரன் அநேகம் உயித்தத்திலே செயத்தை அடைந்திருக்கிருரென்று அந்த மாளோஜிராஜாவையு மவர் தம்பி விட்டோஜி ராசாவையும் தெவகிரி துற்கம் நிஜாம்பாத்ஷா தமக்கு கும்மக்காக அழைத்தார். அந்த ரெண்டு பேரும் தங்களுடைய சொந்த சேனை களையும் நிஜாம்ஷா வுடைய தளத்தையும் வாங்கிக் கொண்டு நிஜாம் ஷாவுடைய சத்துரு அல்லி யெதல் ஷா பேரிலே இந்த சேனைகளுடனே உயித்தம் பண்ணி செயத்தை அடைந்து நிஜாம் ஷாவுடைய சங்கடத்தை நிவற்த்தி பண்ணி[58] அவருடையதேவகிரி துற்க்கத்தில் ருஷ்சியத்தை அவருக்குஸ்தாபித் தார்கள். அதன் பேரிலே நிஜாம் ஷா சந்தோஷத்தை அடைந்து தம்முடைய ராட் சியத்திலே நாலத்தொரு ராச்சியம்[59] ஜாகீர் கொடுத்து இவாளை தம்முடகிட்ட யிருக்கவே ணுமென்று பிருர்த்திச்சார். அந்தப்படியே மாளோஜிருஜா தம் முடைய ருஷ்சியத்தை தம்முடைய மந்திரி பாரிசம் பண்ணிப்போட்டு[60] தாமும் தம்முடைய தம்பியும்[61] நிஜாம்கிட்டவே வாசம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

அப்போ மாளோஜிருஜா என்கிறவருக்கு சஹா சரிபு பெ அலி கலந்தர்[62] என்கிற ஒரு பக்கிரி[63*] சித்தபுருஷன் சிநேகிதராயிருந்தார். அந்தப்பக்கிரியுடைய[64*] தக்கியாவுக்கு[65] மாளோஜிருஜா போய் தமக்கு பிள்ளை

---

58. நிவற்த்தி - பரிகாரம் (டி3119)

59. நாலத்தொரு ராச்சியத்தைச் ''சௌத்'' என்று போ.வ.சவில் (பக்கம் 6இல்) கூறப்பட்டுள்ளது. ''நாலில் ஒரு பாகம் ராச்சியம் கொடுத்தமையைச் சௌத் எனல் பொருந்தாது. இது எந்த வரலாற்று நூலிலும் இல்லை. இது ஆராய்ச்சி செய்ய வேண்டிய விஷயம்'' என்று மேஜர் நாராயண பாலகிருஷ்ண கத்ரே (Gadre) தஞ்சையில் இருந்த பொழுது தன் கைப்பட எழுதிய மராட்டிய முகவுரையில் கூறியுள்ளார்.

60. மந்திரிபாரிசம் பண்ணிப்போட்டது-மந்திரியிடம் ஒப்பிவித்தது. சாதாரா பிதிலியூர் என்ற பகுதிகள் (திருமுடி சேதுராமன் பக்கம் 17). சரபராஜா காலத்தில் பிதிலியூர் (பிர்தலிபுரம்-போ. வ. ச. பக்கம் 2) பெற்றுச் சாகீர்தார் ஆயினர். இரண்டாவது ஏகோஜிராஜா சாத்தார் கெடியைக் கி.பி. 1434 இல் வென்று கொண்டு சிம்மாசனபதியாயினார் (திருமுடி சேதுராமன் பக்கம் 10). இவற்றுடன் இப்பொழுது பெற்ற ''நாலத்தொரு ராஜ்யம் சாகீரும்'' சேர்ந்த பகுதிகளே மந்திரி களிடம் ஒப்படைக்கப்பட்டன — இவற்றுக்கு வேறு நூல்களில் ஆதாரம் இல்லை.

61. தாமும் தம்முடைய தம்பியும் - தாமிருவரும் (டி3119)

62. சஹா சரீபு — ஷா ஷரீப் (போ. வ. ச. பக்கம் 7). சஹா சரீபு என்றுள்ளமையின் ஷஹாஷரீப் என்று அப்பக்கிரிக்கும் பெயரிருந்தமை புலப்படும். அவருடைய திருவருளால் மாலோஜிக்கு மக்கள் பிறந்தமையின் முதல் மகனுக்கு ஷஹாஜி என்று பெயர் வைத்தார். ஷாஷரீப் என்பதைப் பெயராகக் கொள்ளின் முதல் மகனுக்கு ஷாஜி என்பதே பெயராகலாம். சிவபாரத சரித்திரத்தில் (பக்கம் 5) ஷாஜி என்றே உள்ளது (டஃப் பக்கம் 43; கி.பா. பக்கம் 114). கிருஷ்ணாஜி அனந்த் ஸபாஸத் எழுதிய நூலில் சாஹாஜி (Sahaji) என்றுள்ளது (சென். பக்கம் 2).

63* முதல் *64 வரை டி 3119இல் இல்லை.

65. பக்கிரி—ஃபகீர்; தக்கியா—தங்குமிடம் (Resting Place). ''ஒரு பக்கிரியுடைய தக்கியாவுக்கு'' என்றவிடத்தில் போ. வ. ச. வில் ''ஒரு சித்த புருஷரான சன்யாசியின் சிநேகம் கிடைத்தது. அவரிடம் சென்று'' என்றவையுள்ளன.

யில்லை யென்று சொன்னார்.[66] அப்போ அந்தப்பக்கிரி சற்று நேரந்தியானித்துப் பார்த்து மாளோஜிருஜாவே உமக்கு ரெண்டு பிள்ளைகளுண்டாகிறார்கள் அவாள் மஹா சூராளும் மஹாபாக்கியவந்தாளுமாகயிருந்து அவர்களுடைய வம்சமும் அபிவிற்த்தியாகி அந்த வமிசத்தில் உண்டாகிற பிள்ளைகளெல்லாரும் மஹாபாக்கியசாலிகளாக யிருப்பார்கள். அந்த ரெண்டுபிள்ளைகளுக்கும் நம்முடைய பெயரை வையும், பின்னையும் நாம் கொடுக்கிற பதாற்த்தத்தை பத்திரமாய் மரியாதையாய் வையுங்கோளென்று சொல்லி அஞ்சு பதாற்தம் கொடுத்தார். அதுகளுக்கு பேர் என்னவென்றால் ஞகினி[67] என்று சொல்லப்பட்ட ஒரு கத்தி; பதுமனி[68]யென்று சொல்லப்பட்ட ஒரு கத்தி. கவுபீனம்[69] ஒண்ணு; கலந்திரா[70] என்று சொல்லப்பட்ட ஒரு அங்கி; பஞ்சா[71] ஒண்ணு; இந்த வஸ்த்துவுங்[72] குடுத்தார் பிற்பாடு மாளோஜி ருஜாவுக்கு சாலிவாகன சகம் ௲௫௱௩௰௧ சாதாறண[73] வருஷம் முதல் புத்திரன் ரெண்டாம் சஹஜிருஜா புறந்தார். அதின்

---

66. கி. பா. பக்கம் 114 இல் ஷாஷரீஃப் என்ற முகமதியருடைய கோயிலுக்குச் சென்று தொழுதமையின் மாலோஜிக்கு மக்கள் பிறந்தனர் என்று எழுதி, அதற்கு அடிக்குறிப்பாக,

"Both the Shivadigvijaya and the Shedgavkar Bakhars say that Maloji & his wife prayed at the tomb of the saint. He has long been dead and buried"

என்றெழுதியுள்ளார். சிவபாரத சரித்திரம் முகம்மதிய குருவைப்பற்றிக் கூறவில்லை; "அந்த மாலோஜி ராஜா மனைவியோடு கூட புத்திர சந்தானமாக வேண்டுமென்று அந்த மகாதேவருடைய ஆராதனம் பண்ணிக் கொண்டிருக்கும்போது கொஞ்ச நாளைக்குப் பிறகு அவருடைய மனைவி உமாபாயி கர்பிணியானாள்" என்றுள்ளது (சிவபாரதம்-பக்கம் 4).

ஷாஷரீப் அகமது நகரில் இருந்தவர் என்று டஃப் கூறுவர் (பக்கம் 43).

67. ஞகினி-நாகினி (டி3119); நாகின் (போ. வ. ச. பக். 7)

68. பதுமினி-பத்மினி (டி3119); பத்மின் (போ. வ. ச. பக். 7)

69. கவுபீனம்-லங்கோடு (போ. வ. ச. பக். 7); இச்சொல்லுக்குமுன் "இந்த இரண்டு கத்தியும் தம்முடைய" என்பது டி3119 இல் உள்ளது. இந்த இரண்டு கத்தியும் சித்தபுருஷர் கொடுத்தனவாக இங்குக் கூறியிருக்க, இவ்விரண்டும் துக்கோஜி காலத்தில் கொடுக்கப்பட்டன என்று ஹிக்கி கூறுவர்:-

"There is a story current that a fakir of Arabia presented this prince (Tukkoji) with two swords called Neygini and Pathmany possessing miraculous influences. The swords are now preserved in the Madras Museum" (Hickey, page 85.)

70. கலந்திரா-பட்டினாலும் பஞ்சினாலும் செய்யப்பட்ட உடை (போ. வ. ச. பக். 7)

71. பஞ்சா: இது ஐந்து விரல்களையும் மேலே நீட்டிக் கொண்டிருக்கும் ஒரு கையின் உருவம். இது முகம்மதியர்களால் போற்றப்படும் ஐந்து பேர்களைக் குறிக்கும்; அல்லா, முகம்மது, அலி, பாத்மா, ஹஸன் ஹுசேன் என்பவர்களைக்குறிக்கும் என்றும் அல்லது பெரிய பலசாலியாகக் கொண்டாடப்பட்ட அலி என்பவருடைய கையைக் குறிக்கும் என்றும் சொல்வர் (போ. வ. ச. பக். 7 அடிக்குறிப்பு)

72. இந்த வஸ்துவும்-இந்த ஐந்து வஸ்துவும் (டி3119). இவ்வைந்து பொருள்களைக் கொடுத்தமை திருமுடி சேதுராமன் சுவடியில் இல்லை (பக்கம் 17).

73. சகம் 1531-கி.பி. 1609. திருமுடி சேதுராமன் சுவடியில் "சாதாரண" ஆண்டுக்குப் பதில் "சவுமிய" என்றுள்ளது. இதுவே எல்.டி.சாமிக்கண்ணுப்பிள்ளை அவர்களின் எஃபிமரிஸுக் கேற்பச் சரியானதாகும். ஷாஜி பிறந்தது 15-3-1594 (சர்தேசாய் பக்கம் 51); 1594 (டஃப் பக்கம் 43) என்பர்.

பிற்பாடு ரெண்டாவது பிறந்து அவருக்கு சறபொஜிருஜா[74] வென்று பேர் வைத்தார்கள் =ய ர =

அதின் பிற்பாடு மூத்தபிள்ளை சஹஜிருஜாவுக்கு அஞ்சுவயசாச்சுது. அப்போ கொலாபுரத்து ராஜாவுக்கும் நிஜாம்ஷாவுக்கும் விகல்ப்பமாகி கொலாபுரத்துருஜாவின் பேரிலே இந்த அஞ்சுவயதுள்ளபிள்ளையின் தொகப்பன் மாளோஜிருஜாவை சண்டைக்கு அனுப்பிவீச்சார்.[76] அப்போ மாளோஜி ருஜா தம்முடைய சேனே பரிவாரங்களுடனேயும் பாத்ஷாவுடைய சேனே களுடனே கோலாபுரத்து ராஜாவின்[77] பேரிலே பாளைய மெடுத்துப்போய் அற்புத மான சண்டைபண்ணி சத்துருக்களை அடித்துக் கொண்டு[78] கைகலந்து சண்டை யாகிற போது றணக்களத்திலே வீரசொற்கத்தை அடைந்தார்.[79] அதின்பிற்பாடு நிஜாம்ஷா என்கிறவர் சஹஜி ருஜா சரபோஜிருஜா சிறுபிள்ளைகளானபடி யினாலே அவர்களை அவர்களுடைய சிறிய தொகப்பனுர் விட்டோஜிருஜா சுவா தீனம் பண்ணி அவர்களுடைய யோக்கியதைக்குத் தக்கதாய் சவறக்ஷணை

---

74. சரபோஜி என்று போ. வ. ச. விலும் திருமுடி சேதுராமன் சுவடியிலும் உள்ளன. சிவபாரத சரித்திரமும் சரபோஜி என்று கூறும் (பக்கம் 5). ஷரீஃப்ஜி என்று டஃப் (பக்கம் 43இலும்), கி. பா. (பக்கம் 114இலும்) கூறுவர். ஷாஷரீப் தன் பெயரை வைக்குமாறு கூறியமைக்கேற்ப மூத்த மகற்கு ஷாஜி என்று பெயர் வைக்கப்பட்டது. இரண்டாவது மகனுக்கு அவர் பெயருள் எஞ்சிய பகுதியாகிய ஷரீஃப் என்பதனோடு ஜி சேர்த்து ஷரீஃப்ஜி என்று பெயரிடப்பட்டது என்ற டஃப் கூற்றுப் பொருந்துவதாகவுள்ளது. "ஷரீஃப்ஜி" என்பது "ஸரபோஜி" என்று திரிந்திருத்தல்கூடும். கிருஷ்ணாஜி அனந்த் ஸபாஸத் தம் நூலில் ஸரஃப்ஜி (Sarafji) என்பர் (சென். பக்கம் 2). ஷாஜி பிறந்த இரண்டு ஆண்டுகட்குப் பிறகு சரபோஜி பிறந்தார் என்று சிவபாரதம் கூறும். சரபோஜி 1597இல் பிறந்ததாகக் கி.பா. பக்கம் 114இல் உள்ளது. முகமதியரை அறவே வெறுத்த சத்திரபதி சிவாஜியின் தந்தை முகமதிய குருவின் அருளால் பிறந்தவர் என்பது அறிதற்பாலது. "Even in those early days, the Hindu recognised the value of a vow made to the Muslim shrine and history must record the strange coincidence that Shivaji's father Shahaji was born out of a prayer at a Muslim Shrine"—Karaka, D.F.-Shivaji page 29 - என்ற கூற்றும் இங்குக் கருதற்குரியது.

76. மூத்தபிள்ளை சஹஜிருஜாவுக்கு ......... சண்டைக்கு அனுப்பிவிச்சார் - இந்த இடத்தில் போ. வ. சவில் "ஷாஹாஜி ஐந்து வயதாக இருக்கும் போது கோலாபுரத்து அரசருக்கும் நிஜாம் ஷாவுக்கும் மனவருத்தம் ஏற்பட்டுச் சண்டை மூண்டது" என்றிருக்கிறது. இது சுருக்கமாகவும் விளக்கமாகவும் இருக்கிறது.

77. இந்திராபுரத்து மேல் சண்டைக்குச் சென்றதாகச் சிவபாரத சரித்திரம் கூறும் (பக்கம் 5).

78. அடித்துக் கொண்டு — செயித்து (டி.3119)

79. மாளோஜி 1614இல் இறந்ததாகத் திருமுடி சேதுராமன் சுவடியில் உள்ளது (பக்கம் 19); தகாகாவ் (பக்கம் 15) மாலோஜி 1619இல் இறந்ததாகக் கூறுவர்; சர்தேசாய் (பக்கம் 53) 1620 என்பர்.

குறிப்பு:- ஷாஜி 1609இல் பிறந்தார் (மெக்கன்சி சுவடி; போ. வ. ச; திருமுடி சேதுராமன்) எனின் அவர் 5 வயதினர் ஆக இருக்கும்பொழுது அதாவது 1614இல் அவர் தந்தை மாலோஜி இறந்தார் என்பது பொருந்தும். சர்தேசாய் (பக்கம் 51), டஃப் (பக்கம் 43) ஆகியோர் ஷாஜி பிறந்தது 1594; மாலோஜி இறந்தது 1619 என்பர். அங்ஙனமாயின் மாலோஜி இறந்தபொழுது ஷாஜி ஐந்து வயதுடையவர் என்பது பொருந்தாது. மாலோஜி போரில் இறந்ததாக வரலாற்றாசிரியர் யாரும் குறிப்பிடவில்லை.

பண்ணிக்கொண்டு வத்தார்.[80] அதற்கு பிற்பாடு சஹஜிருஜா யெவ்வறணமான பிற்பாடு மொதெ ருவுடைய குமாரத்தி துக்காவுபாயி[81] சாயபுவை முதல் கல்லியாணம் பண்ணிக் கொண்டார். அதுக்கு பிற்பாடு நிஜாம்ஷாவினுடைய அனுமதியினுலே சஹஜிருஜா சாலிவாகன சகாப்தம் ௲௫௱௪௰௨[82] துற்மதி வருஷத்தில் தம்முடைய சொந்தருச்சிய[83] சிமாசனத்துக்கு உடையவரானுர். அப்போ யாதவருஜா[84] என்று ஒருத்தர் யிருந்தார். அவர்குமாரத்தி ஜீஜாவுவை சஹஜிருஜாவுக்கு ரெண்டாம் கலியாணத்துக்கு பிறார்த்தினைபண்ணிக் கொடுத்தார். இந்த சஹஜிருஜாவுடைய தம்பி சரபோஜிருஜா என்கிறவர் விசுவாசருஜாவுடைய குமாரத்தி துற்க்கா பாயியை[85] கலியாணம் பண்ணிக் கொண்டார். கொஞ்சநாளைக்கு பிற்ப்பாடு இந்த தமையன் தம்பியிருவருடைய சிறிய தொகப்பன் விட்டோஜிருஜா தெவகெதியானுர். அந்த விட்டோஜி ராஜாவுடைய பிள்ளைகள் எட்டுப்பேரும் நிஜாம் பாதுஷாவை அனுசரிச்சுக் கொண்டிருந்தார்கள்.

---

80. விட்டோஜியின் பாதுகாப்பில் ஷாஜியும் சரபோஜியும் இருந்தமை பிற வரலாற்றாசிரியர் குறிப்பிடவில்லை.

81. துக்காபாயி என்றவிடத்தில் உமாபாயி என்று போ. வ. ச. கூறும் (பக்கம் 9); எனினும் பிறகு "துகாயி ஆவுசாயேபிற்குப் பிறந்தவராகிய ஏகோஜி மகாராஜா (போ. வ. ச. பக். 62) என்றவிடத்துத் துகாயி என்றமை காணலாம். சிவபாரத சரித்திரத்தில் ஷாஜிராஜா துக்காபாயியை மணந்தமை கூறப் பெறவில்லை. துக்காபாயியை முதற் கலியாணம் செய்து கொண்டார் என்று மெக்கன்சி சுவடிகளும், போ. வ. சவும் கூறியிருக்க, சபாஸத் (சென். பக்கம் 2-3) "The first wife was Jijai Āū and the second wife Tukāi Āū" என்று கூறும். மகாராஷ்டிரத்தில் வரலாறு எழுதியோர் ஜிஜாபாயியை முதல் மனைவியாகவே கூறுவர். ஜிஜாபாயியை இரண்டாவது மனைவி என்று வற்புறுத்திக் கூறுவதன் கருத்து உரிய இடத்தில் கூறப்பெறும்.

82. சகம் 1542; 1543 என்று போ. வ. ச. விலுள்ளது. 1543க்குத் துன்மதி பொருந்தும் (சாமிக்கண்ணுப்பிள்ளை). சகம் 1542 என்பது கி. பி. 1620 இகும். மாலோஜி 1619இல் இறந்தார் ஆகவே ஆண்டு ஒருவாறு பொருந்துவதாகலாம்,

83. தம்முடைய சொந்த ராஜ்யம் "சாதரா தேசம்" என்று திருமுடி சேதுராமன் சுவடி கூறும் (பக்கம் 20).

84. யாதவராஜா-லகோஜி ஜாதவ் ராவ்; இவர் தேவகிரி யாதவ் அரசமரபினர்; சிந்த்கெட் (Sindkhed) பகுதிக்குத் "தேஷ்முகி" ஆவர்; அகமது நகரில் 10,000 குதிரைகள் கொண்ட படைக்குத் தலைவர். இவர் ஆதரவில் மாலோஜியும் அவர் தம்பி விட்டோஜியும் இருந்தனர். கி.பி. 1599இல் ஹோலிப் பண்டிகை நடந்த சமயத்தில் மாலோஜி தன் மகன் ஷாஜியுடன் யாதவராஜாவின் வீட்டுக்குச் சென்ருர். யாதவராஜாவுக்கு ஒரு மகள் இருந்தாள்; ஜிஜாபாய் என்று பெயர். யாதவராஜி ஷாஜியை அழைத்து ஜிஜாபாயின் அருகில் அமர்த்தி இருவரும் தகுந்த இணையாக உள்ளனர் என்றார். இரு குழந்தைகளும் ஒருவர் மேல் ஒருவர் சந்தனப் பொடியைத் தூவி விளையாடினர். யாதவராஜா "இருவரும் தகுந்த இணை" என்று கூறியதைக் கேட்ட மாலோஜி "யாதவராஜா என்னுடன் சம்பந்தம் செய்ய உடன்பட்டிருக்கிறார்" என்று கூறினார். இதனை யறிந்த யாதவராஜாவின் மனைவி இதற்கு உடன்படவில்லை. மறுநாள் யாதவராஜா மாலோஜியை விருந்துக்கு அழைத்த பொழுது "ஷாஜியை மருமகனாக ஏற்றுக் கொண்டாலன்றி விருந்துக்கு வரவியலாது" என்று கூறினார். இதனால் இருவருக்கும் மனவேற்றுமை ஏற்பட்டது. இதனையறிந்த நிஜாம்ஷா மாலோஜியை 5000 குதிரைகட்குத் தலைவனாக்கிப் பூனா, சூபா ஆகியவற்றைச் சாகீராகக் கொடுத்து "ராஜா" என்ற பட்டமும் அளித்துப் பெருமைப்படுத்தினார். இதனால் யாதவராஜாவுக்குத் தன் மகளை ஷஹாஜிக்கு அளிக்க ஏதும் தடையில்லை யாயிற்று. 1604இல் இருவருக்கும் திருமணம் நடந்தது - டஃப் (பக்கம் 44-45), கி. பா. (பக்கம் 115-116); 12000 குதிரைகட்குத் தலைவனாக்கினார் என்றும் 1604 ஏப்ரல் திங்களில் திருமணம் நடந்ததென்றும் தகாகாவ் (பக்கம் 13-14) கூறுவர்-இவை மெக்கன்சி சுவடியிலோ, போ. வ. சவிலோ, சிவபாரதத்திலோ குறிப்பிடப் பெறவில்லை.

85. சரபோசி ராசர் துர்க்காபாயியைத் திருமணம் செய்து கொண்ட செய்தி சிவபாரதத்தில் கூறப்பட்டுள்ளது (பக்கம் 7)

**(2) யாதவராசா கொலை; சிவாஜி ஏகோஜி பிறப்பு**

இப்படியிருக்கச்சே நிஜாம் பாதுஷா ஒரு நாள் விசேஷதினத்திலே சதிர்[1] பண்ணி தம்முடைய கையுங்கீழே யிருக்கிற ருஜாக்களை எல்லாம் அழைச்சனுப்பிவிச்சார். அந்த சதிருக்காக வந்த ருஜாக்களுடைய பேர்வழிகளில் காரியத்துக்கு உபயுக்த்தமான பேர்வழிகள் மாளோஜிருஜாவுடைய பிள்ளைகள் சஹஜிருஜா சறபோஜிருஜா இவர்கள் சிறிய தகப்பனுர் விட்டோஜிருஜாவுடைய பிள்ளைகள் எட்டுப்பேரும் சாஹஜிருஜாவுக்கு ரெண்டாவது ஸ்ரீ[2] யுடைய தொகப்பன் யாதவருஜா அவர் பிள்ளை தத்தாஜிருஜா என்கிறவர் கண்டாகளை[3] என்கிற ஒரு பெரிய சற்தார்[4] இவர்களனைவரும் சதிர்கலைந்து வெளியிலே[5] வருகிற போது சனங்கள் வெகு கூட்டத்தினுலே நெருங்கியிருக்கிற கும்பலிலே சற்தாற் கண்டாகளையுடைய ஆனைக்கு மதம் வந்து அநேகம் பேரை கொண்ணு போட்டுது. அப்போ யாதவருஜாவுடைய குமாரன் தத்தாஜிருஜா கையிலே கத்தி வாங்கிக்கொண்டு மதம் பிடித்த ஆனையை வெட்டப்போன வேளையிலே விட்டோஜி ருஜாவுடைய பிள்ளைகள் எட்டுபேரில் சம்பாஜிருஜா கெலோஜி என்கிற இந்த ரெண்டு பேரும் கண்டாகளையினுடைய சினேகத்து நிமித்தியமாக தத்தாஜிருஜாவை ஆனையை அடிக்கத் தேவையில்லையென்று மறிச்சார்கள். அப்போ தத்தாஜி ருஜாவுக்கு கோபம் வந்து வெகுசனங்களை யடிச்சுப்போடுகிற மதம் பிடிச்ச ஆனையை நாம் அடிக்கப்போனுல் நீங்கள் மறிக்க வேண்டியதென்ன வென்று ஒருவருக்கொருவர் சற்ச்சைகளை[6] வளர்ந்து கைகலந்து சண்டையாகி[7] சம்பாஜிருஜாவுடைய கையினுலே தத்தாஜிருஜா விழுந்தார். அப்போ தத்தாஜிருஜாவுடைய தொகப்பனுர் யாதவருஜா முன்னே போய் கொண்டிருந்தவருக்கு தன்னுடைய குமாரன் கண்டாகளையின் ஆனையின் நிமித்தியம் விட்டோஜி ருஜாவின் குமாரன் சம்பாஜிருஜாவாலே தெய்வகெதியான சேதி கேழ்விப்பட்டு இந்த சம்பாஜி கெலோஜிருஜாக்கள் பேரில் உயித்தத்துக்கு வந்தார். அப்போ சாஜிருஜா என்கிறவர் யாதவருஜா தம்முடைய மாமனுராகயிருந்தும் தம்முடைய சிறியதகப்பனுர் பிள்ளை சம்பாஜிருஜா கேலொஜிருஜா பேரில் உயித்தத்துக்கு வந்தானென்று தாம் முன்னிண்ணு யித்தம் பண்ணினபோது யாதவருஜாகையினுலே சாஜிருஜா மூற்சையாக விழுந்தார். அவரை விட்டுப் போட்டு அவருடைய சேனைகள் பேரிலே உயித்தம்பண்ணுகிறபோது விட்டோஜி ருஜாவுடைய பிள்ளை சம்பாஜிருஜா யாதவருஜா கையினுலே யுத்தரங்கத்திலே விழுந்தான்.[8] உடனே சாஜிருஜாவுக்கு மூற்சைதெளிந்து உயித்தத்துக்கு ஆரம்

---

1. சதிர்—நாட்டிய அரங்கு; தர்பார் (போ. வ. ச.)
2. ஸ்ரீ—ஸ்திரீ (டி3119) ''ஜிஜாபாயி, ஷாஜிக்கு இரண்டாவது மனைவி, முதன்மனைவியன்று என்பதை வற்புறுத்தவே இங்ஙனம் பிறவிடங்களிலும் கூறப்பட்டு வரும்.
3. கண்டாகளை - கண்டாகலே (போ. வ. ச. பக். 9; சிவபாரதம் பக். 8)
4. சற்தார் — பிரபு (போ. வ. ச. பக். 9)
5. வெளியிலே - இச்சொல் டி3119இல் இல்லை
6. சற்ச்சைகளை - விவாதம் (போ. வ. ச. பக். 9); சர்ச்சரை (டி3119)
7. சண்டையாகி — சண்டையாச்சுது; அப்போவிட்டோசிராசாவுடைய பிள்ளை (டி3119)
8. ஸம்பாஜி, யாதவராஜாவால் போர்க்களத்தில் கொல்லப்பட்ட செய்தி போ. வ. ச வில் இங்குக்

பிக்கிற போது இந்த சேதிகளெல்லாம் நிஜாம்பாதுஷாவுக்குத் தெரிந்து யாதவ ருஜாவுக்கு புத்திரசோகமானபடியினாலே பிருக்கிறமம்[9] அதிகமாகயிருக்கும் யிந்த சமையத்திலே உயித்தமாகாதிண்ணு நீறுத்தி அவாள் அவாளுக்கு அவாளவாள் ஸ்தானங்களுக்கு போகச் சொல்லி உத்தாரங்[10] கொடுத்தார். அப்போ

---

குறிக்கப் பெறவில்லை (பக்கம் 10). ஆனால் அடுத்துப் பக்கம் 11இல் 'விட்டோஜிராஜாவின் மூத்த புதல்வரான ஸம்பாஜி ராஜா வீரசுவர்க்கம் அடைந்து விட்டதனால்" என்று ஸம்பாஜி போர்க்களத்தில் கொல்லப்பட்ட செய்தி கூறப்பட்டது. சிவபாரதத்தில் இது குறிக்கப்பட்டுள்ளது (பக்கம் 9).

குறிப்பு:– 1. யாதவராஜாவுக்கும் அவருடைய மருமகனாகிய ஷஹாஜிக்கும் பகைமை வந்த காரணம் இக்கதையால் நன்கு அறியப்படும்.

2. சிவபாரத சரித்திரத்தில் இச்செய்தி கூறியிருக்கிறது; ஆனால் பல செய்திகளைத் தம் வரலாற்று நூல்களில் இடைமிடைந்து கூறும் மகாராட்டிர வரலாற்றாசிரியர்கள் இதைக் குறிப்பிடவில்லை.

யுத்தரங்கம் – போர்க்களம்

9. பிருக்கிறமம் – பராக்கிரமம் (டி 3119)

10. உத்தாரம் - கட்டளை (போ. வ. ச. பக். 10)

அஹமத் நகரில் ஆட்சி செய்த நிஜாம் ஷாக்கள் (கி. பா. பக்கம் 101):




பிஜப்பூரில் ஆட்சி செய்தவர் (கி. பா. பக்கம் 101)

1. யூஸுஃப் அடில்ஷா (1510)
2. இஸ்மாயில் அடில்ஷா (1534)
3. மல்லு அடில்ஷா (பதவியிறக்கம் 1535)
4. இப்ராஹிம் அடில்ஷா I (1558)
5. அலி அடில்ஷா (1580)
6. இப்ராஹிம் அடில்ஷா II (1626)

யாதவருஜாவும் தம்முடைய ஸ்தலத்துக்குப்போய் மனவெறுப்பாயிருந்தார். இந்தப் படி யாதவருஜா மனவெறுப்பான காரணத்தை விஜயதுற்க்கத்திலே ருஜியம்[11] பண்ணுகிற அல்லி யெதல்ஷா[12] வுக்குத் தெரிஞ்சு அவர் யோசனை பண்ணினதென்னவென்றால் தேவகிரி துற்க்கத்திலிருக்கும் நிஜாம் பாதுஷாவுக்கும் தமக்கும் விரோதமாய் ரெண்டொருதிரம் உயித்தம் பண்ணினத்தில் சாசிருஜாவும் யாதவருஜாவைச் சேர்ந்த மஹாசூராளும் அவரோடே சேர்ந்திருந்த படியினாலே நாமும் நம்முடைய சேனைகளும் அபசெயத்தை யடைந்தோமென்று யோசனை பண்ணி அதில் யாதவருஜா மஹாசூரன் அவருக்கு மனவெறுப்பு வந்திருக்கிறபடியினாலே அவருக்கும் நமக்கும் சந்திபண்ணி அவரையும் தம்முடனே சேர்த்துக்கொண்டு நிஜாம் ஷாவுடனே உயித்தம் பண்ணி செயத்தை அடைய வேணுமென்று நீச்சய யோசனை பண்ணி அவருக்கும் யிவருக்கும் பேச்சுவாற்தைகளானபோது யாதவருஜா சொன்னது உம்முடநம்முட[13] சேனைகளினாலே நிஜாம்ஷாவை செயிக்கக்கூடாது அதென்னவென்றால் அவர்கிட்ட சாசிருஜா முதலாகிய பிறசித்த சூராளிருக்கிறபடியினாலே டில்லியிலிருக்கும் சாகீர்பாதுஷா[14] வையும் சந்தி பண்ணிச் சேர்த்துக் கொண்டு அவர்கிட்டயிருந்து சேனைகளை அழைப்பிவித்துக்கொண்டு அதுக்கு பிற்பாடு நிஜாம்ஷா உயித்தத்துக்கு ஆரம்பம்பண்ணவேணுமென்று சொன்னார். அதுக்கு அல்லியெதல்ஷாசொன்னது: நீர் சொன்னது யுக்த்தம்தான் பின்னையும் நம்முடைய தொகப்பனார் யிபருயிமுகானுக்கும்[15] சாகிர் பாதுஷாவுக்கும் றம்பவும் ரிணுணுபந்தம்[16] அந்த அனுசறனையினாலே சாகிற் பாதுஷா நம்முடைய வாற்தையும் அங்கிகாரம் பண்ணி

---

7. முகம்மது அடில்ஷா (1656)
8. அலி அடில்ஷா (1672)
9. சிக்கந்தர் அடில்ஷா (பதவியிறக்கம் 1686)

(குறிப்பு: பிறைவளைவுக்குள் இருப்பவை இறந்த ஆண்டுகள்)

11. ருஜியம் - ராச்சியபாரம் (டி3119)

12. அல்லியெதல்ஷா-அல்லியேதில்ஷா (டி3119); பீஜப்பூரில் ஆண்ட அரசர் அட்டவணையில் ஏழாவதாகக் காட்டப்பெற்றவராதல் கூடும். ஏதில் ஷா அழைத்ததாக இங்குக் கூறியிருக்க யாதவராவ் முகலாயர் பக்கல் சேர்ந்து கௌரவிக்கப்பட்டார் என்று வரலாற்றாசிரியர் கூறுவர். டஃப் (பக். 47-48) கூறுவது பின்வருமாறு:-

"Malik Umber was not always prosperous; he frequently experienced reverses and about the year 1621 some of the principal Maharattas in his service were induced to quit his standard and go over to the Moghuls. The most important defection was that of Lookhjee Jadow Rao, Deshmookh of Sindkheir ...... A mansub of 24000, with 15,000 horses was conferred upon him."
இங்ஙனம் நிகழ்ந்தது கி.பி. 1621 என்று இதனால் அறியப்பெறும்.

13. உம்முட நம்முட-உம்முடைய (டி3119)

14. சாகீர்பாதுஷா - ஜாகீர்பாதுஷா (டி3119); ஜாஹிங்கிர்: அக்பரின் மகன்: ஷாஜஹனின் தந்தை: 1605 முதல் 1627 வரை ஆட்சிசெய்த முகலாயப் பேரரசன்.

15. யிபருயிமுகான்-இப்ராஹிம்கான்: பிஜாபூரில் ஆண்ட அரசர் அட்டவணையில் ஆறுவதாகக் குறிக்கப்பட்டவர்.

16. ரிணுணுபந்தம்-ரொணுர்பந்தம் (டி 3119); நெருங்கிய தொடர்பு (போ. வ.ச. பக். 11).

நமக்கும் சஹாயம் பண்ணுவாரென்று சொல்லி சந்திவார்த்தைகளுக்கெத்தினம் பண்ணினார். அப்படியே டில்லியிலிருக்கும் சாகிர் பாதுஷாவும் யிபருயிமுகானுக்கும் நமக்கும் மெத்தவும் சிநேக முண்டென்று ஒத்துக்கொண்டு அல்லியெதல் ஷாவுக்கு ஒத்தாசையாக அல்லது கும்மக்குக்காக லஷ்கற்கா[17] னென்கிற சற்தாருடனே முகல் சேனைகளைக் கூட்டி அனுப்பிவிச்சார். இந்தக்கும்மக்கினாலேயும் யாதவருஜா பிறசித்தசூராளுடனே தம்முடனே சேர்ந்தபடியினாலேயும் அல்லியெதல் ஷா கெறுவத்தை அடைந்து நிஜாம் ஷாவுடனே உயித்தம் பண்ண வேணுமென்று அவருடைய சீர்மையில் உபத்துறவம்[18] பண்ணுகிறத்துக்கு ஆரம்பிச்சார்.

அப்போ நிஜாம்ஷாவுடனே சேர்ந்த பேர்வழிகள் மாளோஜிருஜாவுடைய குமாரன் சாசிருஜா அவர்தம்பி சறபோஜிருஜா விட்டோஜிருஜாவுடைய புத்திரரான எட்டுப் பேரில்மூத்தவன் சம்பாஜிருஜா தெய்வகதியானவர் போகமைத்த ஏழு பேருக்கு பேர்வழிகள் கெலோஜிருஜா, மாளோஜிருஜா, மம்பாஜி[19] ருஜா, ருகோஜிருஜா, பறசோஜிருஜா, கக்காஜிருஜா, திறியம்பகஜிருஜா ஆகயேழு பேர். அபஸீசறதார் அமீர்க்கான்[21] முத்தாக்கான்[22] பலஸதான்[23] தேசாதிபதி பல்லாள பேடருஜா சிம்மருஜா[24] விட்டோஜிருஜா என்கிறவன்[25] தத்தாஜிருஜா என்கிறவன் ருகோஜிருஜா என்கிறவன்[26] நரசிம்மருஜா செகதேவருஜாவுடைய குமாரரான சுந்தரருஜா[27] இவாள் மருஷ்டருஜாக்கள்[28] துலுக்காள்[29] தக்கணி சற்தார்[30] சாறத்துகான் யாகத்துகான்[31] மனசூர்கான்[32] சுரூப்புக்கான் ஜோஹர்க்

---

17. லஷ்கற்கான்-லஷ்கிர்கான் (போ. வ. ச. பக். 11); இவர் முகலாய பிரபுக்களில் ஒருவர்; இவருக்குக் குவாஜா அபுல்ஹாஸன் (Khwajah Abul Hason) என்பது இயற்பெயர். இவர் பட்வடி (Bhatvad:) போரில் கலந்து கொண்ட முகலாய சர்தார்களில் ஒருவர் (சர்க்கார் (2) பக்கம் 17, 21)

18. உபத்துறவம் - உபத்திரவம்

19. மம்பாஜி-மனோஜி (போ. வ. ச. பக். 11)

20. கக்காஜி - கங்காஜி (போ. வ. ச. பக். 1!)

21. அபஸி-அபிசி (டி3119); அபிசி சர்தார் அமீர்கான் போ. வ. ச. வில் இல்லை; பதிலாகச் "சீகமீர்கான்" என்ற பெயருளது; சிவபாரதத்தில் "அமீர்கான்" என்று மட்டுமுளது.

22. முத்தாக்கான்-முத்தாகான் (டி3119); முதாகான் (போ. வ. ச. பக். 11); முசேகான் (சிவபாரதம்)

23. பலஸதான் - பலசகா (போ. வ. ச. பக். 11)

24. பேடருஜா சிம்மருஜா-பேடார் சாசிமராசா (டி3119); பேடர் தேசத்து அரசனை சிம்மராஜா போ. வ. ச. பக். 11).

25;26. "என்கிறவன்" என்ற இடங்களில் "என்கிற ஒரு மராட்டியன்" என்று டி 3119 இல் உள்ளன.

27. இதற்கடுத்து "என்கிற ஒரு மராட்டியன்" என்றுண்டு

28. இவாள் மருஷ்ட ருஜாக்கள்-இவ்வாக்கியம் டி 3119 இல் இல்லை

29. துலுக்காள்-துலுக்காண (டி 5119)

30. துலுக்காள் தக்கணிசற்தார்-தக்ஷிணத்தின் துருஷ்கப் பிரபுவான (போ. வ. ச. பக். 11)

31. யாக்கத்துகான்-யாகுப்கான் (போ. வ. ச. பக். 11)

கான் பத்தேக்கான்[33] அவனுடைய குமாரன் அஹமத்துக்கான் அம்பர்க்கான்[34] நிஜாமுடைய சேனுபதி யித்தனே சற்த்தார்க்களும் ருஜாக்களும் அவாளவாள் சேனேகளுடனே சேர்ந்திருக்கிறபடியினுலே நிஜாம்பாதுஷா அல்லி யெதல் ஷாவை ஒருதிரணமாக எண்ணிக் கொண்டிருந்தார். அல்லி யெதல் ஷாவும் தம் முடனே யாதவருஜா அவருடைய சேனேகளுடனே கும்மக்காயிருக்கிற படியினு லேயும் டில்லியீசுவரன்[35] முகல் சேனேகளே கும்மக்காக அனுப்பிவித்திருக்கிறபடி யினுலேயும் நிஜாம்ஷாவோடே உயித்தத்துக்கு ஆயித்தமாகி அவரைச் சேர்ந்த சற்தார்கள் பேர்வழிகள் யாதவருஜா அவருடைய சேனேகள் மாருஷருஜாக்கள் சற்தார்கள் துலுக்க சற்தார்களுடைய பேர்வழிகள் ஜலால்கான் கஞ்சீர்கான் கரமுல்லாக்கான் சுஜான்க்கான் ஜாஹன்க்கான் சிக்கண்டர்க்கான் கலேல்க் கான் யிசாமத்தக்கான் ஆக எட்டு துலுக்காள் யாதவருஜாவுடைய பிள்ளே களுடைய பேர்வழி உத்தாறம்[36] விசுவனுத அச்செல்[37] பாஹதா தாதாஜி ருகவ ஜெசவந்து ஆக-எ[38]-பிள்ளேகளும் யாதவருஜாவும் அவரை சேர்ந்த சற் தார்க்களும் டில்லியீசுவரன் அனுப்பிவிச்ச முகல்சற்தார் லஷ்க்கற்க்கான் அல்லி யெதல் ஷாவை சேர்ந்த சற்தார் மத்தவர்களும் முஸ்தபக்கான் மஹமத்தக் கான் திலாவற்க்கான் யாகுத்தக்கான்[39] அம்பர்கான் முசேக்கான் பரித்துக்கான் சுறஜாக்கான் ஜோஹற்க்கான் அங்குசுக்கான் ஆகப்பேர்வழிபத்து. இதுவுமல் லாமல் அல்லி யெதல் ஷாவின் தொகப்பனுர் யிபருயிமுக்கான்[40] அவருடைய ஆப்த்தாள் உறவின்முறையார் சற்தார்க்கள் ருஸ்தும்கான் முதலான பேர்வழி

---

32. மனசூர்கான்-பரசூத்கான் (போ. வ. ச. பக். 11); அடுத்துப் பன்சூர்கான் என்று வேருெருவரும் குறிக்கப்பெறுகிருர்.

33. Futih Khan (டஃப் பக்கம் 49); Fath Khan (சர்க்கார் (2) பக். 11) இவர் மாலிக் அம்ப ருடைய மகன்; இவர் அஜீஸ் மாலிக் (Aziz Malik) என்றும் வழங்கப் பெற்றார் (சர்க்கார் (2) (பக். 11). "Fath Khan, an extremely haughty, incompetent and blood thirsty man" (சர்க்கார் (2) பக்கம் 26)

34. அம்பர்கான் - இவர் மாலிக் அம்பர் எனப்படுவர். இவர் அபிசீனியர்; 1549இல் பிறந்தவர். பாக்தாது (Baghdad) வணிகர் மீர்காசிம் என்பவரால் கொண்டு வரப்பட்டு, அகமத் நகரில் முர்தாஜா நிஜாம் I ஷா க்கு அமைச்சராக இருந்தவரும் முராக் டபீர் எனப்பெற்றவருமான செங்கிசுகானுக்கு விற்கப்பட்டார். இவருடைய அறிவுக்கூர்மையை அறிந்த செங்கிசுகான் இவரை அரசியலில் பழக்கினார். இவரைப்பற்றி ஜாதுநாத் சர்க்கார் தம் House of Shivaji என்ற நூலில் விரிவாக எழுதியுள்ளார் (பக்கம் 6-23). இவர் 14 - 5 - 1626 இல் தம் 80 ஆவது வயதில் இறந்தார் (சர்க்கார் (2) பக்கம் 25; சர்தேசாய் பக்கம் 55; தகாகாவ் பக்கம் 19). அம்பர்கானின் மூத்த மகன் பத்தேகான் (Fatih Khan); பிறிதொரு மகனுக்குச் செங்கிசுகான் என்று பேர் (டஃப் பக்கம் 49). இவர்காலத்தில் இருந்த நிஜாம்ஷா முர்தாஜா II பெயரளவில் அரசராக இருந்தார்.

35. டில்லியீசுவரன் — டில்லிசுவான் (டி3119)

36. உத்தாறம்-உதார் ராம் (போ.வ.ச.பக்.12; சிவபாரதம் பக். 16)

37. அச்செல்- அச்சல் (போ.வ.ச.பக்.12); அசலோஜி (சிவபாரதம் பக்.16)

38. எ=ஏழு; ஏகோஜி என்ருெருவரையும் யாதவராஜாவின் மக்களுள் ஒருவராகச் சிவபாரதம் (பக். 16) கூறும்.

39. யாகுத்தக்கான்-யாகத்துக்கான் (டி3119); யாகுப் கான் (போ. வ. ச. பக். 12)

40. யிபருயிமுக்கான் - Ibrahim Khan

கள் துண்டிருவு பிருமணசற்தார் மருட்டிய சற்தார் தாபடிகே[41] முதலானவர்கள் சேனுபதி முல்லா மஹமதுக்கான்[42] இத்தனை சற்தார்க்களோடே சேனுபதிமுல்லா மஹமத்தகானை முன்னிட்டுக் கொண்டு நிஜாம் ஷாவோடே உயித்தத்துக்கு ஆரம்பித்தார்கள். நிஜாம்ஷாவும் தன்னைச் சேர்ந்த சற்தார்கள் சேனைகள்ருாஜாக்கள் முதலானவர்களோடே கூட தன்னுடைய சேனுபதி அம்பர்கானை[43] முன்னிட்டுக் கொண்டு அல்லி யெதல் ஷா வோடே உயுத்தம் பண்ணத் துடங்கினுர்கள். அந்த உயித்தத்திலே மாளோஜிருஜாவினுடைய குமாரன் சாசிருஜாவான வர் றணசூரனுகி பூற்வத்தில் தேவாசுர சண்டையைப் போலே உயித்தம் பண்ணி டில்லியீசுவரன் சாகீர்பாதுஷா[44] அல்லியெதல் ஷாவுக்கு கும்மக்காய் அனுப்பிவித்த முகல் சேனையை யெல்லாத்தையும் அபசெயமாய் ஓடிப்போக பண்ணினுர். அவர்களுடனே கூடி சண்டைபோட்டயாதவருஜா சேனையையும் அபசெயமாக்கி ஓடபண்ணினுர் அப்படியே அந்த சஹஜிருஜாவின் தம்பி சறபோஜி ருஜாவும் அல்லியெதல் ஷாவுடைய சேனையோடே உயித்தம் பண்ணி அந்த சேனைகளையும் சற்தார்களையும் அபஜெயமாக்கி அல்லியெதல் ஷாவின் சேனைகள்யெல்லாத்தையும் துரத்தி அடித்தார்.

இப்படி அபஜெயமாய் அல்லியெதல்ஷா முதலானவர்கள் சேனைகளோடே எல்லாரும் சிறுது தூரம் ஓடின பிற்பாடு அல்லி யெதல் ஷாவைச் சேர்ந்த சற்தார்க்களில் ஜொஹறக்கான்[45] என்கிற சற்தாருனவன் யாதவ ருஜாவையும் முகல் சேனையின் சற்தார் முதலான எல்லாரையும் ரூேஷப்படுத்தி[46] திருப்பிக் கொண்டு மறுபடி உயித்தத்துக்கு வந்தார்கள். அப்போ மாளோஜி ருஜாவின் ரெண்டாம் குமாரன் சறபோஜிருஜா உயித்தத்தை வஹிச்சு[47] சண்டை முகமாக நின்று வெகு நாழிகைவரைக்கும் ஞுவிதமான சண்டைகளை பண்ணி அனேகம் சேனைகளை கொண்ணு தானும் வீர சொற்கத்தை அடைந்தார்.[48] உடனே அவருடைய தமையன் சஹஜிருஜா வானவர் தம்முடைய சிறிய தொகப்பனுருடைய ரெண்டாம் குமாரன் கெலோஜிருஜாவை கூட அழைத்துக் கொண்டு மஹாபராக்கிறமத்துடனே சண்டைபண்ணி சத்துருக்களையெல்லாம்

---

41. தாபடிகே-காடிகே (டி3119); காண்டிகே (போ.வ.ச.பக். 12)

42. முல்லா மஹமதுக்கான்-முல்லாமரா மம்மதுகான் (டி3119); முல்லாம் அகமத்கான் (போ.வ.ச.பக்.12) இச்சேனைத்தலைவன் பெயரைச் சிவபாரதம் குறிக்கவில்லை. இவன் முல்லா முகமது லரி (Mulla Muhammad Lari) ஆக இருக்கக்கூடும் (சர்க்கார் (2) பக். 21) என்று அறியலாம்.

43. தன்னுடைய சேனுபதி அம்பர்கானை-அம்பர்கான் தன்னுடைய சேனுபதியை (டி3119)

44. சாகீர் பாதுஷா-ஜஹாங்கீர்

45. ஜோஹர்கான்-இந்த இடத்தில் சிவபாரதத்தில் (பக். 11) "அப்போது யானைகளுக்குச் சர்தாராயிருக்கப்பட்ட மகாசூரன் மனச்சேகர் என்ற மொகல் ஓடுகிற சேனைகளை அழைத்துக்கொண்டு தான் முன்னேவந்து நின்றுன்" என்றுள்ளது. மனச்சேகர் என்றது சோகர்கான் போலும்!

46. ரூேஷப்படுத்தி—ரொஸ்டுப்படுத்தி (டி3119); ஒன்று சேர்த்து (போ.வ.ச. பக். 13)

47. வஹிச்சு-மேலவராகி (டி3119)

48. இறந்தது சகம் 1551 அதாவது கி.பி. 1629 (திருமுடி சேதுராமன் சுவடி பக். 33). இவர் இறந்தது சிவபாரதத்தில் சொல்லப்பெறவில்லை.

சின்னபின்னமாக போக பண்ணி[49] திரும்பி உயித்தத்துக்கு வந்த ஜோஹர்கான் முதலான சிறுது சற்தார்க்களை கொண்ணு சிறுது சறுதார்க்களை கைபிடியாக பிடித்து[50] காவல்கூடத்தில் அடைத்து இப்படி மஹா சண்டைபண்ணினத்தில் அல்லியெதல் ஷாவானவன் உறுதியாய் சஹஜிருஜாவோடே சண்டை பண்ண மாட்டாமல் விழுந்து[51] போனவர்கள் றணகளத்தில் பிடிபட்டவர்கள் போக குறைசற்தார்க்களும் யாதவருஜா முதலானவர்களும்[52] ஓடிப்போய் விட்டார்கள். அப்போ சஹஜிருஜா செயத்தை அடைஞ்சு[53] அம்பர்கான் சேனுபதியை முன்னிட்டுக் கொண்டு நிஜாம்பாதுஷா வண்டையில் வந்து குறுனிசு[54] பண்ணினுர்கள். அதுக்கு நிஜாம்ஷா சஹஜிருஜாவுக்கு விசேஷ மரியாதை வெகுமதிகளை பண்ணினுர். அதன் பிற்பாடு விட்டோஜிருஜாவின் பிள்ளை கெலொஜி ருஜாவானவன் சஹஜிருஜாவுக்கு ஆனமரியாதைகள் தனக்கும் ஆகவேணுமென்கிற அபேஷைசயினுலே சேனுபதி அம்பர்கானை ரொம்பவும் அனுசரிச்சுக் கொண்டிருந்தார். அந்த சேனுபதி மனதிலேயும் தான் சேனுபதியாகயிருக்க சஹஜிருஜா செயத்தை அடைந்தபடியினுலே பாதுஷா சமுக்கத்திலே[55] தன்னைப்பார்க்கிலும் நூறுபங்கு அதீக மரியாதைகளாச்சுதென்று பொருமை அதிகரித்து யிருந்தபடியினுலே ஸஹஜி ருஜாவைப்பார்க்கிலும் கெலொஜிருஜாவுக்கு விசேஷமாகப்பிறகாசமாக பண்ணிவைக்கவேணு மென்கிற துருங்காரத்தினுலே நிஜாம்ஷா வண்டையில் கெலொஜிருஜாவின் யோக்கியதையும் சவரியமும்[56] இப்போ சம்பவிச்ச உயித்தத்தில் ஜெயமானதும் கெலொஜிருஜாவாலேதான்[57] என்று யிப்படியெல்லாம் தெரியபண்ணி நிஜாம் ஷாவைக் கொண்டு விட்டோஜிருஜாவின் புத்திரனுன கெலொஜிருஜாவுக்கு விசேஷ மரியாதைகள் பண்ணி வைத்தான்.

---

49. சத்துருக்களை யெல்லாம் சின்னபின்னமாக போக பண்ணி-சத்துருக்களுக்குத் தாகப்படுத்தி (டி3119); அச்சத்தையுண்டாக்கி (போ.வ.ச.பக். 13).

50. கைபிடியாக பிடித்து-உயிரோடே பிடித்து (டி3119)

51. விழுந்து -சென்று (டி3119)

52. இதனை யடுத்து டி3119இல் ''சின்னபின்னமாய்'' என்பதுளது

53. ''அப்போ சஹஜிருஜா செயத்தை அடைஞ்சு'' என்ற விடத்தில் ''அதன் பிற்பாடு சகசிராசா ரெணக்களம் சுவாதீனமான பிற்பாடு'' என்பவை உள்ளன.

54. குறுனிசு பண்ணினுர்கள்—குறனீசு பண்ணினுர்கள் (டி3119); வணங்கினுர்கள் (போ.வ.ச.பக்கம் 13). கௌர்னிஷ் - Salutation.

இப்போர் பட்வடியில் நிகழ்ந்த போர் (Battle of Bhatvadi) என்று வரலாற்றாசிரியர்கள் கூறும் போராக இருக்கலாம்:

"In the battle of Bhatvadi near Ahmadnagar in 1624 Malik Ambar inflicted a crushing defeat upon the combined armies of Delhi] and Bijapur. Shaji who took part in this battle won distinction and gained valuable experience" - (Majumdar, R.C., The History and Culture of the Indian People-The Mughal Empire, Bharatiya Vidya Bhavan, Bombay, 1974, page 248). இந்தப்போரில் முல்லாமகம்மது லரி (அடிக்குறிப்பு 48) கொல்லப்பட்டார் (மேற்படி நூல் பக்கம் 442). முல்லாமகம்மது இறந்தமையைப் பே. வ. ச. சிவபாரதம் குறிக்கவில்லை.

55. சமுக்கத்திலே-முகத்தில் (டி 3119)

56. சவரியமும்-சவுரியத்தையும் (டி 3119)

57. ''தான்'' என்பதற்குப்பிறகு ''ஆச்சுது'' என்ற சொல் டி3119இல் உள்ளது.

அதை சாசிருஜா கேழ்விப்பட்டு மனறம்மியமில்லாமல் அந்த சங்கதி தியாகம்[58] பண்ணி தன்னுடையதளம்[59] சாத்தார் கெடிக்கு வந்து சேர்ந்தார்.[60] சிறுது நாளைக்குப் பிற்பாடு சஹஜிருஜா நிஜாம்ஷா வண்டையில் தனக்கு மனதில்லாமல்[61] தன்னுடைய சுவதேசத்துக்கு வந்த விதமெல்லாம் அல்லியெதல் ஷாவுக்குத் தெரிஞ்சு சஹஜிருஜாவை போலொத்தவரை தன்னைச் சேர்ந்தவராக பண்ணிக் கொள்ளவேணுமென்கிற அபேஷ்சையாகி அதுக்கடுத்த சவவிதமான[62] வாற்தைகளைச் சொல்லி அனுப்பிவிச்சார். அந்தவாற்தைகள் பிறஸீஸ்தமாக[63] தோணின படியினுலே சஹஜிருஜாவுக்கு மனதாய்[64] அல்லியெதல் ஷா வண்டையில் போய் கண்டு வாற்தை சொன்னபிற்பாடு தன்னுடைய தளமும் அல்லியெதல் ஷாவின் தளமும் ஒண்ணுக்கிக்கொண்டுஅவடத்திலிருந்து நிஜாம்ஷாவின் பேரிலே பாளையமெடுத்தார்.[65*] முன் அல்லியெதல்ஷாவுக்கு டில்லீசுவரன் சாகீர்பாதுஷா முகலுடைய சேனைகளை கும்மக்கு அனுப்பியிருந்துதே அதுவும் யாதவருஜாவும் இந்த ரெண்டு சேனைகளும் இந்த சஹஜிருஜா நிஜாம் ஷாவுடனே சேர்ந்து உயித்தம் பண்ணினத்தில் அபசெயத்தை அடைஞ்சு சின்னுபின்னமாய் போன போது யாதவருஜாவும் மொகலாய சேனைகளுடனே[65அ] சேர்ந்திருந்தார்.[66*] இப்போ அதுகளைத் தவிர சஹஜிருஜா அல்லியேதில் ஷாவினுடைய சேனைகளை மாத்திரம் தம்முடைய சேனைகளுடனே கூட்டிக்கொண்டு நிஜாம்ஷாவின் பேரிலே உயித்தத்துக்குப் போய் உயித்தம்பண்ணினவிடத்தில் நிஜாம் ஷாவின் சேனைகளும் சேனுபதி அம்பற்க்கான் முதலானவர்கள் அபசெயத்தை அடைந்து சின்னு

---

58. சங்கதிதியாகம் - சங்கத்தியாகம் (டி3119, டி3762)

59. தளம் - ஸ்தலம் (டி 3119; டி 3762)

60. அம்பர்கான் தானும் பொறாமையுற்றுக் கேலோஜிக்கு மரியாதைகள் செய்யச் செய்தமையை ஷாஜி விரும்பாமல், தன் ராஜ்யத்துக்குச் சென்றார் என்பது இங்குக் கூறப்பட்டது. திருமுடி சேதுராமன் சுவடியிலும் இங்ஙனமே உள்ளது. சிவபாரதத்தில் இச்செய்திகள் இல்லையெனினும் இரு சாரார்க்கும் மனவேற்றுமை ஏற்பட்டமை குறித்துப் பின்வருமாறுள்ளது:–

'விட்டல் ராஜாவினுடைய பிள்ளைகள் கேலோஜி கர்னாஜி முதலான பேர் தர்மராஜாவோடு துரியோதனாதிகள் எப்படி திரேஷம் பண்ணினார்களோ அந்தரீதியிலே ஷாஜா ராஜாவின் பேரிலே திரேஷம் பண்ணி நிஜாம்ஷாவினுடைய மந்திரி அம்பர்கானை அனுசரித்துக் கொண்டு தங்களுக்கு ராஜ்யாதி பத்தியம் வரவேண்டுமென்று ஷாஜாராஜாவினுடைய பிற்பலத்தை ஜெயிக்கப் படாமல் எத்தனம் பண்ணத் தலைப்பட்டார்கள். அதை புத்திமனத்தராயிருக்கப்பட்ட ஷாஜிராஜா அறிந்து நமக்குள்ளேதான் இரண்டுபட்டது என்று அந்த அம்பர்கானுக்கும் நிஜாம்ஷாவுக்கு பறவைபண்ணாமல் இங்கு இருக்கக் கூடாதென்று தன்னுடைய சேனைகளோடு தாமிருந்த ராஜ்யத்துக்குப் புறப்பட்டு (வந்தார்)'' (பக்கம் 12).

61. மனதில்லாமல்-மனரெம்மியமில்லாமல் (டி3119)

62. சவவிதமான-சமாதான (டி3119)

63. பிறஸீஸ்தமாக-பிரசித்தமாக (டி3119) பிறசஸ்தமானுக (டி3762)

64. மனதாய்-அங்கீகாரமாகி (டி3119)

65* முதல் 66* வரை உள்ள பகுதி போ. வ. ச. வில் (பக்கம் 14இல்) ''முன்பு அல்லியதில் ஷாவின் சகாயத்திற்காக வந்த முகலாய சேனையும் யாதவராஜாவும் ஷஹாஜியால் துரத்தியடிக்கப் பட்டு அச்சேனையும் யாதவராஜாவும் முகலாய இராச்சியத்தில் வசித்து வந்தார்கள்.'' என்று காணப் படுகிறது.

65 அ. சேனைகளுடனே - பவுசுடனே (டி3119).

பின்னமாய் ஓடிப் போய்விட்டார்கள். சஹஜிருஜா செயத்தை அடைந்து அல்லியெதல் ஷா வண்டையில் வந்து சேர்ந்தார். அப்போ அல்லியெதல் ஷா மஹா சந்தோஷமாகி சஹஜிருஜாவுக்கு தம்முடைய ருச்சியத்தில் பாதி ராட்சியம் சாகீர் விட்டார்.[67] அதின் பிற்பாடு அல்லியெதல் ஷாவுக்கு சுவாதீனமில்லாமல் இருந்த முத்தேகான்[68] முதலானவர்களையும் கேரள தேசாதிபதி முதலான எல்லா ருஜாக்களையும் சஹஜிருஜா செயித்து அல்லியெதல் ஷாவுக்கு கப்பம் கட்ட தக்கினையாகப் பண்ணி[69] கசானுவிலே பெருதிரவியம் சேரத் தக்கினையாகப் பண்ணினுர்.

பிற்பாடு சஹஜிருஜா விசைய துற்க மென்று சொல்லப்பட்ட விஜாபுரத்திலே வாசம் பண்ணிக் கொண்டிருக்கிற நாளையில் அவருடைய இரண்டாம் ஸ்ரீ[70] ஜிஜாவு வயத்தில் சாலியவாகன சகம் [illegible]டுசக[71] அட்சய வருஷம் முதல் குமாரன் சம்பாஜிருஜா பிறந்தார். அதின்பிற்பாடு கிறமமாக நாலு பிள்ளைகள்[72] பிறந்துது. ஆனுல் அதுகள் வற்திக்கவில்லை.

---

67. பாதிராச்சியம் ஜாகீர் விட்டதாக போ. வ. ச. விலும் (பக்கம் 15), டி 3119 இலும், சிவ பாரதத்திலும் (பக். 14) இருக்கத் திருமுடி சேதுராமன் சுவடியில் "நாலிலொருபங்கு" (பக்கம் 39) என்றிருக்கிறது.

68. "சுவாதீனமில்லாமலிருந்த" என்று இங்கும், டி.3119இலும் இருக்க "ஸ்வாதீனத்திலிருந்து" என்று போ. வ. ச. விலுள்ளது (பக்கம் 15); "ஏதில் ஷாவின் பக்கத்திலிருந்து" என்று பொருள் கொள்ளலாம். சிவபாரதத்தில், "ஏதில்ஷா தன்னுடைய தகப்பனாருக்கு எதிரியா இருக்கப்பட்ட முத்தேகான்" என்றமையான், முத்தேகான் அலிஏதில்ஷாவின் "சுவாதீனம் இல்லாமலிருந்தவர்" அதாவது ஏதில் ஷாவுக்கு அடங்காதிருந்தவர் என்பது பெறப்படும்.

69. "கப்பம் கட்டத் தக்கினையாகப் பண்ணி" என்ற இடத்தில், "குண்டு மரியாதைகளைக் கொடுக்கும்படியாய்ச் செய்து" என்று போ. வ. சவிலுள்ளது (பக்கம் 15);இதற்குரிய போ. வ. ச. மராட்டிப் பகுதி பக்கம் 12 வரி 8இல் "தோஃபா" என்றசொல் காணப்படுகிறது. திருமுடி சேதுராமன் சுவடியிலும் (பக்கம் 40) "தோப்பா கட்டும்படி கண்டித்தார்" என்றுள்ளது. (தோஃபா - கப்பம்- "Tribute" : Elizabeth Stranberg, The Modi Documents from Tanjore in Danish Collections, Franz Steiner Verlag, Wiesbaden, 1983, page. 61).

70. ரெண்டாம் ஸ்ரீ - இரண்டாவது சகா (டி3119); இரண்டாவது மனைவி.

71. சகம் 1541; திருமுடி சேதுராமன் சுவடியில் சகம் 1549 என்று குறிப்பிட்டிருப்பினும் (பக்கம் 41) அதற்கேற்பக் கி.பி. 1624 ரக்தாட்சி என்றது தவறு; இது கி.பி. 1627 பிரபவ ஆதல் வேண்டும் (சாமிக்கண்ணுப்பிள்ளை). சகம் 1547 அக்ஷய வருஷம் என்று போ.வ.ச. கூறும் (பக்கம் 15); இதுவுந் தவறு; சகம் 1547க்கு உரிய ஆண்டு குரோதன ஆண்டு ஆகும் (சாமிக்கண்ணுப்பிள்ளை).

"Sambaji was born in 1619 when Shahji was 25 years old" (Sardesai, page 53) "Shahaji had three sons, of whom the eldest, Sambhaji, was born at Dowlatabad in 1623 to his first wife JijaBai during their residence at that fort" (Takakhav Page 50)

ஷாஜிக்கும் ஜிஜாபாயிக்கும் 1604இல் திருமணம் நடந்தது என்று பக். 116இல் கூறிய கி. பா. பக்கம் 123 இல்,

'In 1623 Jija Bai bore her lord a son three years after their marriage. He was called Sambhaji"

என்று கூறியது எங்ஙனம் பொருந்தும் என்று தெரியவில்லை.

72. "ஆறு பிள்ளைகள் பெற்றாள்: அதில் ஸம்பாஜி, சிவாஜி இருவரும் வம்சத்தரானார்கள்" (சிவபாரதம் பக்கம்12). வற்திக்கவில்லை — வளர்ந்து பெரியவர்களாகவில்லை —(போ.வ.ச.பக். 15.)

இப்படியிருக்கிற சமையத்திலே நிஜாம்ஷாவுடைய சேனுபதி சஹஜிருஜா பேரிலே பொருமையாகயிருந்த அம்பர்க்கான் தெய்வீகமானுன்.[73] இவடத்தில் அல்லியெதல் ஷாவுடைய தொகப்பனுர் யிபருயிமுகானும் தெய்வீக மானுன்.[74] அப்போ டில்லீசுரனுகயிருக்கப்பட்ட சாகீர் பாச்சா[75] வானவர் முன்னே நிஜாம் ஷாவுக்கும் அல்லியெதல் ஷாவுக்கும் உயித்த பிறசங்கம் விழுந்திருந்த போது அப்போதாம் அல்லியெதல் ஷாவுக்கு கும்மக்காக மொகலாய சேனைகளை லஸ்கர் கானென்கிற சற்தார் பின்னுலே அனுப்பியிருந்தத்தை நிஜாம் ஷா சஹஜிருஜா வுடைய பலத்தினுல் தம்முடைய மொகல் சேனைகளை அடித்து துரத்தி அவமா னம் பண்ணினுன். இப்போ அந்த நிஜாம்ஷா வண்டையில் சஹஜிருஜாவுமில்லை. யாதவருஜாவும் அதுக்கு முன்னேயே புறப்பட்டு போய்விட்டான் அவன் சேனு பதி அம்பர்க்கானும் தெய்வீகமானபடியினுலே அவன் பலமும் குறைஞ்சுது. ரெண்டாவது அவன் நடத்தையும் செவையில்லை.[76] இப்படிக் கொத்த சமையத் தில் அவன்மேல் ருஜகாரணம்[77] பண்ணினுல் சுவாதீன மாகுமென்று யோசினை பண்ணி தரியாகான்[78] என்கிற சற்தாரோடே சேனைகளை கொடுத்து நிஜாம் ஷா பேரிலே சண்டைக்கு அனுப்பிவிச்சார்.

இந்த சேதி நிஜாம்ஷாவுக்குத் தெரிந்து நம்மண்டையிலிருந்த சஹஜிருஜா யாதவருஜா இவர்கள் போய் விட்டபடியினுலேதான் அபசெயம் வந்தது. இப்ப வும் தரியாகானுனுல் வருகிறுன். ஆகையால் சஹஜிருஜாவையும் யாதவருஜாவை யும் சறுவபிறையெத்தினம் பண்ணி அழைப்பிவித்துக்கொள்ள வேணுமென்று திருடயோசினை[79] பண்ணி ரெண்டு பேருக்கும் ரகசியமாய் சொல்லியனுப்பி வித்தத்தின் பேரிலே யாதவருஜா மொகல் சுவாதீனத்திலிருந்தவரும் விசா புரத் திலிருந்த சஹஜிருஜாவும் நிஜாம்ஷாசீமை தேவகிரி சமீபத்தில் தாராகிறி யென் கிற யிடத்தில் வந்து சேர்ந்தார்கள். அதுக்கு சமீபத்தில் சிவனேர்கெடி என்று ஒரு கெடிஸ்தளம். அதுக்கு இசமான் விசுவாசருஜா என்கிறவன் வமிசத்தில் பிறந்தவன் விசையருஜா[80] என்கிறவன் ருச்சியமாண்டு கொண்டிருந்தான். அவன்

---

73. அம்பர்கான் தன் எண்பதாவது வயதில் 14.5.1626இல் இறந்தவராதல் கூடும் (சர்க்கார் (1) பக்கம் 25; சர்தேசாய் பக்.55)

74. "Ibrahim Adil Shah II had died in 1626 in the same year as Malik Ambar" (K. P. Page 117)

75. சாகீர்பாச்சா - ஜஹாங்கீர்

76. செவையில்லை - செவ்வையில்லை (டி3119)

77. ருஜகாரணம் - இராசகாரியம் (டி3119)

78. Dariya Khan Ruhela; தரியாகான் படையெடுத்தது 1628 நவம்பர்த் திங்களில் என்று தெரிகிறது.

79. திருடயோசனை = திடமான யோசனை; திருட்டு யோசனை (டி3119) இரகசியமான ஏற்பாடுகள் (போ. வ. ச. பக். 16)

80. சித்தபாலனுடைய பிள்ளை விஜயராஜா (சிவபாரதம் பக். 18)

தன்னுடைய பெண்ணு செயநதி பாயியை[81] சஹஜிருஜாவுடைய மூத்த பிள்ளை சம்பாஜிருஜாவுக்குக் குடுக்கிறேமென்று சொல்லி அனுப்பிவிச்சான். அப்போ சஹஜிருஜா அந்த பெண்ணுக்கும் தன் பிள்ளைக்கும் பொருத்தம் பார்த்து விஜாபுரத்திலிருந்து தன் சமுசாரத்தையு மழைப்பிவிச்சு சிவனெரிகெடிக்கு போய் சம்பாஜிருஜாவுக்கு கலியாணம் பண்ணிவீச்சார்.

அப்பால் நிஜாம்ஷா சஹஜிருஜாவுக்கு முகல் சேனையோடே கூட வருகிற தரியாக்கான் பேரிலே தம்முடைய சேனையை வாங்கிக்கொண்டுபோகச் சொல்லி உத்தரவுபண்ணி யாதவருஜாவுக்குத் தன் பேட்டிக்கு வரச்சொல்லி அழைப்பி வித்தார்.

அப்போ சஹஜிருஜாவுடைய **ரெண்டாம் ஸ்ரீ ஜிஜாவு**[82] பாயி சாயபு பூரண கெற்பமாகயிருந்தாள். அவளுக்கு சவரக்ஷனை பண்ண சிலசேனைகளை சிவனேரி கெடியிலேவைத்து குறை சேனையோடே தாம் தரியாகான் பேரிலே சண்டைக்குப் போனவிடத்தில் தரியாகானோடே உயித்தம் பண்ணி மொகல் சேனையுடனே தரியாகானை துரத்தி அடித்து செயத்தை யடைஞ்சு திரும்பி சிவனேர் கெடிக்குவந்து சேருகிறத்துக்குள்ளே ஜிஜாவுபாயி சாயபு பூரண கெற்பமாக இருந்தவள் சாலிய வாகன சகம் ௲௫௱௫௰௧[83] யிங்கிலீசு வருஷம் ௲௬௱௨௰௮ பிறமோதூத[84] வருஷம் புத்திரேச்சவமாச்சுது.[85*] உடனே

---

81. செயநதிபாயி-செயந்திபாயி (டி.3119); ஜெயனத்திபாயி (சிவபாரதம் பக். 18)

82. ஜிஜாவு - சீசாயி (டி.3119)

83. சகம் 1551

84. சகம் 1551க்கு இங்கிலீஷ் 1628 தவறு; போ. வ. ச. 1629பிரமோதூத என்று கூறும் (பக்கம் 17); இதில் பிரமோதூத தவறு; சுக்ல என்றிருக்க வேண்டும். இது சிவாஜி பிறந்த தேதியாகும். "சகம் 1551ஆம் வருஷம் உத்தராயணம் சிசிருது பங்குனி மாதம் கிருஷ்ண பட்சம் திரிதியை" என்று சிவபாரதம் (பக்கம் 15) கூறும்.

"The date commonly accepted is 1627 A. D. but Mr. B. G. Tilak suggests 1629 as a poossible date on the strength of Jedhe yanche Shakavali. A recently discovered Tamil work Siva Bharatha also gives Tilak's date" *(Sen page 3, footnote).*

*10-4-1627 என்பர் கி. பா. (பக்கம் 123).*

"The founder of the Maratha Empire was born on the 10th of April 1627 (Monday, the 5th of the first half of Vaikash of the Shaka year 1549)" Takakhav Page 53)

"There are discrepencies about the date in various bakhars. Malhar Ram Rao and Shivadigvijaya give the second of the first half of Vaishak as the date and Thursday as the day of the week. But the date and day do not

சஹஜிருஜாவும் வந்து சேர்ந்து நமக்கு செயமான சமையத்தில் புத்திரேுச்சவ மாச்சுதென்று ரொம்பவும் சந்தோஷத்தை அடைந்து அந்த பிள்ளைக்கு சிவனேரி கெடியிலே பிறந்த படியினாலே சிவாஜிருஜா[86] என்று நாமகரணம் பண்ணினார்.

மேல் யாதவருஜாவை பேட்டிக்கு வரச்சொல்லியிருந்துதே அப்போ நிஜாம்ஷா என்கிறவர் தம்முடைய சேனாபதி அம்பற்க்கான் தெய்வீகமான பிற்பாடு பத்தேகான்[87] என்கிறவனுக்கு சேனாபதித்துவமும் மந்திரித்தினமும் குடுத்து இருந்தது. அந்த பத்தேகான் யோசினை பண்ணினது: நிஜாம்ஷா என்கிறவர் யாதவருஜாவை பேட்டிக்கு அழைப்பிவித்தபடியே அவரும் வருகிறார். அதனால் யாதவருஜா சூரன் நிஜாம்ஷாவுடைய பேட்டியானபிற்பாடு யாதவருஜா பேரிலே பாரம் விழுந்து தன்னுடைய பெரிய தினத்துக்கு குறைச்சல் விழும். ஆகையால் நிஜாம்ஷாவுக்கு முன்னாலே தானே போதினைபண்ணி அவர் சித்த விறுத்தியை

---

seem to agree. The Rairi's Bakhar giving the same date and day as in the text gives the year as Shaka 1548. Here again the date and day cannot agree ...... The Shedgaokar bakhar gives Saturday the third of the first half of Vaishak, Shaka year 1549 as the birth day while the Jedhe Chronology dates the event in Shaka 1551"- (Takakhav, Page 53, F.n.)

"On the basis of some epigraphical & astrologicale vidence some scholars favour the date 19 Feb. 1630. Recently Setu Madhaw Rao Pagadi suggests that Shivaji was born on 25th April 1628" (The Mughal Empire, F. n. 3, P. 278).

85* "உடனே சஹஜிருஜாவும்" என்பது முதல் சுமார் 2 பக்கங்களுக்குப்பிறகு, "துக்காபாயி சாயபு கெர்ப்பத்திலே புத்திர சந்தானமாச்சுது" (அடிக்குறிப்பு 100*) என்கிற வரையிலுமுள்ள செய்திகள் போ.வ.சவில் இல்லை. இந்த இடத்தில் தஞ்சைப் பெரியகோயிலிலுள்ள மராட்டி மொழிக்கல்வெட்டிலும் விடுபட்டுள்ளது. போ.வ.சவில் பக். 17இல், "ஜிஜாபாயி சாகேப் சாலி வாகன சகம் 1551க்குச் சரியான இங்கிலீஷ் வருஷம் 1629 பிரமோதூத வருடத்தில் பிரசவித்துப் புத்திரபாக்கியத்தைப் பெற்றார். அப்புதல்வனுக்கு ஏகோஜி ராஜா என்று பெயரிட்டார்கள்" என்றுள்ளது. இத்தமிழ்ப் பகுதிக்குரிய அடிக்குறிப்பில் (பே. வ.சபக்.17) "ஏகோஜிராஜா ஜிஜாபாயின் குமாரர் என்பது சரித்திரத்துக்கு முரணாக இருக்கிறது" என்று மட்டும் அந்நூலை வெளியிட்டவர் எழுதினார். இந்த இடத்தில் மெக்கன்சி சுவடியில் சிவாஜி பிறந்தார் என்றும், தொடர்ந்து யாதவராஜா பேட்டியும் கொலையுண்டமையும் முதலான செய்திகளும் ஷஹாஜியின் இரண்டாவது மனைவி துர்க்காபாய்க்கு ஏகோஜி என்ற மகன் பிறந்தமையும் கூறப்பட்டுள்ளன. இதனால் மராட்டியக் கல்வெட்டு எழுதியவர்கள் முதலில் தமிழில் எழுதிப்பின் மராட்டி மொழியில் பெயர்த் தெழுதியிருத்தல் கூடும் என்றும், பெயர்க்குங்கால் இவ்விடைப்பட்டபகுதி விடப்பட்டிருத்தல் கூடும் என்றும் நினைக்க வாய்ப்பிருக்கிறது. (விடப்பட்டபகுதி திருமுடி சேதுராமன் சுவடியில் பக்கம் 46-50 வரையுள்ளது)

86. "சிவகிரி என்ற பிரதேசத்திலே இந்தக் குழந்தை பிறந்தபடியினாலே சிவாஜி என்று பெயர் வைத்தார்" - (சிவபாரதம் பக்கம் 16)

தன் கணவனுக்குரிய தொல்லைகள் நீங்கித் தனக்குப் பிறக்கும் குழந்தை ஆண் குழந்தை யானால் அவனுக்கு அக் கோட்டைக்குரிய தெய்வமான "சிவை"யின் பெயரை வைப்பதாக ஜிஜாபாயி வேண்டிக்கொண்டமைக்கேற்ப ஆண்மகன் பிறந்ததும் அம்மகற்குச் "சிவா" என்று பெயர் வைத்தனள் (தகாகாவ், பக்கம் 53; சர்க்கார் (1) பக்கம் 18).

87. பத்தேகான் - Futeh Khan; இவர் அம்பர்கான் என்ற சேனைத்தலைவரின் மகன்; தந்தை இறந்ததும் தந்தையின் பதவியையேற்றார்.

கலைச்சு யாதவருஜாவுடைய பேட்டியாகிற சமையத்தில் அவருக்கு எவ்வளவா கிலும் அவமரியாதை யாகும்படியாய் பண்ணிஞல் அப்போ யாதவருஜா இந்த அவமானத்தை சயிக்கமாட்டாமல் திரும்பி போய்விடுவான். அப்போ அவனை சந்துக்கட்டா யிருக்கிறயிடத்திலே மடக்கிக்கொண்டு கொண்ணுபோட வேணு மென்று யோசினை பண்ணி நிஜாம்ஷாவுடைய சமையம் பார்த்து பத்தேகான் போய் சொன்னது: இந்த யாதவருஜா ஆரம்பம் முதல்கொண்டு நம்முடையவன். நடுவிலே சிலகாரணங்களிஞலே[88] வெளியிலேபோய்விட்டவன்[89] நல்லது போன வஞகிலும் தன் மட்டோடே யிருக்காமல்படிக்கு அல்லியெதல் ஷாவுடனே கூடிக் கொண்டு நம்முடைய பேரிலே ஆயுத மெடுத்தான். அப்படிக் கொத்த யாதவ ருஜாவை மறுபடியும் பேட்டிக்கு அழைப்பிவிக்கிறீர்கள். வந்த பிற்பாடு ஏதா கிலும் ஒருகாரியங்களைச் சொல்ல வேண்டியதாயிருக்கும். அவன் பீறிதிக்கு பாத்திரவாஞகிறத்திஞலே இப்போ நம்மண்டை விடாமல்படிக்கு இருக்கிற சற் தார்கள் ஒரட்டுக்கும் பிகடாச்சு[90] தங்களுக்கு தோணினபடிக்கு போறதாகயிருக்கி ருர்கள். ஆகையால் அந்த யாதவருஜாவை பேட்டிவாங்குகிற சமையத்தில் யெதாப்பிறகாரம்[91] பண்ணுகிற மரியாதையில் கொஞ்சம் குறைச்சல் பண்ண வேணும். அதுக்கு சம்மதியாக விருந்தா லிருக்கட்டும். சம்மதி யில்லாமல் பிறப் பட்டால் அதின் பிற்பாடு[92] அவனை விடலாகாது. அவன் அப்பாலே போஞல் அனற்த்தத்துக்கு வரும். ஆகையால் சந்துக்கட்டு இடம் பார்த்து மடைக்கி கொண்ணுபோடவேணும். இந்த பிறகாரம் நாம் பண்ணுமலிருந்துவிட்டால் நம்முடைய கிட்டயிருக்கிற சர்தார்கள் ஒருத்தரும் நம்மை நம்பமாட்டார்க ளென்று பத்தேகான் சொன்ன வார்த்தையை காலத்துக்குத் தக்கனையாகவும் வாங்காமல் மதுபானம் பண்ணுகிற அப்பியாசமாயி யெப்போதும் அந்த காரியங்களிலே மக்கினஞய் சித்தவிர்த்தி ஸ்திரமில்லாமல் இருந்தபடி யிஞலேயும் அந்த வாற்தை ருசித்து அவன் மனசுப்படிக்கு அங்கீகாரம் பண்ணிஞர். அப்போ கோட்டை வாசலுக்குள்ளே பத்தேகான் சிறுது சனங் களுக்கு சயிக்கினை சொல்லி வைத்துப் போட்டு நிஜாம்ஷாவுடைய பேட்டிக்கு யாதவருஜாவை அழைப்பிவித்தான். யாதவருஜாவுக்கு இந்த கிறுத்திரமம் ஒண்ணும் தெரியாமலிருந்தபடியிஞலே நிஜாம்ஷாவுடைய பேட்டிக்கு வந்தான். முதல் சலாமாகிற போதுதானே நிஜாம்ஷா கொஞ்சம் அவமரியாதை பண்ணி ஞன். யாதவருஜா அதை சயிக்கமாட்டாமல் தன்னுடைய பிள்ளைகள் முதலானவர்களை அங்கே நிக்க வொட்டாமல் படிக்கு அப்படியே திரும்பி கோட்டை வெளியிலே போற சமையத்திலே முன்சயிக்கினை பண்ணி வைத்

---

88. நிஜாம்ஷா நடத்திய தர்பார் முடிந்த பிறகு திரும்புங்கால் நடந்த கலவரத்தில் யாதவராஜா வின் மகன் கொல்லப்பட்டதால், யாதவராஜா வருந்தியிருந்த பொழுது, அல்லியதில்ஷா அழைப்பு விடுத்தமையின் நிஜாம்ஷாவை விட்டுப் போனார்: முகலாயர் பக்கல் சேர்ந்தார்.

89. போய்விட்டவன் - போய்விட்டான் (டி3119)

90. பிகடாச்சு - விகடித்து (டி3119)

91. யெதாப்பிறகாரம் - எப்போதும் (டி3119)

92. 'அதின்பிற்பாடு' - இது டி3119இல் இல்லை

திருந்த சனங்கள்[93] குறுக்கே வந்து யாதவருஜாவை மறித்து யடிக்கும்போது[94] யாதவருஜா சொற்கலோக மடைந்தார்.[95] இந்த சேதிகளெல்லாம் சிவனேர் கெடியிலிருந்த சாசிருஜாவுக்குத் தெரிந்து அவர் யோசினைபண்ணினது. நிஜாம் ஷாவுடைய சித்தவிற்த்தி அவ்விவஸ்தையாகயிருக்குது. மந்திரித்தினத்துக்கு வந்த பத்தேகானும் மூற்கனுக யிருக்கிருன். யாதொரு நிமித்தியமில்லாமல்[96] நம்மு டைய மாமஞர் யாதவருஜாவை கொண்ணு போட்டார்கள். நாம் இனிமேல் நிஜாம் ஷாவுடைய பேட்டிக்குப் போனுலும் இந்தப்பிறகாரமாக நம்மையும் மோசம் பண்ணுவார்களென்று உறுதியாய் யோசினைபண்ணி நிஜாம்ஷாவுடனே சாவாசம் அல்லது சஹாயம் பண்ணுகிறத்தை மனதிலே இருந்து வெறுத்துப் போட்டு[97] சிவனேர்கெடியிலிருந்த தம்முடைய சமுசாரத்தை எல்லா மழைச்சுக் கொண்டு தம்முடைய சொந்த தேசம் சறதார்[98] கெடிக்கு வந்து சேர்ந்தார்.

அதின் பிற்பாடு நிஜாம்ஷாவுடைய தேசமெல்லாம் மழையில்லாமல்[99] குருவிக்கு முதல் யெரைகிடையாமல் பாழடைஞ்சு போய் விட்டுது. அந்த

---

93. முகமதிய சர்தார்கள் மூவர்: பர்ஹத்கான், ஸஃப்தார்கான், மோதிகான் (சர்க்கார் (1) பக்.28)

94. யடிக்கும்போது - அடிதடிகளாய் (டி3119)

95. பத்தேகான் கூறியதற்கிணங்க யாதவராசா வஞ்சனையால் கொல்லப்பட்டார் என்று இங்குக் கூறியிருக்கச், சர்க்கார் தன் House of Shivaji என்ற நூலில் (பக்கம் 27-28) பத்தேகான் நிஜாம் ஷாவின் ஆணையால் 1638இல் சிறையில் வைக்கப்பட்டார் என்றும், ஜாதவ்ராவ் தன்னைக் காப் பாற்றிக் கொள்ளும் பொருட்டு ஓட நினைத்தார் என்றும், நிஜாம்ஷா தன் அமைச்சர்களாகிய இக் லஸ்கான், ஹமீத்கான் ஆகியவரோடு கலந்து. பர்ஹத்கான், ஸஃப்தார்கான், மோதிகான் ஆகியோரை யாதவராஜாவைச் சிறைப்படுத்த ஏவினார் என்றும், யாதவராசா அரசவைக்கு வந்ததும் நிசாம்ஷா அரசவையினின்று எழுந்து சென்றார் என்றும், மேற்கூறிய மூவரும் யாதவராஜாவையும் அவர் மகன் அச்சல்ஜியையும் தாக்கி அவர்கள் கையகத்திருந்த ஆயுதங்களைக் கவர்ந்ததும் அவ்விரு வரும் தம்மிடமிருந்த கத்தியை உருவிப் போரிட்டனர் என்றும், இறுதியில் ஸப்தர்கான் யாதவராசா வைக் கொன்றார் என்றும், அங்குக் கைகலப்பில் அச்சல்ஜீயும் கொல்லப்பட்டார் என்றும் கூறப்பட் டுள்ளன. இக்கொலை 12.8.1630இல் நிகழ்ந்தது (சர்க்கார் (1) பக்கம் 28).

தகாகாவ் பக்கம் 23இல் - பத்தேகான் இடத்தில் தக்ரிப்கான் நியமிக்கப்பட்டார் என்றும், இதனால் நிசாம்ஷாவிடம் வருவதற்கு யாதவராஜா விரும்பினர் என்றும், நிஜாம்ஷா வஞ்சனை தீர்த் துக் கொள்ள இதுவே தக்க சமயம் என்று கருதி யாதவராஜாவைத் தவுலதாபாத்துக்குப் பேட்டிக்கு வரச்சொன்னார் என்றும், யாதவராஜா தன் மகன் அச்சலுடன் வந்தார் என்றும், அவர்கள் வந்ததும் மந்தணத்தின் பொருட்டு நிசாம்ஷா தர்பாரை விட்டு நீங்கினார் என்றும், முகமதிய சர்தார்கள் மூவர் அவர்களிடமிருந்த ஆயுதங்களைப்பிடுங்கிக் கொண்டு அவர்களைக் கொன்றனர் என்றும் எழுதியுள்ளார். சிவபாரதத்தில் (பக்கம் 17-18) மெக்கன்சி சுவடியில் உள்ளது போல் உள்ளது; எனினும் மிகச்சுருக்கமாக உளது.

96. நிமித்தியமில்லாமல் - நேரமில்லாமல் (டி3119)

97. "When he (Shaji) heard of the treacherous circumstance of his father-in-law's murder, he saw that it was useless any more to try to get reconciled with the Nizam Shaha or lead the Nizami standards" - (Takakhav, Page 24)

98. சறதார் — சாத்தார் (டி3119)

99. "During the season of 1629-30 no rain fell in the Deccan, and a famine, accompained by a pestilence, ensued" - Duff, Page 51)

"About this time there was a great famine in the Deccan the greatest severity of which fell upon the inhabitants of the Nizam Shahi state. To the

வேளையில் பாக்கியவந்தாளாயிருக்கிறவாள் திரவியத்துக்குச்சரியாய் தானியத்தை நிறுத்திவாங்கி காலஷ்செபம் பண்ணிக்கொண்டு யிருந்தார்கள். ஸ்மைத்த மிறுகங்கள் ஏழை மனுஷர்கள் ஒண்ணுக்கொண்ணு பட்சிக்கத்தலைப்பட்டுது.

சாத்தாராவிலே சாசிருஜா யிருக்கிறபோது அவருடைய முதல் பெண்சாதி துக்காபாயி சாயபு கெற்பத்திலே புத்திரசந்தானமாச்சுது.[100*] அந்தப்பிள்ளைக்கு யேகோஜிருஜாவென்று பேர் வைத்தார்கள். இந்த வம்சத்தில் இவர் நாலாவது யேகோஜிருஜா பிறந்தது சாலிய வாகன சகாப்தம் ௲௫௱௫௰௨[101] பிறசோத்பத்தி[102] வருஷம்.

**(3) ஷாஜி சிறைப் படுத்தப்படல்**

முன்னாலே சஹஜிருஜா நிஜாம்ஷாவுக்கு சஹாயமாய் சிவனேர் கெடியிலே தம்முடைய சமுசாரத்தை வைத்துப் போட்டு மொகல் சற்தார் தரியாகான் பேரிலே போய் உயித்தம் பண்ணி துரத்திப் போட்டாரே அந்த தரியாகான் அப்பால் போகாமல் தாபிநதி[1] தீரத்திலே பாளையத்தோடே யிருந்தான். அவன் நிஜாம்ஷாவுடைய கெட்ட

---

horrors of famine were added the ravages of cholera. People died literally in thousands. Whole districts were depopulated" - (Takakhav Page 27)

இப்பஞ்சம் பற்றிச் சிவபாரதம் கூறுவது (பக்கம் 21):-

"நிஜாமினுடைய பாபத்தினாலே அவனுடைய ராஜ்யத்தில் மழைபெய்யாமல் போய்விட்டது. அதனால் பூமியில் பயிரில்லாமல் ஆகிவிட்டது. வெகுசாய் சாமம் வந்தபடியினாலே திரவிய முண்டான வன் ஒரு மரக்கால் ரெத்தினங்கள் போட்டு ஒரு மரக்கால் கொள்ளை வாங்கிக் காலட்சேபம் புண்ணினான். இல்லாதவர்கள் வயிற்றுக்கில்லாமல் கூக்குரலுடன் மனிதனுக்கு மனிதன் பிடுங்கித் தின்னத் தலைப்பட்டார்கள். நாலு கால் மிருகங்களிலே பலமாயிருக்கப்பட்ட மிருகங்கள் சிறிய மிருகங்களை அடித்துத் தின்னத் தலைப்பட்டது."

திருமுடி சேதுராமன் சுவடியிலும் இப் பஞ்சம் பற்றிப் பக்கம் 50-51இல் காணலாம்.

100*. அடிக்குறிப்பு 85* முதற்கொண்டு 100* வரையிலும் உள்ளபகுதி போ. வ. சவில் காணப்படவில்லை. இதனால்தான் போ. வ. சவில் பக்கம் 17இல் "ஏகோஜிராஜா ஜிஜாயியின் மகன்" என்று எண்ணுமாறு கல்வெட்டில் தவறாக அமைந்ததாகத் தெரிகிறது. எனவே மெக்கன்சி சுவடி, மராட்டியக் கல்வெட்டு அதன் தமிழ் ஆக்கம் ஆகியவற்றில் கண்ட இத்தவற்றைத் திருத்தப் பெரிதும் பயன்படுகிறது என்பது போதரும். 85* முதல் 100* வரையுள்ள செய்திகள் திருமுடி சேதுராமன் சுவடியிலுள்ளன (பக்கம் 46-50)

101. சகம் 1552: இது கி. பி. 1630: திருமுடி சேதுராமன் சுவடி பக்கம் 50 இல் சகம் 1550 கி. பி. 1630 என்றுள்ளதில் சகம் தவறு ஆகும்.

102. பிரசோற்பத்தி என்பதும் தவறு; பிரமோதூத என்றிருத்தல் வேண்டும். (சாமிக்கண்ணுப் பிள்ளை). திருமுடி சேதுராமன் சுவடியில் "கிறிஸ்து 1630 தமிழ் பிரமோதூத" என்றுள்ளமை சரியாகும்.

போ. வ. ச வின் வாக்கிய அமைப்பைக் கண்டால், "சகம் 1552இல் ஷாஜிராஜா சிவனேரிக் கோட்டையில் தன்னுடைய மனைவியை வைத்துவிட்டுத் தரியாகானின் மேல் படையெடுத்துத் துரத்தினார் என்று சொல்லத்தோன்றும். சிவனேரிக் கோட்டையில் ஜிஜாபாயி சகம் 1551 இலேயே மகப்பேறு அடைந்தாள் என்று (அடிக்குறிப்பு 85) தெரிய வருதலின், "சகம் 1552இல் ஏகோஜி பிறந்தார்" என்று மெக்கன்சி சுவடி வழிப்படித்து அறிதல் வேண்டும்.

1. தாபிநதி - தாம்பிநதி (டி3119); தபதிநதி

"But an imperial Officer Dariya khan Ruhela who held a large jagir in Banswara attacked the raiders, slew many of them and expelled the whole party from the Doab between the Tapti and the Purna" என்ற வரலாற்றாசிரியர் கூற்று இங்குக் கருதல்தகும். (சர்க்கார் (1) பக். 26).

நடத்தையும் யாதவருஜாவை கொண்ணு போட்டத்தையும்[2] சஹஜிருஜா மனஸ் தாங்கலாய்[3] தம்முடைய சீர்மைக்குப் போய்விட்டத்தையும் அறிந்து கொண்டு இப்போ நிஜாம் ஷாவுடைய ருச்சியம் தான் சுவாதீனம் பண்ணிக் கொள்ளலா மென்றெண்ணி நிஜாம் ஷா பேரிலே பாளைய மெடுத்தான். அப்போ நிஜாம்ஷா தேவகிரி துற்கத்தை விட்டு தாராகிரி துற்கத்திலே யிருந்தார். நிஜாம்ஷாவுடைய ஸ்திதியெல்லாம் அல்லியெதல் ஷாவுக்குத் தெரிந்து நிஜாம்ஷாவுக்கு இனிமேல் இந்த பாக்கியம்[4] நிற்கமாட்டாது அவன் அபசெயம்[5] அல்லது மரணத்தையாகி லும்[6] அடையுவான் என்கிற யோசனை பண்ணி தாராகிரி கோட்டை மஹாபலம் அப்படிக்கொத்த கோட்டை தரியாகான் கிட்ட அகப்பட்டால் அது நமக்கு பிறதி தினம் நூதின சல்லியமாகு மென்றும் அந்த தாராகிரி கோட்டையை தம்முடைய சுவாதீனம் பண்ணிக் கொள்ள வேணுமென்று அல்லியெதல்ஷா அந்தக் கோட்டையின் பேரிலே பாளைய மெடுத்தான். இந்த சேதி டில்லிக்குத் தெரிந்து அவடத்தில் அப்போ சாகீர் பாதுஷா மரணத்தை அடைந்து யிருந்தவருடைய பிள்ளை[7] ஆலங்கிரிபாதுஷா[8]வுக்கு பிறதிநாமம் அபறங்கஜேபு என்கிறவருக்குத் தெரிந்து நிஜாம் பாதுஷாவினுடைய அதிகாரத்தை தம்முடைய சுவாதீனம் பண்ணிக் கொள்ள வேணுமென்று தாமே பிறப்பட்டு வந்தார். இந்த சேதி யெல்லாம் சாசிருஜாவுக்கு[9] தெரிந்து இதுகள் எப்படி யாகுதென்று பார்ப்போ மென்று தம்முடைய ஸ்தளத்திலேதானே[10] யிருந்துவிட்டார்.

அப்போ அபறங்கஜேபு என்கிறவர் தம்முடைய தொகப்பனாலே அனுப்பு விக்கப்பட்ட தரியகானுடனே கூட தாராகிரி கோட்டைக்கு ஒரு பக்கத்திலே மோற்சா போட்டு சண்டை பண்ணினர். அல்லியெதல்ஷா என்கிறவர் ஒரு பக்கத்திலே மோற்சா போட்டு யுத்தம் பண்ணினர். அதில் நிஜாம்ஷாவுக்கு

---

2. கொண்ணுபோட்டத்தையும் - சுவர்க்கத்தையடைந்ததையும் (டி3119)
3. மனஸ்தாங்கலாய்-மனஸ்தாபமாய் (டி3119)
4. பாக்கியம் - பிரபுத்துவமும் ஐசுவரியமும் (போ. வ. ச. பக்கம் 18)
5. அபசெயம்-க்ஷீணதசை (ஷெ)
6. "அல்லது மரணத்தையாகிலும்" - டி3119இல் இல்லை
7. சாகீர்-ஜஹாங்கீர்; இவர் 1605 முதல் 1627 வரை ஆண்ட முகலாய அரசர்.
   ஜஹாங்கீர் இறந்தது 7-11-1627 (The Mughul Empire, பக்கம் 188).
   ஷாஜஹான் 24-2-1628இல் ஆட்சி எய்தினார் (ஷெ)

   ஆலங்கிரி - ஆலங்கீர் - அவுரங்கசீபு. இவர் ஜஹாங்கீரின் மகன் ஆகிய ஷாஜஹானின் மூன்றாவது மகனாவர்; தன் தந்தையைச் சிறையிலிட்டு 21-7-1658இல் அரசு கட்டில் எய்தியவர். இவர் தம் தந்தை ஷாஜஹான் காலத்தில் 24-1-1636இல் தக்காணத்துக்கு அரசப்பிரதிநிதியாக வந்தார் (The Mughul Empire, பக்கம் 208)
8. ஆலங்கிரி - Alamgir, title taken by Aurangazeb on his accession to the throne of Delhi (Index, Records of Fort St. George, Country Correspondence, 1802).
9. போ.வ.ச.பக். 18இல் "சாந்தஜி" என்றுள்ளது; சாஹஜி என்றிருத்தல் வேண்டும்
10. ஸ்தளத்திலேதானே - தானத்திலே (டி3119)

நிறுவாகமில்லாமல் சகலபாக்கியமும் போய் தானும் அபறங்கசீபுடைய சுவாதீனமானுன்[11]. உடனே அபறங்கசீ பென்கிறவர் அல்லியெதல் ஷாவுடனே உயித்தம் பண்ணி அவனையும் துரத்திப்போட்டு தேவகிரிதுற்கத்தில் ஸ்தாயியாய்[12] ருச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார்.

அப்போ சறதாற்[13] கெடியிலே யிருந்த சாசிருஜா பண்ணின யோசனை: யிதுவரைக்கும் நிஜாம்ஷா அவருடைய தவலத்தோடே[14] யிருக்கிறபோது அல்லியெதல் ஷாவென்கிறவர் டில்லி அபறங்கசீபுடனே கூடி[15]யிருந்தார். இப்போ தாராகிரி துற்கத்தின் நிமித்தியம் அல்லியெதல் ஷாவுக்கும் அபறங்கசீபுக்கும் விறோதம் வந்தபடியினுலே அபறங்கசீபு தன் பாளையத்தோடிருக்கிறுர். அல்லியெதல்ஷாவுக்கும் அபறங்கசீபுக்கும் யினிமேல் சினேகமாகமாட்டாது என்று தமக்கு நிஜாம் ஷா முன்னுலே சாகீர் கொடுத்த சீர்மையை தாம் சாதிச்சு கொள்ளலாமென்று நிச்சயம் பண்ணி தம்முடைய சாகீர் சீர்மை வியாச்சியமாய்[16] தேவதுற்கத்தைச் சேர்ந்த எண்பது துற்கமும் சாதிச்சார். அப்போ அவருடைய சவுரியமும் பாக்கியத்தையும் பார்த்து[17] மைத்த ராசாக்கள் சற்தார்க்கள் தொண்ணூத்தாறு மறுஷ்ட சாதிகளும் எல்லாரும் சாசிருஜாவுடனே கூடினுர்கள். அந்த கூடிகூ[18] மறுஷ்ட சாதிகளுடைய சவவிஸ்த்தாரம்[19] கொஞ்சம் காண்பிவிக்கிறேம். யாதொரு க்ஷத்திரியாள் சூரியவம்சம் சந்திரவமிசம் பிறம்ம வமிசத்திலுமிருந்து விற்த்தி யடைஞ்சார்களென்று பாறதம்[20] பாகவதம்[21]

---

11. "The nominal young King Husain Shah was condemned to life long imprisonment at Gwalier and the Nizam Shahi kingdom came to an end" (The Mughul Empire, P. 208)

12. ஸ்தாயியாய் - ஸ்தாயிபாயி (டி3119); இருந்து கொண்டு (போ. வ. ச. பக்கம் 18)

13. சறதாற் - சாத்தார் (டி3119)

14. தவலத்தோடே — தலத்தோடே (டி3119)

15. கூடி - குடி (டி3119)

16. வியாச்சியமாய் — காரணமாகக்கொண்டு (போ. வ. ச. பக். 19)

17. பாத்து - இச்சொல் டி3119இல் இல்லை; பார்த்து

18. கூடிகூ - 96

மராட்டியர் தொண்ணூற்றாறு குலத்தவர் என்பது கிருஷ்ணாஜி அனந்த் ஸபாஸத் என்பவர் எழுதிய சிவச்சத்திரபதி என்று நூலின் பின்வரும் குறிப்பினால் உறுதி பெறும்:-

"Pratap Rav while serving as the commander-in-chief assembled all the Marathas of the ninety-six families (including) those that were in the four Badshahis and those that were in (Sivaji's) dominions" (Sen Page 78).

திரு கே. பி. தேஷ்முக் என்பவரால் 1930இல் மராட்டியில் எழுதிக் கோலாபூரில் வெளியிடப்பெற்ற "க்ஷத்ரியாம்சா இதிஹாஸ்" என்ற நூல் பாகம் இரண்டில், "க்ஷத்திரிய மராட்டா ஜாதியினுடைய 96 முக்கிய குலங்கள், துணைப் பெயர்கள், வமிசம், கோத்திரம், குலாசாரம்" முதலிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

19. சவவிஸ்தாரம் — விவரம்; சவிஸ்தாரம் (டி3119)

20. பாரதம் - தமிழில் வில்லிபுத்தூரார் எழுதிய பாரதம் ஆதிபருவத்தில் குருகுலச் சருக்கத்தில் சந்திரவமிசத்து அரசர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

21. பாகவதம்: இது பதினெண்ணுயிரம் கிரந்தமுள்ளது. இது பரிச்சித்தின் சாபம்; சுகர் உபதேசம்,

ஹரிவம்சம்[22] ருமாயணம்[23] யித்தியாதி கிறந்தங்களிலே சவவிஸ்தாரமாகச் சொல்லியிருக்குது. அதிலேயும் சகலவம்சத்துக்கு முக்கியமாயிருக்கிற பிறம்மதேவரிடத்திலிருந்து யிப்பால் சந்திரசூரியாள் வம்சமானுர்கள். ஆகிலும் பிறம்மவம்சம்[24] சூரியவம்சம் சந்திரவம்சத்து ருஜா ஒருவருக்கொருவர் கலந்தி ருக்கிற படியினுலே முக்கியமாய் பிறும்மவம்சத்தில் மரிச்சி[25] அவரிடத்திலிருந்து கச்சிபர்[26] அவருக்கு சூரியநாருயணன்[27] அவருக்கு வைவச்சுத மனு[28] அவருக்கு உத்தானுபாதருஜா[29] அவருடைய சந்ததியிலே தாற்மிகருஜா[30] அவருக்கு ஆறு பிள்ளைகள் அவாளிடத்திலிருந்து ருசவம்சம் உற்பத்தியாயிருக்குது, அப்படியே சூரியவம்சத்திலே ருமசந்திரருடைய பிள்ளைகள் குசலவா[31] ளிடத்திலிருந்து வம்சம் விஸ்தாரமா யிருக்குது. அப்படியே சந்திரவம்சத்தில்[32] சந்திரனுடைய பிள்ளை புதன்[33] அவர் பிள்ளை ஆயு[34] அவர் பிள்ளை நவுஷன்[35] அவர் பிள்ளை யேயாதி[36]

---

கிருஷ்ணன் சரிதை, மன்வந்தரம், சூரியவமிச சரிதம், பூரு, யயாதி, பிரிய விரதன் மரபு, புவி தர்மம் முதலியவற்றை உரைக்கும். இப்பெயரால் மற்றொரு புராணம் வழங்கும். அதனைத் தேவி பாகவதம் என்பர். அதனைத்தமிழில் அநதாரியப்ப முதலியார் மொழிபெயர்த்துள்ளார்- (அபிதான சிந்தாமணி, பக். 1067)

22. அரிவமிசம்:

23. இராமாயணம் - கம்பராமாயணத்தில் பாலகாண்டத்தில் குலமுறை கிளத்து படலத்தில் சூரியவமிச பரம்பரை கூறப்பட்டுள்ளது.

24. பிரமவமிசம் - பிரமனுதியாக வந்த வம்சம்

25. மரிச்சி - மரீசி - பிரமன் மனத்தில் பிறந்தவர் (அபிதான சிந்தாமணி, பக்கம் 1267)

26. கச்சிபர் - காச்யபர் - இவர் மரீசியின் புதல்வர்; தக்கனது பெண்கள் பதின்மூவரைத் திருமணம் செய்துகொண்டு தேவர்கள் முதல் தாவரம் ஈறாக எல்லா உயிரினங்களையும் ஈன்றவர். இவரால் பூமிக்குக் காசினி என்ற பெயர் வரலாயிற்று. மேலும் சிலரை மணந்து சில இருடியரைப் பெற்றார்.

27. சூரியநாராயணர் - இவர் அதிதி (என்ற தக்கன் மகள்) வயிற்றில் பிறந்தவர்; விவஸ்வான் என்று பெயர்.

28. வைவச்சுத மனு - வைவஸ்வத மனு - இவர் விவஸ்வானின் மகன். மனுக்கள் பதினால்வர்; இவ்வைவஸ்வதமனு அவருள் ஏழாமவர்.

29. உத்தானபாதர் - மனுவின் மகனாவர்; சுவாயம்பு மனுவிற்குச் சதரூபியிடம் உதித்த இரண்டாம் குமரன் (அபிதான சிந்தாமணி, பக்கம் 237).

30. தாற்மிக ராசா - தாம்பீக ராசா (போ. வ. ச. பக். 19)

31. குசலவாள் - இராமனின் மக்கள்

32. சந்திர வமிசம் - வில்லிபாரதம் ஆதிபருவம் குருகுலச் சருக்கத்தில் சந்திர வமிச பரம்பரை கூறப் பட்டுள்ளது. சந்திரன் திருமாலின் மனத்தினின்று தோன்றியவன். ''எங்கள் மாதவன் இதயமா மலர் வருஉம் உதயத் திங்கள்'' (குருகுலச் சருக்கம், பாடல் 1)

33. புதன் - சந்திரனின் மகன்: வியாழன் என்னும் தேவகுருவின் பத்தினியான தாரையைச் சந்திரன் கண்டு காதல் கொண்டு கூடிப் புதன் என்ற புதல்வனைப் பெற்றான் (குருகுலச்சருக்கம், செ.6, வை. மு. கோ. உரை)

34. ஆயு - புதனுக்கும் இளைக்கும் புதல்வன் புருருவா; புரூரவசுக்கு ஊர்வசியிடம் பிறந்தவன் ஆயு (குருகுலச் சருக்கம், செ. 13, குறிப்பு). மனுவின் புத்திரன் இளன்; இவன் ஒரு கால் தேரேறிச் செல்கையில் ஒரு காட்டையடைந்தான். ''இங்கு வருபவர் பெண்ணாய் விடுக'' என்று பார்வதி தேவி அந்த இடத்தைப்பற்றிக் கூறியிருந்தனள். இளன் அங்கு வந்ததும் பெண் உருப்பெற்று இளை எனப் பெற்றான்.

35. நவுஷன் - நவுஷ் (டி3119); நகுடன்: ஆயுவின் மைந்தன் நகுடன். இவன் பற்றற்று நின்று நூறு அசுவமேதம் செய்து தேவந்திரபதவி பெற்றான் (குருகுலச் சருக்கம், செ. 14)

36. யேயாதி - எயாதி (டி3119) - யயாதி; இவன் நகுடன் புதல்வன் (குருகுலச் சருக்கம் செ. 16-17)

அவர் பிள்ளை புரூர்[37] ருஜா அவரிடத்திலிருந்து ருஜாவம்சம் விஸ்த்தாரமாக யிருக்குது. இந்த மூணு வற்க்கத்திலேயும் இருந்து க்ஷத்திரிய குலம் விஸ்தாரமான தொண்ணூத்தாறு வம்சத்துக்கு பேர்வழி வயணம்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | போசலெ | 2. | தோற்வந்து | 3. | மொயித்தே |
| 4. | வணுகே | 5. | ஸாளங்கே | 6. | யாதவ |
| 7. | காயக்கவாட | 8. | பிரிஞ்சே | 9. | காட்டே |
| 10. | காபுஸே | 11. | சேளிக்கே | 12. | வாகமாறே |
| 13. | இங்குவளே | 14. | துங்கு | 15. | வாளுக்கே |
| 16. | கோற்படே | 17. | நீக்கம் | 18. | சிரிக்கே |
| 19. | றணநவரே | 20. | இங்களே | 21. | மசகே |
| 22. | தேவகற் | 23. | ருயஜாதே | 24. | கறாடே |
| 25. | மண்டல | 26. | சேலாற் | 27. | வாகசவுரே |
| 28. | நாபித்திவே | 29. | தாடே | 30. | நிம்பாளகர் |
| 31. | காக்கட்டே | 32. | படசதரே | 33. | அட்டாளே |
| 34. | பெகுகுணே | 35. | லோகண்டே | 36. | ஜாதவ |
| 37. | பாண்டுலோகற் | 38. | கௌளி | 39. | போக்கே |
| 40. | காடே | 41. | வாஹக | 42. | போத்தளெ |
| 43. | தகட்டு | 44. | செகதாப | 45. | படுகே |
| 46. | காளே | 47. | பாண்டகற் | 48. | மோறே |
| 49. | சிங்காடே | 50. | சோனவனெ | 51. | குஜாட்டே |
| 52. | கெறுட | 53. | குஜாஹ | 54. | காண்டகற் |
| 55. | களங்கடே | 56. | படகா | 57. | லகடு |
| 58. | நளவடே | 59. | மானே | 60. | அங்கரே |
| 61. | ஜெகதாளெ | 62. | சாவந்து | 63. | தளவி |
| 64. | லோடே | 65. | சிசோதே | 66. | தாபாடே |
| 67. | ககடு | 68. | மாடிக்கு | 69. | சிதோளே |
| 70. | ஷித்தாப்பே | 71. | கலவியாணகா | 72. | கோக்காடே |
| 73. | யிந்தளகா | 74. | போமவார | 75. | போள |
| 76. | சூர்யவம்சி | 77. | காட்டிக்கே | 78. | கந்தாரே |
| 79. | சிரசாடெ | 80. | துமான் | 81. | தோனே |
| 82. | லானபிரே | 83. | சிகரே | 84. | அகிரேகற் |
| 85. | டொம்பரே | 86. | சிந்தே | 87. | பிசளே |
| 88. | ஹொளகற் | 89. | ருவட்டே | 90. | சோமவம்சி |
| 91. | சனகற் | 92. | பிசாளெ | 93. | பானதுற்கே |

---

37. புரூர் - பூரு (டி3119); நகுடனுக்கும் சன்மிட்டை என்பவளுக்கும் பிறந்தவன் பூரு (குருகுலச் சருக்கம் செ. 20).

| | | |
|---|---|---|
| 94. றணபிசே | 95. குருடே | 96. பிறாரே |
| 97. பாபா | 98. அவாரெ | 99. சங்கா* |

இந்தப்பிறகாரமாக மருட்டிய சந்தார்களெல்லாம் சரசிருஜாவுடனே சேர்ந்தார்கள். அதுமூலமாய் சாஜிருஜாவுக்கு தவலதது[38]மதிகமாய் வளர்ந்தது. இந்த சேதி டில்லியீசுவரன்[39]அறிந்து அவர் பண்ணின யோசனை: அல்லியெதல் ஷாவை நாம் துரத்தி விட்டபடியினாலே இந்தபடிக்கு சண்டை வளர்கிறத்துக்கு முக்கிய[40] காறணமாச்சுது. இப்போ அல்லியெதல் ஷாவும் நாமும் ஒண்ணாய் சேர்ந்து சாசி ருஜாவுக்கு பக்கினம்[41]பண்ண வேணுமென்று அல்லியெதல் ஷாவை சேர்த்துக்கொண்டு உயித்தம் பண்ணுகிறத்துக்கு ரெண்டு பேருமாய் பீமா தீரத்திலே[42] வந்து யிறங்கினார்கள். அப்போ சாசிருஜா துலுக்கரையெல்லாம் அதம் பண்ணுகிறோமென்று மூணு வருஷக்காலம் உயித்தம் பண்ணினார். அப்போ அவர் ஆராதனை பண்ணுகிற தெய்வம் சொற்பனத்திலே வந்து[43] இந்தக்காரியம் உன்னாலே கூடாது இன்னம் சிலநாளைக்குப் பிறகு உன்னுடைய குமாரனாலே ஆகப்போகுது இப்போ துலுக்காளுடனே சந்திப்பண்ணிக் கொள்ளச் சொல்லி கட்டளையிட்டுது.[44] அந்தப்படியே[45] சாசிருஜா தாம் கட்டியிருந்த நிஜாம் சீமை ஓரட்டுக்கும் டில்லி சுவானுக்கும் அல்லியெதல் ஷாவுக்கும் பிரித்துக் கொடுத்துவிட்டு தாம் சற்த்தார்[46] கெடியிலேதானே யிருந்தார்.

கொஞ்சநாளைக்குப் பிற்பாடு அல்லியெதல்ஷாவுக்கும் அபறங்கசீவுக்கும் விரோதமாச்சுது. அப்போ அல்லியெதல் ஷா என்கிறவர் யோசிச்சது.[47] சாசிருஜாவுக்கும் தன்னுடைய தொகப்பன்[48] *யிபருயிமுகானுக்கும் ரெம்பவும் சினேகம்

---

*குறிப்பு:- இங்குக் காணப்படும் பெயர்களுட் சில போ.வ. சவில் இல்லை; மாறாக வேறு சிலவுள்ளன. திருமுடி சேதுராமன் சுவடியிலும் அங்ஙனமே மாறுபட்டு உள்ளன. 96க்கு 99 தரப்பெற்றுள்ளன. டி 3180, டி3762 ஆகியவற்றுள் முறை வைப்பு ஒன்றே. டி3119இல் வரிசை சிறிது மாறுபட்டுள்ளது; எழுத்து வேறுபாடுண்டு.

38. தவுலத்து - அதிகாரம் (போ. வ. ச. பக். 20)

39. டில்லியீசுவரன்-டில்லிசுவான் (டி1139); அவுரங்கசீபு; இவர் தம் தந்தை ஷாஜஹானின் ஆட்சியில் 14-7-1636 முதல் 28-5-1644 வரை தக்காணத்தில் அரசப்பிரதிநிதியாக இருந்தவர். (சர்க்கார்-அவுரங்கசீபு வரலாறு பாகம் 1,2, பக். 29) அவுரங்கசீபு ஷாஜியை அடக்கினார் என்று கூறப்பட்டுள்ளது.

40. முக்கிய - இச்சொல் டி3119இல் இல்லை

41. பக்கினம் - மக்கினம் (டி3119); கீழ்ப்படுத்தல் (போ. வ. ச. பக். 20)

42. பீமாதீரம் - பீவராதீரம் (போ. வ. ச. பக். 20)

43. சிவபாரதம் பக்கம் 21-22 இலும் இறைவன் கனவிற்கூறியசெய்தி காணப்படுகிறது. ஷாஜிக்கு இப்பொழுது தோல்வி; ஆகையால் இங்ஙனம் சிவபாரதம் போ. வ. ச. மறைத்துக்கூறின.

44. கட்டளையிட்டுது - ஆக்கியாபித்தது (டி3119)

45. அந்த வசனத்தை - அந்தப்படியே (டி3119)

46. சற்த்தார் - சாத்தாரா

47. யோசிச்சது - இச்சொல் டி3119இல் இல்லை

48* முதல் 51* வரை வாக்கிய அமைப்புச் சிறிது மாறுபட்டுளது

பின்னையும் மகாசூரனானபடியினாலே அவரை மறுபடி சிநேகம் பண்ணிக்கொண்டு அவரங்கசீவுக்கு தொப்பா[49] குடுக்கிற ராஜாக்கள் துலுக்காள் எல்லாரையும் தம்முடைய சுவாதீனம் பண்ணிக்கொள்ள வேணுமென்றெண்ணி சாசி ராஜாவை அழைச்சனுப்பிவித்து பேச வேண்டியதுகளை பேசிக்கொண்டு தம்முடைய கிட்டயிருக்கிற சற்தாற் ரணத்துல்லாகான்[50] என்கிறவனையும் கூட அனுப்பிவித்தார். அப்படியே சஹஜி ராஜா பிறப்பட்டு தெட்சணப்பிருந்தியத்து ராஜாக்களை ஜெயித்தார். அவாள் பேர்வழி[51*]; பிந்துபுரத்துராஜா வீரபத்திரர்;[52] கொங்க தேசத்துராஜா கொங்க னாயக்[53]; காவேரிபட்டணத்து[54] ராஜா செகத்தேவ; ஸ்ரீரங்கபட்டணத்து ராஜா கண்டீரவ[55]; தஞ்சாவூர்ராஜா விஜயராகவனாயக்கர்[56]; செஞ்சிராஜா[57] வெங்கிட்டனாயக்கர்; வித்தியாநகரத்து ராஜா றங்கசாயி னாயக்கர்; மதுரை ராஜா திருமல னாயக்கர்; வாலி கொண்டபுரத்து ராஜா அரிகால[58]

---

49. தோப்பா - தோஃபா Topha ; கப்பம் (tribute) என்று பொருள். (குண்டு மரியாதை (போ. வ. ச. பக். 21) என்பது தவறு; இது குறித்து முன்னர் எழுதியதும் காணத்தக்கது).

50. ரணதுல்லாகான் - இவருக்கு ருஸ்தம் - இ - ஜமான் (Rustum-i-Zaman) என்ற சிறப்புப்பெயர் உண்டு (சர்க்கார் (2) பக்கம் 49)

"Randulla khan was placed in command of this expedition with the title of Sir Lashkar (Chief Commandar) and Shahji was sent with him as his deputy" (Takakhav, Page 42) என்பதை இங்குக் கருதுக.

51*. ஷாஜி தலைமை தாங்கிச்சென்று வெற்றி பெற்றார் என்று மராட்டியர் வரலாறு கூறியதைப் பற்றி ஜாதுநாத் சர்க்கார் அவர்கள் கருத்து இங்குக் கருதத்தக்கது (House of Shivaji, P.48):

"The popular Maratha tradition that he was the leading general or conquerer of Mysore and Tanjore finds a complete refutation in the authentic historical sources which prove that Shaji was not the supreme army chief, nor even the commander of an independant division; but only one of the many Bijapuri generals serving under the eyes and orders of the Muslim generalissimo, throughout the conquest of Mysore and it was only very late in his life, in the invasion of Tanjore in 1660-62 (which was however followed not by annexation but by withdrawal) that he rose to be second in command."

செயித்தார்; அவாள் பேர்வழி–செயித்த பேர்வழி (டி3119).

52. பிந்தாபுரம்-பிதுபுரம் (போ.வ.ச.பக்கம் 21); இந்துபுரம் (சிவபாரதம் பக். 22); இக்கேரி ராஜா (சர்க்கார் (2) பக். 49) வீரபத்திரர் பாதி நாடும் 18 லக்ஷம் ஹோன்னம் கொடுத்தார் (சீனிவாசன், பக்கம் 47)

53. கொங்கதேசம்-விருஷ பட்டிணம் (சிவபாரதம் பக். 22); (சர்க்கார் (2) பக்.49). வீரபத்திரனும், கொங்க நாயக்கனும் 1638இல் வெல்லப்பட்டனர்-(சர்க்கார் (2) பக். 49)

54. காவேரிப்பட்டணம் - Kaveripatan or Krishnagiri Taluk (சர்க்கார் (2) பக்கம் 32). இது 1646 இறுதியில் நடந்த போர்.

55. கண்டீரவ - Kanti Rai; இவர் 5 லக்ஷம் ஹோன்னம் கொடுத்தார் (சர்க்கார் (2) பக்கம்.49). இது 1639இல் நிகழ்ந்தது.

56. விஜயராகவர் - இவர் தஞ்சையரசராக 1633 முதல் 1673 வரை இருந்தவர். 19-3-1659இல் தஞ்சைக் கோட்டையை ஷாஜி வென்றார்; ஆனால் பெரும் பஞ்சம் காரணமாக அக்கோட்டையை விட்டுப் போக நேரிட்டது (சீனிவாசன் பக்கம் 85–87): விஜயராகவனாயக்கர் (டி3180)

57. செஞ்சியைக் கைப்பற்றியது 28-12-1648 (சர்க்கார் (2) பக்கம் 62)

58. அரிகால- அரிகார (டி3762)

ருஜா தனகொட்டி நாயக்கர்; மைத்த பாளையப்பட்டு பாளையகாற ருஜாக்களை எல்லாம் செயித்து அந்த பரிவாரங்களை யெல்லாம் அல்லி யெதல்ஷா கிட்ட அனுப்பிவித்தார். அதினாலே அவருக்கு மஹாசந்தோஷமாகி சாசிருஜாவுக்கு தாங்கள் செயிச்ச பெங்களூர் ருச்சியத்தை பாக்கு வெற்றிலைக்காகக் கொடுத்தார்.[60] சாசிருஜா பெங்களூருக்கு வந்து பாத்தயிடத்திலே கோட்டை நேர்த்தியாகவும் ஸ்தளமும் வாச யோக்கியமாகவும் இருந்தபடியினாலே சாத்தராவிலே இருந்த சமுசாரத்தை எல்லாம் அழைப்பிவிச்சுக் கொண்டு பெங்களூரிலே வாசம் பண்ணிக்கொண்டிருந்தார்.[61] தம்முடைய பிள்ளைகளாகிய சிவாஜிருஜாவுக்கும் யேகோஜி ருஜாவுக்கும் சகலவித்தையும் கற்பித்துக்கொடுத்தார்.[62] அப்போ சிவாஜிருஜாவுக்கு பனிரெண்டு வயதாச்சுது. சூரனுமாக யிருந்தார். அந்த சமையத்தில் சாசிருஜா சொற்பனத்தில் ஸ்ரீசாம்பசிவன் வந்து சொன்னது சிவாஜிருஜாவைக் கொண்டு அநேகம் காரியங்களாக வேண்டியிருக்கிறபடியினாலே அவரை இங்கேவைத்துக் கொள்ளாமல் சாத்தாற் புனா தேசத்துக்கு அனுப்பிவிக்கச்சொல்லி கட்டளையிட்டார். அப்போ சாஜிருஜா[63] தம்முடைய முதல் பெண்சாதிக்கு பிறந்தது[64] யேகோஜிருஜா வானபடியினாலே அவருக்குக் கொஞ்சம் வயதானாலும் மரியாதைக்கிவர்தான் பெரியவரென்று[65] அவருக்கு யுவருச்சிய அதிகாரமும் பெங்களூர் தகத்தும்[66] சாலியவாகன சகம் ௲௫௱௬௰௨ விழு வருஷத்தில்[67] யெல்லாப் பிருதுகளும் குலதெய்வமும் யெகொஜி ருஜாவுக்கு குடுத்து சிவாஜிருஜாவை சாத்தாறப் புனாருச்சியத்துக்கு இந்த சகம் இந்த விழு வருஷத்தில் பட்டங்கட்டி அனுப்பிவித்தார்.[68] அதுக்குப் பிற்பாடு சிவாஜிருஜா சாத்தாற் கெடிக்குப் போய் பக்கங்களிலே யிருக்கப்பட்ட துற்க்

---

59. தனக் கோட்டி நாயக்கர் என்றவிடத்துப் போ. வ. சவில் (பக். 21) தன்னோ கோட நாயக்கர் என்றும், சிவபாரதத்தில் (பக். 22) தம்ம கவுடராசா என்றும், டி3762இல் தண்டகோடி என்றும் உள்ளன.

60. "ரணதுல்லாகான் பெங்களூரிலேயிருக்கிற கவுட ராஜாவோடு யுத்தம் பண்ணிப் பெங்களூர் வாங்கிக் கொண்டு ஷாஜிராஜாவுக்கு இனாமாய்க் கொடுத்தார்" (சிவபாரதம் பக். 22). "He (Randaula khan) rewarded Shaji with the fort and district of Bangalore after wresting it from Kemp Gonda in 1639-40" (Sarkar (2) p. 58)

61. "Sahaji Raja used to reside at Bengrul in the Karnataka" (Sen, Page 3) (பெங்குருல்-பெங்களூர்) இங்குத் "தம்முடைய பிள்ளைகளாகிய" என்பது டி3119இல். இல்லை.

62. "Sivaji Maharaj lived in the province of Puna and was educated by Dadaji Pant" (Sen, Page 164 – Shivadigvijay-72) என்பதை இங்குக் கருதுக.

63. "அப்போ சாசிருஜா" என்பதற்குப் பிறகு "யோசனை பண்ணினது" என்பது டி3119இல் காணப்படும்.

64. முதல் பெண்சாதிக்குப் பிறந்தது-முதல் பெண்சாதியின் சந்ததி (டி3119)

65. யேகோஜியின் தாயை முதல் மனைவி என்றமைக்கேற்ப "மரியாதைக்கு இவர் (ஏகோஜி) தான் பெரியவர்" என்றமை கருதுதற்குரியது.

66. தகத்தும் - பட்டத்தையும் (போ. வ. ச. பக். 22)

67. சகம் 1562 - விஷு அல்ல, விக்ரம (சாமிக்கண்ணுப்பிள்ளை); விழு-விஷு

68. "Dadaji Pant and the Raja (Sivaji) were despatched to Puna" – (Sen, Page 3)

கங்கள் கோட்டைகள் பாற்சாயுடைய சீர்மைகளையும் கட்டிக் கொண்டு ருச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டுவந்தார்.[69]

சாசிருஜா பெங்களூரிலே[70] யிருந்தார். அவரை அல்லியெதல் ஷா ரெண்டு மூணுதரம் அழைத்தனுப்பிவிச்சத்துக்கு போகாமலிருந்தார். அதன்பேரிலே அல்லியெதல்ஷா பண்ணின யோசனை[71]: சாசிருஜாவை அழைத்தனுப்பிவித்தத் துக்கு வருகிறதில்லை. அவர்பிள்ளை மஹாசூரன் பாச்சாவுடைய சீமையெல்லாங் கட்டிக் கொண்டிருக்கிறுன். சாசி ருஜா சூரன், அவர்குமாரனும் சூரனுன படியினுலே அவர் உயர்ந்து போய்விட்டாரென்று கோபத்தினுலேயும்[72] கபட மாற்கமாய் சாசிருஜாவை பிடித்து கையிது பண்ணவேணுமென்று யோசனை பண்ணி முஸ்தபாகான் என்கிற சற்தார் மஹாகபடன்[73]அவனை அனுப்பி விக்கிறதாக நிச்சயம் பண்ணி அவனுடனே கூட அனுப்பிவித்த பேர்வழிகள்: திலாவற்கான், பரீத்துக்கான், அயிபத்து[74] ருஜாவுடைய பிள்ளை பல்லாள[75]ருஜா, மஹஸூத்துக்கான், ஆதம்கான்,[76] சற்ஜாக்கான்,[77] ருகவருஜா, பாஜிருஜா மருஷ்ட சாதி, யாதுத்துகான், அம்பற்க்கான், வேதாஜி பாஸ்கற் பிருமணன், ஜொஹற்க் கான்,[78] கற்ணபூருக்கு பிறதி ஞமம் கனேள், அந்த தேசத்து ருஜா இந்த சற்தார் களையெல்லாம் கூட அனுப்பிவிச்சு ரெம்பவும் உபாயத்தினுலே சாசிருஜாவை உயிரோடே பிடித்துக்கொண்டு வரவேணுமென்று சொல்லி முஸ்தபாகானை பெங்களூர் பிருந்தத்துக்கு அனுப்பிவித்தார். அந்த முஸ்தபகான் பெங்களூர் தேசத்துக்குவந்து சாசிருஜாவுக்கு சொல்லி அனுப்பிவிச்சது: அல்லியெதல்ஷா கிட்டயிருந்து பாதுஷா கிட்டயிருந்து ஒருகாரியாற்த்தமாக[79] உத்தாரம் வாங்கிக் கொண்டு நானிங்கே வந்திருக்கிறேன். அதுக்கு உங்களுடைய பேட்டியும் வாங்கி யோசனை பண்ணிக்கொண்டு அப்பாலந்தக் காரியத்தில் பிறவேசிக்கச் சொல்லி உத்தாரம் பண்ணியிருக்கிறபடியினுலே பேசவேண்டிய காரியமிருக்குது; தாமகத் தியம்[80] பேட்டிக்கு வரவேணுமென்று சொல்லி அனுப்பிவித்தான். அந்த முஸ்தப

---

69. On coming (to Puna) he took possession of the 12 Mawals:
They are 1. Rhodikhor 2. Velwand 3. Muke 4. Muthe 5. Jor 6. Kanad 7. Sivathar 8. Murun 9. Paud 10. Gunjan 11.Bhor 12. Pavan- (Sen, Page 3, F. n.)

70. பெங்களூரிலே - வெங்களூரிலே (டி.3119)

71. பண்ணினயோசனை - யோசனைபண்ணினது (டி.3119)

72. என்று கோபத்தினுலே - என்கிற ஆங்காரத்தினுலே (டி3119)

73. மஹாகபடன் - மகாகண்டன் (டி3119)

74. அயிபத்து - ஹைவதி (போ. வ. ச. பக். 23)

75. பல்லாள - பளா (டி3119)

76. ஆதம்கான் - அஜ்ஜமகான் (போ. வ. ச. பக். 23)

77. சறஜாக்கான் - சஜார்கான் (போ. வ. ச. பக். 23)

78. ஜோஹர்க்கான் - சொஸ்தகான் (டி. 3119)

79. காரியாற்த்தமாக - காரியநிமித்தியம் (டி. 3119)

80. அகத்தியம் - அவசியம் (போ. வ. ச. பக். 23)

கானுடைய கபடயோசனே[81] சாசிருஜாவுக்கு தெரிந்திருந்தும் ஞம் பாச்சாய் மரியாதைக்கு குறைச்சல் பண்ணுவானேன், இவாள் கபடத்தினுலே ஆகிற காரிய மென்ன வென்று பார்ப்போம், சகல அதிகாரமும் யெகோஜி ருஜாவுக்கு குடுத்து இருக்குது[82*] ஆனுல் அவருக்கு கொஞ்ச வயதானபடியினுலே[83*] அந்த துற்கத்தை சவரக்ஷனே[84] பண்ணுகிறநிமித்தம் மூத்த குமாரரான சம்பாஜிருஜாவை வைத்துப் போட்டு தம்முடனே கூட அழைத்துக்கொண்டுபோன சற்தார்கள் பேர்வழி-கண்டோஜி, மாஞஜி, தாஞஜி, பந்தூஜி, பாண்டுவல்கற்,[85] தெசசித்து,[86] மேக ஜித்து இந்த ஏழு பேரும் மஹாசூராளும் ஆப்த்தாளுமானபடியினுலே கூட அழைத்துக்கொண்டு முஸ்தபகானுடைய பேட்டிக்கு போஞர். அப்போ சிறிது அபசகுனமுமாச்சுது. ஆகிலுமதை பறவாய் பண்ணுமல் போஞர். முஸ்தப கானும் மகா மரியாதையுடனே பேட்டி வாங்கி ரெும்பவும் உபசாரங்களே பண்ணி இன்னம் உம்முடனே யோசனே பண்ண வேண்டியிருக்கிறபடியினுலே பத்து பதினேந்து நாளேக்காரியத்துக்கு தாம் இங்கேதானே யிருக்க வேணுமென்று சொன்ஞன். அப்படியே சாஜிருஜாவும் சமீபத்திலே ஒரு கூடாரத்திலே[87] இறங்கி யிருந்தார். முஸ்தபகான் என்கிறவன் சாசிருஜாவுக்கு நம்பிக்கை யாகும்படி யாக சினேகத்தை காண்பித்துக்கொண்டு[88] வந்தான். ஆகிலும் ருஜா அதை நம்பவில்லே. அவனுடைய கபடம் தமக்குத் தெரியவில்லே என்கிருப்போல[89] பய ரங்கமாய்[90] முஸ்தபகானுக்குத் தோணும்படியாய் பண்ணிக் கொண்டு வந்தார். அப்போ ருஜாவுடைய கூடாரத்திலே வெகுவாய்[91] அபசகுனங்களாச்சுது.[92] அப்போவாகிலும் ருஜா தம்முடைய துற்க்கத்துக்கு வந்துவிட வேணும். ஆனுல் தெய்வ சங்கல்பத்துனுலே ருஜா அவடத்திலே[93] தானேயிருந்தார்.

அப்போ முஸ்தபகான் என்கிறவன் ஒருநாள் ருத்திரி தன்னுடனே கூட வந்திருக்கிற சற்தார்களே சாசிருஜாவுடைய டேருவை சுத்திக்கொள்ளச் சொல்லி அனுப்பி தானு மவாளுக்கு பின்னுலே போஞன். இந்த சூசனே[94] சாசிருஜாவுக்கு தெரியாமலிருந்தபடியினுலே தாமும் தம்முடைய சற்தார்களும் டேருவிலே நித்

---

81. கபடயோசனே — கபட்டுயோசனை (டி3119)
82* முதல் 83* வரை டி3119இல் இல்லை
84. சவரக்ஷனே - சமரக்ஷணை (டி3762)
85. பாண்டுவல்கற்-பாண்டுவகா (டி3119)
86. தேசசித்து—தஸதீத் (போ. வ. ச. பக். 29)
87. ஒரு கூடாரத்திலே - ஒருயிடத்திலே டேருவிலே (டி3119)
88. காண்பித்துக்கொண்டு - பவுருசமாகப்பண்ணிக்கொண்டு (டி3119)
89. தெரியவில்லே என்கிருப்போல - தெரியயில்லாப்போல (டி3762)
90. பயரங்கமாய் — பயங்கரமாய் (டி3119)
91. வெகுவாய் — வெகுசாய் (டி3119)
92. ஆச்சுது - காண்பித்தது (டி3119)
93. அவடத்திலே - அங்கே (டி3119)
94. சூசனே - சூரனே (டி3119); சூழ்ச்சி; விஷயம்.

திரை பண்ணிக்கொண்டிருந்தார்கள் அந்த ருத்திரியிலே அசுப்பிலே[95] சற்தாற கூட்டங்கள் டேருவை வந்து சுத்திக்கொண்ட சேதியை[96] சாஜிருஜாவுடைய சற்தாற்கள் ருஜாவை யெழுப்பிச்சொன்னார்கள். அப்போருஜா சாகிறுதையாய் குதிரைமேலேறிக்கொண்டு தம்முடைய சற்தார்களையும் கூட்டிக்கொண்டு[97] உயித்தம் பண்ணினார். அப்போருஜா வெகுசண்டை பண்ணி வெகு செனங்களை சேதம் பண்ணினார். கடைசியிலே முஸ்தபகானுடைய சறுதார் பாசிருஜாவுடனே சண்டை பண்ணுகிறபோது பாசிருஜா கையினாலே சாசிருஜாவுக்கு காயம் பட்டு குதிரையின் கீழே மூற்சையாய் விழுந்தார். உடனே முஸ்தபகானும் பாசிருஜா வும் சாசிருஜா கிட்டவந்து ருஜாவுக்கு ரொம்பவும்[98] உபசாரம் பண்ணி மூற்சையை தெளிய பண்ணி காயமும் கட்டி ருஜாவை அம்பாரியின் பேரிலே உளுக்காரவைத்து விசையா புரத்தில் அல்லியெதல் ஷா கிட்ட அனுப்பிவித்தார்கள்.[99]

---

95. அசுப்பிலே - திடீரென்று (போ. வ. ச. பக். 24)

96. சேதியை - வர்த்தமானம் (டி3119)

97. சற்தார்களையும் கூட்டிக்கொண்டு-சறுதாருடனே (டி3119)

98. ரொம்பவும் - மெத்த (டி3119)

99. இங்ஙனம் ஷாஜி சிறைப்பிடிக்கப்பட்டது 25-7-1648 ஆகும் (சர்க்கார் (2) பக்கம் 35)

**ஷாஜி கைது செய்யப்பட்டமை பற்றிய பல்வேறு கூற்றுக்கள்:-**

1. **சிட்னீஸ் கூறுவது;**– பீஜப்பூர் பாதுஷாவைக்காண்பதற்கு வருமாறு ஷாஜி எழுதிய கடிதத்துக்குச் சிவாஜி சரியான மறுமொழி கொடுக்கவில்லை. ஆதலால் சிவாஜி தனக்கு அடங்காதிருக்கின்ற செய்தியை ஷாஜி பீஜப்பூர் பாதுஷாவிடம் கூறினார். பாதுஷா நம்பவில்லை. பாஜி கோர்படே என்பவரை அழைத்து ஷாஜியைச் சிறைப்பிடிக்குமாறு ஏவினார். ஷாஜி அப்பொழுது தஞ்சையிலிருந்தார். கோர்படே ஷாஜியை ஒரு விருந்துக்கழைத்து வஞ்சகமாகச் சிறைப் பிடித்தார் (சென். பக்கம் 73).

2. **சிவதிக்விஜயம் கூறுவது:** சிவாஜி அடங்காமல் எழுதிய கடிதங்களைப் படித்த பாதுஷா, பாஜிராவ் கோர்படே முதோஸ்கர் என்பவரையும் சர்ஜாகான் என்பவரையும் அழைத்து நடந்த செய்திகளைக் கூறி ஷாஜியைச் சிறைப்படுத்திக் கொணருமாறு ஏவினார். பாஜிராவ் விருந்தொன்று ஏற்பாடு செய்து, ஷாஜியைத் தனிமைப் படுத்திப் பிடித்துப் பாதுஷாவிடம் கொணர்ந்தார். (சென். பக்கம் 180-181).

3. பாரசீக மொழியில் எழுதப்பட்ட பிஜப்பூர் வரலாறாகிய பஸாதின்-உஸ்-ஸலாதின் (Basatin -us-Salatin) என்ற நூலில் பின்வருமாறு காணலாம்:- ஷாஜி, முஸ்தம்பகானுக்குப் பணியாதிருந்தமையின், ஷாஜியைச் சிறைப்படுத்துமாறு பாஜிராவ் கோர்படே என்பவருக்கும் ஜஸ்வன்த்ராவ் ஆஸத் கனி (Jaswant Rao Asad Kani) என்பவருக்கும் ஏதல்ஷா ஆணையிட்டார். ஷாஜி தங்கியிருந்த இடத்துக்கு இருவரும் விடியற்காலே சென்றனர். இரவு முழுவதும் கேளிக்கையில் கழித்தமையின் ஷாஜி உறங்கிக்கொண்டிருந்தார். இவ்விருவரும் வந்த காரியத்தை அறிந்ததும் ஷாஜி குதிரை மேல் ஏறி ஓட்டம் பிடித்தார். பாஜி கோர்படே துரத்திச் சென்று ஷாஜியைப் பிடித்துக் கொணர்ந்தார். எதல்ஷா இதனையறிந்து அப்சல்கானை அனுப்பி ஷாஜியைத் தன்னிடம் கொணரச் செய்தார் (சர்க்கார் (1) பக். 36).

4. போ. வ. ச. விலும் (பக். 23-25), திருமுடி சேதுராமன் சுவடி யிலும் (பக். 69-75), மெக்கன்சி சுவடியில் உள்ளவாறு ஏறத்தாழ ஒரே மாதிரியாகவே கூறப்பட்டுள்ளன. பாதுஷா பல தடவையும் வரச்சொல்லியும் ஷாஜி செல்லாமையால் முஸ்தஃபகான் ஏவப்பட்டமையும், அவன் பெங்களூர்க்குச் சென்று சின்னாள் தங்கியிருந்து நம்பிக்கையுண்டாக்கிப் பின் வஞ்சகமாகப் போர் செய்து கோர்படேயால் கைது செய்தமையும் சிறப்பான செய்திகளாகும்.

**(4) ஷாஜியின் விடுதலை**

சஹஜிருஜாவுடைய மூத்த குமாரன் சம்பாஜிருஜா பெங்களூரிலே யிருந்தவருக்கு[1] முஸ்தபகான் தன் தொகப்பனுருக்கு பண்ணின கிறுத்திரமமும் அவரை விசையபுரத்துக்கு அனுப்பிவிச்ச சேதியும் சவவிஸ்தாரமாக கேழ்விபட்டு[2] முஸ்தபகானேடே சண்டைக்கு[3] ஆயுத்தமானுர். முஸ்தபகானும் பெங்களூர் கோட்டையை சாதிக்க வேணுமென்கிற அபேட்சையினுலே[4] சண்டைக்கு வந்தான். இருவருக்கும் சண்டையாச்சுது. இந்த சேதி சிவாஜிருஜாவுக்கு தெரிந்து அவர் சேனைகளை முஸ்த்தீது பண்ணிக் கொண்டு அல்லியெதல் ஷாவின் பேரிலே போறதாகயிருந்தார். இந்த ரெண்டு இடத்து சேதியும் அல்லியெதல் ஷாவுக்கு தெரிந்து பல்லாளருஜா வேடருஜா[5] பத்தேகான் முசேக்கான் இந்த மூணு சற்தார்க்களையும் சேனைகளையுங்[6] கொடுத்து சிவாஜிருஜா பாச்சாயியுடைய கோட்டைகள் கெடிஸ்தலங்கள் பிடிச்சுக் கொண்டிருக்கிற தெல்லாத்தையும் விடுவிச்சு சிவாஜிருஜாயிருக்கிற புரந்த கெடிக்குப்[7] போய் அவரைக் கைப்பிடியாக பிடித்துக்கொண்டு வருகிறதென்று கட்டளையிட்டு[8] அனுப்பிவிச்சான்.

அதின் பிற்ப்பாடு அந்த மூணு சற்தார்களும் சீரேபா[9] னென்கிற கெடிஸ்தலம் சிவாஜிருஜா கட்டிக்கொண்டிருந்ததை[10] வாங்கி அவடத்தில் வேடபல்லாள

---

5. சிவபாரதத்தில் (பக். 24-25) மெக்கன்சி சுவடியில் உள்ளவாறு ஓரளவு இருப்பினும் ஷாஜியின் கீழ்க் கர்நாடகப் பகுதி முழுவதும் அடங்கியதென்றும், ஷாஜியின் போக்கினால் பல சிற்றரசர்களுக்கு முஸ்லிம் அச்சம் நீங்கியதென்றும், ரணதுல்லாகான் இறந்த பிறகு கர்னாடகத்துக்கு வந்த பிஜப்பூர்த் தலைவர்கள் ஷாஜி கூறியவண்ணமே நடக்கலாயினர் என்றும், இவற்றை அறிந்த ஏதில்ஷா ஷாஜியைச் சிறைப்பிடிக்குமாறு முஸ்தஃபாகனை ஏவினார் என்றுமுள்ளது (சிவபாரதம் பக். 24; சர்க்கார் (2) பக்கம் 90-91).

6. முகம்மது ஏதில்ஷா ஏவலின்படி ஜஹூர் (Zahur) என்பவரால் "முஹம்மதுநாமா" என்ற நூல் எழுதப்பெற்றது. அதில் ஷாஜி சிறைப்பிடிக்கப்பட்டமை பற்றிப் பின்வருமாறு உள்ளது:-

"செஞ்சி முற்றுகை நீடித்தது. இந்நிலையில் ஷாஜி தன் நாட்டுக்குத் திரும்பிச் செல்லவும் தன் சேனைக்கு ஓய்வு கொடுக்கவும் வேண்டுமென்று முஸ்தஃபகானை வேண்டினார். இப்பொழுது செல்வது தகாது என்று அவர் கூறினார். உணவுப் பண்டங்கள் கிடைப்பதரிதாக இருப்பதால் அவர்களால் தாக்குப் பிடிக்க முடியாதென்றும், இசைவாணை எதிர்பாராமலேயே தான் செல்வதாகவும் ஷாஜி கூறினார். ஷாஜியின் கருத்தை யறிந்த முஸ்தஃபகான் தந்திரமாக ஷாஜியைச் சிறைப் பிடித்து அவருடைய பொருள்களையெல்லாம் தன்வசமாக்கிக் கொண்டார் (பார்க்க: தகாகாவ், பக். 121-122).

1. யிருந்தவருக்கு - யிருந்தார் அவருக்கு (டி 3119)
2. கேழ்விபட்டு - தெரிந்து கொண்டு (டி 3119)
3. சண்டைக்கு - யுத்தம் பண்ண (டி 3119)
4. அபேட்சையினுலே - தார்ப்பிரியத்தினுலே (டி3119)
5. பல்லாளருஜா வேடருஜா - வேடருக்கு எசமானனுகிய பல்லாளன் (டி3119) வேடர்-பேடர்.
6. "சேனைகளையும்" என்றதற்குமுன் (டி3119) இல் "உயுத்த சன்னுகமும்" என்பது அதிகமாக வுள்ளது.
7. புரந்தகெடி – ஸ்தலம் புரந்தார்கெடி (டி3119)
8. கட்டளையிட்டு - ஆக்கியாவித்து (டி3119)
9. சீரேபான் - சிரேபா (டி3762); சிரேயில் (டி3119); சிரோபலம் (சிவபாரதம் பக். 28)
10. கட்டிக் கொண்டிருந்தத்தை - கட்டிக்கொண்டு யிருந்தார், அதை (டி3119)

ருஜா(வை) வைச்சுப்போட்டு முஸேக்கான் பத்தேகான் ரெண்டு பேரும் சிவாஜி ருஜாயிருந்த புரந்தர் கெடியை சுத்திக்கொண்டார்கள். அப்போ சிவாஜிருஜா தன்னுட சேனுபதி பீமனென்கிறவனே அழைப்பிவிச்சு மெத்த கோபித்துக் கொண்டு இந்தச் சிணமே நீ போய் சிரூபால் கோட்டையை வாங்கி நம் முடைய டாணையம் மறுபடி வைத்துப்போட்டு வரவேணுமென்று கட்டளையிட் டுப்போட்டு தாம் பத்தேகான் முசேக்கான் பேரிலே சண்டைக்கு ஆயித்தமானுர். பீம சேனுபதி அப்படியே போய் சிரொபால கோட்டையை சுத்திக்கொண்டு நாலு பக்கமும் மோற்சா போட்டு பிறங்கிகளாலேயும்[11] பாணங்களினுலேயும் சரவருஷமாய் பொழிஞ்சு போட்டான். அப்போ பல்லாளன் சேனைகள் ஒரட் டுக்கும்[12] தலைகாட்டாமல் கோட்டைக்குள்ளே ஒளித்துக் கொண்டு யிருந்தார்கள். பீமசேனுபதி[13] கோட்டையை நாலு பக்கமும் யிடித்து உள்ளே போய் வேடர் பல்லாள ருஜாவை கொண்ணுபோட்டு கோட்டையை சுவாதீனம் பண்ணிக் கொண்டு டாணையமும் வைத்துப்போட்டு சிவாஜிருஜா வண்டையில் வந்து சேந்தான்.[14] அவன் வந்து சேருகிறத்துக்குமுன்னே பத்தேகான் முசேகான் ரெண்டுபேரும் சேனைகளுடனே புரந்தர் கெடியையேறி பிடிச்சு சேனையும் கோட்டையின் பேரிலே ஏறிப்போச்சு.[15] அப்போ சிவாஜிருஜா கோட்டை மேலிருந்து கடினமான சண்டைபண்ணி சில சேனைகளை கல்லுக்களை உருட்டியும் சில சேனைகளை பீறங்கிகள் பாலா பறச்சி[16] கத்தி இதுகளினுலும் ஈயத்தை காச்சி ஊத்தியும் இப்படி கோரமான சண்டைபண்ணி கோட்டையின் பேரிலேறின சேனைகளை திருப்பி[17] போட்டார். அதின் பிற்பாடு ரெண்டாம் விசை பத்தே கான் முசெகான் தங்கள் சேனையோடே சந்து[18] பார்த்து இருந்தாப் போலே யிருந்து புரந்தகெடி கோட்டை வாசல்படிக்கு கிட்டபோய் சேர்ந்தார் கள். அப்போ சிவாஜிருஜா கொஞ்சம் சேனைகளோடே வெளியில் வந்து வெகு சண்டைகள் பண்ணி சேனைகளோரட்டுக்கும் அடித்து துரத்தி வந்த ரெண்டு சற்தார்களுக்குள்ளே முசேக்கான் என்கிறவனைக்கொண்ணு போட்டார். பத்தே கான் மிஞ்சின[19] சேனைகளோடே ஓடிப்போய் விட்டான்.[19அ] அப்போ[20] சிவாஜி

---

11. பிறங்கிகளாலேயும் - பீரங்கி அடியினுலேயும் (டி3119)

12. ஓரட்டு-ஒரெட்டு (டி3119); (ஒரொட்டு-முழுவதும்-தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல் கலைக் கழகம்).

13. காவுகன் என்பவன் தலைமையில் பீமன் முதலிய சற்தார்கள் சிரோபல் கோட்டையை மீட்கச் சென்றனர் என்று சிவபாரதம் கூறும் (பக். 29)

14. சேந்தான் - சேந்தான் (டி3762) சேர்ந்தான் (டி3119)

15. போச்சு - போச்சுது (டி3762)

16. பறச்சி - பரசி (டி3762); பறசி (டி3119)

17. திருப்பி - துரத்தி (டி3119)

18. சந்து - சந்துக்கட்டு (டி3119)

19. மிஞ்சின — இச்சொல் டி3119இல் இல்லை

19அ. இப்போருக்கு முன்னதாகவே புரந்தர்க் கோட்டையைச் சிவாஜி பிடித்திருந்தாராதல் வேண்டும். புரந்தர் என்பது பூனாவுக்கு 18 மைல் தென்கிழக்கிலுள்ள கோட்டை (சர்க்கார் (1) பக்கம் 39). இது நீலோஜி நீலகண்டராவு என்பவருக்குரியதாயிருந்தது. இதனைச் சாமர்த்தியமாகக் கி.பி. 1648இல் சிவாஜி பிடித்த வரலாறு சர்க்கார் (1) பக்கம் 39-40 இல் காணலாம்.

20. அப்போ - அதின்பிற்பாடு (டி3119)

ருஜா சேனைகளை முஸ்த்தீது[21] பண்ணிக்கொண்டு அல்லியெதல் ஷாவின் பேரிலே சண்டைக்கு போறத்துக்கு ஆயித்தமானுர். அப்போ[22] பீமசேனுபதியும் வந்து சேர்ந்தான். இப்படியிருக்கக்கொள்ள சித்திரக்கல்லு துற்க்கத்திலே ருச்சிய பாரம் பண்ணுகிற பீச்சுகத்தி பறமா[23] என்கிறவன் மஹாசூரன்; அவனுடைய வலது பக்கத்தில் மூவாயிரம் குதிரைக்காறர்கள்; அவர்களுடைய கத்திகளுக்கு பொன்னினுல் பண்ணப்பட்ட உறை[24]; அவனிடதுபக்கத்தில் மூவாயிரம் குதிரைக்காறர்கள்; அவாளுடைய கத்திக்கு வெள்ளியினுல் உறை; யிதுவுமல்லாமல் அவனுக்கு முன்னேயும் பின்னேயும் போற சேனைகள் வேறே; அவனுடைய சேனைகள் வெகுசூராள்; அவன்தன்சேனைகளோடே[25] அல்லியெதல் ஷா சீர்மை விஜையாபுரம் பேட்டையில் வந்து விழுந்து கொள்ளையடித்துக்கொண்டு போறது; இப்படி அனேகம் விசை பண்ணிக்கொண்டு வந்தான். அவனந்தவிசையும் முன் தென்டகப்படிக்கு விஜாபுரத்து பேட்டையை கொள்ளையடித்துக் கொண்டு போய்விட்டான். அப்போ அல்லியெதல் ஷா பண்ணின யோசனை: தெற்கு பிருந்தத்தில் பெங்களூருக்கு முஸ்தபகானை அனுப்பியிருந்தும் உயித்தமாகுது. ஆனுல் சம்பாஜிருஜா சுவாதினமாகிறதில்லே. சித்திரக் கல்லு துற்கத்து பறமா என்கிறவன் விஜாபூர்பேட்டை முதல் அடிச்சு[26] கொள்ளையடித்துக் கொண்டுபோனுன். புனுவுக்கு முசெகான் பத்தெகான் இவாளை அனுப்பிவித்த இடத்தில் சிவாஜிருஜா முசெக்கானை கொண்ணு போட்டார். பத்தேகான் எல்லாத்தையும் தோத்து உயிரோடே தப்பிவந்தான். இப்போ சிவாஜிருஜா விஜாபுரக்கோட்டையின் பேரிலே பாளையமெடுத்து பிறப்பட்டு வர ஆயித்தமாகயிருக்கிருர். அவர் மகாசூரன்; ஈசுவரப்பிறசாதி;[27] யெங்கே போனுலும் செயத்தை அடைகிருர். அப்படிக்கொத்தவர் இவடத்தில்[28] வந்தால் விஜாபுரத்துக் காரியமுஞ் சமுசயமாக யிருக்குது. இதுக்கு நன்ருய் யோசனை பண்ணிக்கொண்டு சஹஜிருஜாவுக்கு கவுல் குடுத்து[29] விடுதலை பண்ணி இவரைக் கொண்டு இந்த ருஜகாரிய மெல்லாம் ஸ்த்திரப்படுத்த வேணுமென்று உறுதியாய் யோசனை பண்ணி சஹஜிருஜாவை கயிதுலே[30] யிருந்து விடுதலை பண்ணி பேட்டிக்கு அழைப்பிவித்து அல்லியெதல்ஷா சொன்னது; ஓய் ருஜாவே உமக்கும் யென்னுடைய தொகப்பனுர் யிபருயிமுகானுக்கும்[31]

---

21. முஸ்த்தீது - முஸ்தீபு (டி3762; டி3119)
22. "அப்போ" என்ற இடத்தில் டி3119இல் "சிறேபால துருக்கத்தைச் சாதித்துக் கொண்ட" என்ற பகுதி அதிகமாகவுளது.
23. பீச்சுகத்தி பறமா - பிச்சுகத்திவர்மா (டி3119); விச்சகத்திபரமா (போ. வ. பக். 27)
24. உறை - ஒரை (டி3762)
25. அவன்தன் சேனைகளோடு - இந்தச் சன்னாகத்தோடே அவன் (டி3119)
26. அடிச்சு - இச்சொல் டி3119 இல் இல்லை
27. ஈசுவரப்பிறசாதி - வரப்பிரசாதி (டி3119)
28. இவடத்தில் - பாளையம் எடுத்து (டி3119)
29. கவுல் குடுத்து - வாக்குக் கொடுத்து (போ. வ. ச. பக். 18)
30. கயிதுலே - கைதியிலே (டி3119)
31. இப்ராஹும் எதல் ஷா (கி. பா. பக். 101 எண். 6)

வெகுநாளாய் சினேகம். உம்மாலே யிபருயிமுகானுக்கு வெகுகாரியங்கள் கூடி வந்துது. யிபருயிமுகானும் உமக்கு வெகு உபகாரங்களை பண்ணுர். இப்போ நாமும் உமக்கு அப்படியே நடப்பிவித்தோம். உம்மை நாம் தெற்கு பிருந்தியத் துக்கு அனுப்புவித்தத்துக்கு நீரும் ஞம் சொன்னபடியே காரியங்களைச் செய்தீர். ஆனுல் உமக்கு பெங்களூருக்கு சாகீர் குடுத்தபடியினுலே நீர் நம்மண்டையில் வராமல் சமுசாரத்தையும் அழைப்பிவித்துக்கொண்டு அங்கேயே யிருந்துவிட்டீர். நீர் நம்மண்டையி லிருக்கவேணுமென்று உம்மை அழைத்துக்கொண்டு வருகிற நிமித்தியம் முஸ்தப்புகானே அனுப்புவித்தொம். அவன் வித்தியாசமாக உம்மை நம்மண்டையில் அனுப்புவித்தான். இருக்கட்டும்; போன காரியத்தை ஒன்றையும் மனிதிலே வைக்க வேண்டாம், இப்போ உமக்கும் நமக்கும் சமாதானம் இது தான். உம்முடைய குமாரன் சிவாஜிருஜா நம்முடைய சிம்மகெடி ஸ்த்தளத்தை[32] கட்டிக் கொண்டார்.[33] அதை நமக்கு விட்டுவிடவேணும். உம்முடைய மூத்த குமாரன் சம்பாஜிருஜா பெங்களூரிலே யிருந்துகொண்டு முஸ்தபகானேடே சண்டைபண்ணுகிருர். அவரையும் உம்முடைய சமுசாரத்தையும் சாத்தா ராவுக்கு அழைப்பிவித்துக்கொண்டு பெங்களூரை நமக்கு விட்டுவிடவேணும். மூணுவது சித்திரக்கல்லு பிறமா[34] என்கிறவன் ரொம்பவும் தில்லுதிரியாவரம்[35] பண்ணுகிருர். அவன்பேரில் பாளையம் மெடுத்துப்போய் அவனேக் கைக்குள் ளடக்க வேணுமென்று சொன்னுர். இந்த மூணு வாற்தையும்[36] சஹஜிருஜா அங்கீகாரம் பண்ணி ரெண்டு பிள்ளைகளுக்கும் யெழுதி அனுப்பி பெங்களூர் சிம்மகெடியையும் விட்டுவிடச்சொல்லி யெகொஜிருஜாவையும் சம்பாஜிருஜாவை யும் அவடத்திலிருந்த சமுசாரத்தை சாத்தாராவுக்கு வந்து விடச் சொல்லி எழுதிப்போட்டு[37] தாமும் பாளையம் முஸ்தீது பண்ணிக்கொண்டு பறமா என்கி

---

32. இது "கொண்டன" என்ற பெயருடைய கோட்டையாகும். இது பூனாவுக்கருகில் இருப்பது; பீஜப்பூர் அரசுக்குரியது. சிவாஜி அக்கோட்டையின் கில்லேதாரை விலைக்கு வாங்கிக் கோட்டையைப் பிடித்துக்கொண்டு புதுப்பித்தார். அது முதல் அக்கோட்டை சிம்ஹகாட் (சிங்கக் கோட்டை) என்று சொல்லப்பட்டது (தகாகாவ் பக். 100-101; டஃப், பக். 68). இது புரந்தர் கோட்டையைப் பிடிப் பதற்கு முன்னே நிகழ்ந்தது.

33. கட்டிக்கொண்டார் - பிடித்துக்கொண்டிருக்கிருர் (டி3119)

34. சித்திரக்கல்லு பிறமா - சித்திரகல் துருக்கத்துப் பரமா (டி3119)

35. தில்லுதிரியாவரம் - தில்லும் திரியாவரமும் (டி3119); தில்லு முல்லு, தில்லுமல்லு என்ற சொற்களே சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் காணப்படுகின்றன; அட்டூழியம் என்று போ. வ. ச. வில் (பக். 28இல்) உள்ளது.

36. வார்த்தை — விஷயங்கள் (போ. வ. ச. பக். 29)

The Sultan who was prepared to forgive the faults of a whole universe placed Shahji in charge of Ahmed Khan and declared that he would be pardoned and restored to his former honours, if he gave up to the King the forts of Kondana (which he had seized during the dissolution of the Nizam Shaji Monarchy) Bangalore and Kandarpi (64 k.m. east of Chittaldurg) (Sarkar (2) Page 56). இதில் கண்ட கந்தர்ப்பி என்பது சித்திரகல்லாக இருக்கலாம் போலும்!

37. இங்ஙனம் விடுதலையடைந்தது 16-5-1649 ஆகும் (சர்க்கார் (1) பக்கம் 38).

'A son and heir was born to Muhammad Adil Shah on 5th May 1649 and this joyous event was diplomatically used as a plea for the pardon of Shahji" (Sarkar (1) Page 39).

றவன் பேரில் பிறப்பட்டு சித்திரகல்லுக்கு போய் சேர்ந்தார். அப்போ பறமா தன் தோட்டத்தில் மீன் வேட்டை[38]யாடிக் கொண்டிருந்தான். அவனுக்கு அல்லியெதல் ஷா பாளையங்கூட்டி சஹஜிருஜாவை உன் பேரிலே சண்டைக்கு அனுப்பியிருக்கிறுர் என்று அவனுடைய மனுஷாள் சொன்னுர்கள். அப்போ பறமா தன் பிருது குதிரைமேலேறிக்கொண்டு மேல் எழுதியிருக்கிறபடி அவனுடைய சன்னுகத்துடனே சண்டைக்கு பிறப்பட்டு வந்தான். சஹாஜிருஜா அவனுடனே மஹா சண்டை பண்ணி தன்கையினுலே அவனைக் கொண்ணு[39] பரமாதலையை அறுத்து உறுமாலையில்[40] கட்டிக்கொண்டு அவனுடைய பிருதுகள்[41*] தாஜா[41அ] என்கிறது, குதிரையின் முகத்தில் போடுகிறது, சறஜா தோடா இந்த மூணும்[42*] எடுத்துக் கொண்டு அவனுடைய பாளையத்தில் சிறுது கொள்ளையடித்துக் கொண்டு ருஜா விஜாபுரத்துக்கு வந்து அல்லியெதல் ஷா சமுகத்திலே பறமாவின் தலையையும் அவனுடைய குதிரையின் மூணு பிருதும் வைத்து குறனீசு பண்ணினுர். அப்போ அல்லியெதல்ஷா மஹாசந்தோஷத்தை அடைந்து அவர் கொண்டு வந்த விருதை அவருக்கே கொடுத்து தன்னுடைய சகலபிருதுடனே நிறையப்பட்ட சதரை சஹஜிருஜாவுக்கு யினுமாக குடுத்தார். அதிலிருந்த பிருதுகள் வஸ்துக்கள் என்னமென்றுல்[43*] பச்சை மகமல்[43அ] கூடாரம், அகாடியிலே ஆனைமேல்வைத்துக் கொண்டு அடிக்கிற[43ஆ] தாசு, சதிரிலே வைக்கிற ஒத்தை நகாரா, பச்சை மகமல் சானனனி, பொன் கலசத்துடனே கூடினது அகாடியிலே போற பொன்னு வெள்ளி அம்பாரியும், ஆனையும், பாச்சாய் சதிரிலே ரெண்டு பக்கத்திலேயும் பிடிக்கிற நங்கிச முசோ என்கிற ரெண்டு கத்திகளும் சதிரிலே யிருந்த குதிரையின் தாஜ சரஜா உமா உடன் குதிரையும், மாயமரதெப்பு என்கிற மகாபிருது, வெள்ளி பொன்னினுல் செய்யப்பட்ட சந்திர சூரிய வாச்சியம், பச்சை மகமல் நாலு புரையுள்ள கூடாரம், பச்சை பேஷ் படுதாப்பட்டு கவுறுடன் அந்தக்கூடாரத்துக்குள்ளே போற வழியில் பச்சை மகமல் சானனனி, இந்த சானனனிக்கு கவசம் வைத்ததினுலே இழைக்கப்பட்ட[44] பட்டு திவாசும், சறஜாவின் கால்போலே காலுள்ள சிம்மாசனம், அதின் பேரிலே போடுகிற சுசினியம், டேராவின் சமீபத்தில் ஒன்றை[45]

---

38. மீன் வேட்டை — முயல் வேட்டை (திருமுடி சேதுராமன் சுவடி பக். 87)

39. விச்சகத்தி பரமாவுடன் ஷாஜிமட்டும் தனியாகப் போரிட்டுச் சகம் 1574 தமிழ் நந்தன ஆண்டில் (கி.பி. 1652) கொன்றார் என்று திருமுடி சேதுராமன் சுவடியில் (பக்கம் 90) உள்ளது.

40. உறுமாலே - உருமாலை (டி3119); அங்கவஸ்திரம் (போ. வ. ச. பக். 29)

41* முதல் 42* வரை போ. வ. ச. வில் இல்லை

41அ. தாஜா - தாசு (டி3119)

43அ. மகமல் - வெல்வெட்டு (போ. வ. ச. பக். 29)

43ஆ. "ஆனைமேல் வைத்துக்கொண்டு அடிக்கிற" என்ற இடத்தில் டி3119இல் "போற" என்பது மட்டும் உளது.

44. "கலசம் வைத்ததனுலே இழைக்கப்பட்ட" என்ற இடத்தில் டி3119இல், "வச்சிரக் கல்லினுல் இழைக்கப்பட்ட கலசமும்" என்ற வாக்கியமுளது.

45. ஒன்றை - ஒண்டை (டி3762)

மேல்வைச்சு சுடுகிற சுத்தாளுலா யென்கிற துபாக்கி, பச்சை கலாத்து கொடிய மானையும், பொன் முலாம் பண்ணின ஆனை முகப்பட்டையும், ஆனையுடன் ஆனைகொம்பிலே போடுகிற (சனிகை னுமானை)$ யும், பச்சை மகமலுடைய காசு மூகப்பட்டையுடன் (பாருவானை)$ இத்தனையும் நிறைந்த சதிரை சஹஜிருஜாவுக்கு இனும் (பண்ணிப்)$ போட்டார்.[46*]

சஹஜிருஜா இந்த வெகுமதிகளை யெல்லாம் அடைஞ்சு அல்லியெதல் ஷாவுடைய உத்திரவு வாங்கிக் கொண்டு (சகல பிருது சம்பத்துடனே)$ யும் சாத்தாருவுக்கு வந்து தன் சமுசாரத்துடன் சுகமேயிருந்தார்.

(5) அஃப்சல்கான் காதை

இப்போ சிவாஜிருஜாவுடைய பிறக்கியாதியான சவிஸ்தாரத்தை தெரியப்பண்ணுகிறேன்.

தனது தகப்பனர் சாஜிருஜா அல்லியெதல் ஷாவண்டை (யிலிருந்து)$ விடுதலை பண்ணிக்கொள்கிறநிமித்தியம் (தன்சுவாதீனமாகயிருக்கப்)$ பட்டருச்சியத்தை விட்டு விட்டுசாத்தாராவிலே போயிருந்த பிறகு சிவாஜிருஜா புரந்தர்கெடி[1] யிலேயிருந்தார் (அவர் தன்மந்திரிசு)$ வற்ணம் என்றும் அல்லது

---

46 * இனும் பண்ணிப்போட்டார் – இனாமாகக் கொடுத்தார்

43* முதல் 46* வரை டி3180க்கும் டி3119க்கும் பல இடங்களில் வேறுபாடுண்டு. போ. வ. ச. பக். 29–30இல் பின்வருமாறு கூறப்பட்டுள்ளன:-

''பச்சை நிறமுள்ள வெல்வெட்டுக் கூடாரத்தையும், நகரா என்னும் மெய்க்காப்பாளர் முரசையும், பச்சை வெல்வெட்டினால் செய்யப்பட்ட விதானம் கூடியதும் தங்கம் வெள்ளி இவைகளினாற் செய்யப்பட்டதுமான அம்பாரியையும், யானையையும், பாதுஷாவினுடைய உருவிய கத்தியோடு கூடிய காவலர்களையும், விச்ச சித்தி பரமாவின் குதிரை விருதுகளையும், நவதாம் என்ற பெயருடைய பாதுஷாவின் குதிரை லாயத்திலுள்ள குதிரைகளிற் சிலவற்றையும், அவற்றின் விருதுகளையும், சில அடையாளச் சின்னங்களையும், 'சந்திர' 'சூரிய' என்னும் வாத்தியங்களையும், தங்கம் வெள்ளி இவைகளினால் செய்யப்பட்ட இரகசியக் கூடாரத்தையும், உலோகத் தகடு கொடுத்த பச்சை வெல்வெட்டுத்திரைகளையும், மெத்தை போன்ற அதன் உறைகளையும், பட்டு ஜாலர்களையும், அக்கூடாரத்தின் கால்கள் படிகள் நடைபாதை இவைகளின் மேல் போடும் பல வர்ண வெல்வெட்டு உறைகளையும், நவரெத்தினங்கள் வைத்திழைத்த கலசத்தையும், பட்டு விரிப்புக்களையும், வெல்வெட்டுத்திண்டுகளையும், அடிமணை மெத்தையையும், டேராவின் கீழ் உள்ள பீரங்கி சுமக்கும் ஒட்டகத்தையும், பச்சை நிறமுள்ள அகன்ற துணியில் யானை உருவம் பொறிக்கப்பட்ட கொடிகளையும், தங்கம் வெள்ளி முலாம் பூசப்பட்ட பக்ஷிகளையும், பூ வேலைப்பாடு செய்யப்பட்ட தந்தப்பிடியுள்ள 'சனியன்' 'என்ற குந்தாயுதத்தையும், மீன் உருவங்களுடன் வெல்வெட்டினால் மூடப்பட்ட ரஸமணி யானையையும், இவைகள் அனைத்தையும் ஷாஹாஜி ராஜாவுக்குச் சன்மானமாக அளித்தார்.''

$ பிறை வளைவுகளில் இருப்பவை டி3180இல் சரியாகப் புலப்படாமையால் டி 3762 பார்த்துத் தரப்பட்டன.

1. புரந்தர் கெடி - பிறந்தர்கெடி (டி3119); புரந்தர் கோட்டை (போ. வ. ச. பக். 30). இக்கோட்டை பூனாவுக்குத் தென் கிழக்கில் 18 கல் தொலைவிலுள்ளது. இக்கோட்டையைச்சுற்றியுள்ள பகுதி நீலகண்ட ஹைபத்ராவ் என்பவரிடம் இருந்தது. இவர் இறந்ததும் இவர் மக்களில் மூத்தவர் ஆகிய நீலோபந்த் என்பவர் தனக்குரிய தாக்கிக்கொண்டு தன் தம்பிகள் ஆகிய பீலாஜி சங்கராஜி என்பவர்கட்குரிய உரிமையை அளிக்க மறுத்தார். சிவாஜி இக்கோட்டையைத் தனக்குரியதாக ஆக்கிகொள்ளவேண்டும் என்று நினைத்தார். ஒரு தீபாவளி சமயத்தில் தம்பியர்க்குள்ள மாறுபாட்டு உணர்ச்சியை போக்க முயன்றார் சிவாஜியின் முயற்சிகள் பயனளிக்கவில்லை. நீலோபந்த் அயற்சி

சோனுஜி[2] பண்டித (ரெண்ணும்பேர் அவ)$ரை யேகாந்தமாய் அழைப்பித்துச் சொன்னது (நமதுடைய தொகப்பனுர்)$ நல்ல பருக்கிறமசாலி யோகசாலி. அவர் பண்ணிய காரியங்களும் நல்ல மனசுடனே பண்ணியிருக்கிறுர். ஆகிலும் அதிலே கொஞ்சம் தோணுகிறது என்னமென்றுல், முதல் நிஜாம்வுடைய சஹவாசத்திலே யிருந்தவர் அல்லியெதல்ஷாவுடைய போதனையினுலே அவர்கிட்டசேர்ந்தும் மறுபடி நிஜாம்ஷா அழைத்தவுடனே அவர்கிட்டேபோயும் திரும்பியும் அல்லி யெதல்ஷா கிட்டவந்தார். இப்படி ரெண்டு மூணு திரம்[3] போய் வந்ததில் யெவாள்[4] சஹவாசத்திலே எத்தனை நாள் இருந்தாரோ அது வரைக்கும் அவாளவாள் காரியங்களிலே வஞ்சினை யில்லாமல் பார்த்தும் அவாளுக்கு[5] இவரிடத்தில் கபடமே தோணிக்கொண்டு யிருந்தது. அவாளவாள் காரியத்து நிமித்தியம் இவரை கையிலே பிடித்து காரியம் சேகரமான பிற்பாடு அதுக்கு தக்கன பெகுமதிகள் பண்ணினதே யல்லாமல் மனப்பூறுவமாய் இவர் நம் முடையவர் என்று தொணும்படியாய் நம்முடைய தொகப்பனுர் பண்ணிக் கொள்ளயில்லே. இப்போதும் பெரிய மனுஷாளா யிருக்கிறபேர் ஒருத் தருடனே சஹவாசம் பண்ணி அவாளிடத்தில் மனஸ்த்தாபத்துக்கிடம் வைத்துக்கொள்ளவேபடாது. ஒரு வேளை மனஸ்த்தாபத்துக்கு இடம் வந்தால் அவாளுடனே கூடவே போகாது. இப்படி பிறச்சித்தமாக[6] இருக்கச்சே இப்படிக்கு நடந்து போச்சுது. இத்தனைக்கும் நம்முடைய தொகப்பனுர் நல்ல பருக்கிறமசாலி; வஞ்சினையில்லாமல் காரியம் பார்த்தபடியினுலே கிறுத்திரம புத்தியை யுடைத்தான துலுக்காளண்டையிலிருந்து சாமி ரக்ஷித்தார். நாம் பிறையாசத்தினுலே வாங்கின சிம்மகெடியும்[8] அவர் சம்பாதித்த பெங்களூரும் குடுத்துப்போட்டு சாத்தாராவிலே வந்து இருக்கிறுர். அவருக்கு விறுத்தாப்பிய தெசையும் வந்துது. இனிமேல் நமக்குத் தோணினபடிக்கு பண்ண வேணும். அல்லியெதல் ஷாகிட்ட நம்முடைய தொகப்பனுர் அனேகம் பிறையா

---

யினால் உறங்கச்சென்ற சமயம்பார்த்துத் தம்பிகளின் உதவியால் சிவாஜி அவரைக் கைதுசெய்தார். தம்பியர்களும் பின்னர்க் கோட்டையிலிருந்து வெளியேற்றப்பட்டனர். எனினும் இனாம் நிலங்கள் அவர்கள் அளிக்கப்பெற்றனர். இது 1648இல் நிகழ்ந்தது (தகாகாவ் பக். 101-102)

$பிறைவளைவுகளில் இருப்பவை டி3180இல் சரியாகப் புலப்படாமையால், டி3762 பார்த்துத் தரப்பட்டன.

2. சோனாஜிபந்த் சிவாஜியிடம் 'டபீர்' என்ற அலுவலர் (சர்க்கார் (1) பக். 34); 'ஸப்னீஸ்' என்று ஸபாஸத் கூறும் (சென், பக். 4).

3. திரம் - தரம் (டி3119)

4. யெவாள் - அவான் (டி3119). 5. அவாளுக்கு - அவாளவாளுக்கு (டி3119)

6. பிறச்சித்தமாக - பிரசித்தமாக (டி3119)

7. புத்தியையுடைத்தான - புத்தியாயிருக்கப்பட்ட (டி3119)

8. சிம்மகெடி-சிமாகெடம்-சிம்மகட்கோட்டை (போ. வ. ச. பக். 3). இதற்குக் கொண்டனா என்று பேர் "Twelve miles immediately south of Poona was the great fortress of Kondana" (கி. பா.பக். 138). இக்கோட்டையைப் பீஜப்பூர்க்குரிய ஒரு தலைவன் காவல் செய்திருந்தான். அவனுக்குச்சிறிது பொருள் கொடுத்து அக்கோட்டையைச் சிவாஜி தனதாக்கிக்கொண்டார் (தகாகாவ். பக். 110); அதற்குச் சிம்ஹகெட் (Simhagad) சிங்கக்குகை என்று பேரிட்டார். இது கி.பி. 1648 இல் பிஜப்பூருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது.

சம்பண்ணி யிருந்தாலும் அவருடைய சித்தத்திலே நமக்குக் காலிபண்ணவேணு[9] மென்றிருக்குது. அபறங்கசேபுக்குமப்படியே யிருக்குது.[10] இப்படி ரெண்டு பிற பல சத்துரு இருக்கச்சே ளும் புரந்தரகெடியிலிருந்து ருச்சியம் பண்ணுகிறது[11] எப்போதும் கூடாத காரியம்; மோசம் பண்ணிப்போடுவாள். ஆகையால் நாம் வெளியிலே பிறப்பட்டு இவாள் ரெண்டு பேரையு மடக்கினுல் நமக்கு க்ஷேமம். இந்த யோசினே உமக்கு செம்மையா யிருக்குதா என்று கேட்டதுக்கு அந்த மந் திரி சொன்னது: மஹாருஜா அவர்கள் பண்ணின யோசினே யுக்த்தந்தான்[12] இதுகாரியம் பண்ணுல் ஈசுவர சஹாயமும் கூடிவருமென்று சொன்னப்பிற்பாடு சிவாஜிருஜா சகல சேனேகளேயும் சேத்து முஸ்திப்பு பண்ணுகிறத்திலேயும் துலுக் காள் பேரிலே பிறவர்த்திக்கிற விதம் இவாள் ரெண்டுபேரும் என்ன பிறை யாசப்பட்டாலும் அவாளெத்தினம் நடக்காமலிருக்கப்பட்ட யிடத்திலிருந்து கொண்டு எத்தினம் பண்ணவேணுமென்று யோசனே பண்ணி, மேல் இடம் விசாரிக்கும்போது மேற்க்கே விருட்டதேசத்திலே சஹிய[13] பறுவதத்துக்கு கீழ் பாரிசம்[14] மேற்க்கு சமுத்திரததுக்கு சமீபம் லோஹபருவதத்தண்டையில் பிற தாபகெடிக்கு[15] சமீபம் செயவலி நகரமென்று இருக்குது; அதை செயிக்கிறதும் மஹாகடினம்; யெவாள் எத்தினமும் நடவாது; வழிகளிலேயும் வெகு கணவாய்க ளிருக்கிறபடியினுலேயும் அந்த தளத்தை சுவாதீனம் பண்ணிக்கொள்ளுகிறத் துக்கு வழிகளிலே அல்லியெதல்ஷாவுக்கு தோப்பா[16] குடுக்கிறபேர் வெகுபேரிருக் கிருர்கள். அவர்களே செயித்து அந்த ஸ்த்தளம் சுவாதீனம் பண்ணிக்கொள்ள வேணுமென்று நிச்சயம் பண்ணி முதல் நாம் வாங்கியிருந்த சிம்மகெடத்தை சாசிருஜாவை விடுதலே பண்ணுகிற நிமித்தியம் அல்லியெதல் ஷாவுக்கு குடுத்தி ருந்தத்தை வாங்கி அதுமுதல் நம்முடைய கெடிஸ்தளங்களுக்கெல்லாம் சாமான் களும் சேனேகளும் வைச்சு பந்தோபஸ்த்து பண்ணி நல்ல சமற்த்தாளாய் பொறுக்கி[17*] எடுக்கப்பட்ட பதாதி சேனேகளே கூட அழைத்துக்கொண்டு வேண்டிய றஸத்துக்களு[18*] மெடுத்துக்கொண்டு பிறயாண நிச்சயம் பண்ணி அனேக திரவியங்களே யாத்திரா தானமாக குடுத்து குலதெய்வ இஷ தெய்வா திகளே[19] பிராத்தினேகளே விசேஷமாக பண்ணி பிறயாண சமையத்திலே குல

---

9. காலிபண்ணவேணும் - வீழ்த்திவிடவேண்டும் (போ.வ.ச. பக்.32)

10. ''அவுரங்கசீபுக்குமப்படியேயிருக்கிறது'' என்ற இடத்தில் போ.வ.ச. வில் பக். 32 இல் பின்வரு மாறுள்ளது:

''அதுபோலவே நிஜாம்ஷாவின் ராஜ்யத்தைப்பிடித்துக்கொண்டு தேவகிரி துர்க்கத்தில் இருக்கும் ஔரங்சீப்பிற்கும் நாம் ஒரு முள்ளைப்போல் தோன்றுகிறோம்''.

11. ''ருச்சியம் பண்ணுகிறது'' - டி3119 இல் இல்லே

12. யுக்த்தம்தான் - யெதார்த்தமே (டி3119)

13. சகிய - சாக (போ.வ.ச.பக். 32) - மேற்குத் தொடர்ச்சி மலை

14. கீழ்ப்பாரிசம் - தாழ்வரையில் (போ. வ. ச. பக். 32)

15. பிரதாபகெடி - இது ஜாவலிக்கு இரண்டுகல் மேற்கிலிருப்பது. இங்குச் சிவாஜி பவானி அம் மனின் உருவை எழுந்தருளச் செய்தார் (சர்க்கார் (1) பக். 44). ஜவாலிக்கோட்டையைப்பிடித்த பிறகே பிரதாபகட் கோட்டை எழுப்பப்பட்டது (சென். பக். 7).

16. தோப்பா - தோஃபா (Topha); கப்பம்; (குண்டுகளின் மரியாதை போ. வ. ச. பக்கம் 32)

17* முதல் 18* வரையுள்ளவை டி3119 இல் இல்லே

19. ''இஷ தெய்வாதிகளே'' என்ற விடத்தில் டி3119இல் ''தேவதா'' என்ற ஒரு சொல்மட்டு முளது.

தெய்வம் இவர் சொற்பனத்தில்[20] செயமாகிற சின்னங்களை[21] காண்பிவித்துது. அதையும் பார்த்து செயபேரியுமடித்து நல்ல முகுற்தத்தில் விசைய திசமியில் பிறப்பட்டார். விசையதிசமி பண்டிகையில் பிறப்படுவா(னே) னெனில் பொசலெ வம்சத்திலே செயமான நாளதுதானென்று பரம்பரையாக நடந்து வந்தபடியி னாலே[22] அந்த நாளையிலே இவரும் பிறப்படும் போது உத்தம சகுனங்களு மாச்சுது. பிறப்பட்டு செயவல்லி நகரம் போறவரைக்கும் வழிகளிலே சீமுதமான காடும் மலைகளு மிருந்துது. அந்தந்த யிடங்களிலே இருந்த அனேக தேசாதிபதி கள் துற்க்காதிபதிகள் பாளையகாறர்கள் சமேத்துவார்கள்[23] இவாளனைவரையும் செயித்து செத்துப் போனவர்கள் ஓடிப்போனவர்கள் போக கைப்பிடியாக பிடித்துக் கொள்ளப்பட்டவர்களில்[24*] கொல்லப்பட்டவர்கள் சிறுது, விட்டு விடப்பட்டவர்கள் சிறுது, பத்திரமான இடத்தில் கையிதிலே வைக்கப்பட்டவர் கள் சிறுது,[25*] அதிலே பெரியருஜாக்கள் பாஜிருஜா[26] கிஷ்ணருஜா[27] செனகருஜா[28] சந்திரருஜா[29] இந்த பேர்வழிகள் நாலு ராஷ்யத்துக்கும் டாணையம்[30] வைத்துப் போட்டு செயவல்லி நகரத்துக்கு வந்து சேர்ந்தார். அந்த பட்டணத்தின் பிற பாவத்தை[31] கொஞ்சம் தெரிய எழுதப்பட்டிருக்குது என்னமென்றால் சஹியாமலை அல்லது சையாமலை என்கிற பறுவதத்தின் எல்லையின் கணவாய்க்கு கீழ் ரடத் தொண்டி[32] கணவாய் என்று பேர். அதுடைய இருக்கம் நெருக்க மகா[33] பிற

---

20. "சொற்பனத்தில்" என்தற்குப்பிறகு டி3119 இல் "பிரத்தியட்சமாகி" என்பதுள்ளது

21. சின்னங்களை - சன்னதங்கள் (டி3119)

22. "Hindu tradition of hoary antiquity and from the epic period downwards recognise it (Dasara) as the most auspecious day for the opening of a campaign" - (Takakhav, Page 391)

23. சமேத்துவார்கள் - சிமையதார் (டி3119); ஜமேதார் (போ. வ. ச. பக். 34)

24* முதல் 25* வரை டி3119இல், "சிலது பேரைக் கொன்றுபோட்டுச் சிலது பேரை விட்டு விடப்பட்டுச் சிலது பேரை பத்திரமான யிடங்களிலேயும் கைதுலேயும் வைக்கப்பட்டது" என்று காணப்படும்.

26;27. பாஜிராஜாவும் கிருஷ்ணராஜாவும் சந்திரராஜாவின் பிள்ளைகள். ஜாவலிக் கோட்டைக் குச் சொந்தமானவர் சந்திரராஜா. சந்திரராஜாவை வென்ற பிறகு அவருடைய இரு மக்களையும் சிவாஜி சிறைப்படுத்திப் பூனாவுக்கு அனுப்பிவிட்டார். அங்கு அவர்கள் கொல்லப்பட்டனர்— (சென், பக். 164). ஆனால் ஜாதுநாத் சர்க்கார், பாஜிராவ் கொல்லப்படவில்லை என்பர் (சர்க்கார் (1) பக். 47) அடிக்குறிப்பு 26 காண்க.

28. செனகராஜா யார் என்று தெரியவில்லை. 29. சந்திரராசா ஜாவலியின் தலைவன்

30. "Thanna literally signifies a garrison, but it also means more especially in Deccan history, the military post at which the inferior revenue officers are stationed to protect the country, aid the police and collect the revenue, whether the station be a fort or an open village. The cultivators consider him their master who is in possession of thanna; for this reason garrison does not convey the full meaning of thanna"- (Duff, Page 506, Notes for P. 93, line 10)

31. பட்டணத்தின் பிறபாவத்தை - பட்டணத்தினர் பிரஸ்தாபத்தை (டி3119)

32. ரடத்தொண்டி - நடத்தோண்டி (டி3119); ரணதோண்டி (போ. வ. ச. பக் 34)

33. "நெருக்க மகா" - டி3119 இல் இல்லை

பலமாக யிருக்கும். அதிலிறங்கி ஓரடி வழியாய வெகுதூரம் வரைக்கும் போய் லோஹ பறுவதத்தின் சிகரத்திலே[34] ஏறி கீழே பார்க்கும் போது[35] சிமுதமாய் நெருங்கி யிருக்கிற வனத்தினாலே சூரியகிரணம் பட்டபூமி ஒரு மாட்டுக் குளம் படி நில முதலாய் தெரிய வரவில்லே. இருண்ட யிடமாயிருந்துது. அப்படிக் கொத்த வன துற்க்கத்தின் ஆவரணத்தின் நடுவே செயவல்லிப்பட்டணம். அதுக்கு சமீபத்தில் பிறதாப துற்கம். அதையுஞ் செயித்து அந்தப்பட்டணத்துக்கு மேலே யெழுதியிருக்கப்பட்ட[36] சந்திர ருஜாவையுந் துரத்தி சுவாதீனம் பண்ணிக் கொண்டு செயவல்லி நகரத்திலே பிறதாப துற்கத்திலேயும் டாணேயம் வைத்துப் போட்டு தாம் அப்பால் மேற்குச் சமுத்திரக் கரையிலிறங்கி அந்தக்கரை ஓர மாய் தண்ணியிலே ஒரு கோட்டை யெடுப்பிவித்து அதுக்கு சிவலங்கை யென்று பேர்வைத்து அதில் செனங்களுங் குடியேத்தி நவரத்தின கெஜிதமான ஒரு சிம்மாசனத்தை உண்டுபண்ணி அதின்பேரிலே தாம் ஏறிக் கொண்டு தன்பே ரால் சிவசக மென்று பேர்வைச்சு தன்னுடைய அதிகாரத்துக் குள்ப்பட்ட தேசம் ஓரட்டுக்கும் அந்தப்படியே கணக்கும் எழுதவைத்து தாம் அவடத்திலே யிருந்தார்.

அந்த செயவல்லி நகரத்து சந்திரருஜா[37] அல்லியெதல்ஷா வண்டையில் வந்து சேர்ந்து சிவாஜிருஜாவுடைய சவுரியமும் தயிரியமும் நடத்தைக ளெல் லாத்தையும் அவருக்குத் தெரியபண்ணினான். அந்த அல்லியெதல்ஷா[38] மஹா ஆச்சரியப்பட்டு யிதுவரைக்கும் சிவாஜிருஜா இன்ன இடத்தி லிருக்கிருரென்று ஒருத்தருக்கும் தெரியாமலிருந்துது. சந்திரருஜா சொன்னதின்பேரில் அல்லி யெதல் ஷாவுக்கு மகா ஆச்சரியமும் அதிக பொருமை[39]யு மதிகமாக யெந்த விதத்திலேயும் சிவாஜிருஜாவை காலி பண்ணவேணும்; யில்லாமல் போனால் நம்முடைய அதிபத்தியம் நிற்கிறது கடினமென்று நிச்சயம் பண்ணி அவர்கிட்ட யிருக்கப்பட்ட பணிரெண்டு வசிர்களிலே முக்கியமாய் இருக்கப்பட்ட வஜிர் அப்சல்கான் அல்லது அப்துல்லாகா[40] னென்று பேர், அவனே அழைப்பிவித்து

---

34. சிகரத்திலே - கொடுமுடி (டி3119)

35. பார்க்கும்போது - இறங்கும்போது (டி3119)

36. பட்டணத்துக்கு மேலேயெழுதியிருக்கப்பட்ட - பட்டணத்து (டி3119)

37. ஜாவலிக்குரிய சந்திரராவ் மோரேயின் மக்கள் கிருஷ்ணாஜி, பாஜி என்ற இருவர் ராயிரி (Rairi) கோட்டையில் இருந்தனர். சிவாஜி அக்கோட்டையைப் பிடித்து ராய்காட் (Raigarh) என்று பெயரிட்டு அவ்விருவரையும் பூனாவுக்கு அனுப்பினார். கிருஷ்ணாஜி சில மாதங்கட்குப் பிறகு கொல்லப்பட்டார். பாஜி 28-8-1686 இல் சிறையினின்று தப்பியோடிச் சந்திரராவ் என்ற தம் குடிப் பெயரைப்பூண்டு பீஜப்பூரை யடைந்தார் (சர்க்கார் (1) பக். 44,47) அடிக்குறிப்பு 17,18 காண்க.

38. இந்நாளில் பீஜப்பூர் அரசராக இருந்தவர் அலி அடில் ஷா II. இவர் மிக்க இளைஞர் ஆயினமையின் இவருடைய தாய் ஆட்சிப்பொறுப்பி லிருந்தார். அவர் Badi ஸாஹேபா என்று வழங்கப்பெற்றார் (தகாகாவ் பக். 151).

39. அதிக பொருமை - ஈரிஷை (டி3119)

40. அஃப்சல்கானுக்கு அப்துல்லா படாரி (Abdulla Bhatari) என்பது இயற்பெயர் (சர்க்கார் (1) பக். 58). "He was reported to be an illegitimate son of the late Muhammad Shah, his mother having been a cook in the royal kitchen. He was governor of Wai 1649 - 1654"- (Sardesai, Page 123)

நீர் பாதுஷாகிட்ட வெகுகாரியம் பண்ணியிருக்கிறீர். சீமைகளையும் செயித்திருக்கிறீர். உம்மைத்தொட்டு பாதுஷாயி என்கிறபேர் நிலைநின்றிருக்குது. இப்போ சாசிராஜாவுடைய பிள்ளை சிவாஜி யென்கிறவர் வெகுசாய் பெலவானாய் தொகப்பனூர் பேச்சையுங் கேளாமல் தான் அதிக்கிறமமாய் பாற்ச்சாவுடைய சீமைகளெல்லாங் கட்டிக் கொண்டு பாற்ச்சாயி கசானாவுக்கு வருகிற திரவியத்தை யெல்லாம் கொள்ளையிட்டது[41] மல்லாமல் பாஜிருஜா கிஷ்ணருஜா செனகருஜா இவாளுடைய சீமையும் கட்டிக் கொண்டு அப்பால் சந்திர ராஜாவுடைய சீமை ஜெயவல்லி நகரம் அல்லது ஜாவல்லி நகரத்தையும் கட்டிக் கொண்டு சமுத்திரத்து நடுவே கோட்டையுங் கட்டிக்கொண்டு அதுக்குப்பேர் சிவலெங்கை என்று பேர்வைத்து றத்தின[42] சிம்மாசனம் பண்ணி அதின் பேரிலே தாம் உளுக்கார்ந்து தம்முடைய சகமும் உண்டு பண்ணி இருக்கிறான். இன்னம் என்ன காரியம் பண்ண மாட்டான்; ஆகையால் நீர் விசேஷமாக சேனைகளை சேத்துக் கொண்டு திரவியமும் எடுத்துக்கொண்டு[43] உம்மோடே கூட பதினொரு வசீரையு மழைத்துக் கொண்டு மஹாபுத்தியுடனே சிவாஜி ருஜாவை உயிரோடே பிடித்துக்கொண்டு வரவேணும்[44*]; இல்லாவிட்டால் கொண்ணுபோடவேணும்; இப்படிக்கு பண்ணாவிட்டால் நமக்கு இருக்க வொட்டாமல்[45*] பண்ணிப்போடுவானென்று சொன்னத்துக்கு அப்துல்லாகான் சம்மதித்து பதினொரு வசீர்களையும் சேனைகளை எதெஷ்டமாக சேத்துக் கொண்டு வக்கில் கிஷ்ணாஜி பண்டிதரையும்[46] அழைத்துக்கொண்டு பயணம் பிறப்படுகிறத்துக்கு சித்தமானான். இப்படி இருக்கச்சே சிவாஜிருஜா புணாவுக்கு வந்து சேந்ததாய் சேதி வந்துது. அப்போ சந்திரருஜா சொன்னது: சிவாஜி ருஜா அங்கேயிருந்து புணாவுக்கு வந்து சேர்ந்தது ஒருகாரியத்துக்கு பெல மாச்சுது[47]. சாவலி கெடியிலே யிருந்தால் அவரைக் கண்டுபிடிக்கிறது மகாகடினம். அலர் புணாவுக்கு வந்தவர்[48] மறுபடி அங்கே போய் சேருகிறத்துக்கு முன்னே நாம் பண்டரிபுரத்து மேலே செவையாய் சாவல்லி கெடிக்குப் போய் அத்தையும் பிரதாபக் கெடியும் நாம் சாதிச்சுக் கொண்டால் சிவாஜிருஜா

---

41. "Having heard that a large treasure was forwarded to court by Moolana Ahmad, governor of Kalliyan, Sivaji put himself at the head of 300 horse, taken at Sopa.........and attacked and dispersed the escort, divided the treasure amongst the horsemen and conveyed it with all expedition to Rajgurh"- (Duff, Page 71-72)

42. றத்தின – ரெற்றின (டி3119)

43. திரவியமும் எடுத்துக்கொண்டு - கசானாவும் வாங்கி கொண்டு (டி3119)

44* முதல் 45* வரை டி3119இல் "இல்லாவிட்டால் நம்மை யிருக்கவொட்டாமல்" என்றுளது.

46. கிஷ்ணாஜிபண்டிதர் (Krishnaji Bhasker, the Kulkarni of Wai-Sardesai, Page 125).

47. பெலமாச்சுது - சௌகுரியமாகிவிட்டது (போ. வ. ச. பக். 36)

48. வந்தவர் - வந்தபடியினாலே (டி3119)

மைதானத்திலே அகப்படுவான்,[41] அப்போ அவனை சகசியமாய்[42] பிடித்துக் கொள்ளலாம் என்று சந்திரராஜா சொன்னத்தை யுக்த்தமாய் நினைச்சு அப்துல்லா கான் பயணம் பிறப்பட்டுப்போனான்.[43] அப்போ அனேக[44] அவசகுனங்களாச்சுது. பாச்சாயியுடைய முக்கியமாயிருக்கப்பட்ட பத்தேலஸ்க்கர்[45] என்கிற கொடி[46] கொண்டுபோற ஆனை முதல் மஜிலிலேதானே செத்துப் போய்விட்டுது.[47*] இதுகளை பறவாய் பண்ணாமல் அப்துல்லாகான் சந்திரராஜா சொன்னபடியே சீக்கிரத்தில் முடிக்க வேணுமென்கிற அபெஷ்சையோடே போனான்.[48*] அப்போ சிவாஜிராஜாவுடைய குலதெய்வம் ஸ்ரீஜெகதாம்பா துளஜா பவானி[49] ராஜாவுக்கு ருத்திரியிலே பிறசன்னமாயி, அல்லியெதல் ஷா உத்தாரம்பண்ணி அப்துல்லாகானென்கிறவனை அனுப்பிவித்திருக்கிறது. அப்துல்லாகான் ஒருவேளை கபடமாற்கமாய் சந்தி சொல்லி அனுப்பிவித்தால் அதை நம்பவேண்டாமென்றும் புணாவை இந்த க்ஷணமே விட்டுபுறப்பட்டு செயவல்லி நகரத்துக்கு போய் அவடத்திலே நானுன்னைக் கொண்டு அப்துல்லாகானென்கிறவனை சம்மாரம் பண்ணிவிக்கிறேனென்று சொல்லித்துது.[50*] அந்த க்ஷணமே ராஜா எழுந்திருந்து தேவிக்கு நமஸ்க்காரம் பண்ணி தேவி அப்பிறத்தியக்ஷமான பிற்பாடு நாம் சொற்பனங் கண்டோமென்றாலும் முழித்துக்கொண்டுதானிருக்கிறோம். இப்படி தன்குல தெய்வம் வரப்போற காரியத்தை அறியப் பண்ணிவித்தத்துக்காக சந்தோஷமாயி அந்த நாழிகைக்கு புணா பிறாந்தத்திலே யிருக்கப்பட்ட கெடிஸ்தளங்களையும் துற்க்கங்களையும் பந்தோபஸ்த்துப்[51] பண்ணிப்போட்டு தாம் சாவல்லி[52] கெடிக்கு பயணம் பிறப்பட்டார். அப்போ வழிகளிலே யிருக்கப்பட்ட கோட்டைகளிலே யிருக்கப்பட்ட சறுதார்களுக்கெல்லாம் சங்கேதம் சொல்லிவைத்த தென்னவென்றால், அப்துல்லாகான் என்கிறவன் வெகு சேனைகளோடே பண்டறி

41. அகப்படுவான் - விழுந்துவிடுவான் (டி3119)

42. சகசியமாய் - சகசமாய் (டி3119)

43. புறப்பட்டது செப்டம்பர் 1659 (சர்தேசாய், பக்கம் 156)

44. அநேகம் - வெகுசாய் (டி3119)

45. பத்தேலஸ்கர் - பத்தலகார் (டி3119) "Fateh Lashkar the picked elephant of the Bijapur Stables died" - Ballad of Afzul Khan (K.P. Page 157)

46. கொடி - நிசான் (டி3119); கொடி கொண்டுபோகிற - நிசாம் உட்காரும் (போ. வ. ச பக். 37)

47* முதல் 48* வரையுள்ள வாக்கியம் உள்ள விடத்தில் டி3119இல், "அத்தையும் அலட்சியம் பண்ணி அப்துல்லாகான் என்கிறவன் பண்டரீகபுரத்து மார்க்கமாய் சாவளி கெடியும் பிரதாபகெடியும் முதல் சாதித்து அப்பால் சிவாசி பேரிலே யெதிர்க்க வேணுமென்று யோசனை பண்ணிக்கொண்டு நடந்தான்" என்ற வாக்கியமுளது.

49. துளஜாபவானி - துளஜா புரத்தில் கோயில் கொண்டுள்ள தேவி

49 முதல் 50* வரையுள்ள பகுதி டி3119இல் சிறுசிறு வாக்கியங்களாகப் பிரித்து எழுதப்பட்டுள்ளது.

51. பந்தோபஸ்த்து - சுமத்து (டி3119)

52. சாவல்லி - சாவடி (டி3119)

புற[53] மாற்கமாய் சாவல்லி கெடிக்கு போனுன். இதிலே[54] நாமும் அவடத்திலே போய் சேருகிறேம். அவன் நம்முடைய பேட்டி ஆக வேணுமென்று சந்தி பேசு வான். நாம் அதுக்குத் தக்கதாயி உத்திரவு கொடுக்கிறேம். நீங்களுங்களுடைய கோட்டைகளை பந்தோபஸ்த்து[55] பண்ணிக் கொண்டு சேனைகளை மாத்திரம் காண்பிவிக்காமல் காடுகளிலே ஒளித்து வைத்துக் கொண்டு அப்துல்லாகான் வருகிறவனுக்கு அவன் சேனையுடனே தாருளமாக உள்ளே விட்டு விடவும். சாவல்லிகெடி மைதானத்திலே நமக்கும் அவனுக்கும் பேட்டியாகிற இடத்திலே சந்தி முறிஞ்சு போற சமையத்திலே சங்கேத நகாரு[56] அடிக்கிறேம். அந்த சப்தம் கேட்ட நாழிகைக்கு எல்லாரும் வெளியிலே பிறப்பட்டு கணவாய் வழியை கட்டிக்கொண்டு உள்ளே வந்த சேனைகளை ஒருதனை யாகிலும் வெளியிலே விடாமல் வெளியிலே யிருக்கப்பட்ட மனுஷர்களை ஒருதனை யாகிலும் உள்ளே விடாமல் யாரை யெங்கே காணுகிறீர்களோ அங்கே அடித்துப்போடுகிறது என்று தாக்கிதை பண்ணிப்போட்டு சங்கேதமாய் அடிக்கப்பட்ட விதங்களையும் அவாளுக்குத் தெரியப்பண்ணி அப்பால் தாம் சாவல்லி கெடிக்குப் போனுர். அதுக்குமேல் அப்துல்லாகான் விசாரித்தவிடத்திலே சிவாஜிருஜா சாவல்லி கெடிக்குப்போய் சேர்ந்தார் என்கிற சேதி தெரிந்து பண்டரிபுர மாற்க்கத்து வழியாய் போறவன் ஸ்ரீ விட்டோபா என்கிற மூர்த்திக்கு உபத்துறவம் பண்ணுகிறத்துக்கு யோசனை பண்ணினுன்[57]. அப்போ விட்டோபா என்கிற மூற்த்தி அதெரிசியமாய் போய் விட்டுது.[58] அதுக்குமேல் துளஜாபுரத்துக்குப் போய் ஸ்ரீ துளசாபவானியென்கிற மூர்த்திக்கும்[59] உபத்திரவம் பண்ண ஆரம்பிச்சான். அந்த மூர்த்தியும் மறைந்து

---

53. பண்டரிபுரம் - இது பீமா என்ற ஆற்றங்கரையிலுள்ள தலம். இங்குக் கிருஷ்ணன் கோயிலுண்டு. அவரை "விட்டோபா" என்று அழைப்பர் - (கி.பா.பக்.103,107).

54. இதிலே - இதற்குள்ளாக (போ. வ. ச. பக்கம் 38)

55. பந்தோபஸ்த்து - மசுமத்து (டி3119)

56. The preconcerted signal for Netaji was the blast of a collery horn (Duff, Page 90) "I shall win victory and return to the fort. Then only one shot will be fired from the fort. Then you are to descend from the ghats, fall upon the Khan's army and attack it" - (Sen, Page 18)

57. The Khan came to Pandharpur and molested the people of that place but the image was hidden by the attending priest (Chitnis 54) (Sen, Page 183). "Thence the Khan marched to harass the god of Pandharpur and to demolish the temples of Hindu gods. But the priest learnt the Tuljapur affair and he too removed his god" (Sivadigvijaya) (Sen, Page 188)

58. அதெரிசியமாய் போய்விட்டுது - மறைந்துபோய் திருஷ்டிக்கு விழாமற் போச்சுது (டி3119)

59. Afzal in his pride marched to Tulajapur. He would have committed sacrilege upon the goddess but she was removed by the officiating priest-(Chitnis) (Sen, Page 183)

"He came to Tulajapur by stages. It was his design to destroy the goddess of that place; but she warned the priests in a dream - "Abdul Khan is coming to defile me; therefore remove me to some other place." There upon the goddess was removed. When the Khan arrived she was not to be found" (Sivadigvijaya) (Sen, Page 188)

போய்விட்டுது. அங்கேயிருந்து பிறப்பட்டு வந்து ஸம்புமஹாதேவ மூர்த்திக்கும் உபத்திரம் பண்ண ஆரம்பித்தான்.[60] அவனண்டையிலிருந்த மாருஷ வஜிர்கள் ஆறுபேர் யிருந்தவர்கள் குறுக்கேவந்து மறித்து தடைசெய்தார்கள்.[61] ஆனபடி யினாலே அங்கேயிருந்து பிறப்பட்டு பல்லிவனம் என்று சொல்லப்பட்ட பாலி யென்கிற கெடிக்கு வந்தான். அங்கேயும் கண்டேருவ் யென்கிற மூற்தி ஆச்சரிய மான[62] திஷ்டாந்திரங்களை காண்பிவித்ததினாலே உபத்திரவம் ஒண்ணும் பண்ணா மல் அங்கேயிருந்து வைகில் கிஷ்ணாசி பண்டிதரை[63] அழைப்பிவிச்சு சிவாஜி ருஜாவுக்கு சந்தி சமாதானம் பண்ணவெணுமென்று சொல்லி ருசா பேருக்கு அப்துல்லாகான் எழுதின கடுதாசியின் வயணம்: நீர் யெத்தனை யானாலும் அல்லி யெதல் ஷா பாச்சாவுக்கு விரோதம் பண்ணினீர். உம்முடைய சினேகத்துக்கு அப்படி பண்ணப்போகாது. உம்முடைய தொகப்பனார் சாஜிருஜா பண்ணின காரியங்களை நீரும் கேழ்விப்பட்டு யிருப்பீரே. இப்போதும் நீர் பாதுஷாவுடைய கோட்டைகளெல்லாம் கட்டியிருக்கிறீர். பாதுஷாவுடைய மன சுபெதாரை யெல்லாம் அடித்துப் போட்டீர்.[64] கசானாவையுங் கொள்ளையிட்டீர். ரத்தின சிம்மாசனம் ஒண்ணுபண்ணி அதின் பேரிலே பாச்சாவாய் உளுக்கார்ந்தீர். இதுவுமல்லாமல் துலுக்காளுடைய மதத்தை நிந்தினை பண்ணுகிறீர். மசீதுக ளெல்லாம் இடித்துப்போட்டீர். இப்படிக் கெல்லாம் திவெஷம் வளறுகிறபடியி னாலே நீர் பாச்சாயிக்கு குத்தவாளியாகப்போனீர். அல்லியெதல் ஷாவுடைய மன சிலே உமக்கு றெம்பவும் கஸ்திபடுத்த வெணுமென்று தோணியிருக்குது. சாசி ருஜாவுடைய சினேகத்தினாலே பாதுஷாவுக்கு ஞாவிதமாய்ச் சொல்லி இப்போ நீர்கட்டி யிருக்கிற சிம்ம கெடி பீமநதி புரந்தர் கெடி செயவல்லி இதுகளை விட்டு விடுகிறது. யெதாபிறகாரமாய் உம்முடைய தேசத்திலே நீர் சுகமாயிருக்கிறது என்று தீர்த்துக்கொண்டு ஞம் வந்திருக்கிற படியினாலே உமக்கும் நமக்கும் பேட்டியான பிற்பாடு மைத்த சேதிகளும் தெரியவருமென்று கடுதாசி யெழுதி வைக்கில்[65] கிஷ்ணாசி பண்டிதர் கையில் கொடுத்து கபட புத்தியும் போதினை

---

60. Afzal Khan diverted his march from Poona to Wai desecrating the temple of Shambhu Mahadev at Signapur on his line of march - (Takakhav, Page 155)

61. மறித்துத் தடைசெய்தார்கள் - அடுக்காயிச்சார்கள் (டி3119)

61.அ "Khande Row is a deity of Jejuri near Satara - Page 328. Deposition of Shivaji Rajah Saheb, I defendant, O. S. No 26 of 1912 in the court of the Subordinate Judge, Thanjavur.

62. "ஆச்சரியமான" என்றவிடத்தில், டி3119இல் "சமனத்காரமாகி" என்பதுளது

63. கிருஷ்ணாஜி பண்டிதர்: "Grant Duff gives the name of the Khan's envoy as Pantaji Gopinath (Duff P. 88); Chitragupta gives it as Dattaji Gopinath; and the Shiva digvijay mentions a second envoy Govind Pant, from the Khan; In the mahad copy of the Sabhasad's Bhakar the name of the celebrated envoy is given as Pantaji Pant. The Shed gaokar bakhar calls the Khan's envoy Dattaji Bhaskar"- (Takakhav, Page 157 F.n)

64. "பாதுஷாவுடைய மன சுபெதாரையெல்லாம் அடித்துப் போட்டீர்" என்பது டி 3119இல் இல்லை; போ. வ. ச. பக். 39இல் உள்ளது.

65. வைக்கில் - வக்கீல் - Vakil; an agent; an envoy (Takakhav, Page 643).

பண்ணி சிவாஜி ருஜாகிட்ட அனுப்பிவித்தார். அவர் ருஜாகிட்ட வந்து றம்பவும் ஆப்த்தமாய் பேசி பேட்டி சந்தி வாற்தைகளும் சொன்னர். அதை சிவாஜிருஜா அங்கிகாரம் பண்ணி மெத்த உத்தமமாச்சுது, நம்முடைய மனதிலே அபெட்சையா யிருந்தபடியே அப்துல்லாகானும் சொல்லி அனுப்பிவித்தார். அவர் செயவல்லிபுரமும் சாவளி என்னப்பட்ட மைதானமும் இவடத்திய காடும் செடிகளும் இதுகளை ஒண்ணும் பாத்ததில்லையே, ஆகையால் இவடத்திலே தானெ வந்தால் பேட்டியும் வாங்கி பேசவேண்டிய பேச்சும் பேசிக் கொள்ளலாமென்று சொல்லி அனுப்பிவித்தார். இந்த வற்தமானம் வைக்கில் கிஷ்ணுசி பண்டிதர் வந்து சொல்லச்சே அப்துல்லாகான் றம்பவும் சந்தோஷமாய் பாளையம் கூச்சுப்பண்ணிப் பயணம் பிறப்பட்டான். அப்போ கூடயிருந்த வசீர்கள் சொன்னது: அந்த யிடத்துக்கு போக போகாது. சிவாஜிருஜா கொஞ்சக் காரனல்லர்.[66] யேதாகிலும் கபடம் பண்ணுவாரென்று வெகு விதமாய்ச் சொன்னர்கள். அப சகுனமும் றெம்பவு மாச்சுது. அதுகளை ஒண்ணும் பறவாய்ப் பண்ணமல் லொஹபறுவதம் தாண்டிப் போய் சாவளி கெடிக்கு வெளியிலே இறங்கி ருஜாவுக்குச் சொல்லி அனுப்பிவித்தான். அப்போ ருஜா கணவாய்கள் கெடிஸ்தளங்களெல்லாம் கட்டிக் கொண்டு வெளியிலேயிருக்கிற மனுஷாளை உள்ளே வராமல்படிக்கும் வழிகளிலெல்லாம் மரம் வெட்டி அப்துல்லாகானுடைய மனுஷியாளுக்கு தாங்கள் வந்த வழிகூட தங்களுக்குத் தெரியாமல் பண்ணி அந்தந்த கெடிதுற்க்கங்களெல்லாம் மசுபத்துபண்ணி[67] புனுபிருந்தியங்கள் பின்னையும் தாம் நூதினமாய் சம்பாதித்த சீர்மைகளிலும் அந்தந்த டாணுவிலே இருக்கிறவர்களுக்கு தம்முடைய சங்கேத நகாறு அடிச்ச உடனே அந்த சப்த்தம் கேட்டஞழிகைக்கு நாலுபக்கத்திலேயு மிருக்கிற சேனைகளும் கூடி அப்துல்லாகான் பாரிசம் ஒரு பூனைக்குட்டியை முதலாய் விடப் போகாது என்று தாக்கிது பண்ணி தாம் சாவளி கெடி வன துற்க்கத்துக்குள்ளே மைதானத்திலே சதிற்ப்பண்ணி அப்துல்லாகானை பேட்டிக்கு அழைத்தனுப்பிவித்தார்.

இப்படியிருக்கிற சமையத்திலே சிவாஜிருஜாவுக்கு சேதி வந்தது என்னமென்றல் அப்துல்லாக்கான் விசையாபுரம் விட்டு வருகிற வழியிலே நாம் புதிசாய் கட்டியிருந்த சீமை ஒரட்டுக்கும் அவன் கட்டிக்கொண்டு கொள்ளையுமடிச்சுக் கொண்டு வருகிற போது உம்முடைய மூத்த தமையனர் சம்பாஜிருஜா சில சேனைகளை சேர்த்துக் கொண்டு உயித்தத்துக்கு போனர். அவரை வளைத்துக் கொண்டு முன்னே கவுலும் கொடுத்து கிறுத்திறமம்பண்ணி அவரைக் கொண்ணு போட்டார்கள்.[68] அந்த சம்பாஜிருஜா பரமபதம் அடைந்தது சாலியவாகன

---

66. கொஞ்சக் காரனல்லர் - சாமானிய மானவர் அல்ல (போ. வ. ச. பக். 40)

67. மசுபத்துப்பண்ணி - பலமுள்ளதாகச் செய்து (போ. வ. ச. பக். 40)

68. சம்பாஜி இறப்புப்பற்றிச் சர்தேசாய் (பக். 80-81) கூறுவது பின்வருமாறு:-

"At Kanakagiri Sambhaji resided with his father; ...... Appa Khan the palegar of Kanakagiri raised the standard of revolt with which Shahji and Sambhaji found themselves unable to cope. So in 1654 the Adil Shah sent Afzal Khan to their support. During the encounter that ensued Sambhaji was

சகம் ௲௫௱௮௰ விகாரி[69] வருஷம். அந்த சேதி சாசி ருஜா கேழ்விப்பட்டு அவருடைய கிறியா கற்மங்கள்[70] ஆன பிற்ப்பாடு அந்த விசனத்தினுலே ரெண்டு மாசத்துக்கு பிற்பாடு இந்த சகம் இந்த வருஷத்திலேதானே சாசிருஜாவும் பரமபதமடைந்தார்[71]. அவருடைய உத்தரகிரியை யேகொஜி ருஜாபண்ணுர்.[72] மாதோஸ்ரீ[73] சிஜாவுபாயி[74] சாயபு உங்கள் பேட்டிக்கு வந்தார்களென்று சேதி[75] சொன்னுர்கள். அப்போ சிவாஜிருஜா ரொம்பவும் விசனப்பட்டு ஜிஜாவுபாயி சாயபு அவர்களுடைய பேட்டி வாங்கி சமாதானம் பண்ணி ஆவுசாயபு அவர்களை பிறதாபக்

---

killed as was supposed through the deliberate neglect of Afzul Khan to rein force Sambhaji at a critical moment".

69. சகம் 1580 - கி.பி. 1658; சம்பாஜி கி. பி. 1654இல் இறந்தார் என்று சர்தேசாய் கூறியிருக்க, டஃப் (பக். 75இல்) கி. பி. 1653 என்பர்.

"But on the authority of certain stone inscriptions discovered in the Carnatic the question is raised whether he did not live up to the year 1663" என்ற தகாகாவ் கூற்றுக் கருதற்பாலது (பக். 51 அடிக்குறிப்பு)

70. கிறியா கற்மங்கள் - உத்தரக்கிரியை

71. ஷாஜி இறந்ததுபற்றிச் சர்தேசாய் கூறுவது (பக். 83-84) பின்வருமாறு:-

During April 1663 Ali Adil Shah marched against Bankapur and urgently called to his presence his two commanders Bahlol Khan and Shahji. They arrived and were both kept under arrest. Shahji was however released within two days and sent against the Nayak of Bednur who had rebelled. After accomplishing his commission within a few months, he started for Bangalore. While halting at Basavapatnam on the way he heard of some game in the vicinity and rode out for a hunt of which he was very fond. While following an antelope his horse's foot got entangled in a hole bringing down both the horse and the rider. the latter dying instantly. This happened on Saturday 23, January 1664".

சம்பாஜி இறந்தது கி. பி. 1658; இவர் இறந்த இரண்டு மாதத்துக்குப்பிறகு ஷாஜி இறந்தார் என்று மெக்கன்சி சுவடியும், போ. வ. ச வும் கூறியிருக்க வரலாற்றாசிரியர்கள் ஷாஜி 23-1-1664இல் இறந்தார் என்று கூறுதல் அறிதற்பாலதாகும்.

72. "On 23rd January 1664 his funeral ceremonies were conducted by Ekoji his son" (Srinivasan, Page 99, F.n.) "A splendid mausoleum was erected to his memory" (Srinivasan, Page 99)

Dr. H. M. Krishna, Director of Archaeology, My sore has discovered the tomb of Shahji at Hodigere, situated at a distance of about six miles to the east of Channagiri and a mile to the north of the Bhadravati Chitaldrug road. He has traced a part of the stone inscription which reads thus; "Sri Shahji Rajana Sa(madhi)" (Srinivasan, Page 99-100 F. n.)

தஞ்சையில் ஆட்சிசெய்கையில் ஏகோஜிக்கும் சிவாஜிக்கும் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அவ்வுடன்படிக்கையின் 19ஆவது பிரிவு "ஷாஜி ராஜாவின் சமாதியை ஏகோஜி பராமரித்தல் வேண்டும்" என்பதாகும் – (சர்தேசாய், பக்கம் 243)

73. மாதோஸ்ரீ – மாதத்தி ஸ்திரி (டி3119)

74. சிஜாவுபாயி – சீசாயி (டி3119); ஜிஜாபாயி

75. சேதி - வர்த்தமானம் (டி3119)

பக்கெடியில் வைத்து சம்பாஜி ருஜாவைக் கொன்ண பழி வாங்கிறேமென்று[76*] கொபமாய் அப்துல்லாக்கான் பேட்டிக்கு எதிர்பார்த்துக்கொண்டு யிருக்கை யிலே[77*], அப்துல்லாக்கான் பல்லாக்கிலே யேறிக்கொண்டு வைக்கில் கிஷ்ணுஜி பண்டிதரும் அஞ்சாறு ஊழியக்காறர்களோடே[78] சிவாஜி ருஜாவுடைய சதிறுக்கு வந்தான். சிவாஜி ருஜாவும் அதுக்கு தக்கினுப்போல்[79] நாலுபேரை கூட அழைத்துக்கொண்டு பேட்டிக்கு வந்தார்.[80] ஒருதருக்கொருதர் பேட்டியாகிற சமையத்திலே கொஞ்சம் பேச்சு வார்த்தைகள் நடந்துது. அப்துல்லாகானென் கிறவன் ருஜாவைக் கட்டி பிடித்துக்கொண்டு மடியிலே யிருந்த கட்டாரியை[81] உருவிக்கொண்டு ருஜாவுடைய வயற்றிலே ரெண்டுமூணு திரம்[82] குத்தினுன்.ஆனுல் ருஜா ஒருதருக்குந் தெரியாமல் அங்கிக்குள் மெல்லீசு சீரா[83] போட்டிருந்தபடியி னுலே அந்த குத்துகள் வியற்தமாய் போக்சுது. இதிலே ருஜா தன் கையிலே பிச் சுவாவினுல் அடிகாண்பித்து இடதுகையிலே புலிநிகம்[84] போட்டுக் கொண்டிருந்த படியினுலே அப்துல்லாகான் வயற்றிலே அடித்து யிழுத்தார். வயறு பீறி யீரல் வெளியே பிறப்பட்டுது. ஆகிலும் அப்துல்லாகான் தயிரியஸ் தனுனபடியினுலே[85] தன் வயறு பீறி வெளியில் பிறப்பட்ட யீரல்குடலை[86*] உள்ளே தள்ளி ரெட் டைச்[87] சாலுவையினுலே வயத்தை கட்டிக்கொண்டு கையிலே பட்டா எடுத்துக் கொண்டு ருஜாவை வெட்டத்[88] தலப்பட்டான். அப்போ ருஜாவும் கையிலே பட்டா வாங்கிக் கொண்டு அவனடிச்சடியெல்லாம் பட்டாவினுலே தாங்கி தம் முடைய பட்டாவினுலே அவனை யிடது தோள் முதல் வலது பாரிசம் விலாப் பக்கம் வரைக்கும் வெட்டின படியினுலே அப்துல்லாகான் ரெண்டு துண்டாய்[89] கிழே விழுந்தான். அப்போ சாலிய வாகன சகம் [illegible]ளஅமிக[90] விகாரி வருஷம் மாற்கழி மீ' சுக்குலபக்ஷம் வியாழக்கிழமை மத்தியானம்[91] அப்த்துல்லாகான்

---

76* முதல் 77* வரை டி3119இல் "கோபமாயிருக்கிற சமையத்திலே அப்போ" என்பது மட்டு முளது.

78. ஊழியக்காரர்களோடே – இசமுதாரரும் (டி3119) (இசமுதாரர்–Hereditary holder of a village office (Tamil Lexicon, M. U.)

79. தக்கினுப்போல் - தகுமானுப்போல் (டி3119)

80. வந்தநாள் 10-11-1659 வியாழக்கிழமை (The Mughal Empire, Page 258)

81. கட்டாரி - பிச்சுவா; "The Beechva or scorpion is aptly named in its resemblance to the reptile" (Duff, Page 505 - Page 90, line 37, F.n.)

82. திரம் - குத்து (டி3119)

83. சீரா - இரும்புக்கவசம் (போ. வ. ச. பக். 42)

84. "The wagnuck or tiger's claws is a small steel instrument, made to fit on the fore and little finger. It has three crooked blades which are easily concealed in a half closed hand" (Duff, Page 505; F. n. Page 90 line 39)

85. தயிரியஸ்தனுனபடியினுலே - செதிகலங்கியவனுகி (போ. வ. ச. பக். 42)

85 முதல் 86*வரை டி3119இல் "தன்கையினுலே குடலை" என்றுள்ளது

87. ரெட்டை - சோடு (டி3119) 88. வெட்ட - அடிக்க (டி3119)

89. "ரெண்டுதுண்டமாய்" என்றவிடத்துப் போ. வ. ச. வில் "மூர்ச்சையடைந்து" என்றுளது.

90. சகம் 1581

91. இங்ஙனமே சிவபாரதத்தில் பக்கம் 47இல் காணப்படுகிறது

விழுந்த பிற்பாடு அவனுடைய கத்தியை வக்கில் கிஷ்ணுசி பண்டிதன் எடுத்துக் கொண்டு ருஜாவை வெட்ட தலப்பட்டான். அப்போ ருஜா சொன்னது; நீர் பிருமணர்; உம்மை அடிக்கிறது நமக்கு தற்மமல்ல. நாம் பிருமணுளுடைய பாதத் தூளைப்[92] பூசை பண்ணிக்கொண்டிருக்கிறேம். நமக்கு குரு தெய்வம் பிருமணு ளானபடியினுலே கையிலே யிருக்கிற கத்தியை போட்டுவிட்டு உமக்கு போக மனதாயிருந்தால் போய் விடும். கணவாய்வழி மொக்களா பண்ணிக் கொடுக்கச் சொல்லி உத்தாரம் பண்ணுகிறேம். அல்லது இங்கேதானே யிருக்க மனதா யிருந்தால் அன்னவஸ்த்திரம் கொடுத்து நடப்பிவிக்கிறேம் யிருமென்று வெகுவித மாய் சொல்லியும் அந்த பிருமணன் கேழ்க்காமல் மேலுக்கு மேல் கத்தியினுலே அடிக்க தலப்பட்டான். அதெல்லாம் பறவாய் பண்ணுமல் திரும்பி பார்க்காமல் ருஜா போய் விட்டார். அப்போ ராஜாவுடைய ஊழியகாறனில் ஒருதன்[93] பார்த்து பிருமணன் அடமாய் அடிக்கிறுன்; ஒரு வேளை அடி தப்பிப்பட்டால் கோட்டியாவதி பிறசைகளை[94] காப்பாத்துகிற ருஜாவுக்கு காயம் படுமென்று நினைத்து கத்தி பிடித்து வெட்டுகிற பிருமணனை சுகமாயடிக்கலாமென்று சொல்லி அந்த கிஷ்ணுசி பண்டிதனை வெட்டி ரெண்டு துண்டாக்கிப் போட்டான். அந்த பிராமணன் தெய்வ கெதியான பிற்பாடு சிவாஜிருஜா முன்சங்கேதம் சொல்லியிருந்த படிக்கு நகாரு அடிக்கச்சொன்னுர். அந்த சப்த்தம் கேட்ட நாழிகைக்கு அங்கங்கே யிருக்கப்பட்ட சேனைகள் அப் துல்லாகானுடைய சேனையை ஓரட்டுக்கும் வளைத்துக் கொண்டு அடித்துப் போட்டு மத்த வசீர்களை பிடித்துக்கொண்டு பாளையத்திலே யிருக்கிற யானை குதிரைகளெல்லாத்தையும் பிடித்துக் கொண்டு ருஜாவண்டையில் கொண்டு வந்து சேர்த்தார்கள். அப்போ ருஜா அகப்பட்ட வஜீர்களுக்கெல்லாம் வெகுமதி பண்ணி அனுப்பிவித்தார். இந்த வஜீர்களும் மிஞ்சின சேனைகளும்[95] அல்லியெதல் ஷா வண்டையில் போய் நடந்த சேதிகளை சவவிஸ்தாரமாகச்[96] சொன்னுர்கள்[97].

---

92. பாததூளை - இது போ. வ. ச. வில் இல்லை

93. ருஜாவுடைய ஊழிய காறனில் ஒருதன் - சிகமுது கான் ஒருத்தன் (டி3119)

94. கோட்டியாவதி பிறசைகளை - கோடிசனத்தை (டி3119)

95. மிஞ்சின சேனைகளும் - அதசேஷாளும் (டி3119)

96. சவவிஸ்தாரமாக - இது 3119இல் இல்லை; (டி3762இல் சவிஸ்தாரம் என்றே உளது)

97. இந்தப் போரைப் "பிரதாபகட் போர்" என்று குறிக்கலாம்.
"The battle if it could be so called is known as the battle of Pratabgad" (Sardesai, Page 130) இது பற்றிய கதைப்பாடல் (Ballad) உண்டு. சர்தேசாய் கூறுவது பின்வருமாறு:

**Afzal Khan's ballad composed and sung by Ajnandas has been printed in which the author says he was sent for from Poona by Jija Bai to Pratapgad and was ordered to sing the glorious achievement of her son. In those days this was the only means of publishing such events. Ajnandas says he composed the ballad and so impressed Jija Bai and Shivaji with its recitation that they rewarded him with two lbs of gold in got and a horse. The piece stirs our heart even today and contains many details which may be taken as accurate. Any way this is the only extant record of that memorable incident.**

அல்லி யெதல்ஷா அப்துல்லாகானுடைய மரணசேதி கேழ்விப்பட்டு ரெண்டு நாழிகை வரைக்கும் மஹாவிசனத்திஞலே குண்ணிப் போய் வெகுசற் தார்கள் வெகுசேனைகள் மடிந்து போனபடியினுலே ரெம்பவும் மறுபடியும் தயி ரியம் பண்ணிக்கொண்டு சிவாஜிருஜா பேரிலே சண்டை பண்ணவேணுமென்று சேனைகளை முஸ்தீப்பு பண்ண துடங்கினர்.

**(6) பலப்பல போர்கள்** முன்னலே சிவாஜிருஜா அப்துல்லாகானை அடிக்கிற நிமித்தியம் சாவளிகெடிக்கு போறபோது புனு தேசமெல்லாம் சேனபதி நெத்தொஜி பாரிசமாய்[1] ஒப்பிவித்து சாவலி கெடியிலே தாம் சங்கேத நகாறா அடித்த சேதி[2] கேட்டவுடனே நடக்க வேண்டிய காரியம் இன் னபடி யென்று சொல்லிப்போட்டு போயிருந்தார். அந்த நெத்தோஜி என்கிற சேனபதி அப்துல்லாகான் தெய்வகதியான சேதியும் அல்லியெதல்ஷா மறுபடி சண்டைக்கு சேனைகள் சேகரம் பண்ணுகிரு ரென்கிற சேதியும் கேழ்விப்பட்டு அப்துல்லாகான் சாவளி கெடிக்கு போறபோது அவன்[3] டாணையம் வைத்திருந்த கோட்டைகள் கெடிகள் எல்லாத்தையும்[4] எடுத்துப்போட்டு தன்னுடைய சேனை களை வைத்துப்போட்டு ருஜாவுடைய பேட்டிக்கு வந்தான்.

அதின் பிற்பாடு சிவாஜிருஜா நெத்தோஜி சேனபதியை கூட அழைத் துக் கொண்டு அல்லியெதல் ஷாவுடைய கோட்டையை கட்டினது லெட்சுமி நகரம் சூப்புகாவ்[5] ராசவட்டு[6] இந்த பட்டணங்களை[7] கோட்டையுடனே பிடித் துக்கொண்டு யிதுகளுக்கு அதிகாரியாக யிருந்த அல்லியெதல்ஷாவுடைய காரி யஸ்தன் இலால்கானை செயித்தார். அவனும் நிற்மல மனசோடே ருஜாவண்டை யிலிருக்க சம்மதித்து ருஜாவும் அவனை அங்கிகாரம் பண்ணிக்கொண்டு கூட அழைத்துக் கொண்டு அல்லியெதல்ஷா டில்லியீசுவரன்[8] இந்த ரெண்டு பாதுஷா அல்லது பாச்சாயிகளுடைய கெடிகள் துற்கங்கள் கோட்டைகள் சீமைகள் கட்டிக்கொண்டதுகளின் பேர் வழி[9]: மாயாவனி, ருமபுரம், களதுதிகா, செயந்தி

---

**………… A very readable English translation in verse is published by Acworth- (Sardesai, Page 129, F.n.)**

1. நேதாஜிபால்கர் ஸர்நோபத் (சென், பக். 12); ஸர்நோபத் - சேனைத்தலைவர் (Commander - in - Chief) (தகாகாவ் பக். 643). பீம சேனபதி போரிலிறந்தார்; சிவாஜி, சேனபதிப்பதவியை நேதாஜி பால்கருக்கு அளித்தார் (திருமுடி சேதுராமன், பக். 146)

2. சேதி - வர்த்தமானம் (டி3119)

3. சாவளிகெடிக்குபோறபோது அவன் - டி3119இல் இல்லை

4. எல்லாத்தையும் - எல்லாவற்றையும் அவன் சைனியத்தை (டி3 119)

5. சூப்புகாவ் — சூட்டி நகரம் (டி3119)

6. ராசவட்டு - சாசவட (டி3119); சாசவட்டு (டி3762)

7. "லெட்சுமிநகரம் சூடிநகரம் சாசவட்ட இந்தப்பட்டணங்களை - திருமுடி சேதுராமன் (பக். 148) "சம்பகாவரசாவடு என்ற பட்டணத்தை" - (போ.வ.ச.பக்.44)

8. டில்லியீசுவரன் - டில்லிசுவான் (டி3119)

9. இங்குக்கொடுத்த பெயர்கள் போ.வ.ச.விலும் (பக். 44), திருமுடி சேதுராமன் சுவடியிலும் (பக். 149) சிறிது வேறுபட்டுள்ளன

கர், அஷ்டட்டி, அஷவட். வேலாபுரம், உம்பர்காவ், மசூர், கஹார், தாம்பகாவ், பலிக்கர், நேரளி, காமநகரம், பகுமுரண், கோலாபுரம், கரவீர்,[10] இந்தப்பிற காரம் எல்லாருஷ்சியத்தையும் கட்டிக்கொண்டு அதுகளிலேயிருந்த சறுதார்க்கள் சிறுது பேரை கவுல் மேல் விட்டார்;[11] சிறுது பேரை கொண்ணுபோட்டார்; சிறுதுபேரை கயிதிலே வைத்தார்[12]. சாதிச்ச ருஷ்சியத்துக் கெல்லாம் பலமான டாணயம் வைத்துப்போட்டு அதின் பிற்பாடு நேத்தோஜி சேனுதிபதி கூட சேனைகளை கொடுத்து அல்லியேதல்ஷா அபறங்கசீபுடைய குறை ருச்சியங்களை யும் கட்டச்சொல்லி உத்திரவு பண்ணிப்போட்டு தாம் பனுளாகெடியை செயிக்கவேணுமென்று வந்து அதுக்கு மோற்சா போட்டு அடிக்கும்போது உள்ளேயிருக்கிற சேனைகள்[13] பீரங்கி குண்டுகளினுலேயும் ஈயத்தை காச்சி ஊத்துகிறத்தினுலேயும் வெகுசாய் அடித்தார்கள். அதை ஒன்றையும் பறவாய் பண்ணுமல் சிவாஜிருஜா கெடியின் பேரிலேறி கெடியை பிடித்துக்கொண்டு[14] உள்ளேயிருந்த சறுதார்களை சிறுது பேரை கொண்ணுபோட்டு சிறுது பேரை விட்டுவிட்டு[15] அந்த பனுளாகெடியிலே தாம் வாசம் பண்ணிக்கொண்டி ருந்தார். அல்லியெதல்ஷா யோசனை பண்ணிக்கொண்டிருந்தது: சிவாஜி ருஜா மகாசூரர்; இப்போ செயவல்லி பிறதாபகெடி பிருந்தத்திலே யிருக்கிருர்; அங்கேயிருந்து பனுளாகெடி சமீபமானபடியினுலே அங்கேவருவார்; அது மெத்த நல்ல தேசம்; அதுதான் நமக்கு ஒரு ஆஸ்த்தியாக யிருக்குது; ஒருவேளை அந்தக்கெடியை சிவாஜிருஜா பிடித்தால் நமக்கு ரெம்பவும் கஷ்டமாக[16] யிருக்கும். ஆகையால் அதை ரக்ஷிக்க வேணுமென்று ருஸ்த்தும்கான் என்கிற சற்தார் பின்னேடே வெகு சேனைகளை குடுத்து பனுளா கெடியை சவரக்ஷிக்க அனுப்பிவித்தார். அந்த ருஸ்த்தும்கான் வந்து சேறுகிறத்துக்கு முன்னே சிவாஜிருஜா பனுளா கெடியை பிடித்துக்கொண்டார். அது சேதி ருஸ்த்தும் கானுக்கு தெரிந்து அல்லியெதல் ஷாவுக் கெழுதி யனுப்பிவித்தார். அதைப் பார்த்து அல்லியெதல் ஷா மஹா விசனப்பட்டு பனுளா கெடியை சிவாஜிருஜா பிடித்துக்கொண்டபடியினுலே இனிமேல் நமக்கு சிவாஜிருஜாவை செயிக்கப் போகாது; வெகுருச்சியம் கட்டினுர்; வெகு சேனைகளை சேர்த்தார்;[17] நாமொருவ னுலே அவரை செயிக்கப்போகாது என்று டில்லியீசுவர[18] னுகிய அவரங்கசீபு

10. கரவீர் - சூரவீர் (டி3119)

11. சிறுதுபேரைகவுல்மேல்விட்டார் - டி3119இல் இல்லை

12. வைத்தார் - வைத்து (டி3119)

13. சேனைகள் - சனங்கள் (டி3119)

14. பனாலாவைப்பிடித்தது 1659 அக்டோபர்த் திங்கள் ஆகும் என்பர், தகாகாவ் (பக்.178). சர்தேசாய் (பக்கம் 130 - 131இல்) "Shivaji despatched Anaji Datto and captured Panhala the capital of the Western Adil Shahi on 28th November that is within 18 days of Afzal Khan's death."

15. விட்டுவிட்டு - விரட்டிவிட்டு (போ. வ. ச. பக். 45)

16. கஷ்டமாக - சங்கட்டமாக (டி3119)

17. வெகுசேனைகளை சேர்த்தார் - வெகுசனங்களும் சமாவாச்சுது (டி3119)

18. டில்லியீசுவரன் - டில்லிசுவான் (டி3119)

(க்கு) காகித மெழுதி அனுப்பினது என்ன வென்றால்: சஹஜிராஜாவுடைய மகன் சிவாஜிராஜா கேவலம் உன்மத்தனாகி உம்முடைய சீர்மைகளையும் நம்முடைய சீர்மைகளையும் கட்டினார். அதுவுமல்லாமல் துலுக்காளைக் கண்டால் கொண்ணுபோடுகிறான் மசுவிதி[19] யெல்லாம் இடித்துப்போடுகிறான். றத்தின சிம்மாசனம் ஒன்று பண்ணி அதின் பேரில் தான் உளுக்கார்ந்துகொண்டு தான் பாச்சாயி என்று சொல்லி கொள்ளுகிறான். தன்பேரால் சிவசகம் என்று நடப் பிக்கிறான்.[20] இப்படி உன்மத்தனாயிருக்கிறான். நம்முடைய வசத்தி லகப்படுகிற தில்லை. நம்முடைய பனாளாகெடியை கட்டிக்கொண்டார். ஆகையால் நீர் சேனைகள் அனுப்பிவித்தால் நம்முடசேனைகளும் கூடக்கூட்டி அனுப்பிவித்து சிவாஜிராஜாவை வசவிற்த்திக்கு[21] கொண்டு வருகிறேனென்று எழுதியனுப்பினார். அவரங்கசீபு அதை பார்த்துக்கொண்டு அனேகம் மொகல்சேனையை கூட்டி சுலுப்காற்கான்[22] என்கிற சற்தார் பின்னோடே அனுப்பிவித்தார். அந்த சற்தார் பனாளா கெடியை சவரக்ஷிக்கிற நிமித்தியம் அல்லியெதல்ஷாவா லனுப்பப்பட்ட ருஸ்த்தும்கானை கூட கூட்டிக்கொண்டு பனாள தேசத்துக்கு வெகு சன்னாகத் தோடே யிருவரும் வந்து சேர்ந்தார்கள். அப்போ சிவாஜிராஜா தன்சேனையுடனே வெளியிலே பிறப்பட்டு இவாளுக்கெதிராக புனா தேசத்தண்டையில் வந்து ருஸ்த்தும்கான் சேனைகள் சுலுப்க்கார்கான் சேனைக ளெல்லாத்தையும் அடிச்சுப் போட்டு[23] சுலுப்புக்காற்கானுடைய கொடியை பிடுங்கிக்கொண்டு சேனைகளை யெல்லாம் சின்னாபின்னமாகபோய் சுலுப்காற்க்கான் அபசெயத்தை அடைந்து ஓடிப்போய்விட்டான்.

ரெண்டாம்விசை சுலுப்காற்கான் தரியாகான் பத்தேகான் முஸேகான் இப்படிக்கொத்த சற்தார்கள் வெகு சேனைகளுடனே வந்தார்கள். அப்படியே அல்லி யெதல்ஷாவும் சேனைகளை அனுப்பிவித்தார். அதையு மழைப்பிவித்துக் கொண்டு வந்தார்கள். ரெண்டாம் விசையும் சிவாஜி ராஜா வெளியிலே பிறப் பட்டு சகல சேனைகளையும் சின்னாபின்னமாக துரத்தி அடித்துப்போட்டார். மறு

---

19. மசுவிதி - மசூதி (டி3119)

20. சிவாஜியின் பட்டாபிஷேகம் 6—1—1674இல் நடந்தது. (சர்தேசாய், பக்கம் 211) "Suddha Trayodasi day in the month of Jyaishta in the year 1596 of the Salivahana era" (Sen (1) Page 115). "In all letters and documents, the **Rajya bhishek era** preceded by the phrase "Svastisri" was always used from the day he ascended the throne" (Sen (1) Page 117). "The **coronation era** introduced by Shivaji was in use to the end of the Marathi Raj in 1818" - (Sardesai, Page 214 F. n.). மேற்கண்ட மேற்கோள்களால் அரசுகட்டில் ஏறிய ஆண்டு முதல் ஆட்சியாண்டு குறிக்கப்பட்டு வந்தது என்றும், அரசு கட்டிலேறியது கி.பி. 1674 என்றும் அறியவருதலின், சிவ சகம் என்று பெயரிட்டார் என்பதும், அஃபசல்கானுடன் போரிட்ட காலத்துச் செய்திகளோடு தொடர்பு படுத்தியமையும் பொருந்துமாறு தெரியவில்லை. அஃபசல்கானொடு போரிட்டது கி. பி. 1659 என்பது முன் கூறப்பட்டது.

21. வசவிருத்திக்கு – வழிக்கு (போ. வ. ச. பக். 46)

22. சுலுப்காற்கான் – சுலுவுகான் (டி3119)

23. "During these times the Bijapur government maintained an important military station at Miraj, the governor of which was a general named Rustom

படியும் சுலுப்காற்கான் சேனைகளை முஸ்தீப்பு பண்ணிக்கொண்டுவந்து அபசெயப் பட்டுப் போய்விட்டான். இப்படி பதினாறுவிசை அல்லியெதல் ஷாவுடைய சேனை யுடன் தன்சேனையுங் கூட்டிக்கொண்டு சுலுப்காற்கான் வந்து அபசெயப்பட்டு ஓடிப்போய் கடசியிலே ரெண்டு சேனைகளும் நாசமாய்ப் போய்விட்டுது.

இந்த சேதி மிஞ்சின செனத்தினாலேயும்[24] அல்லியெதல்ஷா எழுதினத் தினாலேயும் அபறங்கசீபுக்குத் தெரிந்து மெத்தவும் ஆக்கிரகத்தோடே இப்போ சிவாஜிருஜா எங்கேயிருக்கிறான் என்று கேட்டார். அப்போ கிட்டயிருக்கிற பேர்கள் சொன்னது: சிவாஜிருஜா செயவல்லி சக்கிருவதி பிருந்தத்திலே அநேக பாச்சாயி கோட்டைகள் கெடிகள் துற்க்கங்கள் செயித்து பனாளாகெடி யும் வாங்கி அதிலே வாசமாயிருக்கிறான். அவனுடைய சேனாபதி நெத்தோஜி யென்கிறவன் பாச்சாயி சீர்மைகளை கட்டிக்கொண்டு வருகிறான். அவன் அல்லியெதல்ஷாவுடைய சீர்மையிலே கட்டின தேசம்: கபித்தகாம், யதாகாம். மலகாம், கூடல், கோக்காக, பரற்காவ, உளணவாட்டு, கமலாபுரம், சரமகாம், இப்பல், துகதவாட்டு, மங்கள, ருயபாபி, சித்திரக்கூட, சந்தமிரையெட, குற ணிகா, சூறவாட்டு, காணுத, துகேயிரிகா, காக்கல், அரித்திரா, மிரிஜே, மாத்தில தார்வாட்டு, கறதமவாட்டு, காண்டகிரும், கோதகாம், க்ஷத்திரவாட்டு, அணுவசி, குணிகா இது முதலான ருச்சியங்களைக்[25] கட்டினார். அதுவுமல்லாமல் பாச்சாயி சீர்மை ஓரட்டுக்கும் கொள்ளையடிக்கிறதும் கொளுத்துகிறதும் யிப்படி பண்ணிக் கொண்டு வருகிறான்[26] நேத்தோஜி என்கிற சேனாபதி என்று சொன்னார்கள். அப்போ அபறங்கசீபு தன்னுடைய மாமனார் சாஸ்த்தாகான்[27] என்கிறவன் பிற காலே முசேகான்பட்டான், காதிகேவுட விட்டலதாசு மருஷ்ட்டயர், காட்டிகே ருஜா, சுலுத்தான் அமறசிம்ம மருஷ்ட்டர், கொக்காடே, யிமாபிறதீகான், சற்ஜேறவு மருஷ்ட்டா, ருஜலாகீண், ஸாதல்கான் பட்டான், ருமசிம்ம மருட்டி யர், காரதலதாகான், சீமுத கிஷ்ணருஜ யிந்த பேர்வழிகளை கூட்டி சாஸ்த்தா கானுக்கு உத்திரவு பண்ணினது என்னவென்றால், சிவாஜிருஜா மனுஷன் நேத் தோஜி என்கிறவன் பாச்சாயி தேசத்தில் பண்ணுகிற சுலும்புக்கு[28] நூறுபங்கு

---

**Jaman.** His military control extended from Kolhapur to Ratnagiri ...... As soon as he drew near the fort (Panhala), Shivaji sallied out and charged with all his cavalry. So complete was Rustum's defeat that he was driven beyond the Krishna and chased for many miles"- Takakhav, Pages 179-180)

24. செனத்தினாலேயும் - அதசேஷாளால் சொல்லப்பட்ட (டி3119); மிஞ்சின சேனைகளினாலேயும் (டி3762)

25. இப்பெயர்கள் போ. வ. ச. விலும், திருமுடி சேதுராமன் சுவடியிலும், டி3119, டி3762 ஆகியவற்றுள்ளும் சிறு வேறுபாடுகளோடுள்ளன.

26. "வருகிறான்" என்ற இடத்தில் டி3119இல் "பிரபலமாயிருக்கிறான்" என்றுளது.

27. சாஸ்த்தாகான் - Shaista Khan; இவர் அவுரங்கசீபின் தாய்மாமன்; தக்காணத்தில் முகலா யப்பகுதிக்கு ஆளுநர் ஆக நியமிக்கப்பட்டார். இவர் தக்காணத்தில் படையெடுத்தது 25-2-1660இல் (சர்க்கார் (1) பக். 79)

28. பண்ணுகிற சுலும்பு - அழிப்பு சோராபுரி (டி3119); தொந்தரவுகள் (போ. வ. ச. பக். 48)

அதிகமாக புஞ தேசத்திலே பண்ணி கொள்ளையடித்துக்கொண்டும் கொளுத்திக் கொண்டும் செயவல்லி சக்கிருவதி தேசத்தின் பேரிலே போய் அதுகளை யெல்லாம் பிடித்துக்கொண்டு பஞளாவுக்கு போய் சிவாஜிருஜாவை கண்டி யென்று சாஸ்த்தகானுக்கு[29] ஆக்கியாபிச் சனுப்பிவிச்சார். அவனும் உத்தரவுக்கு பத்துப்பங்கதிமாக சோராவரி[30] பண்ணிக் கொண்டு சீர்மைகளையும் கட்டிக் கொண்டு சக்கிருவதி பிருந்தத்துக்கு வந்தான். இப்படி சாஸ்த்தகான் பிறப் பட்டு வருகிற சேதி அல்லியெதல் ஷாவுக்குத் தெரிந்து பஞளாவிலிருக்கிற சிவாஜிருஜாவுக்கு இந்த சேதி தெரிந்தால் தான்தானே அவாளுக்கெதிரே போய் சாஸ்த்தாகானே வர ஒட்டாமல் அவடத்திலே தானே தடை பண்ணுவான் ஆகையாலவனே பஞளாவைவிட்டு வெளியே பிறப்படாமல் பண்ணவேணு மென்று கணனூல்[31] ஜோஹர்கானுக்கு[32] யெழுதினது: தாமும் வல்லிகானும் பாய்கான் கொற்படே முதலான சற்தார்களும் வெகுசேனைகள் றஸதுகளுடனே பிறப்பட்டு பஞளாவுக்கு வந்து யாவத்து சக்த்தி சண்டைபண்ணி பஞளா கெடியையும் சிவாஜிருஜாவையும் கைவசமாக்கிக் கொள்ளுகிறதென்று எழுதி அனுப்பிவித்தார். ஜோஹர்கான் அந்த காகிதத்தை பார்த்துக்கொண்டு அதி சீக்கிரமாய் சேனைகளை சற்தார்களை சரஞ்சாமான்களை[33] சேகரம் பண்ணிக் கொண்டு பஞளாமேல் பாளைய மிறங்கி முத்திக்கைப்[34] போட்டு அஞ்சுமாசம் மட்டுக்கும் சண்டைபண்ணிக்கொண்டு வந்தான். ஆகிலும் சிவாஜிருஜா அதைச் சட்டை பண்ணுமல் அலட்சியமாக எண்ணி சண்டை பண்ணிக்கொண்டு வந்தார்.

அவரங்கசீபா லனுப்பப்பட்ட ஸாஸ்தாகா னென்கிறவன்[35] சக்கிருவதி பிருந்தத்தில் சங்கிரும துற்கத்தை சுத்திக்கொண்டு சண்டை பண்ணிக்கொண்டு இருந்தான். அந்த சங்கிரும துற்கத்திலிருந்த சிவாஜிருஜாவினுடைய டாணைய தார்[36] சாஸ்தாகானே சட்டைபண்ணுமல் சண்டை பண்ணிக்கொண்டு யிருந் தார்கள். சிவாஜிருஜா பஞளாகெடியில் அஞ்சுமாசமாய் சொஹர்க்கானுடைய முத்திக்கையிலகப்பட்டு உயித்தம் பண்ணிக்கொண்டிருக்கிற வேளையில் ருஜா வுடைய தாயார் ஜிஜாவு சாயபு[37*] பிறதாபக்கெடியிலே கொஞ்சநாளிருந்து அதின்பிற்பாடு ருஜகெடிக்கு யேகோஜிருஜாவண்டையில் போயிருந்த ஆவு சாயபு[38*] இப்போருஜா முத்திக்கையிலகப்பட்டுக்கொண்டிருக்கிருர் அவடத்தில்

---

29. சாஸ்த்தாகான் - சாஸ்த்திரகான் (டி3119)

30. சோராவரி - சோராபுரி (டி3119) 31. கணனூல் - கர்நூல்

32. ஜோஹர்கான் - இவர் கர்நூலில் ஆண்டவர்; Siddi Jauhar என்று குறிக்கப் பெறுவர்; இவர் ஸலபத்கான் (Salabat Khan) என்ற சிறப்புப்பெயர் உடையவர்.

33. சரஞ்சாமான்களை - தூஞ்சாமான (டி3119)

34. முத்திக்கை - முற்றுகை (டி3119); முத்திகை (டி3762)

35. என்கிறவன் - புறப்பட்டவன் (டி3119)

36. சிவாஜிராஜாவினுடைய டாணையதார் - சீவாசிராசாவை தாணையத்தால் (டி3119)

37* முதல் 38* வரையுள்ள செய்தி போ.வ.சவில்லே (பக்.49); ஆனல் திருமுடி சேதுராமன் சுவடியில் "பிரதாப கெடத்தை விட்டு யேகோஜி ருஜாவிடம் வந்திருந்து" என்றுள்ளது.

சங்கிரும சக்கிருவதி கெடிகளே சாஸ்த்தாகானுனவன் முத்திக்கைப்போட்டுக் கொண்டிருக்கிருன் என்று யோசித்து, சிவாஜிருஜாவை பார்க்கவேணும், அதெ ஒரு பிள்ளை நமக்கிருக்குது, எப்படியும் அவரைப்பார்க்கவேணும். ரெண்டாவது கொஞ்சம் சேனைகளைக் கொண்டுபோய் ருஜாவுக்கு மொக்களா பண்ணவேணு[39] மென்கிற தயிரியமும் பண்ணிக் கொண்டு சிஜாவுபாயிசாயபு பனுளாவுக்கு போறத்துக்கு சித்தமானுர்கள். மறுபடியும் ஆவுசாயபு யோசனை பண்ணினது: சங்கிருமகெடி சக்கிருவதி துற்க்கம் சாஸ்த்தாகான் கையில் அகப்பட்டாப்போலே காணுது. புணு சாஸ்வளி சூப்புகாவ்[40] இதுகளும் மொகல் கையிலகப்பட்டுது. சிவாஜிருஜாவும் பனுளாவிலே முத்திக்கையிலே அகப்பட்டுக் கொண்டபடியினுலே தாமே[41] போய் விடுதலை பண்ணவேணு மென்று நிஷ் கர்சை பண்ணுர்கள். அப்போ ருஜாவின் சேனுபதி நெத்தோஜி என்கிறவன் இலால்கானேடே கூடவந்து சாஷ்டாங்கமாக தெண்டனிட்டார்கள். ஜிஜாவு சாயபு[42] ரெண்டு பேரையும் பாத்து, என் குமாரரான உங்கள் யெஜமான் பனுளாகெடியிலெ சத்துரு வோடெ சண்டை பண்ணுகிருர்; நீங்கள் ரெண்டு பேரும் வெட்க்கமில்லாமல் உங்கள் சீவனை பெரிதாக யெண்ணி பயந்து ஓடி வந்து விட்டபடியினுலே ஞன்போய் யென் குமாரனை சத்துரு மத்தியிலே யிருந்து விடுதலை பண்ணுகிறேனென்று சொன்னதுக்கு சேனுபதி சொன்னது: அம்மாள் தங்களுடைய ஆசீர்வாதத்தினுலே ருஜா அஸக்காய சூரர்[43] அவருடைய உத்திர வின் பேரிலே விசைய கெடியை செயிச்சுக்கொண்டு இந்த பிருந்தத்தில் மொகல் சேனைகளோடே சண்டை பண்ண வந்தோம்; தாங்கள் இவடத்திலே யிருந்து யெங்களை சவரக்ஷணை பண்ண வேணும்; பனுளாவுக்கு போகவேண்டியதில்லை; போனுல் நம்முடைய சேனை சமற்த்தாளாயிருக்கிற முகல் சேனையை செயிச்சு கெடி துற்க்கங்களை வாங்க மாட்டார்கள்; ஞங்களே யெஜமான் அண்டையில் போறுமென்று ருஜாவின்[44] தாயாருடைய உத்தரவு கெட்டுக்கொண்டு பனுளாவுக்கு பிறப்பட்டார்கள். அப்போ சேனுபதி சேனைகளை அழைத்துக் கொண்டு வருகிற சேதி ஜொஹர்கான்[45] கேழ்விப்பட்டு கொஞ்சம் சேனைகளை முன்னுலே அனுப்பி வழியிலே மறிச்சு கொள்ளச் சொல்லி அனுப்பிவிச்சான். இந்த ரெண்டு சேனைகளுக்கும் வெகுசண்டையாய் அந்த சண்டையிலே இலால்கானுடைய மகன் மஹா பராக்கிறமம் பண்ணி காயமும்பட்டு காபிருவானுன். அவனை துலுக்காள் பிடிச்சுக் கொண்டு போயிவிட்டார்கள். சேனுபதிக்குத் தெரிஞ்சும் விடுவிக்கறத்துக்கு இல்லாமல் போய்விட்டுது. இந்த சேதி ருஜா கேழ்விபட்டு விசனத்தினுலே நித்திரை பண்ணிக்கொண்டிருக்கிறபோது துளஜா[46] பவானி சொற்பனத்தில் வந்து

---

39. ருஜாவுக்கு மொக்களா பண்ணவேணும்-ராஜாவை விடுவிக்க வேண்டும் (போ.வ.ச.பக்.49)

40. புணு சாஸ்வளி சூப்புகாவ்-புனு பிராந்தியத்தைச் சேர்ந்த ஸரல்வி ஸுப்காம் (போ. வ. ச. பக்கம். 49)

41. தாமே — நானே (டி3119) 42. ஜிஜாவு சாயபு - சீசா தாயார் (டி3119)

43. அஸக்காய சூரர் - ஹஸகாயசூரர் (டி3762); அஸகாயசூரர் (டி3119)

44. ருஜாவின் - சீசாவின் (டி3119) 45. ஜொஹர்கான் - சொஸ்தகான் (டி3119)

46. துளஜா — துளசி (டி3119)

சொன்னது: உன்னுடைய தாயார் ராஜகெடியில் உன்னைப் பார்க்கவேணு மென்றுரொம்பவும் கஸ்த்திப்படுகிறாள். இப்போதானே தாயாருடைய பேட்டிக்கு கொஞ்சம் சேனைகளைக் கூட அழைச்சு கொண்டுபோ. போற வேளையில் சத்துருக்களை மயங்கடிக்கிறேன். ஜோஹர்கான்[47] ஒரு காரணத்தினாலே நாசத்தை அடையுவானென்று சொல்ல, ராஜா முழிச்சுகொண்டு ஸ்ரீதேவிக்கு சாஷ்ட்டாங்கமாக தெண்டம்பண்ணி புனா பிருந்தத்தைத் துலுக்காள் ஆக்கிறமிச்சுக் கொண்டிருக்கிற படியினாலே நாமிங்கேயிருக்கிறது விஹித மல்லவென்று யோசனை பண்ணிதிரும்பக் பாஸ்க்கர்[48] யென்கிறவனை பனாளாவிலெ வைச்சுப் போட்டு தேவியின் உத்தரவுபடிக்கு ஜொஹர்கானுக்கு, நான் ராஜாகெடிக்குப் போறென்; யென்னுடைய சேனை உன்னுடனே சண்டைபண்ணும்; இல்லாவிட்டால் உம்முடைய சேனை நம்முடைய சேனை[49*] மைதானத்திலே நிறுத்து; சண்டை பண்ணுவோம்[50*] என்று சொல்லி அனுப்பிவிச்சார். அதை ஜொஹர்கான் கேட்டும் கேளாமலிருந்தான்.[51] அதின் பிற்பாடு ராத்திரி சாமத்துக்கு மேல் சுளா[52] கால்தளத்தோடே பேரி[53] அடிச்சுக்கொண்டு சத்துருக்கள் இறங்கியிருக்கிற இடத்துக்கு சமீபத்து மாற்கமாக போனார். அந்த சப்தத்தை சத்துருக்கள் மேக கேற்சனை என்று இருந்தார்கள். அப்போ கடினமாகயிருக்கப்பட்ட காட்டு மாற்கமாய் அஞ்சுகாதவழிபோய்[54] விசாலகெடிக்கு[55] போய் சேர்ந்தார். அந்த சேதி சொஹர்கான் கேழ்விபட்டு நாம் சுத்திக்கொண்டு இருக்கச்சேயும் எப்படி தகா பண்ணி[56] போனானென்று கோபமாய் சேனாபதி மஹகூதுகானுக்கு[57] கொஞ்சம் சேனைகளை குடுத்து ராஜாவை பிடித்துக்கொண்டு வரச்சொல்லி அனுப்பிவித்தான் அந்த மஹகூதுகான் அங்கேயிருந்து போறபோது வழி

---

47. ஜோஹர்கான் - சொஸ்தகான் (டி3119)

48. திரும்பக் பாஸ்க்கர் - திரியம்பக பாஸ்கர்; ரகுநாத் பல்லால் என்பர் தகாகாவ் (பக். 189)

49.* முதல் 50 *வரை டி 3119இல் "இரண்டு மைதானத்திலே நிறுத்தித் தேர்ந்த யுத்தம் பண்ணுவோம்" என்றுளது.

51. சிவபாரதத்தில், பக்கம் 57இல் பின்வருமாறுளது:– "இல்லாவிட்டால் நம்மோடு தானே யுத்தம் பண்ணவேண்டு மென்று உன் மனதிலே யிருந்தால் இந்தப் பனாளாகெடிக்குச் சமீபமாய் நீயும்வா. ... நானும் வருகிறேன். இரண்டு பேருடைய சேனையையும் தூர வைத்துவிட்டு நீயும் நானுமாய்க் கையிலே கத்தி எடுத்துச் சண்டை பண்ணுவோம் என்று சொல்லியனுப்பியதற்கு இந்தச் சேதி சோகற்கான் கேட்டுக் காபிரிப்பட்டுப் பயந்து கொண்டு பதில் சேதி சொல்லாமல் இருந்துவிட்டான்" (பக். 57). "தளங்களை யொதுக்கி நாமுபயத்திராள் மாத்திரம் துவந்த யுத்தம் செய்வோம்" என்று சொல்லியனுப்பிவித்தார் (திருமுடி. பக்கம் 175)

52. சுளா - 600; சுடு – 60 (டி3119); அறுநூறு (போ. வ. ச. பக். 51)

53. பேரி - பேரிகை (டி3119); தேரி (போ. வ. ச. பக். 51)

54. அஞ்சுகாதவழிபோய் – ஐந்து ஊர்களை மிகக் கடினத்துடன் கடந்து (போ. வ. ச. பக். 51) திருமுடி சேதுராமன் சுவடியிலும் ஐந்து காதம் என்று இருக்கிறது (பக்கம் 177)

55. விசாலைகெடி - விசால்கட் (Vishalgad or Fort tremendous தகாகாவ் பக். 179). இங்ஙனம் சென்றது 13-7-1660இல் (சர்க்கார் (1) பக். 77); பன்னாவிலிருந்து விசால்கட் 27 கல் தொலைவினது (அவுரங்கசீபு, பாகம் IV பக். 38)

56. தகாபண்ணி - ஏமாற்றிவிட்டு (போ. வ. ச. பக். 51)

57. "அஃப்சல்கானின் மகன் ஃபஜில் முகம்மதுகான், ஜோஹர்கானின் மகன் சித்தி அஜீஸ் ஆகியோர் துரத்திச்சென்றனர் (தகாகாவ் பக். 187; சர்க்கார் (1) பக். 77)

களிலே அவன் சேனைகள் வெகுசாய்[58] புதைந்து போச்சுது.[59] கொஞ்சம் சேனைகளுடனே விசால கெடிக்குப் போய் சேர்ந்தான். இதுக்கு முன்னே பல்லிவனத்து யேசவந்து ருஜா[60] ஸ்ரீங்காரபுரம் சூரிய ருஜா இவாள் ரெண்டுபேரும் ஜோஹற்கானுடைய உத்தரவின் பேரிலே விசால கெடியில் சண்டை பண்ணி அபசெயப்பட்டு யிருந்தவர்கள், மஹசூதென்கிற சேனபதி வந்த சேதி[61] கேழ்விப்பட்டு, அவன்பேட்டி வாங்கி மூணு பேருமாய் விசால கெடியை சுத்திக்கொண்டார்கள். அப்போ ருஜா தம்முடைய சொந்த சேனைகளைக் கூட்டிக் கொண்டு உயித்தம் பண்ணி சத்துருக்களை செயித்து துரத்திப்போட்டு அவடம்விட்டுப் புறப்பட்டு ருஜகெடிக்கு வந்து சேர்ந்து தம்முடைய தாயாருக்கு சாஷ்ட்டாங்க நமஸ்க்காரம் பண்ணி நடந்த வற்தமானங்களெல்லாம் சொல்லி ஒருநாள் அங்கேதானே யிருந்தார். மஹசூதனும்[62] ரெம்பவும் அவமானப்பட்டு பிருணனுடனே ஜோஹற்கான்[63] கிட்ட வந்து சேர்ந்தான். இந்தசேதி டில்லியீசுவர[64] னுடைய அம்மான் சாஸ்தாகானும் மத்த பேர்களும் கேழ்விப்பட்டு தங்களுடைய மனோ சித்திப்படி ஆகிறதில்லையென்று விதனப்பட்டார்கள்.[65] இப்படியிருக்கிற சமையத்திலே சிவாஜிருஜா ஆலோசனைபண்ணி[66*] பனாளா கெடியிலே யிருக்கிற திரும்பக் பாஸ்கருக்கு எழுதின வயணம்[67*]. பனாளாகெடியை துலுக்காள் வசம் பண்ணிப்போட்டு தாம் இவடத்துக்கு பிறப்பட்டு வரவும்; அந்த கெடிக்கு சமானமா இருக்கிற கெடிகளை அல்லியெதல்ஷாவண்டையிலிருந்து பிடித்துக்கொள்ளுவோம்; ரெண்டு யிடத்திலே உயித்தம் பண்ணக்கூடாது; ஆகையா[68] லிதை நிற்செயமாக[69] எண்ணி சுறுக்கிலே பிறப்பட்டு வரவேணுமென்று சொல்லி அனுப்பிவிச்சத்தின் பேரிலே திரும்பக பாஸ்கர் ருஜாவுடைய உத்திரவின்படியே அந்த கெடியை ஜோஹர்கான்[70] சுவாதீனம் பண்ணிப்போட்டு அவன் பேட்டியும் வாங்கிக்கொண்டு அவன் கிட்ட யிருந்து வெகுமதிகளையும் வாங்கிக்கொண்டு ருஜாகிட்ட வந்து சேர்ந்தார். இந்த சமையத்திலே அல்லியெதல் ஷாவுக்கு தோணினது: ருஜாகிட்ட ஜோஹர்கான் லஞ்சம் வாங்கிக் கொண்டு விட்டுவிட்டானென்று அனுமானப்பட்டு ஜோஹர்கானுக்கு எழுதின[71] வயணம்: நீ ருஜாகிட்ட லஞ்சம் வாங்கின

---

58. அவன் சேனைகள் வெகுசாய் - சேறுகளிலே வெகுசேனைகள் (டி3119)
59. "It was the hottest part of the year. The streams had all dried up" என்றமை (தகாகாவ் பக். 189) இங்குக் கருதுக
60. யேசவந்து ருஜா - ஜஸ்வந்த்சிங் (போ. வ. ச. பக். 51)
61. சேதி - வர்த்தமானம் (டி3119) 62. மஹசூதனும் - மோகசூதனும் (டி3119)
63. ஜோஹர்கான் - சோரகான் (டி3119) 64. டில்லியீசுவரன் - டில்லிசுவான் (டி3119)
65. ஆகிறதில்லையென்று விதனப்பட்டார்கள் - ஆகிறத்தில் சமுசயமாச்சுது (டி3119)
66* முதல் 67* வரையுள்ளவை டி 3119 இல் இல்லை
68. உயித்தம் பண்ணக்கூடாது ஆகையால் - யுத்தம் பண்ணுகிறது கூடாத காரியமானபடியினாலே
69. நிற்செயமாக - நிச்சயமாக (டி3762; டி3119)
70. ஜோஹர்கான் - சுகார்கான் (டி3119) 71. எழுதின - கடுதாசி யெழுதின

பணத்தை குடுத்தனுப்பிவித்தால் நல்லது; இல்லாவிட்டால் நீ அதுக்கு தக்கின பிருயசித்தம் பண்ணப்படுவாயென்று எழுதி யனுப்பிவித்தான்[72]. அந்தக்கடுதாசியை ஜோஹர்கான் பார்த்துக்கொண்டு மன வேசாறலாய்[73] தன்னுடைய சேனையை கூட்டிக்கொண்டு கற்னுபுரத்துக்கு[74] போய் சேர்ந்தான். அல்லியெதல்ஷாவானவர் நம்முடைய பயமில்லாமல் பிறப்பட்டுப் போய்விட்டான் என்கிற திவேஷத்தினுலே அவனுக்கு தெரியாமல் படிக்கு சிறுது மொகல் சேனைகளை அனுப்பிவிச்சான். அவாள் ஜோஹர்கானுக்கு விஷத்தைக் குடுத்து கொண்ணுபோட்டார்கள்[75]. சக்கிருவதி சங்கிரும துற்கம் இதுகளை துலுக்காள் சண்டைபோட்டு வாங்கின சேதியை ருஜ கெடியிலே யிருக்கிற சிவாஜி ருஜா கேழ்விப்பட்டு மந்திரியை கூப்பிட்டு மொகல் சேனைகள் பேரிலே சண்டைக்கு போறதுக்கு அனேகம் திரவியந் தேவையாயிருக்கிற படியினுலே சிறுது இராட்சியத்தை செயித்துக்கொண்டு வரவேணுமென்று சொன்னதுக்கு மந்திரி பிறத்தி யுத்தாரமாகச் சொன்ன தென்னவென்ருல், மஹாருஜா அவர்கள் பண்ணின யோசினை உத்தமம்; சண்டைக்குப் பிறப்படவேணும்; டில்லிசுவானுடைய அம்மான் இப்போ தாங்கள்[76] ராசகெடியிலே வந்த சேதி கேழ்விப்பட்டு சஹியபறுவதத்துக்கு சமீபமாக யிருக்கிற நம்முடைய ருச்சியங்களை ஆக்கிறமிச்சுக்கொள்ளவேணுமென்று யோசிச்சு கரதலபாகான்[77] என்கிறவனேடெ சிறுது சேனைகளைக் கொடுத்து அனுப்பிவிக்கிறதுக்கு யெத்தினம் பண்ணிக்கொண்டிருக்கிறன். ஆகையால் அந்தவழியை மறிக்க வேணுமென்று சொன்னத்துக்கு அதை ருஜா கேட்டு தாம் கொஞ்சஞ் சேனைகளுடனே செயவல்லி பிருந்தியத்துக்கு போய் கணவாயிக்கு கீழே காட்டிலே சேனைகளை பதுங்கவைச்சுக்கொண்டிருந்தார். இப்படியிருக்க காறதலபுகான், அமறசிம்மன், ருஜ வியாக்கிறி, ஜெஸவந்து, சூரியருஜா, கொக்காட்டே, மித்திரசேனன் இவாளெல்லாரும் தங்கள் தங்கள் சேனைகளுடனே கூட பிறப்பட்டு பீமாபுரம், கல்லியாணபுரம், பணவல்லிப்புரம், கக்ஷபதேசம் இதுகளெல்லாத்தையும் சுவாதீனம் பண்ணிக் கொண்டு லோகபறுவதத்தின் காட்டு மாற்கமாய் சஹிய[78] பறுவதத்துக்குக் கீழே யிறங்கி அதின் கீழே பிறத்தியார் சேனைகளை வைத்துக்

---

72. "They (envious courtiers) circulated a rumour that Sidi had been corrupted by Shivaji, that his escape was due to a collusion" (Takakhav Page 191).

73. மனவேசாறலாய் - மனத்தாங்கலாய் (டி3119)

74. கற்னுபுரம் - கன்னபுரம் (டி3119) ; கர்நூல்

75. "Sidi Johor ...... was assassinated by his own soldiers" (Takakhav, Page 173; Duff, Page 99)

76. "தாங்கள்" என்பதற்குப்பிறகு "புனப்பிராந்தியத்திலே" என்பது டி3119இல் இல்லை

77. கரதலபாகான் - கார்தலப்கான் "Kār Talab Khan, an Uzbak, who had attained to the rank of a 4-Hazari as early as 1658"- (Sarkar (1) Page 83)

78. சஹிய-சைகாம் (டி3119); சிம்ம (போ.வ.ச.பக். 53)

கொண்டிருக்கிற[79] சேதி தெரியாமல் அந்த காட்டிலே யிறங்கி ரெண்டு மூண்டு[80] நாள் வாசமாக யிருந்து அப்பாலே போய் சாதிக்கவேணுமென்று பிறப் பட்டார்கள். அப்போ சிவாஜிருஜா யெதிரேவந்து மறித்தார். இந்த ரெண்டு தளத்திலே[81] யிருந்த ருஜாக்களுடைய சேனைகள் சூழ்ந்து கொண்டு உமற்கா[82] மென்கிற காட்டிலே வெகு சண்டை பண்ணினார்கள். ரெண்டு சேனைகளும் உயித்தம் பண்ணுகிறபோது துலுக்காளுடைய சேனைகளுக்கு சண்டைபண்ண சாமார்த்திய மில்லாமல் போச்சுது. அப்போ ருஜவியாக்கிறி யென்கிறவன்[82அ] சற்தார் காறதலப்கானைப் பாத்து டில்லிசுவானுடைய சேனைகளை ஓரட்டுக்கும் இந்தக்காட்டிலே அதம் பண்ணிப்போடுகிறத்துக்கு நினைத்திருக்கிறாய்; சிவாஜி ருஜா உன்னை பிருணனோடே விடுகிறதில்லை; ஆகையாலவரைச் சரணமடைந்து இவடத்திலெ யிருந்து தப்பிப் போகவெணு மென்று சொன்னத்துக்கு அது யொக்த்தந்தானென்றெண்ணி கார்தலபாகான் தன்னுடைய வைக்கிலை ருஜா கிட்ட அனுப்பிவித்து பரவசம் வாங்கிக்[83] கொண்டு தன்னுடனே கூட வந்திருக் கிற ருஜாக்களையும் தன்னுடைய சற்வசொத்தையும் ருஜாவுக்குக் கொடுத்துப் போட்டு[84] சாஸ்த்தாகான்[85] கிட்ட பிறப்பட்டுப் போய்விட்டான். அதின் பிற் பாடு சிவாஜி ருஜா மிகவுஞ் சந்தொஷமாகி சத்துருக்கள்க்கொடுத்த சேனையுந் திரவியங்களையும் வாங்கிக்கொண்டு தன்னுடைய மந்திரி நெத்தோஜி யென்கிற வனுடனே யோசினை பண்ணி மறுபடியும் துலுக்காளுடைய ருச்சியத்தை சுவா தினம் பண்ணிக்கொள்ளுகிற நிமித்தியம் தால்பியபுரத்துக்குப்[86] போய் அந்த தேசத்தை சுவாதினம் பண்ணிக்கொண்டு பல்லிவன[87] பிருந்தியத்துக்குப் போனார்க ˙. அந்த தேசத்திலே ஸேசவந்து ருஜா[88] முன்னாலே சிவாஜி ருஜா வுடைய பயத்தினாலே[89] ஸ்ரீங்கார்புரம் பிறபாவளி பட்டணத்தின்[90] பிறபு சூரிய

---

79. வைத்துக்கொண்டிருக்கிற - அடைத்துக்கொண்டுயிருக்கிற (டி3119)

80. ரெண்டுமூண்டு-ரெண்டுமூணு (டி3762) 81. தளத்திலே-தானத்திலே (டி3119)

82. உமற்காம் - உம்பர்காம் (போ.வ.ச.பக். 54); Umberkhind (சர்க்கார் (1) பக். 83)

82அ. "ருஜாவியாக்கிறணன் என்கிற பெண் பிள்ளையானவள்" என்று திருமுடிசேதுராமன் சுவடி யில் காணப்படுகிறது (பக். 188). இப்போரில் கார்தலப் கானுடன் உதவிக்கு வந்தவர்களுள் ஒருவராக பீராரில் மாஹூருக்குச் சாகீர்தாராயிருந்த உதாஜிராமின் வீரம் பொருந்திய மனைவி (கைம்பெண்) ராய் பாகினி (Rai Baghini) ஒருவர் என்று தெரிகிறது (சர்க்கார் (1) பக்கம் 83)

83. பரவசம்வாங்கி - நம்பிக்கைபெற்று (போ.வ.ச.பக். 54)

84. "His (Kar Talab's) army seemed doomed to perish from thirst, with-out having the power to move. In despair he gave up all the property in his camp and paid a large ransom to Shivaji and bought a safe retreat for the army (3rd February, 1661) (Sarkar (1) Page 84)

85. சாஸ்த்தாகான் - சாஸ்திரகான் (டி3119); (Shaistakhan)

86. தால்பியபுரம் – தாலபீபுரம் (டி3119); தாளியபுரம் (போ.வ.ச.பக். 54)

87. "Pallivana is the Sanskritized form of palavna, a town situated 12 miles north of Dapoli (Sarkar (1) Page 84 F. n.)

88. ஸேசவந்துருஜா - செயவந்திராசா (டி3119) 89. பயத்தினாலே - இது டி3119இல் இல்லை

90. "Prabhavali is just below Vishalgarh to the south west"- (Sarkar (1) Page 84, F.n.)

ருஜாவண்டையில் ஓடிப்போயிருந்தான்[91]. அந்த ருஜாவும் அவனை சவரக்ஷணை பண்ணிக்கொண்டு வந்தான். அந்த ருஜாக்கள் முன்னுலே குத்தவாளிகளாக யிருந்தார்கள். அந்த குத்தம் பிறத்தியாராலே ஏவப்பட்டு செய்தபடியினுலே அந்த குத்தத்தை எண்ணுமல் தயவு பண்ணிவிட்டு சித்திரா புளி துற்கத்துக்குப் போய் அவடத்திலே ஸ்ரீ பரசுராமமூற்த்தியுடைய தெரிசினம் பண்ணி[92] வெகு பூசைகளை பண்ணி அந்த சுவாமியினிடத்திலிருந்து வரத்தை அடைந்து அந்த பிருந்தத்து ருஜாக்கள் குடுத்த சம்பத்துகளையும் வாங்கிக்கொண்டு பிரு மணுளுக்கு வெகு தானதற்மங்களைப் பண்ணி சங்கமேஸ்வரத்துக்குப்[93] போனுர். அவடத்திலே யிருக்கும் மிலேச்சாள் முன்னுலேதானே ருஜா வுடைய பயத்தினுலெ ஓடிப்போயிருந்தார்கள்.[94] அந்த தேசமெல்லாம் சுவாதி னம் பண்ணிக்கொண்டு அவடத்திலே யிருக்கிறபோது நீலகண்ட ருஜாவினு டைய பிள்ளை பிரூமண மலசூர் வமிசத்திலுண்டான தானசித்தாசு[95] என்கிற வனேடேகூட ருஜாவுடைய அனுமதியினுலே சங்கமேசுவரத்துக்கு வந்து சேர்ந் தார்கள். அதுக்குப் பிற்பாடு மகாருஜாவானவர் சூரியருஜாவின் பேரிலே தயவு பண்ணி அவருக்கு அரிகாரன் அண்டையில்[96] சொல்லி அனுப்பிவித்து சங்கேமஸ் வரத்திலே நம்முடைய சேனைகள் இருக்கிறத்தை உம்முதாக எண்ணிக்கொண்டு துற்புத்தி ஒன்றும் பண்ணுமலிருமென்று சொல்லி அனுப்பிவித்து[97] தமக்கு சரண மாய்வந்த ருஜாக்களுக்கெல்லாம் அபையம் கொடுத்து ருஜபுரத்திலே வந்து சேர்ந்து அங்கேதானே யிருந்துகொண்டு[98] சமுத்திரக்கரை ஓரங்களிலே யிருக்கிற வெள்ளக்காறர்கள் தீபாந்திரங்களிலே யிருக்கிறவாள் கப்பல் வியாபாரம் பண்ணிக்கொண்டிருக்கிறவாள் சாமந்து[99] ருஜாக்கள் இவர்களை யெல்லாம் சுவாதினம் பண்ணிக்கொண்டு அவர்களிடத்திலிருந்து அனேகந் திரவியங்களை வாங்கிக்கொண்டு[100] ருஜபுரத்திலே யிருக்கிறபோது சிவாஜிருஜாவுக்கு மொஹ

---

91. "Jaswanta Rao, the Rajah of Pallivana who had loyally helped Jauhar during the Panhala campaign took refuge with Surya Rao the Rajah of Prabhavali, its chief town being Shringarpur"- (Sarkar (1) Page 84)

92. "He performed the pilgrimage to the shrine of Parashuram and made large gifts to the Brahmans" - (Sarkar (1) Page 85)

93. சங்கமேசுவரத்துக்கு - சுகமே துருகத்துக்கு (டி3119)

94. "The Muslim governor of Sangameshwar had fled away, and so did all the inhabitants who had anything to lose"-(Sarkar (1) Page 85)

95. 'தானசித்தாசு' என்ற பெயர் போ. வ. ச. வில் இல்லை (பக். 55). "Shivaji sent Pilaji Nilkanth and Tanaji Malasure" (Sarkar (1) Page 85)

96. அரிகாரன் அண்டையில் - அரிக்காரருடனே (டி3119); அரிக்காரர் - ஒற்றர் (Harkara)

97. "He (Shivaji) ordered Surya Rao to support this detachment"- (Sarkar (1) Page 85); (சூரியராவ், சிருங்கார்பூர் அரசர்)

98. ராஜபுரத்தையடைந்தது 3-3-1661 ஆகும் (சர்க்கார் (1) பக். 85)

99. சாமந்து - சமத்த (டி3119).

100. "He (Shivaji) plundered the English factory and kept under restraint six of the E. I. C' s officials. He collected a large plunder from Rajapur and appointed his own administrators at the port" (Sardesai, Page 138).

ராக்களால்[101] நிறைந்திருக்கப்பட்ட கெடாரங்கள்[102] திருஷிக்குப் பட்டத்தையும் எடுத்துக்கொண்டு அந்தந்த தேசாதிபதிகள் கிட்ட இருந்து வந்த சாமானுகள் பொன் வெள்ளி யெகு[103] யீயம் தாம்பரம் யிரும்பு காரீயம் வெண்கலம் மேற்கு சமுத்திரத்து பொன்மணல் முத்து பச்சை பதுமருகம் வச்சிரம் பழகம்[104] அரக்கு கடகபாத்திரம்[105] மிறுகத்தின் கொம்புகள் முதலானது, சாமரம்,[106*] சிகக்கிறீவ, சாக்ஷசி, யாமுனே இந்த மூணு வஸ்த்துக்களும், அஜோமது, பாவலீக்க, சசீரக்க, லோத்திறகு, குங்குலியம், பாவசிகி, மஞ்சிஷ்ட, ஞகசம்பலம், றசம், அரிதாளம், கெந்தகம், மனசிலே, கெந்தஸமம், கொரோசனம், அப்பிறகம், பச்சனுபி முதல் கொண்டு விஷவஸ்த்துக்கள் விஷபரிஹார வஸ்த்துக்கள், சரிகை வஸ்த்திரங்களும் தினுசுவாரி சாலுவைகளும், பட்டுதினுசு வஸ்திரங்களும், மயிர்ஞ லுண்டான வஸ்த்திரங்களும் வாங்கிக்கொண்டு தம்முடைய யெல்லா துற்க்கங்களிலேயும் இதுகளே வைச்சுப் போட்டு அப்பால் சடவல்லி, சமத்தளே, ஹரிசரி நைர்வனுத, குந்தவட்ட, கேளி வல்லி, கசேளிகா, நாந்தவாட, பிருமசுதா, மனசு பிலவ வட க்ஷராபட்டன இப்படிக்கொத்த தேசத்து ருஜாக்களண்டையிலிருந்து திரவியங்கள் சேனேகளும் வாங்கிக் கொண்டு சகல தேசங்களேயும் சுவாதினம் பண்ணிக் கொண்டு ருசபுரத்திலெயிருந்தார்.[107*] இப்படியிருக்கிற வேளேயிலே அல்லியெதல் ஷா சிவாஜிருஜாவுக்கு சல்லியம் பண்ணவேணு மென்று சூரிய ருஜாவுக்கு யெழுதி அனுப்பிவித்ததின் பேரிலே அவன் சங்கமேஸ்வரத்தி லிருந்த சேனேகளே ருத்திரியிலே வந்து சூழ்ந்துகொண்டான்.[108] அவனே மல்லசூர னென்கிறவன்[109] தன்னுடைய சாமர்த்தியத்தினுல் அற்புதமான உயித்தம் பண்ணி அடித்து துரத்

---

101. மொஹராக்கள் — தங்கநாணயங்கள் (கே. எம். வே. பக். 152-3).

102. கெடாரங்கள் - பாத்திரங்கள்; கிடாரங்கள் (டி3119); (போ. வ. ச. பக். 55)

103. யெகு - எஃகு (போ. வ. ச. பக். 55); எகு (டி3119)

104. பழகம் - பவழம் (டி3119)

105. கடகபாத்திரம் - கை ஆபரணங்கள் (போ. வ. ச. பக். 55)

106* முதல் 107* வரையிலும் உள்ளவை பின்வருமாறு போ. வ. ச. வில் (பக். 55 – 56) தெளிவாகவுள்ளன:-

மயில் தோகை, தூரதிருஷ்டிக் கண்ணாடிகள், இன்னும் மருந்துச் சரக்குகளும், வாசனைத்திரவியங்களுமாகிய ஓமம், வெட்டிவேர், சவ்வியம், சிவப்பு லோத்திரம், குங்கிலியம், குந்துருக்கம்பிசின், மஞ்சிட்டி, சிந்தூரம், பாதரஸம், அரிதாரம், வேறு சிலவாசனைச் சாமான்கள், வாணகந்தகம், கோரோசனை, அபிரேகம், பச்சைநாபி இன்னும் வேறு சில விஷ வஸ்துக்களும், விஷ பரிகாரமான வஸ்துக்களும், ஜரிகை வஸ்திரங்களும், சால்வைகளும் பட்டு வஸ்திரங்களும் இவற்றைத் தவிர அநேக அழகிய நுட்பமான சாமான்களும் அவர்களிடம் பெற்று அவைகளைத் தன் பாதுகாப்பின்கீழ் வைத்தார். அதன் பிறகு சடவல்லி, சமதள், ஹரிச்சரி, வைகநாத், குதவட்கேலா, வல்லீகம், சாண வல்லிகா, நாதவாட் இந்தப் பிரதேசங்களில் இருந்தும், தாவே, சாம்வாலா, வடசார்பட்டணம் இந்த ராஜ்யங்களின் அரசர்களிடமிருந்தும் கப்பத்தொகையைப் பெற்று, எல்லாத் தேசத்தையும் தன்வசப்படுத்திக்கொண்டு ராஜபுரத்திலேயே இருந்தார்.

108. "Under pressure from his sovereign Adil Shah the Raja of Shringarpur had made a night attack on Sivaji's detachment in Sangameshwar but had been repulsed by the gallant Tanaji Malusare"- (Sarkar (1) Page 85)

109. மல்லசூரன் - Tanaji Malusare

திப் போட்டான். உடனே சிவாஜிராஜா ருஜாகெடியை விட்டு சங்கமேஸ்வரத் துக்கு வருகிருரென்று சேதி கேழ்விப்பட்டு மல்லசூர் பிறமுகான் ருஜாவுக்கு யெதிர்க் கொண்டு போய் பேட்டி வாங்கினுர்கள். அப்போ நீலகண்ட ருஜா வுடைய பிள்ளை[110] தானசித்தனுடைய[111] சாமற்த்தியத்தை மஹருஜாவுக்கு தெரிய ப்படுத்தினுன். அப்போ ருஜா அதைக்கேட்டு அவருக்குஞ் சகலசனத்துக்கும் பெகு மதிகள்பண்ணிசூரியருஜா[112] பேரிலே யிருந்தகோபத்தையும் பொறுத்துமறுபடியும் தம்முடைய அரிக்காறருடனே சொல்லியனுப்பிவித்தது: ஞம் பல்லிவனதேசம் வாங்கப்போருேம்; நீ வெகு குத்தவாளியாக யிருந்தாலும் அதை மன்னித்து[113*] உனக்குயென்ன பாவசம் வேணுமோ அதுகள் எல்லாம் முன்னேயே கொடுத்திருக் கிருேம்; நீர் சீக்கிரம் பிறப்பட்டு நமக்கு சகாயம் வந்து சேருமென்று சொல்லி அனுப்பிவித்தார்.[114*] அதை சூரியருஜா கேட்டு தான் வாருே மென்று சொல்லி அனுப்பிவித்தான். ஆனுல் போகயில்லே. ருஜா பல்லிவனத்துக்குப் போய் அந்த ருஜியம் கெடிகள் கோட்டைகள் யெல்லாம் தம்முடைய சுவாதீனம் பண்ணிக் கொண்டு அவடத்திய சனங்களுக்கு அபயங் கொடுத்து முன்பே யிருந்ததைப் பார்க்கிலும் அதிக சனங்களே ஸ்தாபனே பண்ணி அவடத்தில் சிரதுற்க மென்று ஒரு மலேயிருந்துது அதின்பேரிலே ஒரு நூதினமாய்ஒரு கோட்டை யெடுப்பிவித்து அது மண்ட கெடமென்று[115] பேர்வைத்து அவடத்தில் யோக்கியமான பேரை அதி காரியாக நேமித்து அந்த பிருந்தத்தை ரக்ஷிக்க சேனேகளும் வைத்துப்போட்டு ஸ்ரீங்காரபுரம் வாங்கவேணுமென்று கோபத்தினுலே பதினய்யாயிரம் சேனே யுடன் பிறப்பட்டார். அந்த பட்டணத்தை முதலெ வாங்காமல் விட்டு இப்போ கோபம் பண்ணக் காறணமென்ன வென்ருல் சிவாஜிருஜா செயவல்லி பிருந் தத்தைச் சாதிக்கிறபோது சூரியருஜா மஹாருஜாவை ஈசுவராவதாரமென் றெண்ணி தான் அவருக்கு குறைய[116] புத்திரனென்று சொல்லி சரணமாக வந்திருந்

---

110. நீலகண்டராசா என்பவரிடமிருந்து புரந்தர் கோட்டை பிடிக்கப்பட்டது. அவருடைய தம்பி பிலாஜி நீலகந்த் என்பவர் சிவாஜியின் அன்பைப் பெற்றவராயிருந்தார். ஆகவே "நீலகண்டராஜா வின் பிள்ளை" என்பதைப் "தம்பி" என்று கோடல் தகும்.

111. தானசித்தனுடைய - தானாஜியின் (போ. வ. ச. பக். 56). தானாஜி சிவாஜியின் நம்பிக்கைக் குரிய சேனைத்தலைவர்களில் ஒருவர். கொண்டனகெடியைப் பிடிக்கச் சென்ற போது அப்போரில் இவர் இறந்தார் (சர்க்கார்(1) பக். 165)

112. சூரியராவ் சிருங்கார்பூர் அரசர்; சிவாஜிக்கு அடங்கி யிருப்பதாக உறுதிகூறினார்; எனினும் பிஜப்பூர் அரசருக்கு அஞ்சி அடிக்கடி சிவாஜிக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறி வந்தார். "Surya Rao, the Rajah of Sringarpur had tried to save himself by promising homage to Shivaji ever since the fall of Javli (1656) and repeatedly broken his faith in fear of his Bijapuri master"-(Sarkar (2) Page 85)

113* முதல் 114* வரை "உமக்கு உயிர்ப்பிச்சை அளித்திருக்கிறேன்; ஆகையினால் நீர் எந்தச் சமயத்திலும் முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று சொல்லியனுப்பினார்" என்று போ. வ. ச. பக். 56 இல் உள்ளது.

115. "He fortified Chirdurg and named it Mandangarh" (Sarkar (1) Page 85)

116. குறைய - இரய (டி3119)

தான். அப்படியே அடிக்கடி அநேக ஊழியங்களும் பண்ணிக் கொண்டிருந்தான். இப்போ அவன் கிறஹசாரத்தினாலும் துற்புத்தியினாலும் துலுக்காளுண்டைய வாற்தையைக் கேட்டு திவேஷம் பண்ணிக்கொண்டான். அப்போது அந்த குத்தத்தை பொறுத்து[117] அழைப்பிவித்திருக்கச்சேயும் வருகிறோமென்று சொல்லிப்போட்டு வராமலிருந்தபடியினாலே ருஜாவுக்கு வெகுகோபம் வந்துது. அவடம்விட்டு ஸ்ரீங்காரவனத்துக் கிட்ட வந்து சேர்ந்தார். அந்த சேதி சூரியருஜா கேட்டு முன்னே அழைப்பிவித்த சேனைகள் ஒரட்டுக்கும் ருஜா பல்லிவனத்துக்கு போறபடியினாலே யினிமேல் நம்முடையமேல் வரமாட்டா ரென்று திரும்பி அனுப்பிவிட்டோம் என்று தன் மித்திறனோடே யோசனை பண்ணிப்போட்டு கொஞ்சம் சேனையோடே யோடிப்போய்விட்டான். அப்போசிவாஜிருஜா கடினமான வனங்களைக் கடந்து வந்தும் சூரியருஜா ஓடிப்போய்விட்டானென்று சேதிகேழ்விப்பட்டு விசனமாகி ஸ்ரீங்காரபுரத்தையும்வாங்கிக்கொண்டு[118] அவடத்தியசெனங்களுக்கு[119] பரவசமுங்[120] கொடுத்துப்போட்டு அனேக சாதி பிறபல[121] செனங்களையும் காரியஸ்த்தர்களையும் ஸ்தாபனை பண்ணி திரும்பகபாஸ்கருக்கு பிறபாவலி ருச்சியம் கொடுத்து[122] யிதுக்குள்ளே வசந்தகாலம் வந்தபடியினாலே சிவாஜிருஜா அநேக சயித்திய உபசாரங்கள் அனுபவித்துக்கொண்டு ஸ்ரீங்காபுரியிலேயே வாசம்பண்ணிக் கொண்டிருந்தார்.[122*] அதின் பிற்பாடு பனாளாவுக்குத் திரும்பியும்வந்து பனாளாவை சுவாதீனம் பண்ணிக்கொண்டு தெற்கு பிருந்தத்திலே பெங்களூர் செஞ்சி[123] சீர்மைக்கு ௲சுளஎயஎ வருஷத்தில்[124] வந்து இந்த தேசங்களையும் வாங்கி செஞ்சி ருச்சியத்தைச் சேர்ந்த புதுச்சேரி பந்தரிலே இருந்த பிருஞ்சுக்காறருக்கு ௲சுளஅம்இ[125] கருர் மதார்[126] திறிட்டி[127] பண்ணிக் கொடுத்து அவடத்திலிருந்து அனேக ருச்சியங்களை சுவாதீனம் பண்ணிக் கொண்டு புனவுக்குப்போய் சில்லறைக் கோட்டைகளிலே முகல் சேனைகளை[128] கொஞ்சமிருந்ததுகளை சிறுதுபேரைக் கொண்ணு சரணம் வந்தவனை விட்டுவிட்டு சேவுக மபேஷ்சிச்சவனுக்கு சேவுகத்தில் வைத்துக்கொண்டு இந்தப் பிறகாரம் அவிடத்திய டாணையமெல்லாம் பந்தோபஸ்த்துப்பண்ணி அதின் பிற்பாடு சக்கிருவதி சங்கிரும துற்க்கங்களுக்கெல்லாம் டாணையம் வைத்து எல்லாத்தையும்

---

117. குத்தத்தைப்பொறுத்து - அபராதத்தைச்சமைபண்ணி (டி3119)

118. சிருங்கார்பூரைக் கைப்பற்றியது 29-4-1661 (சர்க்கார் (1) பக். 85)

119. செனங்களுக்கு சேனைகளும்- (டி3119)

120. பரவசமும் - பாவகம் (டி3119) 121. பிறபல - சகல (டி3119)

122. "The small state was easily occupied and placed under Trimback Bhasker as governor" - (Sarkar (1) Page 86)

122* இது வரையில் சிவபாரத சரித்திரத்தில் உள்ளது

123. செஞ்சி - சந்தி (போ. வ. ச. பக். 58)

124. கி.பி. 1677. Orme dates the capture in July 1677 (Historical Fragments Page 64) - (Srinivasan, Page 156, F.n. 2)

125. 1680 ஞ 126. 'மதார்' — இச்சொல் டி3119 இல் இல்லை

127. திறிட்டி - Treaty 128. முகல் சேனைகள் - நாடோடி ஜனங்கள் (போ. வ. ச. பக். 58)

சல்லியமில்லாமல் பண்ணிக்கொண்டு புனவிலே வந்திருந்தார். அதின் பிற்பாடு டில்லீசுவரனும் அல்லியெதல் ஷாவும் சிவாஜிருஜாவை தோஸ்த்திரம் பண்ண ஆரம்பித்தார்கள்:[129] நல்ல சூரன்; பரலா பறச்சி கத்தி[130] முதலான ஆயுதங்களின் சண்டை நன்றாய் தெரிந்தவர்; இதுவுமல்லாமல் பரலாகழி ஆயுத[131] மொன்னு நூதினமாயி உண்டுபண்ணினார்; ரெண்டாவது தான் இசமானுக யிருந்து ஒவ்வொரு காரியத்தைத் தானே பிறையாசையான காரியம் முதலாய்[132] பண்ணுகிறது; இதுவுமல்லாமல் சகல செனத்தையும் ரெம்மியமாகத் தக்கனையாக பண்ணுகிறவர்; அதிசெயமான புத்திசாலி; தயிரியசாலி; சாம தான பேத தென்ற[133] இந்நாலுவித உபாயத்தையும் சமைய மறிந்து பண்ணுகிறவர்; எப்படிக்கொத்த ஆபத்து பிறளையமான காலத்திலேயும் பிறமை யில்லாமல் காரியத்தை ஆய்ந்து பார்க்கிறவர்[134]; மஹா நீதியும் தயவுள்ளவரும்[135] சரண மடைஞ்சவர்களை சவரக்ஷிக்கிறவரும், ரூப சாலி; உதாரகுணத்தில் பூரணர்; இதுவுமல்லாமல் ஈசுவர கிருபையினாலே[136] பூமியிலே அநேகந்திரவியம் அகப்படுது; சத்துருவுடைய சேனைகள் யெத்தனை லெட்ச[137] மிருந்தாலும் ருஜாவுடைய சேனைகள் கொஞ்சமாக இருந்தும் இவாள் அரகர மகாதேவா[138] யென்று சப்தத்துடனே வந்து விழுந்தவுடனே சத்துரு சேனைகள் சின்ன பின்னமாய் போய் விடுகுது; இப்படிப்பட்ட ருஜாவை செயிக்கிறது கடினம். [139]*அல்லது ருஜாவைப்போய் மறித்து சண்டை போடுவோ மென்றால் அதுனாலே நம்முடைய சேனைகளும் திரவியமும் அழிந்து போறதே யல்லாமல் பிறையோசனமில்லை. [140]*நல்லது சினேகத்தினாலே ஆவத்தனுக்கிக்கொள்ளுவோ மென்றால் அது கனக்குறைச்சலாக யிருக்குது. சினேகமுமாகிறது கடினம். ஆகை

---

129. தோஸ்த்திரம் - ஸ்தோத்திரம்; புகழ்ந்து பேசிக்கொண்டதாவது (போ. வ. ச. பக் 58)

130. பரலா பறச்சி கத்தி - ஈட்டி கேடயம் பட்டாக்கத்தி (போ. வ. ச. பக். 58)

131. பரலா கழி ஆயுதம் - கம்பியைக்கொண்டு செய்த ஈட்டியைப் போன்ற ஆயுதம் (போ. வ. ச. பக்கம். 59)

132. முதலாய் - முதலானதுகளை (டி3119) 133. தென்ற - தண்டம் (டி3119)

134. ஆய்ந்து பார்க்கிறவர் - அறிகிறவரும் பண்ணுகிறவரும் (டி3119)

135. தயவுள்ளவர் - தைரியவந்தர் (டி3119)

136. கிருபையினாலே - பிரசாதத்தினாலே (டி3119) 137. யெத்தனைலெட்சம் - லட்சம்பவுசு

138. அரகர மகாதேவா - ஹரஹர மகாதேவ (போ. வ. ச. பக். 59)

"The garrison fought desperately but the Mavles with their war cry "Hara! Hara! Mahadev!" carried havoc into their ranks" (Sarkar (1) Page 165). இதனால் மராட்டியர் சேனை போர் செயுங்கால் ஹரஹர மகாதேவ் என்று கூறிப் புதிய வலிமை பெற்றுப் போர்புரிவர் என்பது ஊகிக்க இடந்தருகிறது. பின்னாளில் தஞ்சையை யாண்ட சரபோஜி மன்னர் காசியாத்திரை செய்து 1822இல் திரும்புங்கால் சிதம்பரத்தில் வரவேற்பு நிகழ்ந்த பொழுது சிப்பாய்கள் "ஜோஹர் பரங்க! ஜோஹர் யந்த்ர! ஹரஹரமகாதேவ" என்று கூறித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்ததாக மோடி ஆவண மொழி பெயர்ப்பால் அறிய வருகிறது - (கே. எம். வே. பக். 122)

139* இந்த வாக்கியத்துக்கு முன், 140* இந்த வாக்கியம் டி3119இல் உள்ளது.

யினுலே தங்கள் தங்கள் டிக்காணுவிலே[141] சும்மா யிருக்கிறது மெத்த உத்தம மென்று அல்லியதல் ஷாவும் அபறங்கசீபும் இந்த ரெண்டு பாதுஷாக்களும் யோசினை பண்ணிக்கொண்டு[142] இருந்துவிட்டார்கள்.

அப்போ[143] டில்லீசுவானுகிய அபரங்கசீவு[144] சிவாஜிருஜாவை உயிரோடே பிடித்துக்கொண்டு வரச்சொல்லி அவரைப் பார்க்கவேணுமென்று வெகுபிறை யாசப்பட்டோம்; ஆனுல் அசாத்தியமாய் போச்சுது. ஆனுலவருடைய ரூபத்தை யாகிலும்[145] யெழுதிக் கொண்டு வரச்சொல்லி பார்க்கவேணுமென்று ஒரு சித்தி றக்காறனை கெட்டிக்காறனுய் அனுப்பிவித்து யெழுதிக்கொண்டுவரச்சொன்னுர். அந்த சித்திரக்காரன் வெகுனுள் வரைக்கும் சமையம் பார்த்துக்கொண்டிருந்தான். ஆகிலும் ருஜா தேசங்கள் சாதிக்கும் அபெட்சையினுலெ யிருந்தவிடத்தி லிருக் கிறதில்லை. அவர் ஒரு தேசத்திலிருக்கிரு ரென்று சேதி கேட்டுக்கொண்டு சித் திரக்காரன் போனுல் அந்த தேசம் விட்டு அப்பால் யிருபதிங்காத முப்பதிங்காத வழியிலே[146] யிருக்கிருரென்று சேதி கேழ்விப்படுகிறது. அவடத்திலே போய்ப் பார்த்தாலும் அவரிருக்கிற இடமே தெரிகிறதில்லை. இப்படி யிருக்க சிவாஜிருஜா இந்த தேசம் சாதிச்சார், அந்த தேசங்கட்டினுர், இத்தனை சேனைகளை இன்ன

---

141. டிக்காணு - இடம் (போ. வ. ச. பக். 59)

142. "அவாளவாள் டிகாணுவில்தானே" என்று டி3119 இல் அதிகமாக உளது

143. அப்போ - ஒரு சமயம் (டி3119)

144. "அவுரங்கசீபு என்கிறவன்" என்பதற்கு அடுத்து "சிவாசி ராசாவை" என்பதற்கு முன் போ. வ. ச. வில் (59-60) பின்வரும் செய்தி உளது:- தன் சேனையுடன் புறப்பட்டுத் தானே சிவாஜியுடன் யுத்தஞ்செய்ய எத்தனிக்கையில், அவர் சேனைகள் எல்லாம் சிவாஜி ராஜாவின் பராக்கிரமத்தை நினைத்துப் பயந்தார்கள்.* இதைப் பார்த்து மனவருத்த மடைந்து அவர் படை களின் மேல் மிகவும் கோபித்துக்கொண்டு போகும்பொழுது, ஒரு பிரதேசத்தில் உள்ள நதியில் தான் சவாரி செய்த குதிரைக்குத் தானே தண்ணீர் அருந்த வைத்தார். அப்பொழுது அந்தக் குதிரை ஒரு தடவை நன்றாகத் தண்ணீர் அருந்திவிட்டுத் திரும்பத் தண்ணீர் குடிப்பதற்காகத் தலையைத் குனிந்து வாயைத் தண்ணீரின் அருகில் கொண்டு போகும் போது மிரண்டு தண்ணீருக்கப்பால் துள்ளிக்குதித்து ஆற்றின் கரைக்கு வந்தது. பிறகு தண்ணீரைக்குடிக்க மறுபடியும் அணுகும்போது தண்ணீர் குடிக்கவில்லை. அப்பொழுது பாதுஷா குதிரையின் மீது உட்கார்ந்திருந்தார். அவர் மிக்க ஜாக்கிரதையுடன் இருந்து கொண்டு தன் குதிரையைப் பார்த்து "இங்கும் சிவாஜி வந்திருக்கிறான் என்று பயப்படுகிறாயா?" என்று சொல்லிக் கொண்டே தன் படைகளை நோக்கினார். அவர் படை களின் நோக்கத்தையறிந்து அவ்விடத்திலேயே முகாம் செய்து" - இச்செய்தி மெக்கன்சி சுவடிகளில் இல்லை; திருமுடி சேதுராமன் சுவடியிலும் இல்லை.

* "Shivaji's name had already become so terrible that it was very seldom that any body dared to defy him" (Sen, Foreign Biographies of Shivaji, Page 40)

145. ரூபத்தையாகிலும் - முகத்தை (போ. வ. ச. பக். 60)

146. இருபதிங்காத முப்பதிங்காத வழியிலே - இருபது முப்பது ஊர்கள் பல்லக்கைக் கொண்டு கடந்து (போ. வ. ச. பக். 60). இங்கு இரண்டு மூன்று வரிகளிலுள்ள செய்தியைப் பின்வருவதுடன் ஒப்பிடல் தகும்: "When he was supposed to be here he was there and when suspected to be elsewhere he would enter through the gates"- (Sen, Foreign Biographies of Shivaji, Page 34)

இடத்தில் டாணையம் வைத்தார். அப்பாலிந்த இராட்சியத்தின் பேரிலே[147] போயிருக்கிருரென்று இப்படிக்கெல்லாம் கேழ்விப்படுகிறது மாத்திரமேயல்லாமல் ருஜா சித்திரக்காரன் கண்ணுக்குத் தென்பட யில்லை. இப்படி வெகு னுள் வரைக்கும் தேடிக்கொண்டிருக்கிற வேளையில் ஒரு னுள் சண்டைக்குப் போற வேளையிலே கால் தளங்களை அநேகமாய் முன்னே விட்டுக்கொண்டு மூணுலெட்சம் குதிரை சவார்களுடனே[147அ] சிவாஜிருஜா ருச்சியம் சாதிக்கிற காரியத்தினுலே சுறுக்காய் போற சமையத்திலே இந்த சித்திரக்காறன் பார்த்தான். அப்போ அவரிருந்த அவசரம்: சிவாஜிருஜா நல்ல குதிரையின் மேலேறிக்கொண்டு தலையிலே முண்டாசும் அரையிலே சல்லடம் போட்டுக்கொண்டு தாடுபத்திரி மேலே போட்டு இடுப்பிலே சுத்திக்கொண்டு கையிலே யிருந்த பாலாவை தோளிலே வைத்து தலையை சாய்த்து அதை அமக்கிக்கொண்டு சொளக்கொல்லை வழியாய் போறவர் சோளக் கதிரைக் கிள்ளி அதை ரெண்டு கையினுலேயும் பிசைந்து வாயிலே போட்டுக்கொண்டு அந்த கதிர் செத்தையை குதிரையின் வாயிலே கொடுத்துக்கொண்டிருந்தார். அப்படிக்கொத்த அவசரத்தை சித்திரக் காறன் பார்த்து படம் எழுதி அதை அபறங்கசீபுக்கு கொண்டு போய் கொடுத்தான். அவர் அதைப் பார்த்து ஆச்சிரியப்பட்டுச் சொன்னது: சிவாஜிருஜா மூணுலக்ஷம் குதிரைக்கு சற்தார், ஸ்ரீமந்தன்;[148] அப்படிக்கொத்த ருஜா காரியத்தை செயிக்கிற அபேஷைசயினுலே ஒரு விடத்திலே யிறங்கி கொஞ்சம் சாப்பிடுகிறத்தினுலே நேரஞ் சென்றுபோய் காரியங் கெட்டுப் போமென்றும் கிட்டயிருக்கிற சற்தார்க்கள் தாம் நினைத்தப்படியே காரியத் திலே பிறவற்திக்கிறத்திலே யோசினைபண்ணி குழம்புவார்களென்று தாம் சோளக்கதிரை உடைத்து பிசைஞ்சு திண்ணு அந்த செத்தையை குதிரைக்கு மேய்பிச்சார். இந்த விதமாய் பிறையாசைப்படுகிறதும் சாகிறதையுமாக யிருக்கப்பட்ட ருஜாவை செயிக்கிறத்துக்கு ஆராலே கூடுமென்று நினைத்து பிறையாசைப்பட்டும் வியற்தமாய் போகுமென்று யோசனைபண்ணி சொஸ்த்தமா யிருந்துவிட்டார்கள். இந்தப்படிக்கு வெகு ருச்சியங்களை செயித்து அநேக திரவியம் சேர்ந்த பிற்பாடு தம்முடையபேர் என்றென்றைக்கும் பிறக்கியாதியாயிருக்க வேணுமென்று யோசனை பண்ணி அதுக்குத் தக்க யோக்கியமா யிருக்கப்பட்ட சிவகெட மண்டனகெடம் இப்படிக்கு முன்னூத்தறுபது[149] கெடிகளை கட்டினுர்.

**(7) ஏகோஜி IV தஞ்சைப் படையெடுப்பு**

அதுக்கு பிற்பாடு சிவாஜிருஜா என்கிறவர் தம்முடைய மூத்த தமையன் சம்பாஜி ருஜாவுடைய பிள்ளை உமாசி ருஜாவை யும் சம்பாஜி ருஜாவுடைய பெண்சாதிகள் ஜெயந்திபாயி கெவுருபாயி[1] பாற்வதிபாயி இந்த மூணு பாய்சாயபுகளு

147. ''பேரிலே'' என்பதற்குப் பிறகு ''சாரி'' என்ற சொல் டி3119 இல் உளது

147அ. சவார்கள் - படைகள் 148. ஸ்ரீமந்தன் -இஸ்த்திரிமந்தன் (டி 3119)

149. 360 கோட்டைகள் என்றிருப்பினும் கிருஷ்ணாஜி அனந்த ஸபாஸத் எழுதிய சிவச் சத்திர பதியின் சரிதத்தில் (சென், பக். 141 - 148) 241 கோட்டைகளின் பெயர்கள் தரப்பெற்றுள்ளன. தகாகாவ் (பக். 558 - 560) சிட்னிஸ் எழுதியவரலாற்றை ஆதாரமாகக் கொண்டு சிவாஜியின் கோட்டைகள் 260 என்றும், அவற்றுள் 111 சிவாஜியால் எடுப்பிக்கப்பெற்றன என்றும் கூறுவர்.

1. கெவுருபாயி - கௌரிபாயி (போ. வ. ச. பக். 62)

டனே கூட உமாஜி ருஜாவையும் அவர் பெண்சாதி மொக்குபாயி[2] சாயபு இவாளை எல்லாரையும் ருஜாபுரம் என்னப்பட்ட ருச்சியத்தில் வைத்தார். அதுக்குமேல் சில நாளைக்குப் பிற்பாடு உமாஜிருஜாவுக்கு[3] பறஸோசிருஜா சென்னமானார்.

அதுக்கு பிற்பாடு சிவாஜிருஜாவுடைய மாத்தான்தாயார்[4] துக்காய் ஆவு சாயபுடைய பிள்ளை[5*] யேகோஜி மஹாருஜாவை இவருக்கு முன்னுலே இவருட தொகப்பனுர் கொடுத்தது குலதெய்வம் முன்னேயிருந்த பிருதுகள்[6*] அல்லியெதல்ஷா தொகப்பனுருக்கு கொடுத்த[7] பிதுருகளெல்லாம்[8] குதிரைமேல் அம்பாரி ஒண்ணும் அவர் கொடுத்து ஸ்ரீகள் திபாபாயி ஆவு சாயபு சயிராபாயி ஆவு சாயபு அனுபாயி ஆவு சாயபு இந்த மூணுபேரையும் கூட்டி சிறிது சேனைகளுங்கொடுத்து பெங்களூர் ருச்சியத்துக் கனுப்பிவித்தார்.[9] அவர் பெங்களூர் ருச்சியம்பண்ணிக்கொண்டிருக்கிற சமையத்திலே சாலியவாகன சகம் ௲௫௱ ௯௰௩ பரிதாபி[10] வருஷம் யேகோஜி ருஜாவுடைய ஸ்ரீ தீபாபாயி ஆவு சாயபுக்கு முதல்பிள்ளை மூணுவது சாஜி ருஜா பிறந்தார். அப்போ அல்லியெதல் ஷா

---

2. மொக்குபாயி - சகுபாயி (போ. வ. ச. பக். 62)

3. உமாஜி ருஜாவுக்கு - உமாஜி ருஜாவுடைய ஸ்திரீ மொக்குபாயி சாயபுக்கு (டி3119)

4. மாத்தான்தாயார் - மூத்தமாற்ருன்தாய் (போ. வ. ச. பக். 62)

5* முதல் 6* வரை டி3119இல் "யேகோஜி மகாராசா இவருக்கு முன்னுலே சாசி மகாராசாவென்கிறவர் யேகோசி மகாராசா மூத்தவளுடைய சந்ததி யானபடியினுலே யவருக்குக் குலதெய்வமும் முன்னேயிருந்த விருதுகளும்" என்று காணப்பெறும்.

7. தொகப்பனுருக்கு கொடுத்த - இவருக்குச் சதிரினுமாய்க் கொடுத்ததில் வந்த (டி3119).

8. ஷாஜி சிறையினின்று விடுதலை செய்யப்பெற்றதும் விச்சகத்தி பரமாவிடம் போர் புரிந்து அவனை வென்று அவனுடைய குதிரையின் மூன்று விருதுகளையும் எடுத்துக் கொண்டு வந்து ஏதில்ஷாவிடம் கொடுத்தார். ஏதில்ஷா அம்மூன்று விருதுகளுடன் தன் விருதுகளையும் வேறு பலவற்றையும் கொடுத்தார் (விரிவு போ. வ. ச. பக். 29-30இல் காணலாம்).

ஏகோஜி பெற்ற விருதுகள் பன்னிரண்டு என ஸ்பாஸத் அறிவிக்கும் (சென், பக். 125): "Our father's twelve "birundes" are in your possession and you are enjoying them".

மேற்படி பக்கத்து அடிக்குறிப்பாக உள்ள பின்வரும் பகுதி அறியத்தக்கது:-

"But birunde' here certainly means something more than mere titles. According to Molesworth it meant badges of honour. The Tanjore Temple inscription, however, mentions Horse birunde, Elephant birunde and other birundes which conferred upon their owners the right and privilege of putting certain ornaments on their horses and elephants etc. These have been described at some length in the Tanjore Temple inscription published by Mr. V. K. Rajwade in the now defunct Prabhat".

9. சகம் 1562இல் ஷாஜி ஏகோஜிக்கு இளவரசுப் பதவியும் பெங்களூர்ப் பட்டமும் தன் விருதுகளும் கொடுத்துத் தன் குல தெய்வத்தைப் பூசை செய்யுமாறு கொடுத்தார் என்று முன்னர்க் கூறப்பட்டது (போ. வ. ச. பக். 22). இங்குச் சிவாஜி கொடுத்தனுப்பினார் என்றுளது. மீண்டும் ஏகோஜி பெங்களூர்க்குச் செல்வதால். 10. சகம் 1593

யோசனை பண்ணினது: சிவாஜிருஜா பிறபலமாய் ருச்சியமெல்லாம் கட்டிக் கொண்டார். அவரை அடக்கவேணுமென்று ஞமும் அபரங்கிசீபும் யெத்தினம் பண்ணி[11] வெகுவிசை உயித்தம் பண்ணியும் அடங்காமல் போயிவிட்டார். இப்போ அவர்தம்பி மாத்தான்தாய் பிள்ளை யெகோஜிருஜா பெங்களூரிலே போய் சேந்திருக்கிறபடியினாலே இவரை சந்திபண்ணி நம்முடனே சேத்துக் கொண்டு தெட்சண ருட்சியத்திலாகிலும் நம்முடைய சாசனம்[12] நடப்பிவிக்க வேணும். இல்லாவிட்டால் சிவாஜிருஜா அவர்பலம் வைத்துக்கொண்டு அத்தையுங் கட்டிக்கொள்ளுவார். இப்போதானே யேகோஜிருஜாவை நம்முடையவராக்கிக்கொண்டால் சிவாஜிருஜாவும் நம்முடைய தம்பிதானே யென்று யோசினை பண்ணி அந்த ஜோலிக்குப் போகமாட்டா ரென்று யோசினைபண்ணி யெகோஜி ருஜாவுக்கு உங்களுடைய தொகப்பனார் சாசிருஜா நம்முடைய மனசுப்பிறகாரம் எப்படிநடந்து வந்தாரோ நீரும் அப்படியே யிருக்கவேணுமென்று வெகுவிதமாய் சந்திசொல்லி அனுப்பிவித்தார்கள். அதுக்கு யெகோஜிருஜா யோசினை பண்ணி இது யொக்த்தந்தா னென்று நினைத்து அல்லி யெதல்ஷாவுடைய மனோபிறகாரம் அனுசரித்து நடந்து கொண்டு வந்தார். யெகோஜி மஹாருஜா பெங்களூரிலே ராச்சியபாரம் பண்ணிக்கொண்டு யிருக்கிறபோது தஞ்சாவூர் ருச்சியம் பண்ணுகிற நாயக்கர் கூட்டத்துக்கும் திருச்சினாப்பள்ளி ருச்சியம் பண்ணுகிற நாயக்கர் கூட்டத்துக்கும் ஒண்ணுக்கொண்ணு சச்சறையாய் திருச்சினாப்பள்ளியி லிருக்கும் நாயக்கர் கூட்டம் பலவந்தா ளானபடியினாலே அவாள் ருச்சியத்தை செயிச்சுக்கொண்டு போவார்களென்று நிற்செயமாய் யெண்ணிக்கொண்டு திருச்சினாப்பள்ளியார் தஞ்சாவூர் மேல் யுத்தம் பண்ணிக்கொண் டிருக்கிறபோது நிறுவாக மில்லாமல் விசையாபுரம்[13] அல்லி யெதல்ஷா பாதுஷாகிட்ட யேசிபு[14] அனுப்பிவித்தார்கள். அவன் போய் வஜீர் காதர் யெகலாசுகான்[15] அப்தல் அலிம் இந்த ரெண்டு பேரையும் அனுசரித்து இவாள் முகாந்திரமாய் பாற்சாவுடைய பேட்டி வாங்கிக் கொண்டு தங்களுடைய யெசமான் மனோபாவத்தை[16] அறியப்பண்ணிவித்தான். அப்போ அல்லியெதல்ஷா இந்த ரெண்டு வஜீர்களையும கும்மக்காக போகச் சொன்னார். அவாள் சொன்னது: தங்களுடைய சேனைகள் போதாது இன்னம் கும்மக்கு வேணுமென்று கேட்டபடியினாலே யெகோஜிருஜா பெங்களூரிலே இருக்கிறாரே அவருக்குங் கடுதாசி கொடுத்து அவரையுங்கூட அழைத்துக் கொண்டு போகச் சொன்னார். அப்படியே ரெண்டு வஜீரும் பெங்களூருக்கு வந்து

---

11. எத்தினம் பண்ணி - பகீரதப் பிரயத்தனங்களைச் செய்து (போ. வ. ச. பக். 63); இதன் மூலமாகிய மராட்டிப்பகுதியில் "உத்தண்ட பிரயத்னே" என்றுளது.

12. சாசனம் - அதிகாரம் (போ. வ. ச. பக். 63)  13. விசையாபுரம் - பிஜாபூர்

14. யேசிபு - அதிகாரி (போ. வ. ச. பக். 63); ஹேஜிப் - கணக்குப்பிள்ளை (கே. எம். வே. பக்.76)

15. காதர்யெகலாசுகான்-காதர் என்பவனையும் கலாஸ்கான் என்பவனையும் (போ.ச.வ.பக். 63-64)

16. மனோபாவத்தை - இராஜ்யத்தின் தற்சமய நிலைமையை (போ. வ. ச. பக். 64)

யெகோஜிருஜா பேட்டிவாங்கிக் கொண்டு கடுதாசி கொடுத்தார்கள். ருஜாவும் அந்த கடுதாசியைப் பார்த்துக்கொண்டு இந்த ரெண்டு வஜீர்களையும் அழைத்துக்கொண்டு தஞ்சாவூர் வக்கிலும் யேகோஜி ருஜாவை பிருர்த்திச்சபடியினலே அவர் சகல சன்னுகத்துடனே பிறப்பட்டு வருகிறபோது வழியிலே ஆறணி ருச்சியத்தை வாங்கி[17] வேதாசி பாஸ்க ரென்கிறவரை ஆறணிக் கோட்டையில் வைத்துப்போட்டு தஞ்சாவூர் கோட்டைக்கு வந்து திருச்சினுப் பள்ளியாா் பேரிலே உயித்தம்பண்ணிஅவர்களை துரத்திவிட்டுதஞ்சாவூரானுக்கு[18] மோக்களா பண்ணி[19] தாம் பெங்களூருக்கு பயணமாய் பிறப்பட்டு திருமுல்லை வாடியிலே[20] வந்து இறங்கி இருந்தார். அப்போ அவருடைய ஸ்ரீ தீபாபாயி அம்மாள் பூறண கெற்பமாயிருந்துது பிறஸவமாயி[21] யெகோஜிருஜாவுக்கு ரெண்டாவது பிள்ளை சாலிவாகன சகம் ௲நளசுகூருக்ஷத[22] வருஷத்திலே மூணுவது சறபோஜி ருஜா பிறந்தார். அப்போ யேகோஜி ருஜாவுக்கு சொற்பனத்திலே பகவான்[23] வந்து சொன்னது: நீர் தஞ்சாவூர் ராச்சியம் விட்டு போகவேண்டாம் உம்முடைய வம்சபறம்பரையாய் இந்த ருச்சியத்தை அனுபவிக்க வேண்டிய காறணமிருக்குது. ஞளைக்காலமே உமக்கு சந்திவாற்தை[24]வருமென்று சொன்னுர். அப்படியே மறுநாள் தஞ்சாவூரிலே யிருந்து ஒருவருக்கொருவர் சற்ச்சையாய்[25] வித்தியாசம் வந்து மந்திரிதினம் பண்ணுகிறவனையும் பகைத்துக்கொண்டு திருமுல்லைவாடியிலே யிருக்கிற யேகோஜிருஜா கிட்டபோய் நீங்களிந்த ருச்சியம் பண்ணவேணுமென்று பிருர்த்தினை பண்ணினுர்கள். ஈசுவர சங்கல்பத்தை தள்ளப்போகாதென்று எண்ணி அவாள் சொன்னத்தை அங்கிகாரம் பண்ணி யேகோஜிருஜா தஞ்சாவூர் கோட்டைக்கு வந்தார். இந்த பூற்வோத்திரம் சவவிஸ்த்தாரமாய் பின்னுலே தஞ்சாவூர் பிருந்தியத்திலே இந்த ருச வம்சத்தின் ருஜாக்களுடைய வற்தமானம் யெழுதி இருக்கிற[26] விடத்திலே எழுதியிருக்குது.

**(8) சிவாஜியின் மனைவியரும் மக்களும்**

புனு பிருந்தியங்களிலே சகல திக்கும் செயித்திருந்த சிவாஜி ருஜாவுக்கு எட்டுப்பெண்சாதிகள். அவாளுடைய பேர்கள் சவுபாக்கியவதி சயிபாயி நிம்பாள்கற் வம்சம்; ரெண்டாவது காசி பாயி ஜாதவ வம்சம்; மூணுவது சக்வாற்பாயி காயிக்கு

---

17. "After capturing the fort of Arni on his way, Ekoji marched on Tanjore" – (Srinivasan, Page 129)

18. தஞ்சாவூரானுக்கு - தஞ்சாவூருக்கு

19. மோக்களாபண்ணி - தஞ்சாவூர் நாயக்கரை ஆபத்தினின்றும் விடுவித்து (பே. வ. ச. பக். 64)

20. திருமுல்லைவாடி - திருமுலைவாடி (டி3119); திருமுல்லவாயில் (டி3762); திருமலவாடி (போ. வ. ச. பக். 64); இது திருமழபாடி யாதல் கூடும்.

21. பிறஸவமாய் - பிரசோபமாய் (டி3119) 22. சகம் 1596

23. பகவான் - இஷ்டதெய்வம் (போ. வ. ச. பக். 64)

24. சந்திவார்த்தை - அழைப்பு (போ. வ. ச. பக். 64)

25. சற்ச்சையர்ய் - சற்சரையாகி (டி3119) 26. எழுதி இருக்கிற - காண்பிக்கிற (டி3119)

வாட வம்சம்; நான்காவது புதுளா[1] பாயி பால்கருசி[2]. வம்சம்;. அஞ்சாவது சகுணு[3]பாயி சிறிகே வம்சம்; ஆருவது சுயரு[4]பாயி மோயித்தே[5] வம்சம்; 'யேழாவது மாளவோ[6] வம்சத்துபொண்ணு; எட்டாவது விசாளே[7] வம்சத்துப்பொண்ணு; இந்த எட்டு இஸ்திரிகளுடனே சிவாஜிருஜா சவுக்கியத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிறபோது மூத்தவள் சயிபாயிக்கு மூணுபொண்ணும் ஒரு பிள்ளையும் பிறந்துது. அவாளுடைய பேர்: சம்பாஜிருஜாவென்று புத்திரனுக்குப் பேர்வைத்தார்; அவர் பிறந்தது சாலியவாகன சகம் ௲௫௱௯௰௬[8] பிங்கள[9] வருஷம்; மூணுபெண்களிலே முதல் பெண் சக்குவாறப்பாயிக்கு நிம்பாளகற் வீட்டிலே குடுத்தார்; ரெண்டாவது பெண் ருணுபாயிக்கு சாதவ வீட்டிலே கொடுத்தார்; மூணுவது பெண் அம்பிகா[10] பாயியை மாடிக்கு வீட்டிலே கொடுத்தார்; அந்த அற்ஜி[11] மாடிக்குக்கு செஞ்சி பிருந்தியங்களிலே சிறுது சாகீரும்[12] கொடுத்தார். ரெண்டாம் பெண்சாதிக்கு சந்ததி யில்லே. மூணுவது ஸ்ரீ சக்வாற பாயி சாயபுக்கு கமளாபாயி என்று ஒருபொண்;அத்தை பாணகாநெத்தோஜிக்கு[13] குடுத்தார். நாலாவது புதுளாபாயி[14] சாயபுக்கு சந்ததியில்லே. அஞ்சாவது சகுணு

---

1. புதுளா - புதலா (போ. வ. ச. பக். 65)

2. பால்கருசி - பால்கருதி (டி3762); பால்கர் (டி3119); மோஹிதே (டஃப் பக். 163; சர்க்கார் (1) 332)

3. சகுணு - சுகுணு (டி3119) 4. சுயரு - சோயரி (போ. வ. ச. பக். 65)

5. மோயித்தே - சர்கே (டஃப் பக். 163; சர்க்கார் (1) 332)

6. மாளவோ - மாலஹோ (ஷெடி)

7. விசாளே — விசாரெ (டி3119); விசான்ய (டஃப் பக். 163)

8. சகம் 1596: போ. வ. ச. 1598 என்னும் (பக். 60); (Shambhaji born 14th May 1657 Sarkar (1) P. 400, Chronology)

9. சகம் 1596 பிங்கள அல்ல; சகம் 1598 ம் பிங்கள அல்ல; சகம் 1599 பிங்கள ஆகிறது (சாமிக்கண்ணுப்பிள்ளை). சம்பூஜி 14-5-1657 இல் பிறந்தார் என்பர் (சர்க்கார் (1) பக். 332). திருமுடிசேதுராமன் சுவடியில் (பக். 117இல்) "செக்கம் 1579 கிறிஸ்து 1657 யேவிலம்பி ஆனி மீ 10உ" என்றும், (பக். 265 இல் "செக்கம் 1579 கிரிஸ்து 1657 தமிழ் யேவிலம்பி" என்றும் கூறப் பெற்றுள்ளன. ஆனி மீ 10 என்பது பொருந்தவில்லை; வைகாசி 16 என்று தெரிகிறது (சாமிக் கண்ணுப்பிள்ளை)

10. அம்பிகா - அமணிகா (போ. வ. ச. பக். 65). இவ்வம்பிகாவை ஹர்ஜி மஹாடிக் மணந்தார் (சர்க்கார் (1) பக். 332)

11. அற்ஜி - ஹர்ஜி - அறச்சி (டி3119)

12. "Ambikabai was given in marriage to Harji Raje Mahadik of Tarale, appointed by the king, the governor of Jinji"- (K. P. page 277).

13. பானகா நெத்தோஜி - பாளகாநேதோசி (டி3119); நேதாஜி பாஸ்கர் (போ. வ. ச. பக். 66); ஜனோஜிபால்கர் (கி. பா. பக். 277)

14. "Putali Bai committed 'Sati' upon her husband's funeral pyre" (K.P. Page 278)

பாயி சாயபுக்கு ருஜகுமாரபாயி[15] என்றொரு பொண்; அதை கேனோஜி சிறக் கேவுக்கு[16] கொடுத்தார். ஆருவது சுயருபாயி[17] சாயபுக்கு ஒரு பிள்ளை பிறந்துது; அவருக்குருமருஜா[18]என்று பேர்வைத்தார்.ரெண்டாவதுபொண்ணு தாதுபாயி[19]; இதுக்குப் பிறகு சிவாஜி ருஜாவுக்கு[20*] ஏழாவது எட்டாவது ஸ்ரீகள் வயத்திலே சந்ததிகள் யில்லை[21*] ரெண்டு பிள்ளையில் மூத்த பிள்ளை சம்பாஜிருஜாவுக்கு சாலிய வாகன சகாப்தம் ௲௬௱௨[22]துந்துபி வருஷம் தம்முடைய சொந்த ருட் சியம்[23] பட்டங்கட்டி இளையபிள்ளை ருஜாருமுக்கு செஞ்சி ருட்சியம் கொடுத்திருந் தார்[24] உடனே வெகுகலாபம் வந்து புனு பிருந்திய மெல்லாம் துலுக்காள் பாரிச மாய்ப் போன உடனே ருஜாருமும் செஞ்சி சீமை விட்டுப்போட்டு தஞ்சாவூர் கோட்டைக்கு வந்து சிறுதுனுள் அண்ணனுடனே கூட[25] இருந்து மறுபடியும்

---

15. ராஜகுமாராபாயி - நனிபாயி (இ. பா. பக். 278) "Nani Bai was perhaps the name of Rajkumar Bai" (Takakhav, Page 556)

16. கேனோசி சிறிகே – Ganoji Raje Shirke Maleker (K.P. Page 278)

17. சுயரா - சோயரி (போ. வ. ச. பக். 66). இவர் திருமணம் பாதுஷா முன்னிலையில் நடந்தது என்று சிவதிக்விஜயம் கூறும் (சென், பக். 160); சுயரா (டி3180)

18. ராமராசா - ராஜாராம் ராஜா(போ.வ.ச. பக். 66). இவர் பிறந்தது 24-2-1670.இவர் பிறப்புப் பற்றித் திருமுடி சேதுராமன் சுவடி கூறுவது பின்வருமாறு (பக்கம் 209): "சிவாஜி ராஜாவுக்கு செக்கம் 1583 வருஷம் கிரிஸ்து 1661க்குத் தமிழ் பிலவ வருஷத்தில் கனிஷ்ட புத்திரர் ஜென்மித் தார். அந்த சிசுவானது பூ ஸ்பரிசமாகும்போது குப்புறக்கவிழ்ந்து பூ பார்வையாய்ப் பிறந்தபடியால் டில்லி பாதுஷாவை கவிழ்த்துப் போடலாம் என்கிற சந்தோஷத்தினாலே அந்தக்குழந்தைக்கு ராம ராஜா வெண்டு நாமகரணம் செய்து"; ஸபாஸத் இது போன்றே கூறும்:

"He was born with face downwards. The Raje remarked "He will upset the Badshahi of Delhi" (Sen, Page 100)

19. தாதுபாயி – தீபாபாயி; "She had a daughter named DipaBai who married a noble named Visoji Rao"- (K.P. Page 277)

20* முதல் 21*வரை யுள்ள வாக்கியம் டி3119 இல் இல்லை

22. சகம் 1602 - சகம் 1603 (போ. வ. ச. பக். 66)

23. சொந்த ருச்சியம் என்பதற்குப் பிறகு டி3119இல் "பூனு பிருந்தியத்துக்கு" என்பது காணப் படுகிறது.

24. ஸபாஸத் (சென், பக். 132), "I shall divide my kingdom into two. The kingdom of Jinji - streaching from the Tungabhadra to the Kaveri - is one Kingdom. The second is a kingdom on the other side of the Tungabhadra extending up to the river Godavari. Sueh are the two kingdoms (I have). Thou art my eldest son, I confer on thee the Kingdom of the Karnatic; the kingdom on this side I give to Rajaram" என்று கூறும்.

"A division of the kingdom between the two princes was proposed, Shambhaji taking Maharashtra and Rajaram the Karnat country beyond the Tunga, bhadra; but the plan was not given effect to" (Sarkar (1) Page 330)

வரலாற்றாசிரியர்கள், சிவாஜி இறந்ததும் ராஜாராம் பட்டம் கட்டப்பெற்றார் என்றும் சம்பாஜி தான் காவலில் வைக்கப்பட்டிருந்த பன்ஹாலாவில் அரசைக் கைப்பற்றினார் என்றும் கூறுவர் (அவுரங்கசிபு IV பக்.192–4)

25. "Rajaram tried his level best to prevent the on rush of the Mughal force and when it proved futile, left for a place of safety in the Tanjore Kingdom

சிவாஜிருஜா அழைத்தனுப்பிவித்தார். அப்போ தொகப்பனுர்கிட்ட போயிருந் தார். அவருக்கு பனுளா கெடியைக்கொடுத்து தாம் சேத்து யாத்திரை நிமித்தியம் ஒருதருக்குந் தெரியாமல் வந்து யாத்திரை சித்தி பண்ணிக்கொண்டு யிதுக்கு முன்னே ஒரு திரம் யெகோஜிருஜா பட்டமாண்டு கொண்டிருக்கையில் றகசிய மாய் தஞ்சாவூர் கோட்டைக்கு வந்து கோட்டை யெல்லாம் சுத்திப் பார்த்து வெளியிலே போய் யெகோஜி ருஜாவுக்கு சொல்லி அனுப்பிவித்தது: நீர் சம் பாதித்த ருச்சியமெல்லாம் ஞம் பார்த்தோம்; உம்முடைய கோட்டை கெருட முகமா யிருக்கிறது;[26] பெரிய கோட்டை; ஞலு பாரிசமும் கோட் டையா யிருக்குது; ஆனல் முன்னுக்கு கார்ப்பாத்துகிறது கடினமான படியினுலே பின்னுலே தெற்குப் பாரிசத்திலே இருக்கிற கோட்டை மாத்திரம் தண்ணீர் ஆசருவிலே[27] யிருக்குது; அதை மாத்திரம் வைத்துக் கொண்டு குறையை யிடித்துப்போடுகிறது. ஞம் கோட்டைக்கு வந்தபோது ஒரு சீரணிக்கடையிலே நம்முடைய சிகாமோதிரம்[28] வைத்து சீறணி[29] வாங்கி யிருக் கிருேம். அந்த சிகா மோதிரத்தை அனுப்பிவிக்கச்சொல்லி அந்தக் கடையை அடையாளமுஞ்சொல்லி அனுப்பிவித்தார். அந்தப் பிரகாரமாகத்தானெ தஞ்சா வூரிலிருந்த ராசாவும் நடப்பித்தார். அதுக்குப் பிற்பாடு ஒருதிரம் சேதுயாத்திரை பண்ணி ருச்சியத்துக்குப்போய்ச் சேர்ந்தார். அப்பால் சிவாஜிருஜா இரண்டு பிள்ளைகளுக்கும் இராச்சியத்தை நேமித்துப்போட்டு சகல தேசத்திலேயும் வெகு கீற்தியாய் பேர்பட்டு சகல சத்துருக்களும் அபஜெயப்பட்டு சல்லியமில்லாமல் பண்ணி[30] செனனம் யெடுத்ததுக்கு கிருதகிற்தியமும் கொஞ்சமாச்சுது யென்று[31] பிறபஞ்சியத்து ருட்சிய விபகாரத்தையும் விடாமல் பரலோக மாற்கத்திலேயும் மனசுவைத்து அந்த அற்பியாசமே உறுதிபண்ணி குருவாக்கியத்திஞலே தியா னங்கள் பண்ணுகிறத்துக்கு யோக்கியமா யிருக்கப்பட்ட தெசையிலே யிருந்து சாசுவதமா யிருக்கப்பட்ட பதத்துக்கு ஆனந்த ரூபமாய் போயி சேர்ந்தார்.[32]

---

whose king Shahji was a cousin of his"- (Srinivasan, Page199). இதில் "அண்ணன்" என்றது ஏகோஜியின் முதன் மகனுகிய ஷாஜியை.

26. கெருடமுகமாயிருக்கிறது - கருடன் போன்ற உருவத்தோடு காணப்படுகிறது (போ. வ. ச. பக். 66)

27. ஆசருவிலே - சமீபமாய் (போ. வ. ச. பக். 67)

28. சிகாமோதிரம் - தலையணி (போ. வ. ச. பக். 67); முத்திரை மோதிரம் (Tamil Lexicon)

29. சீரணி - சாமான்கள் (போ. வ. ச. பக். 67)

30. கிருத கிருத்தியம் கொஞ்சமாச்சுது - செய்ய வேண்டிய வெல்லாம் செய்தோம் (போ. வ. ச. பக். 67)

32. சிவாஜி தனது 52ஆம் வயதில் சகம் 1601, கிறிஸ்து 1679இல் இறந்தார் என்றும் அந்தச் சமயத்தில் அவருடைய ஆறு பத்தினிகளில் ஜேஷ்ட பட்டஸ்ரீயான சாயிபாயி சாயேபு, 5 ஆவது பாரியை சகுணபாயி சாயேபு அவர்களும் ராஜாவுடன் கூடச் "சாகுமானு" (சககமனம் - உடன்கட்டை ஏறுதல்) செய்தார்கள் என்றும், திருமுடி சேதுராமன் சுவடியில் உள்ளன (பக். 227). சயிபாயி, சம்பாஜியின்தாய் 5-9-1659 இலேயே இறந்தார். சகுணபாயி உடன்கட்டையேறியதற்கு வரலாற்றாதாரம் இல்லை. புதலாபாயிதான் உடன்கட்டை யேறியவள் (தகாகாவ் பக். 555). வரலாற்றாசிரியர் கூற்று:-

(9) சம்பாஜி -ஷாஹூ

அப்பால் சம்பாஜிருஜா தொகப்பனுருடைய கீர்த்தியை விசேஷிக்கப் பண்ணிக்கொண்டு ராட்சியபாரம்பண்ணும்போது டில்லிசுவானு யிருக்கப்பட்ட அபறங்கிசேபு யென்கிறவர் அன்பத்திரெண்டு பாற்சாவுடைய சீமையுஞ் சாதித்து சக்கிறவற்தி யென்று பேரெடுத்து சகல தேசாதிபதிகளேயும் அழைத்தனுப்பிவித்தார். அபறங்காபாது[1] என்னப்பட்ட ஒரு ஸ்தலம்; அபறங்கஜேபுனுல் நிற்மாணம்[2] பண்ணப்பட்டது. அந்த ஸ்தலத்துக்கு யெல்லா ருஜாக்களுடனே கூட சம்பாஜி ருஜாவும் வந்து சேர்ந்தார். அப்போ எல்லாரும் பாதுஷாவுடைய பேட்டிக்கு போன வேளேயிலே யெல்லாரும் குனிந்து குறனிசு பண்ணுர்கள். சம்பாஜிருஜா குறனிசு பண்ணுமல் நிண்ணுகொண்டு யிருந்தார். அதினுலே அபறங்கபாதுஷாவுக்கு கோபம் வந்து சம்பாஜிருஜாவை காவலிலே வைச்சார். அந்தக் காவலிலே அஞ்சாறுமாச மிருந்து சீரணிப்[3] பெட்டியிலே உளுக்கார்ந்து வெளியிலே வந்து தம்முடைய ருச்சியத்துக்கு வந்து ருச்சியம் பண்ணிக்கொண்டிருந்தார். அந்த கயிதிலே இருந்து தப்பிவித்துக்கொண்ட சேதி அபறங்கசேபுக்கு தெரிந்து சேனேகளே அனுப்பிவித்து சம்பாஜிருஜாவை பிடித்துக்கொண்டு வரச்சொல்லி அனுப்பிவித்தார். அந்த சேனேகள் ருஜா பேரிலே உயித்தத்துக்கு வந்தார்கள். அப்போ சம்பாஜிருஜா உயித்தம் பண்ணி வந்த சேனேகளேயும் சேனுபதியையும் அதம் பண்ணி துரத்திவிட்டார். அதசேஷாள்[4] போய் பாற்ச்சாவுக்கு சொன்னதின் பேரிலே அவர் சூராளா யிருக்கப்பட்ட சேனேகளேயும் வஜீர்களேயு மனுப்பிவித்தார். அவாள் வந்து உயித்தம் பண்ணி கிறுத்திறமங்களேப் பண்ணி சம்பாஜி ருஜாவை பிடித்துக் கொண்டு பாற்ச்சாகிட்ட கொண்டு போய் விட்டார்கள். பாற்ச்சாயி சம்பாஜிருசாவைப் பார்த்து குனிஞ்சு குறனிசுபண்ணு விட்டுவிடுகிறே மென்று சொன்னுர்[5]. அப்போ சம்பாஜிருஜா சொன்னது: நான் உம்முட கிட்ட அகப்பட்டிருக்கிருப்போலே நீரும் நம்முடைய கிட்ட அகப்பட்டிருந்தால் அப்போ தெரியவரும் என்று சொன்னுர். அபறங்கசேபுக்கு கோபம் வந்து திரும்பவும் பாராவிலே வைச்சார். சிறிது நாளேக்குப் பிறபாடு சம்பாஜி ருஜாவை குனியும்

---

"on 23rd March 1680 the Rajah was seized with fever and blood dysentry. The illness continued for twelve days. The maker of the Maratha nation performed the last rites of his religion and fell into a trance, which imperceptibly passed into death. It was the noon of Sunday, 4th April 1680, the full moon of the month of Chaitra"- (Sarkar (1) Page 331)

"He was taken ill at Raigurh, occasioned by painful swelling in his kneejoint, which became gradually worse and atleast threw him into a high fever which on the seventh day from its commencement terminated his existence on the 5th day of April 1680, in the 53rd year of his age"- (Duff, Page 160).

1. அவுரங்கபாது – அகம்மதாபாது (போ. வ. ச. பக். 67)

2. நிற்மாணம் - நிர்ணயம் (டி3119) 3. சீரணி - மிட்டாய் (போ. வ. ச. பக். 68)

4. அதசேஷாள் - கொல்லப்பட்டவர்களேத்தவிர எஞ்சி நின்றவர்கள் (போ. வ. ச. பக். 68)

5. "Ishwardas says that Shambhaji refused to bow to the emperor though urged to do so" - (Aurangazeb - IV, Page 343, F.n)

படியாய் பண்ணுவேணுமென்று ஒரு இடத்திலே ஒரு சின்ன வாசல் படியாய் பண்ணி அந்தவாசல்படியாய் சம்பாஜிருஜாவை பேட்டிக்கு அழைத்தனுப்பிவித்தார். அப்போ அந்த வாசல் படியிலே முன்னே காலைவிட்டு அந்த வழியாய் வந்தார். அதைப் பார்த்து பாச்சாயி ரொம்பவும் சந்தோஷப்பட்டு இவன் வெகு சூரனாக யிருக்கிறான் அவனை யடிக்கப்போகாதென்று சொல்லி யோசனைபண்ணி ருஜாவைப்பார்த்து நீர் துலுக்கனாய் போய்விடும் உம்மைவிட்டுவிடுகிறோமென்று சொன்னார்[6]. அப்போ சம்பாஜி ருஜா சொன்னது: உம்முடைய பெண்ணை நமக்கு கொடுத்தால் நாம் துலுக்கனாய் போறோமென்று சொன்னார்[7]. இந்த சப்த்தம் பாற்ச்சாவுக்கு மஹாகடூரமாய்பட்டு இவரைக் கொண்ணுபோடச் சொல்லி உத்தாரம் பண்ணினார். அந்தப்படியே ருஜாவைக்கொண்ணு போட்டார்கள்[8]. அப்போ சாலியவாகன சகம் ௲௬௱௰௭ ஈசுவரவருஷம்[9]. இந்த சேதி பாற்ச்சாயுடைய பொண் கெழ்விப்பட்டு இப்படிக்கொத்த பெரிய மனுஷன் சமானமா யிருக்கப்பட்ட ருஜா பயப்படாமல் என்னுடைய அபேஷ்சையின் நிமித்தியம் பிராணத்துடனே போய்விட்டார். நான் அப்படிக்கொத்த சூரனுக்கே பெண்சாதியே தவிர மத்த புருஷாளெல்லாரும் எனக்கு பிள்ளை தொகப்பன் தம்பி என்று நிச்சயம் பண்ணிப் போட்டு துலுக்காளுடைய தெண்டகப்படிக்கு[9*] பல்லுக்கு தாச்சனாபொடி[10] போட்டுக் கொண்டாள். துலுக்காளுடைய தெண்டகம் விவாகம் பண்ணிக்கொள்ளாதத்துக்கு முன்னே அந்த[11*] பொண்கள் பல்லுக்கு தாசினாப்பொடிப் போடப்போகாது;[12] கல்லியாணமான பிறகு அந்தப் பொடி பல்லுக்கும் போடுகிற தானபடியினாலே பொண்ணு தாட்சினாப் பொடி போட்டுக்கொண்ட சேதி பாற்ச்சாய் கேழ்விப்பட்டு பெண்ணைப்பாத்து இதுயென்ன இப்படிக்குப் பண்ணினாயென்று கேட்டத்துக்கு, அவள் சொன்னது:

---

6. "Aurangazeb sent a message offering him life on condition of his becoming a Mussulman" - (Duff, Page 200)

7. "Tell the emperor, "said Sumbhajee, "that if he will give me his daughter, I will become a Mussulman" - (Duff, Page 200)

"Shambhaji spurned at the offer of life...and scurrilously asked for one of Aurangazeb's daughters to be given to him as the price of his friendship" (Aurangazeb, IV, Page 343) "That Sambhaji asked for one of Aurangazeb's daughter is stated in "Shambhaji and Rajaram Bakhar." That matter which has no foundation seems to have passed in the later documents ... Due to that it seems that there developed a legend of the love of Zibun Nisa, the daughter of Aurangazeb, with Sambhaji" - P.S. Joshi, Chatrapathi Sambhaji, S. Chand & Company Ltd., Delhi, 1980, page 255, F.n.)

8. "Sumbhajee was publicly executed in the campbazar at Tolapoor about the beginning of August 1689"- (Duff, page 201)

9* முதல் 11* வரையுள்ளவை டி3762இல் இல்லை 9. 1617

10 தாச்சனாப்பொடி - தாச்சினாப்பொடி (டி3119); தக்ஷணாபொடி (டி3762); தாசினா (இருமுடி சேதுராமன் பக். 238); A kind of dentifice for blackening teeth, generally used by elderly women, பெரும்பாலும் வயதுமுதிர்ந்த மகளிர் உபயோகிப்பதும் பல்லில் கறுப்புக்கரையை உண்டாக்குவதுமான ஒருவகைப்பற்பொடி" (Tamil Lexicon, M.U.)

12. போடப்போகாது - உபயோகிப்பதில்லை (போ.வ.ச.பக். 69)

ஞன் யுக்தமாயிருக்கப்பட்ட காரியந்தான் பண்ணினேன்; ஆனுலும் ரெண்டு
வாற்தை[13] நீர் கியாபகமே பண்ணயில்லே: அதுயென்ன வென்றல் உம்மைப்
போலொத்தவர் வயத்திலே செனனமான பிற்பாடு நீரென்னே உம்முடைய
கையின்கீழே யிருக்கிற பேர்களிலே[14] ஒருவனுக்குக் கொடுப்பீர். சம்பாசிருஜா
அப்படிக்கொத்தவனல்ல; உமக்கு சமானமாக யிருக்கப்பட்டவர்: க்ஷாத்திர தற்
மத்திஞலே[15] உமக்கு சலாம் பண்ணுகிறதில்லே யென்று சொன்ஞன்; தம்மு
டைய சவுரியத்தையும் காப்பாத்தினவர் ;இதுதவிர வெகுதேசத்துக்கு அதி
பதியா யிருக்கப்பட்டவர்; அப்படிக்கொத்தவர் யென் பேரிலே ஆசைப்
பட்டு கேட்டபிற்பாடு அவரைவிட அதிகமா யிருக்கிறவரை நீர் ஆரைப்
பார்த்திருக்கிறீர்; இதுவுமல்லாமல் நம்முடைய மதத்திலே ஆராகிலும் துலுக்
கஞகிறேமென்று சம்மதழூஞல் அவாள் கேழ்க்காமல் யிருக்கப்பட்டத்தைக்
கேட்டாலும் கொடுத்து அவனே துலுக்கன் பண்ணுகிறது ஞாயமானபடியி
ஞலே ரெண்டு காரியத்திலேயும் நீர் தப்பிப்போனீர்; இனிமேலேக்கு ஞன்
இன்ன மொருதனே கலியாணம் பண்ணிக்கொண்டு யெத்தனே[16] ஞளேக்குப்
பிழைத்திருக்கிறது; முக்கியங் கீற்தியை கார்ப்பாத்த வேணும்; ஆகையிஞலே
யென்பேரிலே அவர் மோகித்து பிராணத்தை விட்டபடியிஞலே அவருக்கே ஞன்
இஸ்த்திறி[17] யானபடியிஞலே வைதவியமா யிருக்கிறதே யெனக்கு சுதற்மம்[18];
சம்பாஜிருஜாவைத் தவிர வேறே புருஷாளுடனே பேசுகிறது தனக்கு[19]விபசார
மென்று நிற்செயம் பண்ணிக்கொண்டெனென்று கண்டிப்பாய் உத்திரவு சொன்
னத்தின் பேரிலே, பாச்சா விதனமாய் இசுவரர் நம்முடைய வயத்திலே மூணு
பிள்ளேக்குப் பிற்பாடு ஒருபெண் கொடுத்தார். அவள் சமுசாரம் வியத்தமாய்[20]
போய்விட்டுது. இதுவுமல்லாமல் அவள் இந்த ரெண்டு காரணமுஞ் சொல்லி
தன்னுடைய நிற்செயமும் சொன்னது பிறபஞ்சத்துக்கும் பாரமார்தீகத்துக்கும்
யொக்தமாக யிருக்கப்பட்ட வாற்தைதான் சொன்ஞள்; ஆகிலும் ஞம் கோபத்தி
ஞலே வஞ்சினே பண்ணின படியிஞலே[21*] பொறுமைக்கு சமானமானது லோகத்தி
லொன்றுமில்லே; பொறுமையே பண்ணவேணும்; கோபம் பாபம்; அதை விட
வேணு மென்று சகல சாஸ்த்திரங்களிலேயுஞ் சொல்லுகிறது நிஜந்தான்; ஆனல்
தம்முடைய கோபம் தம்முடைய மகளே பிறபஞ்சிய சவுக்கியத்துக் கிடமில்லாமல்

---

13. வாற்தை - விஷயங்கள் (போ.வ.ச.பக். 69)

14. பேர்களிலே - இச்சொல் டி3119இல் இல்லே

15. க்ஷாத்திரதற்மத்திஞலே - க்ஷாத்திரவந்தத்துஞலே (டி3762); சாத்திரதர்மத்திஞலே (டி3119) (டி3762 இல் இருக்கிற பாடமே சிறந்தது).

16. யெத்தனே - எத்தினி (டி3762) 17. இஸ்த்திறி - ஸ்ரீ (டி3762)

18. சுதற்மம் - சுகுந்த தருமம் (டி3119); சுவதர்மம் (போ. வ. ச. பக். 70)

19. தனக்கு - எனக்கு (டி3119) 20. வியத்தமாய் - வியர்த்தமாய் (டி3762)

21* முதல் 23* வரை; "பொறுமைக்கு மிஞ்சினபெமிதில்லேயென்று சாஸ்திரங்களிலே சொல்லுகிறது நிசந்தானென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு தம்முடைய மனதிலே பட்டு அதற்கு மேலந்தப் பெண்மனதுக் கெந்தவிதத்திலே சௌக்கியங் கொடுத்துப் பார்க்கப் போகிறே மென்று குருவிதனத்திலே" - இங்ஙனம் டி3119இல் காணலாம்.

பண்ணிப்போட்டு தென்று மனதிலே ரொம்பவு கவிதமாய்[22] இந்த பொண்ணுக்கு யெந்த விதத்திலே சந்தோஷத்தையுஞ் சவுக்கியத்தையுங் கொடுத்து பார்க்கப் போருே மென்கிற விசனத்தினுலே[23*] சம்பாஜிருஜாவுடைய பாக்கியத்துக்கு அதி பதி ஆரிருக்கிருனே அதை விசாரித்து அவனே தம்முடைய கிட்ட விடசொல்லி உத்தாரம் பண்ணினுர். அதுக்குப் பிற்பாடு பார்ச்சாயியுடைய மனுஷாள் சாத்தாற புனு பிருந்தியத்திலே விசாறணே பண்ணினுர்கள். அப்போ சம்பாஜி ருஜாவை பிடித்துக்கொண்டு போறபோது அவருக்கு குணரெத்தினம் குலதீபகமா யிருக்கப்பட்ட சாவுருஜா[24] சாலியவாகன சகம் ௲௬௱௰௪[25] பவ வருஷம் செனனமாய் மூணுவருஷமா யிருந்துது. அதை அவர்களுக்கு தெரிய வொட்டாமல் பாற்ச்சாயுடைய பயத்தினுலே ஒளித்து வைத்திருந்தார்கள். அப்பால் பாதுஷா கிட்டயிருந்து அவாளுக்கு பிறமாண பூறுவகமாய் அபையங் கொடுத்து அனுப்பிவித்தபடியினுலே இவாள் சாவுருஜா குழந்தையாக யிருக்கிற வரை , எடுத்துக்கொண்டு விசாரிக்கிறத்துக்கு வந்த மனுஷாளுடனே கூட டில்லிக்குப் போய் அபறங்கசிபு பாதுஷாகிட்ட கொண்டு வந்து விட்டார்கள்[26]. அப்போ பாதுஷாவுக்கு சந்தோஷமாய் பசியாதாபப்பட்டு[27] ஸாஹூருஜாவை எடுத்துக்கொண்டு[28] பொண் இருக்கிற மாலுக்குப்போய் அம்மா உன்பிள்ளேயை வாங்கிக்கொ வென்று அவள் கையிலே[29] கொடுத்தார். அப்போ அவளுக்கு மகாசந்தோஷமாய் தனக்கு சகல சவுக்கியத்துக்கு இந்தப்பிள்ளேதான் காறண

---

22. கவிதமாய் - வியதனமாய் (டி3762)

24. சாவு - ஷாஹூ, "Rajaram lived in terms of friendship with Yessoo Bai, the legitimate wife of Sumbajee who, with her son Sivajee, resided in Raigarh- (Duff, Page, 202); "the emperor himself became partial to the boy whom he named Sahoo, an appellation which pronouncing it Shao, he everafter chose to retain" (Duff, Page 204)

25. சகம் 1614; போ.வ.ச.சகம் 1615 என்று கூறும் (பக்.71); ஷாஹூ பிறந்தது 18-5-1682 என்பர், சர்தேசாய் (II பக். 16)

26. வரலாற்றாசிரியர்கள் ஷாஹூவையும் பிறரையும் கைது செய்தார்கள் என்பர்:

"The widow of Shambhaji and her son Sivajee fell into the hands of Yeatikad Khan; they were conveyed to camp" - (Duff, Page 203)

"After a long struggle he (Itigad Khan) captured the fort (Raigarh) on 19th October 1689 and seized in it Shivaji's surviving widows and Shambaji's and Rajaram's wives, daughters and sons, including Shahu, a boy of seven. The captives were brought to the imperial camp at Koregaon (12 miles north-east of Puna) on 23rd November. The ladies were lodged in separate tents with every respect and privacy. Shahu was given the rank of 7-Hazari and the title of rajah but kept a prisoner near the imperial tent"- (Aurangazeb, II Page 546). Shahu's real name was Shivaji and on arrival at the camp Aurangazeb called him Shivaji the Sav (honest) in contrast with his wily grandfather. This word Sav is said to have been corrupted into Shahu (Sadhu - Sahu) by which name he thereafter continued to be known" - (Sardesai, Page 351)

27. பசியாதாபபட்டு - பசியாற்றப்பட்டு (டி3119); பச்சாதாபப்பட்டு - மனமிரங்கி

28. எடுத்துக்கொண்டு - இடுப்பிலே எடுத்துக்கொண்டு (டி3119)

29. கையிலே - கைலே (டி3762)

மென்று நிச்சயம் பண்ணி அந்த பிள்ளையை யிந்து தற்மத்துக்கு எவ்வளவாகிலும்[30] வித்தியாசம் வராமல் சகல விதத்திலேயும் சவரக்ஷணை பண்ணி வித்தையுங் கற்பித்துக்கொடுத்தார்கள்.

ஸாஹூ ராஜாவுக்கு வித்தையும் பரிபூறணமாய் வந்துபணிரெண்டு வயது மாச்சுது. அப்போ பாற்ச்சாவுடைய பெண்[31] தன்னுடைய பிள்ளையின் ரூபம் வயதும் வித்தையும் அன்னியயொன்னியம்[32] இத்தனை யோக்கியமா யிருக்கிறத்தையெல்லாம் பார்த்து அவருக்கு கலியாணம் பண்ணவேணுமென்று அபேச்சையாய் பாற்ச்சாயிக்குச் சொன்னாள். அப்போ பாற்ச்சாயி கலியாணத்துக்கு யோக்கியதைக்கி தக்கதாய் சிலவுக்குங் கொடுத்து கலியாணம் பண்ணிக்கொண்டு பெண்ணையும் பிள்ளையும் அழைத்துக்கொண்டு வாருங்கோளென்று உத்தாரம் பண்ணி அனுப்பிவித்தார். அதுக்குத் தக்கதாய் ஸாஹூ ருஜாவுக்கு ஜாதவ[33] வீட்டுக் கன்னிகை சக்வாற்பாயியை கல்லியாணம்[34] பண்ணியான பிற்பாடு பொண்ணையும் பிள்ளையையும் பாதுஷாகிட்ட அனுப்பிவிக்கிற வேளையிலே உறைமுறையா ரெல்லாருஞ் சேர்ந்து யோசினை பண்ணினது; பாற்ச்சாயி எத்தனை பிறியமாக யிருந்தாலும் துலுக்காளுடைய சாதியென்று அனுமானப்பட்டு அந்த சக்வார்பாயியை அனுப்பாமல் அந்த ஸ்தானத்துக்கு வீரு[35] யென்னப்பட்ட வெள்ளாட்டி[36]யை நிச்சயம் பண்ணி அனுப்பிவித்தார்கள் அப்போபெண்ணையும் பிள்ளையையும் பாற்ச்சாயி தன் ரெண்டு துடையின்பேரிலே உளுக்காரவைத்துக்கொண்டு பொண்ணைப் பார்க்கிற வேளையிலே இதிலே[37] கிறுத்திறமம்[38]

---

30. யிந்து தற்மத்துக்கு எவ்வளவாகிலும் - யிந்தத் தருமத்துக் கொளவாகிலும் (டி3119)

31. பாட்சாபெண் - ஜிநத் உன்னிஸா பேகம் (Zinat-un-Nisa Begam never failing guardian angel - Sardesai, II P.18)

"At the request of Begam Sahib, the emperor's daughter, a place was assigned to them near herself and she continued to show them unremitting kindness during many years of captivity. The boy was at first constantly with her, and Aurangzeb during his visits to his daughter, took much notice of him" - (Duff, Page 230)

32. அன்னிய யொன்னியம் இத்தனை யோக்கியமா யிருக்கிறத்தை - மன்னிய வுன்னியமு மித்தனையா யிருக்கிறத்தை (டி3119); எவரிடத்தும் அன்பு முதலிய நற்குணங்களை (போ.வ.ச. பக். 71). அன்னிய யொன்னியம் - அன்னியோன்னியம் - ஒற்றுமை (Tamil Lexicon, M.U)

33. 'Jadow of Sindkheir, to whom the emperor had given the title of Roostam Rao'' (Duff, Page 12).ஜாதவ வீட்டு – சாதவாவுடைய (டி3119)

34. Shahu took in all four legitimate wives Ambikabai, Savitribai, Sakwarbai, and Sagunabai. His marriage with the first took place some time about 1703 in the Emperor's Camp...Shahu on his return home married two wives, Sakwarbai the elder and Sagunabai the younger" (Sardesai II Page 289).

35. வீரு: "Shahu's house hold was for long satisfactorily controlled by his illegitimate wife Viru Bai, a capable woman who most carefully and lovingly looked after the personal comfort of the king and who exercised a healthy control over the two queens. Viru died on 24th December 1740" – (Sardesai II Page 277).

36. வெள்ளாட்டி - வேலைக்காரி (போ.வ.ச.பக். 72)

37. இதிலே - பெண்ணிடத்திலே (டி3119) 38. கிறுத்திறமம் - மாறுபாடு (போ.வ.ச.பக். 72)

இருக்குதென்று நினைத்து தம்முடைய துடையின் பேரிலே உளுக்கார வைத்துக் கொண்டபடியினாலே ஸாஹுருஜாவுடைய பாக்கியமெல்லாம் இந்தப் பொண்ணு தான் அனுபவிக்குமென்று தம்முடைய கையினாலே ரெண்டு பேரையும் தடவி ரெண்டுபேருக்கும் சகல ஆபரணமும் கொடுத்து ஸாஹுருஜாவுடைய பெரியோர்கள் சம்பாதிச்ச ருட்சியம் சகலமும்[39] ருஜாவுக்குக் கொடுத்து அவர் சொந்த தேசத்துக்கு உத்தாரம் கொடுத்து அனுப்பிவிக்குற சமையத்திலே பாச்சாயி பொண்ணு கேட்டது: அவர் ருட்சியத்தை அவருக்கு கொடுத்தீர்; ஆனால் நம்முது ஒண்ணும் யென்னுடைய பிள்ளை ஸாஹுவுக்கு கொடுக்கயில்லை யென்று சொன்னாள். இந்த சேதி பாற்சாயி கேட்டு யுக்த்தந்தானென்று நினைத்து நம்முடைய பாக்கியத்திலே நம்முடைய மூணு பிள்ளைகளுக்கு எப்படி பங்கு பிறித்துக் கொள்ளுவார்களோ அப்படியே நீயும் ஞலாவதி குமாரத்தியான படியினாலே ஞலத் தொண்ணு அவள் பிள்ளைக்குச் சேரவேணுமென்று[40*] தனக்கு வருகிற ரவாத்துலே ஒரு பணம் முதலில் ஞலத்தொண்ணு ஸாஹுருஜாவுக்குப் போய்ச் செருகிறது[41*] என்று உத்தாரம் பண்ணி[42] கடுதாசிக்கொடுத்து[43] ஸாஹுருஜாவை பூனா பிருந்தியத்துக்கு அனுப்பிவைத்தார்.[44] சாத்தாறுக்கு வந்து சாலியவாகன சகம் ௲௬௱௨௰௭[45] பாற்திப வருஷத்தில் சிம்மாதனத்தில் உளுக்கார்ந்தார். அப்பால் ஸாஹுருஜா தம்முடைய தாயாதியளுக்குள்ளே றகோஜி[46] யென்கிற பிள்ளையை வளர்த்துக்

---

39. "The Emperor bestowed on Shao the districts of Akulkote, Indapoor, Sopa and Neywassa as Jagir" - (Duff, Page 231)

40* முதல் 41* வரை: "யெங்கெங்கே யிருந்து பணம்வருமோ அதுகளிலே யெல்லாம் சாவுராசாவுக்கு நாலத்தொன்று" - இங்ஙனம் டி.3119இல் உளது

42. உத்தாரம்பண்ணி - பிரமாணிக்கம் பண்ணி (டி.3119); வாக்குறுதிசெய்து (போ. வ. ச. பக். 72); நாலத்தொன்று - சவுத் (Chauth); "Aurangzeb tries to sow dissension among the Mahrathas by releasing Shahu granting him of the Chauth of the Deccan"- (Aurangazeb V Page 158)

43. கடுதாசிக்கொடுத்து – இது டி.3119 இல் இல்லை

44. "It was only after Aurangzeb's death that Prince Azam......conuived at the escape of Shahu to the Deccan" -(Aurangazeb V Page 159)

"Azam Shah honoured Shahu with gifts and presents but put off the actual release for one reason or the other......(He) left the Mughul camp on 8th May (1707)"-(Sardesai II Page 18)

45. சகம் 1627: சகம் 1626 என்று போ. வ. ச. கூறும் (பக். 72)

"Shao, on obtaining possession of Satara formally seated himself on the throne in the month of March 1708"- (Duff, Page 233). "The coronation ceremony was duly performed on 12th January 1708"- (Sardesai II Page 23).

46. ரகோஜி: "Raghojee had been appointed to the situation of Sena Sahib... ...his station was too humble to bring him into general notice; but he had in a confined sphere distinguished himself by superor intelligence, activity & spirit. ......... Raghojee had accompanied Shao in his excursions and from being a bold and expert hunter had ingratiated himself with the Raja and obtained a great ascendancy over him"- (Sardesai II P)

கொண்டு வந்தார். அதின் பிறகு ஒரு ஞள் சாரிக்குப் போனவிடத்தில்[47] ஒரு சுந்தரமா யிருக்கப்பட்ட குழந்தை விளையாடிக்கொண்டிருந்ததைப் பார்த்து பல்லாக்கு மேல் வைத்துக்கொண்டு அரமனைக்கு வந்து விசாரிக்கிற விடத்தில் லொகண்டே யென்கிற ருஜாவுக்கு யாரோ ஒரு சினேகிதனும்[48] அவனுடைய பிள்ளை யென்று தெரிந்து அந்த குழந்தையை வளத்து அவனுக்கு பத்தே சிங்கு[49] யென்று பேர்வைத்து அவன் பேருக்கு பெரிய தவலத்து பண்ணி[50] யோக்கியமா யிருக்கப்பட்ட ஆப்த்தனுடைய பெண்ணை பத்தேசிங்குக்கு கலியாணம் பண்ணி அவனுக்கு அங்கல்கோட்டை[51]யையும் அதுக்குக் கீழிருக்கிற ருட்சியத்தையும் பத்தேசிங்குக்குக் கொடுத்தார். அப்படியே ருகோஜி போசலைக்கு வீருபாயி மடியிலேபோட்டு[52] அவனுக்குக் கலியாணம் பண்ணி[53]அவனை வீருபாயிக்கு தத்துக்கொடுத்தபடியினாலே[54] குறைச்ச லென்கிறத்துக்கு யிடமான படியினாலே அந்த ரகோஜி பொசலையை தம்முடைய சொந்த ருச்சியத்திலே வைய்யாமல் ஞகபூர் ருட்சியத்தை அவனுக்குக் கொடுத்தார்.

இன்னம் தம்முடைய தாயாதிகளிலே முன்வம்சம் எழுதியிருக்கிறத்தில்[55] பதிமூணுவது புருஷன் பாவாஜிருஜா என்று யெழுதி யிருக்குது. அவருடைய பிள்ளை மாளோஜி ருஜா வென்றும்[56] விட்டோஜிருஜா வென்றும்[57] ரெண்டு பிள்ளைகள் எழுதி யிருக்குது. அந்த விட்டோஜிருஜாவுக்கு யெட்டு பிள்ளைகள் பிறந்து தென்றும் நிஜாம்பாற்ச்சாயி ஞளையிலே இந்தயெட்டு பிள்ளைகளில்

---

47. சாரிக்குப் போனவிடத்தில் - உலாவச்சென்றவிடத்தில் (போ. வ. ச. பக். 73)

48. சினேகிதமாம் — ஆப்தனுயிருந்தான் (டி3119)

49. "He (Shahu) had an accidental litlle skirmish with the villagers of Parad about 25 miles north of Daulatabad. The Patil of the village was killed and his widow brought her little son to Shahu and sought his protection. Shahu looking upon the encounter as his first victory, gave the boy the name Fatesinh and brought him up as his own son. This boy of the Lokhande family came to play an important part at Shahu's Court, was brought up as an heir apparent and would possibly have inherited Shahu's throne, if he had not declined the position himself"- (Sardesai II Page 20)

50. பேருக்குப் பெரிய தவுலத்பண்ணி - ஏராளமான சொத்துக்களையும் கொடுத்து (போ. வ. ச. பக். 73)

51. "He (Shahu) stationed Fatesinh Bhosle his god-son at Akalkol on the southern frontiers of the Maratha Kingdom by way of check upon the Nawab of Haiderabad"- (Sardesai II Page 62)

52. மடியில் போட்டு - சுவீகாரமாகக்கொடுத்து (போ. வ. ச. பக். 73)

53. "Shao married him (Raghooji) to the sister of one of his own wives of the Sirkay family" - (Duff, Page 289)

54. வீருபாயிக்கு தத்துக் கொடுத்தபடியினுலே — வீருபாய் மடியிலே போட்டபடியினுலே (டி3119)

55. கால்வழிமுறையில் அட்டவணை II பார்க்க

56. என்றும் - ஒன்று (டி3119) 57. என்றும் — ஒன்று இந்தப்படிக்கு (டி3119)

ஒருத்தர் ரெண்டு பேருடைய கீர்த்தியை எழுதியிருக்குதே அந்த யெட்டு பிள்ளைகளுக்குள்ளே மாலோஜிராஜா என்கிறவருடைய பிள்ளை மாணுகோஜி[58]ராஜா, அவர் பிள்ளை விட்டோஜிராஜா, அவர்பிள்ளை பறஸோஜிராஜா, அவருக்கு ரெண்டு பிள்ளைகள், அதுலே மூத்தவன் சையாஜி,[59] இளையவன் ராமராஜா, இந்த ராமராஜாவை ஸாஹுராஜா யென்கிறவர் வளத்துக்கொண்டுவந்தார்.

கொஞ்சம் நாளைக்குப் பிற்ப்பாடு சாஹுராஜாவுக்கு றம்பவும் உபத்திரவமாய் புனவிலே யிருந்து பேசுவாயி[60] அழைத்தனுப்பிவித்து நீர் யெப்படி யாகிலும் நம்முடைய பேரை நிலைநிறுத்தவேணுமென்று சொல்லிப் பரமபதம் அடைந்தார்.[61] அப்பால் ராஜா வளத்துக்கொண்ட ராமராஜாவுக்கு சாலியவாகன சகம் ௲௬௱௪௰௭[62] ஸ்ரீமுக வருஷத்தில் சிம்மாசனத்தில் உளுக்கார வைத்தார்கள், அவர் சில நாள் வரைக்கும் ராட்சியத்தை அனுபவித்து பிராணன் போற சமையத்திலே அந்த விட்டோஜிராஜா பிள்ளைகள் யெட்டுப்பேரிலே கேலோஜி ராஜாவுடைய பேரப்பிள்ளை உமாஜிராஜாவென்று வாய்[63] தேசத்திலே யிருந்தார்; அவர் பிள்ளை சஹி[64] ராஜாவுக்கு ராமராஜா தெய்வகெதியான பிற்பாடு சாலியவாகன சகம் ௲௬௱௯௰௪ செயஸ்ரீ[65] சாத்தாற தேசத்து சிம்மாசனத்தும் பேரிலே உளுக்கார வைத்தார்கள். இப்போ அவர்தான் ராஜாவாக யிருக்கிறார்.

சிவாஜி ராஜாவுக்கு ரெண்டாம் பிள்ளை ராஜாராமுக்கு பனாளாதேசத்துக் கதிபதியாக யிருந்தாரே[66] அவர் விழுந்து போன பிற்பாடு அவருடைய பிள்ளை[67] சம்பாஜிராஜா யென்கிறவர் ராட்சியம் பண்ணிக்கொண்டுவந்தார். அவருக்கு

---

58. மாணுகோஜி – மணகோஜி (போ. வ. ச. பக். 73)

59. சையாஜி - சம்பாஜி (போ. வ. ச. பக். 73)

60. பேச்சுவாயி - பேச்சுவா (டி3119): (Peshwa-a Prime Minister) பாவாஜி பாஜி ராவ்

61. "Shau expired at his palace of Rangamahal at Shahunagar on 15th December 1749"- (Sardesai II Page 288)

62. சகம் 1647; டி3180 இலும் இங்ஙனமே உள்ளது; போ. வ. ச. வில் 1674 என்றுளது.

"On Thursday 4th January 1750, Paush Shukla 1, Shak 1671 Ramaraja ... ascended the throne at Shahu nagar late in the afternoon"

குறிப்பு: சிவாஜியின் இரண்டாவது மகன் ராஜாராம். அவருக்குத் தாராபாய் என்றொரு மனைவியுண்டு. அவளுக்குச் சிவாஜி என்று ஒரு மகன் இருந்தார். அச்சிவாஜிக்கு அவருடைய மனைவி பவானி பாயிக்குப் பிறந்தவர் ராம்ராஜா என்று தெரிகிறது. "Tarabai declared him to be posthumous son of her son Shivaji born of the latter's wife Bhavani Bai. According to her story he was born at Panhala and was secretly removed to several other places for fear that Sambhaji of Kolhapur and his rani Jija bai might resort to foul play against the child's life"- (Sardesai II Page 301)

63. வாய் - Wai; வாயு (டி3119)

64. சஹிராஜா - சாவுராசா (டி3119); ஷாஹு (போ. வ. ச. பக். 74)

65. சகம் 1694 - சகம் 1695 என்று போ.வ.ச. விலுள்ளது (பக். 74)

66. தேசத்துக் கதிபதியாக யிருந்தாரே - தேசத்து ராஜ்யம் கொடுத்திருந்ததே (டி3119)

67. அவருடைய பிள்ளை - அவருக்குக் குலதீபமா யிருக்கப்பட்ட பிள்ளை (டி3119)

சந்ததி யில்லே. அவர் விழுந்து போற சமையத்திலே[68] தம்முடைய தாயாதி களிலே ஒரு பிள்ளே வாங்கி அவருக்கு சிவாஜிருஜா[69] வென்று பேர்வைத்து சம்பாஜிருஜா விழுந்து போன பிற்பாடு அந்த சிவாஜிருஜா ருட்சிய மாண்டுக்கொண்டு வருகிருர். இப்போதும் பஞளா தேசத்துக் கதிபதியாக யிருக்கிருர்.

**(10) ஏகோஜி IV தஞ்சையைக் கைப்பற்றியது**

இப்போ தஞ்சாவூர் சாதிச்ச யெகோஜி ராஜாவுடைய வம்சம் சவவிஸ்தாரத்தை[1] எழுதி யிருக்கிறது.

போசலெ வம்சத்தில் இவர் னாலாவது யெகோஜி ராஜா. இவர் ரெண்டாந்திரம் பெங்களூர் ராட்சியம் பண்ணிக் கொண்டிருக்கிற போது விசையாபுரத்து பாதுஷா அல்வியெதல் ஷாவுடைய கடுதாசி வந்தது. அதில் தஞ்சாவூர் ராட்சியம் விசையை[2] ருகவ நாயக்கர் வகையெறா பேரிலே திருச்சினாப்பள்ளியிலே றாட்சியம் பண்ணுகிற னாயக்கர்[3] கூட்டம் யெதுத்துத் தஞ்சாவூர்க் கோட்டையை வந்து சுத்திக் கொண்டிருக்கிறார்களென்று தஞ்சாவூர் வைக்கிலை அனுப்புவித்தபடியினாலே[4] காதிலய

---

68. இறந்தது 18-12-1760 (சர்தேசாய் II பக். 313)

69. "She (the wife of Sambaji) adopted on the Dasara day of 1762 (Sep. 27) a boy from the Khanwat branch and named him Shivaji" (Sardesai II Page 314)

குறிப்பு: சர்தேசாய் (II பக்கம் 350) அவரங்கசீபு மகள் பற்றிக் கூறுவது பின்வருமாறு: -

Throughout the Emperor's (Auranzeb's) residence in the Deccan, his domestic affairs were looked after by his daughter Zinat-un-Nisa Begam an intelligent, painstaking and kind hearted lady unmarried, now 47 years old (born on 5-10-1643) to whose care the emperor entrusted the prisoners Shahu & YesuBai. The Begam was born of the same mother as the emperor's rebel son Akbar and like him entertained a tender feeling for the Maratha, being by nature of a pious philosophical outlook upon life. She therefore felt a deep interest and compassion for YesuBai. Her son who on this account developed a sense of filial reverence for her which endured long after Auranga-zeb's death. This Zinat-un-Nisa built a mosque at Delhi out of her won private money & died in 1721 ... She was certainly instrumental in letting Shahu go back to the Deccan from the river Narmada in 1707.

1. சவவிஸ்தாரம் - சவிஸ்தாரம் - விரிவு 2. விசையை - விசய

3. சொக்கநாத நாயக்கர்

4. நடந்த செய்திகள் பின்வருமாறு: "தஞ்சையில் ஆட்சிபுரிந்த விஜயராகவ நாயக்கருக்கும் மதுரையில் - திருச்சியில் ஆட்சிபுரிந்த சொக்கநாத நாயக்கருக்கும் பகைமை யிருந்து வந்தது. ஒரு சமயம் மதுரை நாயக்கர் தஞ்சை நாயக்கரின் மகளாரை மணம் வேட்டார். தஞ்சை நாயக்கர் தன் மகளை மகட்கொடை நேர்தற்கு விரும்பவில்லை. மதுரை நாயக்கர் தஞ்சை மேல் படையெடுத்தார். தஞ்சை நாயக்கராகிய விஜயராகவர் தன் அரச குடும்பத்தவர் எல்லாரையும் பார்த்துத் தான் வெற்றி பெற்று வாராவிடில் இறந்துபடுக என்று கூறி அதற்கான வழிவகைகளை ஏற்பாடு செய்து போர்க்குச் சென்றார்; போர்க்களத்தில் இறந்தார். முன்னமே ஏற்பாடு செய்த வண்ணம் அரசமாதேவியர் உயிர் துறந்தனர். எனினும் விஜயராகவருடைய மாதேவியருள் ஒருவர் தன் நான்கு வயது மகனை ஒரு தாதியிடம் கொடுத்துத் தப்பியோடுமாறு செய்தார்.

தஞ்சை நாயக்கர் இறந்ததும் மதுரைச் சொக்கநாத நாயக்கர் தனது தம்பி அளகிரி என்பவரைத் தஞ்சையில் ஆட்சி செய்யுமாறு அனுப்பினார். சில ஆண்டுகள் அடங்கியிருந்த அளகிரி தன் னுரிமை எய்தவிரும்பினார்; இங்ஙனம் அளகிரி மாறியது அமைச்சர் ஆகிய ராயசம் வெங்கண்ணா என்பவராலேயாம்.

கலாசுகான் அபதல்அலிம் இந்த இரண்டு வஜீர்[5]களுடனே கூடக் கொஞ்சஞ் சேனையும் கூட்டி அனுப்பிவித்திருக்குது. நீரும் இந்த சேனைகளுடனே உம்முடைய சேனைகளையும் அழைத்துக்கொண்டுபோய் திருச்சினாப்பள்ளி னாயக்கர் சேனைகளை அடித்துத்துரத்தி தஞ்சாவூருக்கு மோக்கிளாபண்ணி[6] பாதுஷாவுடைய பேஷ்கஷ் பணம் அவாள் பேரிலே பாக்கியிருக்கிறத்தையும் இப்போ பாளைய மெடுத்துப்போற சிலவுக்கும் மொகறற பண்ணி[7] அந்தப் பணத்தையும் வாங்கி அனுப்பிவிக்கச் சொல்லி யெழுதி யிருந்தத்தை வாசித்துப் பார்த்து கொண்டு ருஜா பெங்குளூர் றாட்சியத்தையும் கோட்டையும் காகலகற் காட்டிகே சுஞ்சாரா[8] வுடைய சுவாதீனம் பண்ணிக் கொண்டு வசிருடனே கூடத் தஞ்சாவூருக்கு வருகிற போது ஆரணிக்கோட்டையை செயித்து[9] அங்கேயிருந்து தஞ்சாவூர் பிறஙந்தியத்துக்கு வந்து திருச்சினாப்பள்ளி ஞயக்கர் கூட்டத்துச் சேனைகளை அடித்து துரத்தி தஞ்சாவூருக்கு மோக்களாபண்ணி பெஷ்கஷ் தண்டுசிலவு நிமித்தியம் தாம் திருமுல்லைவாடி[10]யிலே யிறங்கி கூட வந்த ரெண்டு வஜீர் காதிற் யெகலாசுக்கான் அபதல்அலிம் இவாள் ரெண்டு பேரையும் பணத்துக்கு கண்டிப்பு பண்ணுகிற நிமித்தியம் கோட்டை வெளியிலே நிறுத்தி வைத்து றாஜாமாத்திரம் ரெண்டாவது புத்திரன் சறபோஜி றாஜா செனன மாகிறபடியினாலே[11] திருமுல்லைவாடியிலே இறங்கியிருந்தார். அப்போ சாலியவாகன சகம் [illegible][12] ராக்ஷத வருஷத்திலே மூணாவது சறபோஜி ராஜா செனனமானார் என்கிற சேதி முன்னமே எழுதி யிருக்கிறது.[13]

---

இதற்கிடையில் விஜயராகவநாயக்கருடைய மகன் செங்கமலதாஸ் என்ற பெயரில் நாகப்பட்டணத்தில் வளர்ந்து வருவதை அறிந்த வெங்கண்ணா அளகிரியை நீக்கிச் செங்கமல தாஸை அரசனாக ஆக்க நினைத்தார்; நாகப்பட்டணத்துக்குச் சென்றார்; செங்கமலதாஸுடன் பிஜப்பூரை யடைந்தார்; பிஜப்பூர் சுல்தான் உதவியை வேண்டினார். பிஜப்பூர் சுல்தானும் தன் வசிர்களை அனுப்பினார்.

5. காதில யெகலாசுகான் அப்தல்அலிம் இந்த இரண்டு வஜீர்கள் - காதர் என்பவரையும் கலாஸ் கான் அப்துல்ஹலிம் என்ற இருமந்திரிகளையும் (போ. வ. ச. பக். 75)

6. மோக்கிளா பண்ணி - விடுதலையளித்து (போ. வ. ச. பக். 75)

7. மொகறற பண்ணி - மொகற்பண்ணி (டி.3119)

8. காகல்கற் காட்டிகே சுஞ்சாரா - காகல்கர் காடேஜு ஜாகா (போ. வ. ச. பக். 75)

9. "After capturing the fort of Arni on his way, Ekoji marched on Tanjore" - (Srinivasan, Page 129)

10. திருமுல்லைவாடி - திருமலவாடி (போ. வ. ச. பக். 75); இது திருமழபாடியாதல் வேண்டும். கும்பகோணத்தில் தங்கியிருந்தார் என்று பின்வரும் கூற்றால் அறியப்பெறும்:—

"It is also said that he received the districts of Kumbakonam, Mannarkoil and Papanasam to cover the expenses of his expedition.. After this Ekoji returned to Kumbakonam for a short stay"- (Srinivasan, Page 131)

11. செனனமாகிற படியினாலே - செனனமாகிற சமயமானபடியினாலே (டி.3119)

12. சகம் 1596

13. "என்கிற சேதி முன்னமே எழுதி யிருக்கிறது" என்ற பகுதி போ. வ. ச. வில் இல்லை.

அதுக்கு பிற்பாடு தஞ்சாவூர் விசையறாகவ னாயக்கன் வகையெறா பெஷ்கஷ் முதலாகிய பணம் குடுக்கிறத்துக்கு தில்லுமல்லும் பண்ணிக் கொண்டு ஒண்ணுக் கொண்ணு நீ பெரியவன் நான் பெரியவன் என்று சற்ச்சையாய் விசையாபுரத்துக்கு அனுப்பி வைத்த வைக்கீலையுந் தள்ளிப்பொட்டு[14] கோட்டை வெளியிலே யிருக்கிற ரெண்டு வஜீர்களையும் தகாப்பண்ணவேணு[15]மென்று யோசினைபண்ணி துருகிறதம் பண்ணினபடியினாலே பாறச்சாய் கிட்ட போயிருந்து[16] வைக்கீலும் மந்திரியும் பிகடாச்சு[17] கோட்டை வெளியிலே யிருக்கிற ரெண்டு வஜீர்கள் கிட்ட வந்து இந்த நாயக்கர் கூட்டம் றம்பவும் துற்புத்தியானார்கள்; நடத்தையும் மஹா கெட்டதாக இருக்குது; ருச்சியத்தையு முழுக் கடித்தார்கள்; ஒண்ணோ டொண்ணு சேரயில்லை; இவாளாலே ராச்சியம் சமாளிக்கிறது கூடாதபடியினாலே நீங்களிந்த ராச்சியத்தை ஆக்கிரமிச்சுக் கொள்ளுங்கொள்; விறுதாவாய் ஒண்ணுக்கொண்ணு சற்ச்சைப்பட்டு பதினைஞ்சு இருபது பேர் செத்துப் போறதாக யிருக்கிறார்கள்; யிருக்கிற சேனைகளும்[18] இந்த நாயக்கர் கூட்டத்து கைக்குள்ளேயுமில்லை; இன்னு நாளையிலே அல்லாபண்ணி[19] நாய்க்கரை அடிச்சுப் போட்டு றாச்சியத்தையுங் கொள்ளை யடிக்கிறவர்களாக யிருக்கிற படியினாலே நீங்களே இந்த றாச்சியத்தை ஆள வேணுமென்று சொன்னார்கள். அப்போ காதலயெக்கிலிசுக்கான் அப்தல் அலிம் ரெண்டு வஜீரும் ரெண்டொரு நாள் மட்டுக்கும் அப்பியந்திரம்பண்ணி சோதிச்சுப் பார்த்தபோது இந்த ரெண்டு பேரும் சொன்னது சரிதான் இதுவுமல்லாமல் றாச்சியத்திலே சேனைகளுடைய[20] சறுதார்களும் வந்து பேசினார்கள். அப்போ வைக்கீலுக்கும் மந்திரிக்கும் ரெண்டு வஜீரும் சொன்னது: நம்மாலே ஆக மாட்டாது; யேகோஜி ராஜா திருமுல்லைவாடியிலே யிருக்கிறார்; அவருக்கு நாங்களும் கடுதாசி யெழுதிக் கொடுக்கிறோம்; நீங்களிருவரும் போய் அவரை அழைத்துக் கொண்டு வந்தால் காரியம் செயமாகுமென்று சொல்லி கடுதாசி எழுதிக் கொடுத்தார். அந்தக் கடுதாசியை வாங்கிக்கொண்டு அந்த மந்திரியும் வைக்கீலும் ரெண்டுபேரும் திருமுல்லைவாடியிலே யேகோஜி ராஜா கிட்ட வந்து கடுதாசும் கொடுத்து கோட்டையிலே யிருக்கிற றாஜாவுடைய ரீதியும் சேனைகளுடைய ரீதியும் தாயாதிகளுடைய நடத்தையும் தெரியப்பண்ணி பிருர்த்தனைப் பண்ணினார்கள். அப்போ யேகோசிராஜா சடிசுவாரியாய் சிறுது சேனைகளை கூட அழைத்துக்கொண்டு தஞ்சாவூருக்கு வந்து ரெண்டு வஜீருடனேயும் பேசிக்கொண்டு அவர்களையும் கூட அழைத்துக்கொண்டு சாலிய

---

14. தள்ளிப்பொட்டு - சரியான அதிகாரம் இல்லை என்று நிராகரித்து (போ. வ. ச. பக். 75)

15. தகாப்பண்ணவேணும் - ஏமாற்றிவிடவேண்டும் (போ. வ. ச. பக். 76)

16. பாறச்சாய்கிட்ட போயிருந்து - பாட்சாகிட்ட பணத்துக்குச் சாமீனாயிருந்த நாய்க்கருடைய (டி 3119)

17. பிகடாச்சு - விரோதமாகி (போ. வ. ச. பக். 76)

18. யிருக்கிற சேனைகளும் - பவுசும் (டி3119)

19. அல்லா பண்ணி - கலகம் செய்து (போ. வ. ச. பக். 76)

20. சேனைகளுடைய - பவுசுகறுடைய (டி3119)

வாகன சகம் ௲௫௱௯௰௬[21] ருக்ஷ வருஷம் மாசி மீ' சுக்குலபக்ஷசம் சப்த்தமி தினம் தஞ்சாவூர் கோட்டை வடக்குவாசல் வழியாய் உள்ளே வந்தபடியினாலே அவர் வந்தவழி அல்லிதற்வாஜா என்று பேராச்சுது. அங்கேயிருந்து சத்தே தூரம் வந்த பிற்பாடு அரண்மனையிலே யிருந்து னாயக்கர் அவர் தாயாதி பந்துக்கள் கொஞ்சம் சேனையும் வாங்கிக்கொணடு யெதிரே வந்தார்கள். அவாள் கையிலே கத்திவாங்கிக் கொண்டு சண்டை போட்டபடியினாலே தஞ்சாவூர் ருச்சியம் பண்ண[22] னாயக்கதம் தாயாதி வகையெருவுகளிலே யேழெட்டுப் பேர் செத்துப் போனார்கள். மத்த பேர் சின்னாபின்னமாய் போய்விட்டார்கள். கோட்டை கைவசமாச்சுது. அதுக்கு மேல் . கொஞ்சம் நஞ்சமிருந்த சல்லியங்களை எடுத்துப்போட்டு[23] உடனே கீழவாசலாலே பிறப்பட்டு வெளியிலே வந்து ருஜா யிறங்கினார். செயித்துவந்த வாசலான படியினாலே பத்தேதர்வாஜா என்று பேராச்சுது. அதுக்கு பிற்பாடு கோட்டை மோக்களவாய் முன்னே மந்திரித்தினம் பண்ணினவண் பாரிசமாகத்தானே கோட்டையை அந்த வேளையிலே காரியம் பார்க்கச்சொல்லி நேமித்து ராஜா வும் ரெண்டு வஜீரும் கோட்டை வெளியிலே யிறங்கின பிற்பாடு யேகோஜி ருஜா ரெண்டு வஜீரையும் பெங்களூர் போறத்துக்கு உத்தாரம் கேட்டார். அப்போ ரெண்டு வஜீரும் யெங்கள் விவகாரம் தீருகிறமட்டுக்கு மிருக்கச்சொல்லி பிருர்த்தனை பண்ணி இந்த றாச்சியம் எனக்கு உனக்கு என்று சண்டை உண் டாச்சுது. இப்படிக்கு ரெண்டு மாதமாச்சுது. இதுக்குள்ளே அபறங்கசீபு பாதஷா சண்டைபோட்டு யெல்லா பாத்ஷாக்களும் அபறங்கசீபு கைக்குள்ளாக ஆனார்கள் என்கிறசேதி வந்தது. விசையாபுரமும் சண்டையாய் நிக்குமோ போமோ என்கிற சமுசயத்தில் விழுந்தது. அப்போ காதல் யெகலாசுகான் அப தல் அலீம் ரெண்டு வஜீரும் யோசனை பண்ணினது. நாமிருவரும் சண்டை போட்டாலும் ஒருவராகிலும் இந்த ருச்சியத்தில் இருப்போமே ஆனுல் யேகோஜி ராஜா பிறப்பட்டு போய் விடுவார். அப்பால் நம்மாலே இந்த கோட் டையை சமாளிக்கக் கூடாது. திருச்சினுபள்ளி நாயக்கர் கூட்டம் புலவந்தாள். ரெண்டாவது அல்லியெதல்ஷாவும் நமக்கு ருச்சியம் தக்க ஒட்டார்.[24] யேகோஜி ராஜா சூரனுக யிருக்கிறான். திருச்சினுபள்ளியாரையும் செயிப்பார். ரெண்

---

21. சகம் 1596 ராஷஸ ஆண்டு என்பது தவறு (சாமிக்கண்ணுப் பிள்ளை);

"Vyankaji profited by their disunion and took Tanjore at the first assault on 12 January 1676 and soon occupied all its territory crowning himself as king of Tanjore on 5 March 1676" - (Sarkar (2) page (67)

"The Tamil work Bhosalvamsham gives the date of the capture of Tanjore as 23rd January 1675 which is wrong by one year. The correct date is 12 January 1676 as is proved by the diary of Fancois Martin, the founder of Pondicherry" (Sarkar (1) P.280 F.n.)

23. கொஞ்சம் நஞ்சமிருந்த சல்லியங்களை எடுத்துப்போட்டு - எஞ்சியிருந்த எதிர்ப்புக்களையும் வென்று (போ. வ. ச. பக். 77)

24. தக்கஒட்டார் - தக்கினத்துக் கொள்ளும்படியாய்ப் பண்ணமாட்டான் (டி3119); நம்மிடமே விட்டு வைக்கமாட்டார் (போ. வ. ச. பக். 78)

டாவது அவர் தம்பி[25] சிவாஜிருஜா அந்த பிராந்தியங்களிலே பிரபலமுக யிருக்கிறபடியினாலே அல்லியெதல் ஷாவும் இவர்பேரில் காரியம் ஒண்ணும் பண்ண மாட்டான். ஆனபடியினுலே யேகோஜி ருஜாவே ருச்சியம் பண்ண வேணும். அவர் நமக்கு வமிச பரம்பரையாக நம்முடைய மரியாதையை நடப்பிக்க வேணும். இந்தப்படிக்குப் பண்ணவேணுமென்று நிச்சயம் பண்ணி யேகோஜி ருஜாவுடனேயும் பேசிக் கொண்டு சம்மதப்படுத்தின உடனே யேகோஜி ராஜா சாலியவாகன சகம் ௲ளகூ௯எ[26] நள வருஷம் சித்திரை மாதத்தில் தஞ்சாவூர் ருச்சிய சிம்மாசனத்திலே உளுக்கார்ந்தார்.[26-அ] யேகோஜி ராஜா தஞ்சாவூர் ருட்சியம் பிருப்த்தியான உடனே அல்லியெதல்ஷா பாதுஷாவுக்கு யோக்கியதைக்குத் தக்கதாய் நஜர்[27] கொடுத்து காதலயெகலாசுகான் அப்தல் அலிம் இநத ரெண்டு வஜீரையும் தம்முடைய கிட்டத்தானே வைத்துக்கொண்டபடியினுலே பாற்ச்சாவுடைய மனசுக்குத்தாங்கல் வராமல்படிக்கு யுக்த்தி யுக்த்தமாக கடுதாசி யெழுதி அனுப்பிவித்தார். அதைப்பார்த்து அல்லியேதில்ஷா றம்பவும் சந்தோஷப்பட்டு யெகோஜி மஹாருஜாவுக்கு வஸ்த்திரம் பத்திரம் அனுப்பிவிக்கிறபோது தஞ்சாவூர் ருட்சியம் யெகோஜி மஹாறாஜாவுக்கு வம்ச பரம்பரையாய் அனுப்பிவிக்கச்[28] சொல்லி சானக்குக்[29] கொடுத்து அனுப்பிவித்தார். அதுக்குப் பிற்பாடு திருச்சினுபள்ளி ஞயக்கர் கூட்டம் யெகோஜி ராஜா பேரிலே ருஜகாரியம் பண்ணத்துக்கு[30] ருஜா அவாள் பேரிலே யெதிர்த்து உயித்தம்பண்ணி அவாள் கிட்டயிருந்து செந்தலைமால்[31] பாக்கு வெத்திலைக்கு யென்று யெழுதி வாங்கிக்கொண்டு காதலயெகலாசுகான் அபதல்அலிம் ரெண்டு பேரையும் அவாளுக்குப் பேசின் மரியாதைப்படிக்கு நடப்பித்துக் கொண்டு ருட்சியம்பண்ணிககொண்டு வந்தார்.

அப்பால் சாலியவாகன சகம் ௲ளகூ௯அ[32] பிங்கள வருஷத்திலே யெகோஜி ராஜாவுக்கு மூணுவது பிள்ளை துக்கொஜி ராஜா செனனமானார். இந்த மூணு பிள்ளையும் யெகோஜி ராஜாவுக்கு மூத்த பெண்சாதி யிங்களே

25. தம்பியென்பது பொருந்தாது; ஏகோஜிக்கு முன்னர்ச் சிவாஜி பிறந்தவராதலின்; போ. வ. ச. வில் சகோதரர் என்றுளது (பக். 78)

26. சகம் 1597. 26 (அ) "The final occupation of that country (Tanjore) was probably achieved by Eccojee after the death of his father. This event is placed by a manuscript history of Tanjore in the Tamil Language belonging to Mackenzie collections"- Wilkes, Historical Sketches of India: History of Mysore (1817) Vol. I Page 78.

27. நஜர் - நசீர் (டி3119); காணிக்கைகள் (போ. வ. ச. பக். 78)

28. அனுப்பிவிக்க - அனுபவிக்க (டி3762)

29. சானக்கு - சாசுவத சாஸனம் (போ. வ. ச. பக். 78)

30. ருஜ காரியம் பண்ணத்துக்கு - ரகசியமாய்த் தக்க யோசனை செய்தபோது (போ. வ. ச. பக். 78-79)

31. செந்தலை மால் - சந்தலி மஹால் (போ. வ. ச. பக். 79); இதனுடன் திருக்காட்டுப் பள்ளியையும் சேர்த்துத் திருமுடி சேதுராமன் சுவடி கூறும். 32. சகம் 1598

பொன்னு தீபாபாயிசாயபு[33] கெற்பத்தில் பிறந்தார்கள். அவருக்கு ரெண்டாவது பெண்சாதி மொத்தே[34] பொன் அண்ணுபாயி சாயபுக்கு ஒரு பொண். இது தவிர அவருக்கு பரிக்கிரஹ ஸ்ரீகள்[35] ஒன்பது பேர். அவாளுக்குப் பிறந்த பிள்ளைகள் பேர்வழி சந்திரபான்ஜி, சூரியபான்ஜி, மித்திரபான், களேபான், கிறத்திபான், விசையபான், உதையபான் இப்படி யேழுபிள்ளை பிறந்தவர்களில் மூத்தபிள்ளை சந்திரபான் சூரனானான். ஆக யெகோஜி ராஜாவுக்கு பத்துப் பிள்ளைகள். அதுக்குப் பிற்பாடு சில னாள் வரைக்கு நீதியாய் ருட்சியபாரம் பண்ணிக்கொண்டு சாலியவாகன சகாப்தம் ௲சுளச[36] ருத்துரோகாரி வருஷம் யெகோஜி ராஜா பரமபதமடைந்தார்.

(11) ஏகோஜி IV மக்கள் மூவரின் ஆட்சி

உடனே அவருக்கு மூத்த பிள்ளை மூணாவது சாசிறாஜாவுக்கு பட்டமாய் அவருக்கு ஸ்ரீ சிம்மாபாயி சாயபு ஒருத்திதான். இது தவிர மொஹ ஸ்ரீகள்[1] வெகுபேர் இருந்தார்கள். அந்த சாஜிராசாவுக்கு கொஞ்ச வயதுலே பிறாப்தமான றாட்சியம்தம்முடைய புத்தியினாலேயும் வைபவத்துனாலேயும் தம்முடைய தம்பி சறபோஜி ராஜா துக்கோஜி ராஜாவுக்கும் தமக்கும் யோக்தகாலத்திலே[2] கல்லியாணம் பண்ணிவித்துக் கொண்டு தாயார் தீபாபாயி ஆவுசாயபு அனுமதியினாலே சகல சனத்துக்கும் சவுக்கியம் வரும்படியாய் தம்முடைய சேனைகளையும் சவரக்ஷணை பண்ணிக்கொண்டு கசானாவையும் மறைத்து வைத்து[3]றாட்சியம் பண்ணிக் கொண்டு வருகிறபோது ஒரு விசை முல்லா வென்கிறவனுடைய கலாபம்,[4] ஒரு தடவை சுலுபுகானுடைய[5] கலாபம், இப்படிக்கொத்த கலாபம்

---

33. சர்தேசாய் (I) பக்கம் 244 அடிக்குறிப்பில் கண்ட பின்வரும் ஆங்கில மொழி பெயர்ப்பு அறிதற்பாலது ஆகும்:-

"Her three sons are Kings
The centre of man's desires
The light of their royal house
Truly has she been named Dipambika
She shines like a lamp"

தீபாம்பாள் பற்றிய செய்திகளைத் தஞ்சைச் சரசுவதி மகால் வடமொழிப் புலவர் திரு. என். ஸ்ரீநிவாஸன் அவர்கள் எழுதிய "குலவிளக்கு தீபாம்பாள்" என்ற கட்டுரையில் காணலாம் (தஞ்சைச் சரசுவதி மகால் முத்திங்கள் இதழ் பாகம் XXXIII எண். 1, 2, 3, காண்க).

34. மொத்தே — மோஹிதே

35. பரிக்கிரக ஸ்ரீகள் - அபிமானத்தால் சேர்த்துக்கொள்ளப்பட்ட மனைவிகள் (போ. வ.ச. பக். 79) 36. சகம் 1604

1. மோஹ ஸ்ரீகள் - அபிமானமாக எடுத்துக் கொள்ளப்பட்ட ஸ்திரீகள் (போ. வ. ச. பக். 79)
2. யோக்தகாலத்தில் - காலாகாலத்தில் (டி3119)
3. மறைத்துவைத்து - விருத்தி செய்து (போ. வ. ச. பக். 80)
4. கலாபம் - கலகம் (போ. வ. ச. பக். 80)

"No allusion to Mulla's invasion is to be found any where in the various histories of India or in Rous's Compilation of the Tanjore Papers and local tradition furnishes no particulars of it beyond giving its date as 1696. Mulla was probably a deputy of Zulfikar Khan"- (Venkasami Rao, Tanjore Dt. Manual, Part V, Page 770-771)

5. சுலுபுகான் - எஜுலீப்காரன் (போ. வ. ச. பக். 80); ஜுல்பிகர்கான் (Zulfikar Khan)என்ற

வந்ததுகளையும் தம்முடைய றாட்சியமட்டுக்கும் வர ஒட்டாமல் வெளிக்கு வெளியாக தீர்த்து விசையாபுரத்து பாதுஷாவையும் சினேகம் வைத்துக் கொண்டு பேஷ்கஷ்யும்[6] ஒரு மாற்கமாய் தீர்ப்பு பண்ணிக் கொண்டு றாச்சியம் பண்ணிக்கொண்டிருக்கிற வேளையில் அவருடைய மூணாவது தம்பி[7] துக்கோஜி ராஜாவுக்கு சாலியவாகன சகாப்தம் ௲௬௱௰௭[8] தாது வருஷம் அஞ்சாவது யேகோஜி ராஜா பிறந்தார். அவருக்குப் பிறதி னாமம் பாவா சாயபு றாஜா என்று பேர் வைச்சுது.

அப்பால் சாசிராசா நல்ல மாற்கமாய் வெகுநாள் வரைக்கும் றாச்சிய பாரம் பண்ணி சாலியவாகன சகம் ௲௬௱௩௰௩[9] நந்தன வருஷத்தில் பரமபத மடைந்தார்.

உடனே அவர் ரெண்டாவது தம்பி **மூணாவது சறபோஜி** றாஜாவுக்குப் பட்ட மாச்சுது. அவருக்கு முதல் பெண்சாதி காட்டிகேயுடைய பெண்கள் ரெண்டு, சுலட்சணாபாயி சாயபு அபுறூப பாயி சாயபு, சிரிக்கேயுடைய பொண் றாஜேஸ்பாயி[10] சாயபு, இந்த மூணு பெண் சாதிகளுடனே றாச்சிய மாண்டுகொண் டிருக்கிறபோது நாய நீதி தப்பாம லிருக்கிற வேளையில் அப றங்கசேபு அல்லியெதல்ஷாவை கைவசப்பத்தினபோது[11] அந்த சத்தியி[12] லுண் டான கிலாபத்தின் சங்கட்டத்தை[13] தம்முடைய ராச்சிய மட்டுக்கும் வர ஒட்டா மல் விசையாபுரத்திலே இருந்து நிறுவாக மில்லாமல் வந்த பெரிய மனுஷாளை யும் ஆதரணை பண்ணிக் கொண்டு றாச்சியம் பண்ணிக் கொண்டிருக்கிறபோது. அவருடைய தம்பி துக்கோஜி ராஜா விவாகம் பண்ணிக்கொண்ட ஸ்ரீகள்: மோதெவுடைய பொண் அறுணாபாயி,[14] யிங்களேயுடைய பொண்கள்[15*] றாஜகுமாரபாயி, மொகனாபாயி, மஹினாபாயி, லக்ஷ்ம்பாயி; இவா ளஞ்சுபேரையுந் தவிர[16*] மோஹமான ஸ்ரீகளாறுபேரில் ஒருத்தி மாத்

---

சேனைத்தலைவன், அவுரங்கசிபினால் அனுப்பப்பட்டவன், பல ஆண்டுகள் செஞ்சியை முற்றுகை யிட்டிருந்தனன். அவன் தஞ்சாவூரையும் தாக்கிக் கப்பம் பெற்றான் என்று தெரிகிறது:

"For eight long years the impregnable Gingee defied the attacks of Zulfikar Khan and during tnese years the sister principality of Tanjore under Shahji did its utmost to help the beseiged Rajaram......But Tanjore did not escape the depredations of the Mughals and in 1619 Zulfikar Khan forced on it a military contribution of four lakhs of Rupees a year"- (Srinivasan, Page 222–223)

6. பேஷ்கஷ் - பேஷ்கிஸ்தி பணமும் (டி3119)

7. "அவருடைய மூணாவது தம்பி" என்றவிடத்தில் போ. வ. ச. வில் (பக். 80இல்) "ஏகோஜி ராஜாவின் மூன்றாவது குமாரர்" என்றுளது. 8. சகம் 1617

9. சகம் 1633; இது நந்தன வருஷம் அல்ல (சாமிக்கண்ணுப்பிள்ளை) 10. ராஜஸபாயி

11. கைவசப்பத்தினபோது - காவலில் வைத்ததினால் (போ. வ. ச. பக். 80)

12. சத்தியில் - வேளையில் (டி3119)

13. கிலாபத்தின் சங்கட்டம் - குழப்பம் (போ. வ. ச. பக். 80)

14. அறுணாபாயி - அரணாபாயி (போ. வ. ச. பக். 81)

15* முதல் 16* வரை போ. வ. ச. வில் (பக். 81) "ராஜகுமார் பாயி, லக்ஷ்ம் பாயி என்ற

திரம் மறாஷ்ட்ட சாதி, மைத்த அஞ்சு பேரும் னாயக்கர் கூட்டம். அந்த மறாஷ்ட சாதி பெண்ணை கத்தி வைத்து கலியாணம் பண்ணின வள்[17] பேர் அனுபூறணா[18] பாயி வயத்தில் சாலியவாகன சகம் ௲சுளசு ௫[19] சாறவரி வருஷம் பிறதாப சிம்ம றாஜா பிறந்தார். உடனே சாமா பாயி என்று ஒரு பொண்ணும் பிறந்துது. மத்த நாயக்கர் கூட்டம் அஞ்சு பெண்களிலுமான[20] சந்ததி மாலசிறாஜா, அண்ணாசாயபு றாஜா. இவருக்கு முக்கியமாய் அழைக்கப்பட்ட பேர் அரிசந்திர றாஜா, னானாசாயபு[21] றாஜா லு[22] ரெண்டு பொண்களும் யிப்படி பிறந்தார்கள். அதுமேல் சறபோஜி றாஜா றாச்சியம் பண்ணிக்கொண்டிருக்கிறபோது அவர் தம்பி துக்கோஜி ராஜா கல்லியாணம் பண்ண பெண்சாதிக்கு பிறந்த அஞ்சாவது யேகோஜி ராஜா அவருக்கு பாவாசாயபு எண்ணும் பேர் மேல் எழுதியிருக்குதே அவருக்கு கல்லி யாணம் பண்ண ஸ்ரீகள், முதலாவது இங்களேவுடைய பொண் சுசானுபாய்[23] ரெண்டாவது சேயந்திபாயி[24] மூணாவது சக்கவாற்[25] பாய் சாயபு நாலாவது சுகமாற[26] பாயிசாயபு, அஞ்சாவது கிரிதா[27] பாய்சாயபு, ஆறாவது பாற்வதி பாயி சாயபு, இந்த ஆறு பெண்சாதிகளை கலியாணம் பண்ணத்தில், அவர் தொகப்பனார் பண்ணி வைச்சது பொக மைத்தது தாம் பெரியவனான பிற் பாடு பண்ணிக் கொண்டார். இது த்விர மோஹகமான[28] ஸ்ரீகள் மூணு பேரை வைத்துக் கொண்டார். அந்தப்படியே துக்கோஜி ராஜாவுடைய ரெண்டாவது பிள்ளை[29] பிறதாபசிம்ஹ றாஜாவுக்கு விவாகம் பண்ணினார்கள். மொயித்தெ பொண் அயில்லியா பாயி[30] சாயபு, சிந்தே பொண் யெமுணா பாயி சாயபு,[31]

---

வரையும், பிங்களே குலத்தின் பெண்களான மோஹினாபாயி, மனாபாயி என்ற இருவரையும் இவ்வாறு ஐந்து ஸ்திரீகளையும் மணந்தார்" என்றுளது.

17. கத்திவைத்துக் கலியாணம் - இது கட்க விவாஹம் (Khadga Vivaham) எனப் பெறும். 'There is difference between lagnam and Khadga Vivaham. In the former case the tali is tied by the husband and in the latter case by a sumangali Brahmin woman. A sword will be placed in a chair or some such thing and the marriage ceremony is gone through"- (கே. எம். வே. பக். 15. அடிக்குறிப்பு 5)

18. அனுபூறணா - அனுபுருன் (டி3119) (அன்னபூரணா); "Pratap Singh the son born to Tukkoji by a sword wife Annapurna" - (Srinivasan, Page 243)

19. சகம் 1665 - சகம் 1664 சார்வரி (டி3119); சகம் 1664 சர்வதாரி (போ. வ. ச. பக். 81); சார்வாரி சர்வதாரி இரண்டும் சரியல்ல (சாமிக்கண்ணுப்பிள்ளை). திருமுடி சேதுராமன் கவடியில் சகம் 1641 என்றுளது. இதுவே சரியாகலாம்.

20. பெண்களிலுமான - பெண்களில் ஆண் (டி3119)

21. நாநாசாயபு 22. லு - வும் (டி762) 23. சுஜான்பாயி 24. ஜெயந்திபாயி

25. சக்வார் 26. சுகுமார் 27. கிரிஜா 28. மோஹகமான - மோகத்துக்கு (டி3119)

29. இங்குக் "கத்திவைத்துக் கலியாணம் பண்ணின மராட்டிய பெண்பிள்ளை கெற்பத்திற் பிறந்த" என்ற பகுதி டி3119 இல் அதிகமாகவுளது.

30. அஹல்யாபாயி

31. சிந்தேபொண் யெமுணாபாயி சாயபு - மர்கோசி வமிசத்துப் பெண்ணான யமராபாயி (போ. வ. ச. பக். 82); (யெமுணு - யெமுனா)

கருவாற[32] சாயபு மொயித்தே பொண், துனுக்கு[33] பொண் துறொபதாயி[34] சாயபு மாடிக்குபொண் யெசவந்து பாயி சாயபு, இந்த அஞ்சு இஸ்த்திரிகளிலே தொகப் பனாய் பண்ணி வைத்தது ரெண்டு ஒண்ணு, மைத்தது தமக்கு பட்டமான பிற்பாடு பண்ணிக் கொண்டார். இது தவிர வைப்பாட்டிகள் மாறாட்டிய சாதி வடுக சாதி னாயக்கர் கூட்டம் உள்பட யேழுபேர். பிறதாப சிங்கு மஹாராஜா வுடைய தங்கை சாமாபாயி என்று மேலே யெழுதியிருந்துதே அந்த பொண்ணை மல்லாற்ஜி காடோஜி றாவுக்கு கலியாணம் பண்ணிக் கொடுத்தார்கள். அப் பால் துக்கோஜி ராஜாவுக்கு வைப்பாட்டி சம்மந்தங்களில் பிறந்த பிள்ளைகள் மூணும் அவர் உயிரோடே யிருக்கச்சேதானே தெய்வகதி யானார்கள். அதிலே னானாசாயபு என்கிறவனுக்கு மாத்திரம் அப்புசாயபு யென்று ஒரு பிள்ளை. அவர் கல்லியாணம் பண்ணின பெண்சாதி கெற்பத்தில் பிறந்தவன். அந்த அப்புசாயபுக்கு கல்லியாீணம் பண்ண ஸ்ரீகள் யில்லாமல்[35] கவறை[35அ] கூட்டத் தில் வைத்துக் கொண்டஸ்ரீகளில் னானாசாயபு என்ற ஒரு பிள்ளை பிறந்துது. அவன் இன்னஞ் சுகமாயிருக்கிறான். இப்போ அந்த வைப்பு சம்பந்தத்தில் பிறந்த ரெண்டு பொண்ணையும் அதுக்குத் தக்கதாய் காடே கூட்டத்தில் கொடுத்தார்.

இந்தப்படிக்கு சறபோஜி றாஜா பட்ட மாண்டுகொண்டு அவர் தம்பி துக்கோஜி றாஜா சந்ததியுள்ளவரும் ரெண்டு பேரும் ஒருமித்து றாட்சியபாரம் பண்ணிக் கொண்டிருக்கிற போது ஒண்ணுக்கொண்ணு வீட்டுச் சண்டை யினாலே[36] துக்கோஜி ராஜா கொஞ்சம் சீமை அண்ணன் கிட்ட கேட்டு வாங்கிக் கொண்டு மஹதேவ பட்டணத்தில் பட்டணம் பண்ணிக்கொண்டு தம்முடைய சமுசாரத்துடனே[37] அவடத்தில்[38] வாசம்பண்ணிக்கொண் டிருந்தார்.

கோட்டையிலே சறபோஜி ராஜா றாட்சியம் பண்ணிக்கொண்டிருக்கிற போது அவருடைய பட்டம்ஸ்ரீ மூணு பேரிலே ரெண்டாவது பெண்சாதி

---

32. கருவாற - சக்வார் (போ. வ. ச. பக். 82); சகரா பாயி (டி3119)

33. துனுக்கு - துநபோஜி (போ. வ. ச. பக். 82); துணுக்கு (டி3119)

34. துறொபதாயி - திரௌபதி பாயி (போ. வ. ச. பக். 82)

35. கல்லியாணம் பண்ண ஸ்ரீகள் யில்லாமல் - கல்யாணம் பண்ணின ஸ்ரீகளே அல்லாமல் (டி3762)

35அ. Kavarai is the name for Balija (Telugu trading caste) who have settled in Tamil country. The bulk of the Kavarais in Tanjore are said to bear the title Nayak" – (Thurston, Castes and Tribes in Southern India Vol. III Pages 263 and 265)

36. ஒண்ணுக்கொண்ணு வீட்டுச் சண்டையினாலே - இரண்டு பேர் அண்ணன் தம்பிக்கும் கிருத்திய சாஸ்திரத்தினாலே (டி3119); "சண்டையினலே" என்பது டி3762இல் விடுபட்டுள்ளது.

37. சமுசாரத்துடனே - எல்லா சமுசாரத்துடனே (டி3119)

38. அவடத்தில் - மகாதேவ பட்டணத்தில் (டி3119); (போ. வ. ச. பக். 83);

"தக்ஷிண துவாரகபுரம் என்னும் ராஜமன்னார்கோயிலுக்குத் தென் பாரிசம் பரதேக்கம் மாயி கோட்டை கட்டி, பாரிபட்டணம் ஸ்தாபித்து, அதற்கு மகாதேவபட்டணம் என்று பேர் அளித்து" – (திருமுடி சேதுராமன் கவடி, பக்கம். 287)

அபரூபபாயி சாயபுக்கு சிறிது துஷ்டஸ்ரீகள் போதினை பண்ணினது: இளையவர் துக்கோஜி றாஜாவுக்கு சந்ததி பெருகி யிருக்குது. மூத்தவருக்கு சந்ததி யில்லாத படியினாலே றாட்சிய அதிகாரம் இளையவனுக்குச் சேர்ந்து போகுமென்று போதித்ததை இந்த[39] றாஜஸ்ரீ முதல் .ரு ரு துஷ்ட்ட பொண்டுகள் சொன்ன[40] யெத்தினத்தின்படி[41] கெற்பமில்லாம 'நக்கச்சே கெற்பமா யிருக்கிறோமென்று பயரங்கமாய்[42] சொல்லி மறுப. ம் பிள்ளையும் பிறந்தது யென்று சேதி சொன்னதின் பேரிலே ராஜாவும் ட ந்துக்களும் சந்தோஷப்பட்டு றாஜாவுடைய பிள்ளைக்கு பண்ண வேண்டிய உ‹ வங்களும் பண்ணி அந்த பிள்ளைக்கு சவவாயி சாசிறாஜா[43] வென்று பே ர்வைத்திருந்தது. கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு நடந்த கிறுத்திறமம் ராஜாவுடைய தம்பி மஹாதேவ பட்டணத்திலிருந்த துக்கோஜி ராஜா முகாந்திரமாய் ராஜாவுக்கு சவ விஸ்தாரமாய் தெரிந்து றொம்பவும் ஆச்சரியப்பட்டு அந்த பிள்ளையை யெந்தவிதமாய் பரிஹாரம் பண்ணவேணுமோ அப்படியே செய்து போட்டார். நஷ்டமா போன பிள்ளையினுடையகதையை யேன் யெழுதவேணு மென்றால் இந்தக் காரணம் பின்னாலே சொல்ல வேண்டி வருகிற படியினாலே யெழுத வேண்டியதாச்சுது[44].

அதுக்குப் பிற்பாடு சறபோஜி ராஜா சிறுதுநாள் ராச்சியபாரம் பண்ணிக் கொண்டிருந்து சாலியவாகன சகம் ௲௬௱௪௰௯[45] கீலக வருஷம் தெய்வகெதியானார். அவரோடே கூட அபரூபபாயி சாயபுவைத் தவிர மத்த ரெண்டு பேர் சுலட்சணாபாயி சாயபு றாஜெசு பாயி சாயபு இவாள் சாகமனம்[46] பண்ணார்கள்.

உடனே அவர்தம்பி துக்கோஜி ராஜா மகாதேவபட்டணத்திலே இருந்து வந்து பட்டங்கட்டிக் கொண்டு ராச்சியபாரம் பண்ணிக் கொண்டிருக்கிற போது மேல் எழுதி யிருக்கப்பட்ட வைப்பு சம்மந்தங்களிலே[47] மூணு பிள்ளை நஷ்டமாய் போனார்கள்.

---

39. "இந்த" என்ற சொல் டி3762இல் இல்லை 40. சொன்ன - சொன்னபடிக்கு (டி3762)

41. எத்தினத்தின்படி - எத்தினப்படிக்கு (டி3762) 42. பயாங்கமாய் - பயங்கரமாய் (டி3119)

43. சவவாயி சாசிராஜா - ஸவாயி ஷஹாஜி (போ.வ.ச.பக். 83)

"He (Sarabhoji) had no child and tradition relates how one of his queens named Aparupa Bai fearing that the throne would go to the sons of Tukoji, pretended pregnancy and foisted upon her husband as his own offspring, a stranger boy who was known subsequently as Savai Shahji. Her plan was however miscarried and Sarabhoji ordered her to get rid of the bogus son" - (Srinivasan P. 235)

44. இதற்குப் பிறகு பின்வருவது டி3119இல் காணப்பெறுகிறது:-

"இந்தக் கிருத்துருமமெல்லாம் மூன்று பாயிசாயபுக்குள்ளே அபரூபாயி சாயபென்கிறவள் துஷ்டஸ்திரீயுடைய போதனையின் வசியத்தினாலே பண்ணின காரியம்."

45. சகம் 1649

46. சாகமனம் - சாகமானம் (டி3762); சககமனம் - உடன்கட்டை ஏறுதல்

47. மேல் எழுதியிருக்கப்பட்ட வைப்பு சம்மந்தங்களிலே - இவரால் சேர்த்துக்கொள்ளப் பட்ட ஸ்திரீகளுட்குண்டான (போ.வ.ச.பக். 84)

ஆனால் னானாசாயபு என்கிறவனுடைய சந்ததியிலே அப்புசாயபு மாத்திர மிருக்கிறா னென்று மேல் எழுதின வயனம் காரணத்துக்குத் தக்கதாய் யெழுதி யிருக்குது. ஆனாலிவர் றாஜ்சிய பாரத்தில் நடந்த காரியம் அப்போ திருச்சி னாப்பள்ளியிலே னாயக்கர் கூட்டம் மீனாஷ்சி யம்மாளென்கிறவள் றாச்சிய பாரம் பண்ணிக்கொண்டிருந்தாள். அவளுக்கு பாளையக்காறர் வகையே காறு பாறுகளினாலே வெகு சல்லியமாச்சுது.[48] அதுக்கு துக்கோஜி ராஜா தம் முட கிட்ட யிருக்கிற சேனைகளையும் சேனாபதியையும் அனுப்பிவித்து[49*] அந்த சயில்லியமெல்லாம் தீத்து மீனாட்சியம்மாளுக்கு சல்லியங்களில்லாமல் பண்ணி ஸ்தாபனை பண்ணினார்.[50*]

அதுக்குப் பிற்பஉடு துக்கோஜி ராஜா வெகு நீதிமாற்கமாய் றாட்சியம் பண்ணிக் கொண்டு சாலியவாகன சகம் ௲சுளஎ[51] நள வருஷம் தெய்வகதி யாய்ப் போனார்.

**(12) குழப்பமான காலம்**

உடனே அவர் மூத்த பிள்ளை அஞ்சாவது யேகோஜி ராஜா அவருக்கு பாவா[1] சாயபு யென்று பேர்; அவர் ஒரு வருஷம் றாட்சியபாரம் பண்ணுகிறத்தில் அவர் சமீபத்திலே யிருக்கிற ஒருத்தர் பேரிலேயும் நம்பிக்கையில்லை. எவனண்டையாகிலும் கட்டாரி அல்லது சூரி[2] யிருந்தாலும் றம்பவும் சமுசியபடுகிறது. வீதியிலே போறவாள் வாறவாள்[3] கூட னாமஸ்மரனை[4] அல்லது வாயை அசைத்தாலும் அல்லது ஒரு இடத்திலே

---

48. வெகு சல்லியமாச்சுது - பலதீங்குகள் உண்டாயின (போ. வ. ச. பக். 84)

49* முதல் 50*வரை: எதிரிகளை வென்று மீனாட்சி அம்மாளுக்குத் தொந்திரவு எதுவுமில்லாமல் செய்தார் (போ. வ. ச. பக். 84). இதுபற்றிச் சீனிவாசன் கூறுவது (பக். 239):-

During the civil war at Trichinopoly, the Rajah of Tanjore had helped Minakshi, the Madura queen with money & troops under Anand Rao, in consideration whereof the queen allowed Tukkoji to enjoy till the debt should be repaid, the revenues of Tirukkattuppalli taluk lying between the Cauveri and the Coleroon......"

இதுபற்றிச் சுப்பிரமணியன் கூறுவது (பக்கம் 41):-

The Madras Manuscript and the Marathi inscription record Tukkoji's help to Minakshi of Trichinopoly against the Poligars who rose in revolt against her......, As such accounts have to be taken with the proverbial grain of salt, we may explain them as meaning that Tukkoji helped Minakshi against the first expedition of Chanda Saheb."

"The sobrequet of "Chanda" by no means complimentary stuck to him all his life. His real name was Hussain Dost Khan"- Ramaswami, N.S., Political History of Carnatic under the Nawabs, Abhinav Publications, New Delhi, 1984, Page 46.

51. சகம் 1657

1. பாபா — டி3119
2. கட்டாரி அல்லது சூரி - அரிவாள் கத்தி முதலிய ஆயுதங்கள் (போ. வ. ச. பக். 84)
3. போறவாள் வாறவாள் - போகிறவர் வருகிறவர்கள் (டி3119)
4. னாமஸ்மரணை — பகவதஸ்மரணை (டி3119); கடவுளின் பெயரைச்சொன்னாலும் (போ. வ. ச. பக். 84)

ரெண்டுபேர் கூடி வார்த்தை சொன்னாலும்[5] எவனாகிலுங் கையிலே செபமாலை வைத்துக்கொண்டு போனாலும், இவர்கள் எல்லாரும் தம்மை வசியம் பண்ணிக் கொள்ளுகிறத்துக்கு அல்லது நம்மை அடித்துப் போடுகிறத்துக்கு மந்திர தந்திரங்களை[6] பண்ணுகிறார்களென்று நிச்சயமாக யெண்ணி அதுகளை விசாரிக்கிறது[7] ...னம் றாஜா சமீபத்திலே இருக்கிறவாள் வேளைகாறர்கள்[8] பெரிய மனுஷாள் இவாள் தங்களுடைய பிள்ளைகள் னாங்களென்று சொன்ன பேருக்கு றாஜா செம்மையாக நடப்பிக்கிறது. மைத்த பேர் சமீபத்திலே வரப் போகாது. இப்படி சமுசயத்தோடே[9] றாட்சியபாரம் பண்ணிக் கொண்டிருக்கிற சமையத்திலே சந்தா சாயபு யென்று ஒருதன் ஆற்காட்டு சுபை தொஸ்த் தல்லிகானுடைய மருமகன்[10] இந்த சந்தாசாயபு சில சேனைகளை[11] சேர்த்துக் கொண்டு பிறாஞ்சுக்காரரையும் கும்மக்காக அழைத்துக்கொண்டு தஞ்சாவூர் மேலே உயித்தத்துக்கு வந்தான். அப்போ பாவாசாயபு றாஜா உபத்திர வத்தினாலே அசக்தனாக யிருந்தாலும் கோட்டையும் சேனைகளையும் பந்தோபஸ்து செம்மையாய் பண்ணி தாம் கோட்டை அலங்கத்தின்[12] பேரிலே நிண்ணுகொண்டு பீறங்கிகளைச் சுடச் சொல்லியும் தம்முடையை சேனை களை யெதிரி பாளையத்திலே போய் விழுந்து சண்டை பண்ணச் சொல்லி உத்தாரம் பண்ணி நல்ல சண்டை போட்டார். அப்போ சந்தாசாயபுக்கு கோட்டை வாங்கிறத்துக்கு நிறுவாக மில்லாமல் கொஞ்சம் பணத்துக்கு உடன் பிடிக்கை பண்ணிக்கொண்டு திருச்சினாப்பள்ளிக்கு பிறப்பட்டுப் போய் விட்டான்.[13] அதுக்கு பிற்பாடு பாவா சாயபு றாஜா அந்த உபத்திரவத்தினாலே சாலியவாகன சகம் ௲ளடு௮[14] பிங்கள வருஷத்தில் தெய்வகதியானார்.

---

5. வார்த்தை சொன்னாலும் - பேசினாலும் (டி3119)

6. தந்திரங்களை - யந்திரங்களை (டி3119); யந்திரப்பிரயோகம் (போ. வ. ச. பக். 84)

7. விசாரிக்கிறது - அவர்களெல்லோரையும் தண்டித்து வந்தார் (போ. வ. ச. பக். 84)

"He is said to have been very suspicious of designs against him" (Subramanian, Page 43)

8. வேளைகாரர்கள் - வேலைக்காரர்கள் (டி3119)

9. "சமுசயத்தோடே" என்பது டி3119இல் இல்லை

10. "Baquir Ali was Killedar of Vellore. His brother was Dost Ali Khan who had an only son and five sons-in-law of whom the third was the well known adventurer Chanda Saheb"- (The Maratha Supremacy, Page 312)

11. சேனைகளை - பவுசுகளை (டி3119)

12. அலங்கத்தின் - மதில்சுவரின் (போ. வ. ச. பக். 85)

13. "In spite of illness he (Baba Saheb) fought hard against Chanda Saheb who attacked Tanjore on his way to Tiruchinopoly and made him retreat (1736)" -(Subramanian, Page 43)

"In 1736 Chand Saheb undertook another expedition into the Tanjore Kingdom but on receiving liberal presents turned towards Trichinopoly"- (Srinivasan, Page 252)

14. சகம் 1558 - இது 1658 என்றிருத்தல் வேண்டும்; டி3119-ம் போ. வ. ச.வும் சகம்

அப்போ மந்திரித் தினம் பண்ணுகிறவனும் யோக்கியமான பந்துக்களும் றாச்சியம் பண்ணுகிறத்துக்கு ஒருத்தரும் இல்லையென்று அந்த பாவா சாய புடைய பெண்சாதி சுஜானு பாயி சாயபுக்குடனே பட்டங் கட்டினார்கள். அப்போ சாலியவாகன சகம் ௲௬௱௫௯[15] பிங்கள வருஷ முதல் கால யுத்தி வருஷத்தில் கூட றாச்சியம் பண்ணிக்கொண்டிருக்கையில் உறைமுறையாரி லொருத்தன் கோயாஜி காட்டிகே[16] என்கிறவன் முன்னாலே சறபோஜி றாஜா றாச்சிய மாண்டு கொண்டு இருக்கிற போது துஷ்ட இஸ்த் திரிகளுடைய துற்போதினையினாலே கிறுத்திறமமாய் ஒரு பிள்ளையை உண்டுபண்ணி அவனுக்கு சவவாய் சாஜி ராஜா வென்று பேரும் வைத்து இப்படி நடந்து கிறுத்திறமம் என்று வெளியாய் அந்தப் பிள்ளை பரி காரமும் பண்ணிப் போட்டார்களென்று மேல் எழுதியிருந்துதே இப்போ இந்த கோயாஜி காட்டிகே என்கிறவன் அந்த சவவாய் சாஜி ராஜா பிழைத்திருக்கி றான் என்று றூபி[17] என்கிற வெள்ளாட்டியின் மகன் ரூபவானா யிருந்தவனை இவன்தான் அந்த சாஜி ராஜாவென்று எங்கும் பிறபலம் பண்ணி அவனைக் கொண்டு வந்து உடையார்பாளையத்துக் காட்டிலே[18] வைத்துக்கொண்டு சமஸ்தானத்திலே இருக்கப்பட்ட மாதபா[19] குடிகள் பாளையக்காரர் வகை யெறாவுக்கு பிறமை பொட்டு[20] அவாள் கிட்டயிருந்து கொஞ்சம் திரவியம் சம் பாதித்து கொஞ்சம் சேனைகளையும் சேர்த்துக் கொண்டு தேவணாம்பட்டி னத்தி[21] லிருக்கிற இங்கிலீசுகாரருக்கு னானாவிதமாகச் சொல்லி அவாளண்டை யிலிருந்து கொஞ்சம் கும்மக்கு வாங்கிக் கொண்டு அவடத்திலே யிருந்து நாகப் பட்டணம் வகையறாவிலே யிருக்கப்பட்ட உலாந்தக்காரர்[22] கிட்ட கொஞ்சம் திரவியமும் வாங்கிக் கொண்டு சேனைகளையும் பந்தோபஸ்து பண்ணிக் கொண்டு தஞ்சாவூரிலே யிருக்கப்பட்ட சேனைகளுக்கும் கில்லேதார்[23] முதலான பேர்வழிகளுக்கும் பிறமை யுண்டுபண்ணி அவர்களை அந்தரங்கத்திலே சல்லியம் பண்ணி வைத்து சாலிய வாகன சகம் ௲௬௱௬௰[24] காலயுக்தி வருஷத்தில் கோட்டையிலே பிரவேசித்து றாச்சியபாரம் பண்ணுகிற சுஜானு பாய் சாயபுவை தள்ளிப்போட்டுத் தான் சிம்மாசனத்திலே உளுக் கார்ந்தான். அவன் காட்டிலேயிருந்து வந்தவ னானபடியினாலே காட்டு

---

1658 என்று கூறும். திருமுடி சேதுராமன் சுவடி (பக். 302) சகம் 1661 என்னும். (அடுத்த அடிக்குறிப்புக்காண்க)

15. சகம் 1659 - போ. வ. ச. 1658 என்று கூறும்; 1659 என்பதற்கே பிங்கள பொருந்தும்.

16. கோயாஜி காட்டிகே — கௌமாஜி காண்டகே (போ. வ. ச. பக். 85); போ. வ. ச. பக். 114ல் கோதாஜி காண்டகா என்றுளது. Koyagi Ghangte (Srinivasan, Page 235)

17. றாபி - ரூபி; குப்பி (போ. வ. ச. பக். 86) 18. காட்டிலே என்பது டி3762 இல் இல்லை

19. மாதபா - மாதுபரி (டி3119) ''பாதபாகுடிகள்'' என்னும் வேறு ஒரு தொடர் டி3762இல் உள்ளது.

20. பிறமைபோட்டு - அறிமுகப்படுத்தி (போ. வ. ச. பக். 86)

21. தேவணும்பட்டினம் — தேவினாம்பட்டினம் - Fort St. David

22. உலாந்தக்காரர் - டச்சுக்காரர் 23. கில்லேதார் - கோட்டை காவலன்

24. சகம் 1660

ராஜா யென்று பிறபலமாகப் போச்சுது.[25] அந்த காட்டு ராஜா கொஞ்ச நாள் ராச்சிய பாரம் பண்ணுகிறபோது அவன் நடத்தையினாலே அறிந்து கொண்டு முன்னாலே அவன் பிரமையிலே அகப்பட்டிருந்த கில்லேதாரும்[26] சேனைகளும் சொன்னது: இந்த காட்சி றாஜா[27] வென்று சொல்லப்பட்டவன் வெள்ளாட்டி ரூபி[28] யுடைய பிள்ளை. இவன் பேர் சுபானியா; கிறுத்துறமத்தினாலே றாட்சியம் பண்ணுகிறதுக்கு வந்தா னென்று நமக்கு னிச்சயமாக தெரிந்து பிறதிட்சமாக றாஜ துறோகம் பண்ணி வெள்ளாட்டி யுடைய மகனை சிம்மாசனத்தின் பேரிலே உளுக்கார வைத்தோமென்று றொம்பவும் விதனப் பட்டு யோசினை பண்ணினது: துக்கோஜி ராஜா சேத்துக் கொண்டு வைத்திருந்த ஸ்ரீகளிலே பிறதாப சிங்க ராஜாவுடைய தாயார் றாஜாவுடைய சமான சாதி பொண்ணானபடியினாலே அந்த பிள்ளை இராட்சியத்துக்கு யோக்கியம் என்று எல்லாரும் நிச்சயம் பண்ணி சாலிய வாகன சகம் ௲௬௱௬௰௧[29] சித்தாற்தி வருஷம் பிரதாப சிம்ம ராஜாவுக்கு பட்டம் கட்டினார்கள். அந்த வருஷத்தில் தானே பிரதாப சிம்ம ராஜா விவாகம் பண்ணிக் கொண்ட பட்டம் ஸ்ரீகளிலே ரெண்டாவதுஸ்ரீ றோபதாபாயி[30] சாயபு கெற்பத்திலே துளசா ராசா பிறந்தார்.

காட்டு ராஜா வென்கிறவன் வெள்ளாட்டி மகன் சுபானியயென்று பேர். அப்படிக் கொத்தவனுக்கு தஞ்சாவூர் றாட்சியம் போசலெ வமிச பரம்பரையாய் பண்ணிக் கொண்டு வந்த றாட்சியத்தை இந்த வெள்ளாட்டி மகனுக்கு ஆனது சேதி உறைமுறையார் முதலான சகல செனங்களுக்கும் வியக்தமாய் தெரிந்த பிற்பாடு, இந்த கிறுத்திறமத்திலே சேர்ந்து இருந்த சயிது யென்கிறவன் பரம்பரையாய் ராஜாவுடைய சேவுகம் பண்ணிக் கொண்டு வருகிறோமென்றும், வெகு செனங்களுக்குள்ளே[31] லட்சை[32] யாகுதென்றும், இதுலே முக்கியமாய் யெகோஜி ராசா சேர்மானம் பண்ணியிருக்கப்பட்ட[33] ஸ்ரீகளுக்குப் பிறந்த சந்திர பானுஜி போசலே அவர் பிள்ளை னாயக்கஜி போசலே யென்கிறவன் பாக்கியத்திலேயும் சவுரியத்திலேயும் பிறக்கியாதியாகயிருந்தான். அவன் பயத்தினாலே இப்போ றாட்சிய வம்சத்திலே பிறதாப சிம்ம ராஜா றூபத்திலேயும் கிறிகை[34] குணம் புத்தி இந்த குணங்களிலே யோக்கியமா யிருக்கிறா ரென்று பட்டம்

---

25. பிறபலமாய்ப் போச்சுது - லோக வசந்தையாய் அவனுக்குப் பேராச்சுது (டி3119)

26. கில்லேதார் - சையிந்து அல்லது சையிது (போ. வ. ச. பக். 87)

27. காட்சி ராஜா - காட்டு ராஜா (டி3762) 28. ரூபி - குப்பி (போ. வ. ச. பக். 86)

29. சகம் 1661; போ. வ. ச. சகம் 1660 என்று கூறும்

30. றோபதாபாயி - திரௌபதி பாயி; துனுகொசியின் பெண் துரோபதாபாயி (டி3119; துக்கோஜியின் பெண் (போ. வ. ச. பக். 86)

31 வெகுசனங்களுக்குள்ளே - வெகுசனங்களுக்கு எல்லாம் (டி3762)

32. லட்சை - லச்சை (டி3762); (டி3119); லஜ்ஜை - வெட்கம்

33. சேர்மானம் பண்ணியிருக்கப்பட்ட - சேர்த்துக்கொள்ளப்பட்ட (போ. வ. ச. பக். 87)

34. கிறிகை - செயல் (போ. வ. ச. பக். 87)

கட்டின பிற்பாடு அந்த சயிது[35] யென்கிறவன் கிறுத்திறமத்திலே யிருந்தான்.

(13) பிரதாபசிங்கரின் ஆட்சி

இதுவுமல்லாமல் இவன்[1] அகிறுத்தியம் பண்ணிக் கொண்டு வந்த தென்ன வென்றால் யெகோஜி ராஜா தஞ்சாவூர் றாட்சியத்துக்கு முதல் அதிபதியான பிற்பாடு இதுக்கு முன்னே பண்ணியிருக்கிற தற்ம்மமும் தஞ்சாவூர் றாட்சியத்திலே வெகுதேவாலையங்கள் காவேரி தீரத்தில் வெகு பிறாமணாள் வாசமா யிருக்கிறார்களென்று அக்கிறாரம் கட்டிவிக்கிறது, தேவாலையும் கட்டிவிக்கிறது, பிறாமணாளுக்கு சறுவமானியங் கொடுக்கிறது, யெக்கியம்[2] பண்ணிவிக்கிறது, அன்ன சத்திரம் போடுவிக்கிறது, இந்த விதமாய் அனேக தற்மங்கள் யெகோஜி மகாராஜா நாள் முதல் பரம்பரையாய் பண்ணிக் கொண்டு வந்தூர்கள். அப்பால் பிரதாப சிம்ம ராஜா பட்டத்துக்கு வந்த நாள் முதல் விசேஷ தற்மம் பண்ணிக் கொண்டு வந்தார். இந்த தற்மத்துக் கெல்லாம் சயிது விரோதம் பண்ணிக் கொண்டு வந்தான். இதுவுமல்லாமல் தான் துலுக்க சாதியாக யிருந்தும் கற்ணாட்டச் சாதி[3] தேவடியாள் கோவில் தேவடியாளைக் கெடுத்துப் போட்டான். அதிலே ஒருத்தி மொஹனா என்கிற தாசியைக் கெடுத்துப் போட்டு அவளைத் தம்முடைய வீட்டிலே கொண்டு போய் வைத்துக் கொண்டான். இப்படிக் கொத்த துஷ்கிருத்தியமும் கிறுத்திறமும் மஹாறாஜாவுக்கு எல்லாம் தெரிந்திருந்தும் தாம் நூதினமாய் றாச்சியத்துக்கு வந்து இருக்கிறோம் என்று அந்த சயிந்துக்கு தெண்டினை பண்ணாமல் சிறிது நாள் வரைக்கும் அவனுடைய அதிகாரமும் நடப்பித்தார். ஆகிலும் அந்த சயிது தன்கிட்ட பவுசுதார்[4] அதிகாரமும் கோட்டை கில்லேதாரத்துவமும் சமஸ்தான சிட்டினிசும்[5] இப்படிக் கொத்த பிறபல உத்தியோக மெல்லாம் தன்னுடைய சுவாதீனத்திலே இருக்கிற படியினாலே இந்த அதிகாரத்தின் பலத்தினாலே முன்னலே வெள்ளாட்டி பிள்ளை சுபானி என்கிறவனுக்கும் ராஷ்சியம் கொடுத்தோம். மறுபடியும் அவனே கையிது பண்ணிப்போட்டு பிறதாப சிம்ம றாஜாவுக்கு ஆகும்படியாய் பண்ணினோம். முன்னாலே பாவாசாயபு ராஜாவுடைய சரிக்கல்[6] சித்தோஜி முதலானவர்களை காட்டு ராஜாவைக் கொண்டு சித்திரவதை பண்ணி வைத்தோம். இன்னம் நாம் நினைத்ததெல்லாம் பண்ணிப்

---

35. சயிது - சையிந்து (போ. வ. ச. பக். 87)

குறிப்பு: திருமுடி சேதுராமன் சுவடியில் காட்டு ராஜாவைப் பற்றியோ, பாபா சாகேபுக்குப் பிறகு அவர் மனைவி சுஜான்பாயி ஆட்சி யெய்தியது பற்றியோ குறிப்பிடப் பெறவில்லை. மேலும் பாபா சாகேபு சகம் 1661இல் இறந்தார் என்றும் அவர்க்குப் பிறகு அவர் தம்பி பிரதாப் சிங்கர் பட்டம் பெற்றார் என்றும் அச்சுவடி கூறும் (பக்கம். 302-3).

1. இவன் - சயிது என்ற கில்லேதார் 2. யெக்கியம் - யக்ஞம் - யாகம் - வேள்வி

3. கற்ணாட்டச்சாதி - கர்நாடக சாதி (டி3762) 4. பவுசுதார் - ஃபவுஜ்தார் - சேனைத்தலைவன்

5. சிட்டினிசு - Chiṭṇis; அரசனது செயலர் (கே. எம். வே. பக். 76)

6. சரிக்கல் - சருக்கில் (டி3119) - சர்க்கேல் - தலைமையான அலுவலர்; மந்திரி; Chamberlain

போடலாமென்று கெறுவத்தினாலே[7] தன் பொண்ணை சந்தா சாயபு பிள்ளைக்குக் கொடுத்து அந்த சந்தாசாயபு பிள்ளைக்கு தஞ்சாவூர் றாச்சியம் சிம்மாசனத்தின் பேரிலே உளுக்கார வைத்து[8] சகல அயிசுவரியமும் தான் அனுபவிக்க வேணுமென்று நிச்சயமாய் யோசினை பண்ணி தம்முடைய தம்பி சயிது காசிமுடனே யோசினை பண்ணினான். இந்த போசலே உத்தம வமிசத்தினுடைய புண்ணிய பிறபாவத்தினாலேயும் பிறதாப சிம்மராஜா யோகத்தினாலேயும் அந்த சயிது காசிம் என்கிறவன் தன் தமையன் பண்ணின றாஜ துரோகம் சுவாமி துறோகம் இதுகளை சயிக்க மாட்டாமல் மகாறாஜாவுக்கு அந்தரங்கத்திலே இந்த சயிதுடைய கிறுத்திறமமெல்லாம் அறியப் பண்ணிவித்தான். அப்போ பிறதாப சிம்மறாஜா உடனே கோபம் பண்ணாமல் தூர யோசினை பண்ணி அந்த சயிது காசிமுவைப் பார்த்து நீ சொல்லுகிறது நிசம்தானா வென்று கேட்டார். அதுக்கு அந்த சயிதுகாசிமு என்கிறவன் கொஞ்ச தினத்தில்தானே நான் சொல்லுகிறது பிறத்திஷமாய்[9] மஹாறாஜாவுக்கு தெரியவருமென்று சொல்லி உத்தாரம் வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டான். உடனே நாலஞ்சு நாளைக்குள்ளே சயிது என்கிறவன் தமக்கு முஸ்தீப்புப் பண்ணி[10] றாஜாவுக்கு வைத்து[11] தன் பெண்ணை சந்தாசாயபு பிள்ளைக்குக் குடுக்கிறோம் அதினாலே சமஸ்தானத்துக்கு பலம்தானென்று சொன்னான்.[12] அப்போ மஹா றாஜா சொன்னது: நம்முடைய ராஜ்யத்துக்கு பலம் ஆக வேண்டுமென்று உம்முடைய பெண்ணைக் கூட நவாயித்[13] தவனுக்குக் கொடுக்கிறாயென்று சந்தோஷப்பட்டு கல்லியாணத்துக்கு வேண்டிய சிலவுக்கும் கொடுத்து கல்லியாணம் மாத்திரங் கோட்டையிலே பண்ண வேண்டாம், மத்தியாற்சுனத்திலே[14] பண்ணச் சொல்லி

---

of the Royal Household; Sirkale was another name for domestic minister - (Subramanian, Page 78)

7. "Saiyid, the Killedar of the Tanjore fort and the most powerful captain, conscious of the army which backed him, interfered successfully in the internal matters" - (Srinivasan, Page 250)

8. "He (Saiyid) seems to have entertained the idea of usurping the throne for his daughter" - (Subramanian, Page 49)

9. பிறத்திஷமாய் - பிரத்தியட்சமாய் (டி3119)

10. முஸ்தீப்புப்பண்ணி - செய்ய வேண்டிய காரியங்களைச் செய்து (போ. வ. ச. பக். 89)

11. ராஜாவுக்கு வைத்து - ராஜாவிடம் போய் (போ. வ. ச. பக். 89)

12. என்று சொன்னான் - என்று அற்சு பண்ணினார் (டி3119); அனுமதி வேண்டினான் (போ. வ. ச. பக். 89); அற்சு - அர்ஜி - விண்ணப்பம்.

13. "The Navayats are summed up in the Madras Census Report, 1901, as "a Musalman tribe, which appears to have originally settled at Bhatkal in North Canara, and is known on the west coast as Bhatkali. The derivation of the name is much disputed. There are five sub-divisions of the tribe, namely Kureshi, Mehkeri, Chida, Gheas and Mohagir. It takes a high place among Mussalmans and does not intermarry with other tribes" - (Thurston, Castes and Tribes of Southern India, Vol. V, Govt. Press, Madras, 1909, Page 272)

14. மத்தியார்ச்சுனம் – திருவிடைமருதூர்

நல்ல பேச்சாய் சயிதுக்குச் சொன்னார். அப்போ சயிது சம்மதித்து அப்படியே மத்தியாற்சுனத்துக்கு போய் வெகு சம்பிறமாய்[15] கலியாணமும் பண்ணி மறுபடியும் கோட்டைக்கு வந்து சேர்ந்த பிற்பாடு சயிது பண்ணின கிறுத்திறமம் என்னமென்றால், சந்தா சாயபுவை சேர்ந்த பேர்களுக்கு நீங்கள் மத்தியாற்சுனத்திலே இருந்து றாத்திரியே பிறபட்டு அறுணோதை காலத்திலே கோட்டையிலே வந்து சேருகிறது. வாடிக்கையின்படி[16] கோட்டை வாசல்ப்படி[17] திறக்கிற போது சேனைகளுடனே[18]கோட்டைக்குள்ளே நுழைந்து றாஜாவுடைய வீட்டின் பேரிலே அல்லா பண்ணி[19] உள்ளே நுழைந்து சண்டைபண்ணி றாட்சியம் சுவாதீனம் பண்ணிக் கொள்ளுகிறது. சேனாபதி[20] கில்லேதார் இந்த ரெண்டு நம்முடைய பாரிசமா யிருக்கிறபடியினாலே உங்களுக்கு ஒருதரும் யெதிர்த்து நிற்கமாட்டார்களென்றுசொல்லி கடுதாசியெழுதி ஆப்த்த மனுஷியாள் கையிலே கொடுத்து றகசியமாய் அனுப்பிவித்த சேதி இந்த சயிதுனுடைய தம்பி சயிது காசிம் யென்கிறவன் இந்த கடுதாசி பத்திரத்து றகசியத்திலே இருந்தவனான படியினாலே இந்த கிறுத்திறமங்களை மஹா ராஜாவுக்கு முன்னாடியாகத் தெரியப் பண்ணினான். அது தவிர மஹாறாஜாவுடைய அந்தரங்க மனுஷாளையும் கூட அழைத்துக்கொண்டு சயிது எழுதின கடுதாசியும்[21] அதைக் கொண்டு போன மனுஷனோடே பிடித்துக் கொண்டு வந்து மஹாறாஜாகிட்ட ஒப்புவித்தான். இந்த பிறகாரமாய் மஹாறாஜாவுக்கு பிறபல சாக்ஷி வந்த பிற்பாடு மஹா ராஜா அவர்கள் மெத்தவும் ஆச்சரியமுங்கோபமுமாய் தம்முடைய ஆப்த்தமா யிருக்கப்பட்ட சிறுது பேரை சேத்துக் கொண்டு அதில் முக்கிய சற்தார் மஹா றாஜாவுடைய மச்சினன்[22] மல்லாற்சி காடே, மஹாறாஜாவுடைய முக்கிய காரியஸ்தன் அன்னப்பா சேட்டிகை, ஆப்த்தமா யிருக்கப்பட்ட சற்தார் மனாஜி றாவு ஜக்தாப் இவர்களுடனே யெல்லாம் தம்முடைய நிற்செய யோசனையைத் தெரியப்பண்ணி சயிது யென்கிறவனை கொண்ணு[23] போடுகிறதென்று நிற்செயம் பண்ணி ஒருனாள் தம்முடைய சறதாற்கள் ஆப்த்தமா யிருக்கப்பட்ட சற்தார்களை யெல்லாம் ஆயுதத்துடனே ஒரு யிடத்திலே பதுங்க வைத்து தாம் ஒரு யிடத்திலே பிறத்தியேகமாய் உளுக்கார்ந்து கொண்டு மொகலண்டையிலிருந்து வந்த சிறுது காகித பத்திரங்கள் பார்க்க வேண்டியிருக்குதெண்டு சயிதுவை அழைத்தனுப்பிவித்தார். அப்போ சயிது உன்மத்த திசையினாலே மஹாறாஜாவுடைய யோசினை யெந்த விதத்திலே தெரியாமலிருந்தபடியினாலே மஹாறாஜா கிட்ட யிருந்து அஞ்சாறுவிசை அழைக்க

---

15 .சம்பிறமாய் - சம்பரமமாய் (டி3119)

16. வாடிக்கையின்படி — தண்டக்கப்படிக்கு அந்த வேளையிலே (டி3119)

17. வாசல்படி — வாசல் கதவு (டி3119) 18. சேனைகளுடனே - பவுசுடனே (டி3119)

19. ராஜாவுடைய வீட்டின் பேரிலே அல்லாப் பண்ணி - அரண்மனை நோக்கி வந்து (போ.வ.ச. பக். 89)

20. சேனாபதி - பவுசுதார் (டி3119) 21. கடுதாசியும் - பக்ஸிஸீசு காயிதம் (டி3119)

22. மச்சினன் - மைத்துனன் (டி3119); சர்தார் (போ.வ.ச.பக். 90)

23. கொண்ணு - அடித்து டி3119

வந்த பிற்பாடு வந்தான். அப்போ றாஜா அந்த சயிதொடே க்ஷண நேரம் உபசாரமாய் பேசிக் கொண்டிருந்து செல பாதைக்கு போயி வாறோமென்கிற வியாச்சியத்தினாலே தாம் அப்பாலே யிருக்கப்பட்ட மாலுக்குப் போய்விட்டார். அப்போ மஹாறாஜாவுடைய முன் சயிகை பண்ணிவைத்திருந்தபடிக்கு அந்த மூணு சற்தார்களும் சயிது கிட்ட ஒரு மனுஷனாகிலும் இருக்காமல்ப் படிக்கு முன்னமே தானே பந்தோபஸ்த்து பண்ணிவைத்த படியினாலே சில்லறை மனுஷரை[24] சயிது கிட்ட அனுப்பிவித்து அவனை அசைய வொட்டாமல் கையைக் காலைக் கட்டி இப்பால் இடத்தில் கொண்டு வந்து அவனை பரலோகத்துக் கனுப்பிவிச்சார்கள்[25]. உடனே அவன் வீட்டு மேலேயும் போய் விழுந்து[26] ஓடிப் போனாவாள் போக, குறைப் பேரை சத்துரு செல்லிய மில்லாமல் பண்ணிப் போட்டார்கள். அப்பால் மஹாறாஜா அவர்கள் அன்னப்பா சேட்டிகைக்கு சரிக்கிலும் சேனாபதி தினமும், மல்லாற்சி காடேராவுக்கு கில்லேதாறும், டபீர் நாரோ பண்டிதருக்கு சிட்டினிசும்[27] இந்தப்படிக்கு அதிகாரம் கொடுத்து றாஜ்யபாரம் சுபக்ஷயாக பண்ணிக்கொண்டு[28] வந்தார்கள்.

அப்பால் மஹாராஜா அவர்கள் ஸ்ரீறாமேசுவர யாத்திரைக்கு சகல சன்னாகத்துடனே போய் யாத்திரை பண்ணி வெகுசாய் தான தற்ம்மமும் பண்ணி மறுபடி அவ்விடம் விட்டு திரும்பி வருகிறவேளையிலே றாமனாத புரத்து மறவர் ஜமீன்தார் பரம்பரையாய் மஹாராஜாவால் தன் றாச்சியம் நிலைத்து இருக்குதென்று தெறிஞ்சிருக்கிற படியினாலே காதவழி முன்னுதாக வந்து தன் கோட்டைக்கு வந்து பார்த்து ஒரு நாள் இருந்து போக வேணு மென்று பிறார்த்தினை பண்ணினபடியினாலே மஹா றாஜாவும் அங்கீகாரம் பண்ணிப்போனார். அப்போ வாசல்படிக்குள்ளே இருந்த செனங்கள் தெரியா

---

24. சில்லறை மனுஷரை - சில வேலையாட்களை (போ.வ.ச.பக். 90)

25. "Pratap when he became king was not prepared to tolerate the usurped authority of the Killedar and therefore at an opportune moment, he removed this enemy in his path of advancement by executing him" (Srinivasan, Pages 250-51). "He was murdered and buried on the northern bank of Vadavar where a large mantapam still marks the spot of his interment and is called Syed Ghori" - (Hicky, Page 86)

விரிவாகச் சையிதுபற்றிக்கூறாமல்,

"பிறகு இராஜா தன் சர்க்கிலான சையிது என்கிறவன் அந்தக் கலாபத்துக்கு ஒத்தாசை செய்தவன் என்று அபிப்பிரயமாகிய உடனே அவனைத்தள்ளி அண்ணப்பா சேட்ருவு யென்பவரைச் சர்க்கிலாகவும் ...... நியமித்துக்கொண்டு" - என்று திருமுடி சேதுராமன் சுவடியில் ஒரே ஒரு வாக்கியத்தில் சையிது செய்தி கூறப்பட்டுள்ளது (பக். 319)

26. போய் விழுந்து - அல்லாப்பண்ணி (டி3119)

27. சிட்டினிசு - காரியதரிசி வேலையும் (போ. வ. ச. பக். 90)

"The celebrated Dabir Pandit an expert in revenue matters was another of the great men in his Court" - (Subramanian, Page 48)

28. சுபக்ஷயாக பண்ணிக்கொண்டு - செவ்வனே நடத்தி (போ. வ. ச. பக். 90)

மல் படிக்கு பின்னாலே வருகிற சில்லறை சனங்களை அடக்காயித்தார்கள்.[29] அது மஹாராஜாவுக்குத் தெரிந்து அப்படியே பிறப்பட்டு திரும்ப வந்து விட்டார். அப்போ றாமனாதபுரம் ராச்சியம் பண்ணுகிறவன் றம்பவும் பயத்தினாலேயும் விசுவாசத்தினாலேயும் ரெண்டு நாழி வழி மட்டும் கால்நடையாய் மஹா றாஜாவுடைய பல்லாக்கை பிடித்துக்கொண்டு றொம்பவும் பிறார்த்தனை பண்ணினபடியினாலே மஹா றாஜாவுக்கு தயவு வந்து மறுபடியும் றாமனாத புரத்துக்குப் போய் ஒரு நாள் இருந்து அவன் பண்ணின உபசாரத்தை அடைஞ்சு மறுபடியும் தம்முடைய சொந்த றாச்சியத்துக்கு வந்து சேர்ந்தார். றாமனாதபுரத்தான் இப்பால் நவாபுடைய மனுஷனாக யிருந்தாலும் பூற விக்கம்[30] மறக்காமல் படிக்கு மஹா றாஜாவுக்கு சேவுகம் பண்ணிக்கொண்டு வந்தான்.

முன்னாலே பாவாசாயபு றாஜியபாரத்தில் சந்தாசாயபு என்கிறவன் திருச்சிறாப்பள்ளி கோட்டைமேலே போய் இறங்கினான் என்று எழுதி யிருந்துதே[31] அந்த சந்தாசாயபு திருச்சினாப்பள்ளி றாச்சியமும் செயித்திருந்து[32] தஞ்சாவூரிலே பிறதாப சிம்ம ராஜாவுக்கு பட்டமானவுடனே வந்து சுத்திக் கொண்டான்.

அப்போ பிறதாப சிம்ம மஹா றாஜா ரெண்டு மாசம் வரைக்கும் சந்தா சாயபுடனே யுத்தம் பண்ணினார். அப்பால் சந்தா சாயபு இவருடனே என் னத்துக்கு சண்டை போடவேணும்; எத்தனை நாள் வரைக்கும் என்னத்தைச் சாப்பிட்டுக் கொண்டு சண்டை போடுவார் பார்ப்போம்; நமக்கு திருச்சினாப் பள்ளி கிட்ட பாளையக்காரரை பந்தோபஸ்த்து பண்ண வேண்டியிருக்கு தென்று யோசினை பண்ணி ஆற்க்காட்டிலேயிருந்து கூட வந்த சப்த்தற் அல்லிகான்[33] என்கிறவனை அழைப்பிவித்து தஞ்சாவூறாச்சியமெல்லாம் பட்டுக் கோட்டை சுபைதவிர சப்த்தி பண்ணி சப்த்தற்அலிகான் கிட்ட ஒப்பிவித்துப் போட்டு தான திருச்சினாப்பள்ளிக்குப் போனான். அதுக்குப் பிற்பாடு சப்த்தற் அலிகான் றாச்சியம் தனக்கு செரிக்கும், கோட்டையிலே யிருக்கிற றாஜா என்ன பண்ணுவான் பார்ப்போமென்று அகிழக்கரை[34] மட்டும் தன் பாரிசம் பண்ணிக்கொண்டு,[35*] திருவையாற்றுக்கு மேற்கே அணையொன்று கட்டி

---

29. அடக்காயித்தார்கள் - தடுத்தார்கள் (போ. வ. ச. பக். 91)

30. பூறவிக்கம் - முன்னிருந்த நிலை; பூருவம் (டி3119)

31. "His (Baba Saheb's) accession saw the invasion of Tanjore by Chanda Saheb who plundered it on his way to Trichinopoly" - (Srinivasan, Page 243)

32. Chanda Saheb by his perfidy and treachery brought about the abdication and suicide of Rani Meenakshi and became the Lord of Trichinopoly" - (Srinivasan, Page 251-52)

33. சப்த்தற் அல்லிகான் - Safdar Ali - ஸஃப்தர் அலி; சரபாதர் அல்லிகான் (டி3119)

34. அகிழக்கரை - அகலக்கரை (டி3119); அகிழைக் காப்பாற்றுபவனை (போ.வ.ச.பக். 92)

35* முதல் 36* வரை போ.வ.ச.வில் பின்வருமாறுள்ளது:- "திருவையாற்றுக்கு மேற்குப்

வைச்சான். அதுக்கு சப்த்தற் அல்லி அணையென்று பேராயிருக்குது. இப்படி இரண்டு வருஷ மிருந்தான்.[36*]

அப்போ பிறதாப சிம்ஹ மஹாறாஜாவுக்கு றொம்பவுஞ் சங்கட்டமாய்[37] சேனைகளுக்கும் தம்முடைய சிலவுக்கும் பண மில்லாதத்தினாலே சண்டை போடுகிறத்துக்கு தயிரிய மில்லாதத்தினாலே[38] சாத்தாறாவுக்கு சாஹு றாஜாவுக்குக் கடுதாசி யெழுதி அனுப்பிவித்தார். அப்போ சாஹு மஹா றாஜா வீருபாயிக்கு தத்துக் கொடுத்த[39] நாகபுரியிலே யிருக்கிற றகோஜி போஜலேயும்[40] பத்தேசிங்கையும் அறுபதினாயிரங் குதிரை சவவார்[41] கொடுத்து அனுப்பிவித்தார்[42]. அவாள் அதித்துறையாக[43] கணைவா யிறங்கினார்கள். அது சேதிக் கேட்டவுடனே சப்த்தற் அல்லிகான் சீமையை விட்டு திருச்சினாப்பள்ளிக்குப் போயி விட்டான். அதின் பிற்பாடு றகோஜி போஜலே பத்தேசிங்கு இவாள் திருச்சினாப்பள்ளிக்கு வந்து மதுரையிலே யிருந்து வந்த சந்தா சாயபுடைய தம்பியும் சப்த்தற் அல்லிகானையும் அடித்து[44] சந்தாசாயபுவை பிடித்து காவல் பண்ணி திருச்சினாப்பள்ளிக் கோட்டையை வாங்கிக் கொண்டார்கள்.[45] அப்போ பிறதாப சிம்ம மஹா றாஜா தம்முடைய மந்திரி அண்ணப்பா சேட்டிக்கையை[46] திருச்சினாப்பள்ளிக்கு அனுப்பிவித்தார். அவர் போயி றகோஜி

---

பாகத்தைச் சப்தர் அல்லியானா என்று பெயரிட்டு அவ்விதமே நாணயத்தை வழங்கி இரண்டு வருஷ காலம் அதிகாரத்தை நடத்தி வந்தார்''.

இது பற்றித் திருமுடி சேதுராமன் சுவடியில், ''திருவையாற்றுக்கு மேல்புறமாகக் காவேரியில் எப்போதும் சலம் நிற்க வேண்டும் என்பதாய்க் கங்காஜெலத்தை மறித்துக் கல்லணை கட்டி அந்த ஜல ஆசருவில் சப்தர் அலிகான் இரண்டு வருஷகாலம் வாசமாயிருந்தான். அது முதல் அந்தக் கல்லணைக்கு சப்தர் அணை யென்று பேருண்டாயிற்று'' (பக். 307–8).

37. றொம்பவும் சங்கட்டமாய் - பணக்கஷ்டமேற்பட்டு (போ.வ.ச.பக். 92)

38. தைரியமில்லாதத்தினலே - மறுத்ததினால் (போ. வ. ச. பக். 92); சைனியமும் தைரியமாய் இராதத்தினலே (டி3119)

39. தத்துக்கொடுத்த - மடியிலே போட்ட (டி3119)

40. றகோஜி போஜலே - ரகோஜி போன்சலே (போ. வ. ச. பக். 92); றாகோசி போசலே (டி3119)

41. குதிரைச் சவவார் - குதிரைப் படை (போ. வ. ச. பக். 92) ''சவவார்'' என்பது (டி3119) இல் இல்லை.

42. "It was at this time that the southern states requisitioned the help of Maharaja Shahu of Satara who incensed at the atrocities committed by the Muhammadans in the Tanjore Kingdom despatched an army of 40 to 50 thousand under Raghoji Bhonsle to wreak vengeance on the wrong doers"- (Srinivasan, Page 253)

43. அதித்துறையாக - வெகுவேகமாக (போ. வ. ச. பக். 92)

44. அடித்து - கொன்று; கொன்றது சகம் 1669 (கி.பி. 1747) என்று திருமுடி சேதுராமன் சுவடி கூறும்.

45. "The Marathas surprised Chanda Saheb in his fort at Trichinopoly to surrender it. Leaving the fort in the hands of Murari Rao Ghorpade, they retraced their steps homeward with Chanda Saheb as their prisoner"- (Srini vasan, Page 253-4)

46. அன்னப்பா சேட்டிகை - அண்ணப்பா சேடிகை (டி3119)

போசலே பத்தேசிங்கு பேட்டி வாங்கின உடனே அவாள் திருச்சினாப்பள்ளிக் கோட்டையும் ஒப்புக் கொள்ளச் சொல்லிச் சொன்னார்கள். அப்போ மஹா றாஜா அங்கீகாரம் யில்லாமல் படிக்கு சொல்லி அனுப்பிவித்தபடியினாலே அவாள் திருச்சினாப்பள்ளி றாட்சியத்தையும் கோட்டையும் பாஜி றாவு கோற் படே என்கிறவனுடைய குமாரன் முறார்ஜி கோற்படே[46அ] வசம் பண்ணிப் போட்டு சந்தாசாயபுவை பிடித்துக் கொண்டு சாத்தா றாவுக்கு ஸாஹு மஹா றாஜாவண்டை போயி சேர்ந்தார்கள். இவடத்திலே பிறதாப சிம்ம மஹா றாஜா றாட்சியம் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார்.

[47*]அப்பால் அண்ணப்பா சேட்டிகை சரிக்கில் பண்ணுகிறத்தில் றாட்சிய தந்திரத்துக் காரியம் ஒருமாற்கமாய்[58] நயப்பிவித்துக் கொண்டு வந்தாலும் சிறுது பொல்லாத கிறுத்தியங்களைப் பண்ணிக் கொண்டு வந்தான். அதென்ன மென்றால்[59] மஹா றாஜாவுக்கு யோக்கியமா யிருக்கப்பட்ட[60] உடமைகள் தனக்கும் தன் பெண்சாதிக்கும் பண்ணிக் கொண்டான். மஹாறாஜா அவர்கள் கிட்ட பேசுகிற போதெல்லாம் மொறட்டுத் தினமாய் பேசிக் கொண்டு வந்தான். அதினாலே மஹா றாஜாவுக்கு கோபம் வந்து அண்ணப்பாவுடைய சரிக்கீலை வாங்கிப்போட்டு[61] மானாஜி றாவுக்கு சரிக்கிலும் சேனாபதியும் குடுத்து அண்ணப்பா சேட்டிகையை கொஞ்சனாளைய காரியத்துக்கு வீட்டிலே இருக்கச்சொன்னார். அது அண்ணப்பா சேட்டிகைக்கு பொறுக்காமல் சரிக் கிலும் பவுசுதாறும்[62] தனக்கு பெரு னாளாய் நடந்தபடியினாலே சேனை யெல் லாம் தன்பாரிசமாக இருக்குமென்று பிறமையினாலே தன் அண்ணன் தம்பி யுடனே மஞ்சள் பிடவை[63] கட்டிக் கொண்டு வெளியிலே பிச்சானா போட்டு[64] உளுக்கார்ந்தான். அப்போ மஹா ராஜா அவர்களுக்கு இந்த அண்ணப்பா சேட்டிகையுடைய துஷ்பிறகுறதி முன்னமே தெரிந்திருக்கிறபடியினாலே அந்த சமுசயத்தினாலே ஆயுதத்துடனே வெளியிலே வந்து உளுக்கார வேண்டிய காரண மென்னவென்று கேட்டனுப்பிவித்தத்துக்கு அண்ணப்பா சேட்டிகை

---

46அ. **Trichinopoly surrendered 26th March, 1741 and Chanda Saheb was brought a prisoner to Satara ...... Moorar Rao Ghorepuray was left in command of the fort of Trichinopoly ......"– (Duff, Page 120)**

47* முதல் 66* முடிய 3119இல் இல்லை; போ. வ. ச. வி லுள்ளது (பக். 93-94). திருமுடி சேதுராமன் சுவடியிலுமில்லை. ஆனால் டி3762 இல் உள்ளது. கிடைத்துள்ள இரண்டு முழுச்சுவடி களில் இருப்பதால், குறைச்சுவடியாகிய டி3119இல் பெயர்த்தெழுதும்பொழுது இப்பகுதி விடுபட்டி ருத்தல் கூடும் என ஊகிக்கலாம்.

58. ஒருமாற்கமாய் - ஒருவாறு (போ. வ. ச. பக். 93)

59. அதென்னமென்றால் - அதன் விவரம் சிறிது கூறப்படுகிறது (போ. வ. ச. பக். 93)

60. யோக்கியமாயிருக்கப்பட்ட — உரித்தான (போ. வ. ச. பக். 93)

61. வாங்கிப்போட்டு - பதவியிலிருந்து நீக்கி (போ. வ. ச. பக். 93)

62. பவுசுதார் - சேனைத் தலைவர் பதவியும் (போ. வ. ச. பக். 93)

63. மஞ்சள் பிடவை - விலையுயர்ந்த பட்டாடைகளை (போ. வ. ச. பக். 93)

64. பிச்சானா போட்டு - முடிவு செய்து கொண்டு (போ. வ. ச. பக். 93); பிசானு (டி3762)

பொறுமையா யிராமல் யெந்த மஹா றாஜாவுடைய அன்னம் சாப்பிட்டு பெரிய மனுஷனானானோ அவாள் பேரிலே தானே ஆயுதம் பிடித்து ரெண்டொருத்தருக்கு காயப்படுத்தினத்தின் பேரிலே மஹா றாஜாவுக்குத் தெரிந்து அடங்கமாட்டானென்று தம்முடைய சனத்துக்கு அல்லா பண்ணச் சொல்லி[65] உத்தாரம் பண்ணினார். ஒருவருக் கொருவர் அடிதடியிலே அண்ணப்பா அவருடைய தம்பி முதலான ஆறேழுபேர் விழுந்து போனார்கள். அப்பால் மஹா ராஜாவுக்கு அண்ணப்பா சேட்டிகை சர்க்கார் காரியம் பண்ணினத்தை நினைத்து நினைத்து பசியாதாபம் றொம்பவும் படுகிறத்துக்கு காரணமாச்சுது[66*]

அதின் பிற்பாடு திருச்சினாப்பள்ளியிலே இருந்த முறார்ஜி கோறபடே என்கிறவன் தன்னுடைய மந்திரி யின்னிசுகான் என்கிற துலுக்கனுடைய போதனையினாலே தஞ்சாவூர் றாச்சியம் கொஞ்சமாக[67] யிருந்தாலும் நல்ல[68] றாச்சியமானபடியினாலே அதைக் கட்டிக்க கொள்ள வேணும்; ஆனா லந்த றாஜா நமக்கு யெஜமானன் யாகையால் சீமையை யேதாகிலும் கட்டிக்கொள்ளவேணும்; அதுவும் சமாதானமாய்க் குடுக்க மாட்டார்கள்; ஆகையால் சில்லரை உபத்திரம் பண்ண வேணும் என்கிற புத்தியினாலே யின்னிசுகான் பிறகாலே ரெண்டாயிரம் குதிரை தயினாத்துப் பண்ணி[69] அனுப்பிவித்தான். அந்த யின்னீசுகான் தஞ்சாவூர் சீர்மையில் சிறுது விடத்தில் அடிக்கிறதும், சிறுது விடத்தில் கொள்ளையடிக்கிறதும், இப்படியாக சண்டைக்கு எதிர்த்து நில்லாமல் ரெண்டொரு வருஷம் சில்லரை உபத்திரம் றொம்பவும் பண்ணினான். அப்போ பிறதாப சிம்ம றாஜா தன்னுடைய சேனாபதி மனாஜி றாவுக்கு உத்திரவு பண்ணி சிறுது சேனைகளையும் குடுத்து அனுப்பிவித்தார். அவர் போய் அந்த யின்னிசுகான் யென்கிறவனை கொஞ்ச நாளாக துரத்திக் கொண்டு கடைசியில் ஒரு ஆத்தங்கரையில் மடக்கிக் கொண்டு [70*]இரனூறு முன்னூறு பேரைக் கொண்ணு அன்னூறு அறனூறு குதிரையும் மனுஷாளையும் பிடித்துக் கொண்டு வந்தார்.[71*] அந்த சண்டையில் இன்னீசுகான் என்கிறவன் ஒளித்து போய் விட்டான்.[72] அத்தோடே அந்த முறா றாவு உபத்திரம் நிண்ணுபோச்சுது.[73]

---

65. அல்லாப் பண்ணச் சொல்லி - கலகம் செய்யும் படி (போ. வ. ச. பக். 94)

67. கொஞ்சமாக - சிறிதாக (போ. வ. ச. பக். 94)

68. நல்ல - செழிப்பான (போ. வ. ச. பக். 94)

69. தயினாத்துப்பண்ணி - சேர்த்து (போ. வ. ச. பக். 94)

70* முதல் 71* வரை போ. வ. ச. வில் பின்வருமாறுளது: "அவனுடன் சண்டை செய்து அவனுடைய 300 குதிரைப் படைகளை நாசமாக்கி 700 காலாட்களையும் 500 குதிரைகளையும் கீழே வீழ்த்தினார்."

72. ஒளித்தது சகம் 1671 (கி. பி. 1749) (திருமுடிசேதுராமன் சுவடி பக்கம் 317)

73. நிண்ணுபோச்சுது - முடிவடைந்தது (போ. வ. ச. பக். 95)

"There was little love between Pratap and Murari Rao, as a result of which an understanding developed between the latter and the French, and the Tanjore kingdom was subjected to the relentless depredations carried out systematically by the Maratha adventurer" - (Srinivasan, Page 254)

அதின் பிற்பாடு பத்தேசிங்கு றெகோஜி போசலே திருச்சினாப்பள்ளியி லிருந்து சந்தா சாயபுவை பிடித்துக்கொண்டு சாத்தாராபுனாவிலே றாஜாவின் உத்திரவுப்படிக்கு ஒரு கெடியிலே போட்டுவிட்டார்கள்.[74] அந்த சந்தா சாய புடைய சினேகிதன், மகமதரப்[75] பென்கிறவன், ஒரு பெரிய சறதார், ரெண்டா யிரம் மூவாயிரங்குதிரை அஞ்சானை[76] கொஞ்சம் பாற்[77] இதுகளோட கூட தான் பிறத்தேகமாய் ஒருதன் ஆசறாவிலு மில்லாமல்[78] புதுச்சேரியில் வந்து பிறாஞ்சுக்காறருடைய கும்மக்கு கொஞ்சம் வாங்கிக்கொண்டு தேசம் ஓரட்டுக்கும் கொள்ளையடித்துக்கொண்டு றாமாறு[79] உடையார் பாளையத்துக் காட்டில் பதுங்கி இருக்கிறதும் இப்படிக்கு சல்லியம் பண்ணிக் கொண்டு வந்தத்தினாலே தஞ்சாவூர் சீர்மை திருச்சினாப்பள்ளி முதலான சீமை றொம்பவும் காபிறா வாச்சுது. அப்போ பிறதாப சிம்ம றாஜா தன்னுடைய கில்லேதார் மல்லாற்ஜி காடேராவ் மானோஜிராவை கொஞ்சம் சேனைகளையும் அனுப்பிவித்தார். இவாள் ஒருமாசம் வரைக்கும் அவாளை பின் துடர்ந்து கடசியிலே திருக்காட் டுப்பள்ளிக் கோட்டை சமீபத்தில் அந்த மஹமது அரப்[80] பென்கிறவனை மடக்கிக் கொண்டு அவனுடைய ஆனை குதிரைகளைப் பிடுங்கிக் கொண்டு அவன் கிட்டயிருந்த சுலுப்புகார்[81] யென்கிறபிருது கொடியுடனே[82] இன்னும் அவனண்டையிலிருந்த பிருதுகளை பிடுங்கிக்கொண்டு அந்த மஹமது அரப் பென்கிறவனையும் அவன் சேனைகளையும் கொண்ணு போட்டார்கள். அப்போ பிறதாப சிம்ம றாஜா மகா சந்தோஷமாக அந்த பிருதுகளை மல்லாற்ஜி காடே றாவுக்கு கொஞ்சம் மானோஜி றாவுக்கு கொஞ்சமாகக் கொடுத்து விட்டார்.

தீவு கோட்டை[83] வாங்கிற நிமித்தியம் இங்கிலேசுகாறருடைய சேனை கொஞ்சம் வந்து அதைப் பிடித்துக் கொண்டார்கள். ஆனால் இந்த தீவு கோட் டையை பிடித்துக் கொண்ட காரணம் என்ன வென்றால் தீவுக்கோட்டை

---

74. "Chanda Saheb, taken a prisoner, was carried off to Satara" (Rajayyan, Page 26)

75. மகமதரப் - மகமதமகாப் (டி3119); முகம்மது அரபு (போ. வ. ச. பக். 95)

76. அஞ்சானை - ஐந்து யானை (போ. வ. ச. பக். 95)

77. பாற் - பார் (டி3119); துப்பாக்கியாட்கள் (போ. வ. ச. பக். 95)

78. தான் பிறத்தேகமாய் ஒருதன் ஆசறாவிலு மில்லாமல் - தன் சொந்த முறையில் வெளிக் கிளம்பி (போ. வ. ச. பக். 95)

79. றாமாறு - இராக்காலத்தில் (போ. வ. ச. பக். 95)

80. மஹமது அரப் - முகம்மது அரபு; அந்த அராபியரை (போ. வ. ச. பக். 95). முகம்மது துகாப் (டி3119)

81. சுலுப்புகார் - ஜுலுப்கவர்கான் (போ. வ. ச. பக். 95)

82. பிருது கொடியுடனே - விர விருதையும் (போ. வ. ச. பக். 95)

83. தீவு கோட்டை - தேவிக்கோட்டை; கொள்ளிடம் கடலில் சேருமிடத்தில் தீவாக அமைந்துள்ளது.

"The fort of Devikottai (at the mouth of the Coleroon) was about a mile in circumference, with walls 18 feet high and was flanked at unequal intervals by projecting towers, some circular and some square"- (Srinivasan, Page 263)

துறையில் இங்கிலீசுக்காறருடைய ஒரு கப்பல் முழுகிப் போய் அதில் சிறுது சாமான்களும் னாய்களும் மஹா றாஜா வைத்துக் கொண்டபடியினாலே அந்த தீவு கோட்டை தங்களுக்கு தேவையென்கிற அபேட்சையாகப் பிடித்துக் கொண்டார்கள்.[84] அப்போ மகா றாஜா சேனாபதி மானோஜி றாவை[85] கொஞ் சஞ் சேனையுடனே அனுப்பிவித்து அந்த தீவுகோட்டையை சண்டைபோட்டு வாங்கிக் கொண்டு அந்தக் கோட்டையில் ராஜாவின் உத்தாரப்படிக்கு ஜாபற் சாயபு யென்கிறவனை கில்லேதாரனாக வைத்துப்போட்டு மானோஜிறாவு தஞ்சாவூர் கோட்டைக்கு வந்துவிட்டார். ரெண்டாம் விசை இங்கிலிசுக்காற ருடைய சேனைகள் தீவு கோட்டை பேரிலே வந்தார்கள்[86]. அப்போ கொஞ் சம் சற்தார்களையும் சேனைகளையும் அனுப்பிவித்தார். அந்த சண் டையில் இங்கிலீசுகாறருடைய கால்த்தளங்கள் கொள்ளடக்கரையிலே நிண்ணு கொண்டு யிருந்தார்கள். தஞ்சாவூர் சேனை அதின் பேரிலே போறத் துக்கு கொள்ளிடக் கரை உன்னிதமான படியினாலே பின்னொரு யிடத்திலே யிருந்து ஆத்தைக்கடந்து போறத்துக்கு குதிரை சவவார்களுக்கு வழியில்லாமல்ப் படிக்கு சத்தே அப்பாலே போய் வழியோடே யிறங்கி ஒருவழியாக ஆற்றிலே வருகிறத்துக்கு யேதுவாக யிருந்த படியினாலே அப்படியே வருகிறபோது யிங்கிலிசுக்காரருடைய சேனை கரையி லிருந்தவர்கள் அடிக்கவும் சுடவும் தலைப்பட்டார்கள். இவாளுக்கு ஆற்று மணலினாலே குதிரைகளை வேகம் பண்ணி தங்களுக்கு வேணுமென்கிற படியே திருப்பிக் கொள்ளக் கூடாமல்ப் போனபடியினாலேயும், கொஞ்சம் சேனைகள் சேதமாகி ஒரு சற்தார் வீரப்பா யென்கிறவனும் விழுந்து போனான். அப்பால் இங்கிலீசுக்காறர் மஹா றுஜா வுக்கு சமாதானம் பேசி உடன்படிக்கையும் எழுதிக்கொடுத்தார்கள் அதின்

---

84. "The desire to acquire some territory was the supreme cause for this war"- (Srinivasan, Page 262)

'பிடித்துக் கொண்டார்கள்' என்று இங்கு இருப்பினும், முதல் தடவை ஆங்கிலேயர் தோற்றனர் என்பது வரலாற்றாசிரியர் கூற்றாகும்:-

"Thus the engagement of the English with a native prince proved a signal failure and they had to return to Fort St. David"- (Srinivasan, Page 263)

"On the 11th of May (1949) Captain Cope with his army retreated in consternation to Fort St. David" (Rajayyan, Page 28)

85. மானோஜிராவ் - நாகாஜிராயர் (போ. வ. ச. பக். 96)

86. "The Second expedition was undertaken not with the idea of restoring Kattu Raja to the Tanjore throne, but with the sole purpose of capturing Devikottai in order to wipe off the stigma of defeat"- (Srinivasan, Page 263-64)

87. "According to the treaty Pratap agreed to grant to the English, the fort of Devikottai and some amount towards the expenses of war and to pay to Kattu Raja a pension of Rs. 40,000" - (Srinivasan, Page 264)

"Pratap Singh granted a life pension of Rs. 4000 a year (G. B. Mallesan, History of the French in India, Page 244)- (Rajayyan, Page 29, F. n. 20)

தேவிக்கோட்டைக்காக ஆங்கிலேயர் ஆண்டொன்றுக்கு 1100 வராகன் தஞ்சை மன்னருக்குக் கொடுக்கலாயினர் (கே. எம். வே. பக்கம் 58-59)

பேரில் தீவு கோட்டை யிங்கிலிசுக் காறருக்கு கொடுத்தது[87] ௲௭௱௪௰௯ வருஷம்.[88]

அதுக்குமேல் அயிதராபாதுலே யிருந்து பெரிய நிஜாம் காஜதிகான்[89] யென்கிறவன் தெற்கு பிறாந்தியத்து சேதி கேழ்விப்படுகிறதில் சந்தாசாயபு என்கிறவன் தொஸ்தல்லிகா[90] னுடைய பிள்ளை சப்த்தற்அல்லிகான்[90] முதலான வர்களைச் சேர்த்துக் கொண்டு பிறாஞ்சுக்காறரை சினேகம்பண்ணி அவர்களுடைய கும்மக்கும் வாங்கிக் கொண்டு திருச்சினாப்பள்ளி றாச்சியம் செயிச்சான். அதை ஸாஹு றாஜா கிட்ட யிருந்து றகோஜி போசலே பத்தே சிங்கு இவாள் தஞ்சாவூர் ராஜாவுக்கு குமக்காக போயிருந்தவர்கள் அவாள் திருச்சினாப்பள்ளி றாச்சியத்தையும் பிடித்து சந்தாசாயபுவையும் பிடித்துக் கொண்டு கெடியிலே கொண்டு வந்து போட்டார்கள். இதெல்லாம் கேழ்விப்பட்டு திருச்சினாப்பள்ளியிலே பாறச்சாயி கொடி பறந்ததை நாம் உயிரோடே இருக்கச்சே அதை யிறக்கிப்போடுகிறது யுக்த்தமல்ல வென்று ஸாஹுறாஜாவுக்கு சினேக மூலமாய் காகிதமெழுதி அவர் அனுமதியினாலே எண்பதினாயிரம் சுவரா வாங்கிக் கொண்டு திருச்சினாப்பள்ளிக்கு வந்து சேர்ந்தார். திருச்சினாப்பள்ளி கோட்டையில் முறாரிறாவு பேரிலே ஆறுமாசம் வரைக்கும் றாசகாரியம் பண்ணி முறார்ஜி கோறபடேக்கு கவுலும் குடுத்து[92] வெளியிலே அழைப்பிவித்து அனுப்பிவிட்டு திருச்சினாப்பள்ளிக் கோட்டையும் ஆற்காட்டு சுபா அதிகாரமும், அனவற்திகான்[93] என்று கூட வந்து இருந்தார், அவர் பாரிசம் பண்ணி தாம் அயிதறாபாதுக்கு போயிவிட்டார்.[94]

ஆற்க்காடு சுபாவும் திருச்சினாப்பள்ளி றாச்சியமும் அதிகாரம் அனவற்திகா னானபடியினாலே அவர் பிள்ளை மாபோசுகான் என்கிறவன் ஆற்க்காட்டு சுபையைச் சேர்ந்த தஞ்சாவூ ரானபடியினாலே தஞ்சாவூர் றாச்சியத்

---

88. கி.பி. 1749

89. காஜதிகான் - காதல் சாதிகான் (டி3119), ஷாஜதிகான் (போ. வ. ச. பக். 97). பெரிய நிஜாம் - மூத்த ராஜகுமாரர் (போ. வ. ச. பக். 97); இவருக்கு நிஜாம் உல் முல்க் என்று பெயர்.

90. "Subordinate to the Nizam was the province of the Carnatic under a deputy or nabob, having the seat of his government at Arcot. Daud Khan had been first entrusted with its governance and when he, in 1710, was withdrawn to the province of Guzarat, one Sadatulla was left to officiate. This he did until his death in 1732, when his nephew **Dost Ali** assumed the administration of the province, but without applying for the sanction of his superior, the Nizam"- (Dt. Manual, N.A., Page 48)

91. சப்த்தற் அல்லிகான் –Safdar Alikhan; பதர்அலிகான் (போ. வ. ச. பக் 97)

92. கவுலும் குடுத்து - கவுலின்பேரிலே (டி3119) தந்திரமாக (போ. வ. ச. பக். 97)

93. அனவர்திகான் - இவருக்கு Anwaru'd-din என்றும் பெயருண்டு

94. "The success of the Marathas greatly perturbed the aged Nizam and he personally undertook an expedition to the south in order to settle matters. When the Nizam arrived with a large army at Arcot in March 1743 all the chiefs of the country promptly submitted to him, while Murari Rao was ordered to quit Trichinopoly and Anwaru'd-din was made the Nawab of Arcot"- (Srinivasan, Page 254-5)

துக்கு பேஷ்க்கஷ்[95] வரவேணுமென்று சபாபு சால பண்ணினான்.[96] அப்போ பிறதாப சிம்ம மஹாறாஜா கொஞ்சம் கணக்குப்படிக்குத் தள்ளிக் கொடுக்க வேணு மென்கிற பிறசங்கத்தை ஞாயதாகச்[97] சொல்லி அனுப்பிவித்தத்துக்கு அவனுக்கு அது தோணாமல்[98] மாபுசுகான்[99] தன்னுடைய சேனையுடனே[100] சண்டைக்கு வந்தான். அப்போ பிறதாபசிம்ம றாஜாவும் தம்முடைய தளத்தை அனுப்பிவித்தார். யிருவருக்கும் தஞ்சாவூர்க் கோட்டைக்கு வடபாரிசத்திலே காதவழிக்கப்பாலே[101] நல்ல சண்டையாச்சுது. அப்போ மாபூசு கானுடைய சேனைகள் நிற்கமாட்டாமல் பாளையம் சின்னாபின்னமாய்ப் போய் மாபூசு கான் அபசெயப்பட்டு ஓடிப்போய்விட்டான்.[102] அப்போ பாளையத்திலே யிருந்து அகப்பட்டுக் கொண்ட மனுஷியாளுக்கு றொம்பவும் ஆதரணைபண்ணி மறுபடியும் மாபூசுகான் கிட்ட அனுப்பிவிட்டார்.[103]

அப்பால் மாபூசுகான் அபசெயத்தை அடைந்த விதனத்தை தன் தொகப்பன் அனவற்திகானுக்குத் தெரியப்பண்ணினான். அப்போ அனவற்திகான் யோசனைபண்ணினது: தஞ்சாவூர் மஹாராஜா யுக்தமாயிருக்கப்பட்ட சால்சாபு தான் சொல்லி அனுப்பி வித்தார். அதை மாபூசுகான் நன்றாய் யோசனை பண்ணிப் பாராமல் ஆத்திறப்பட்டு[104] உயித்தத்துக்கு போனபடியினாலே அபசெயத்தை அடைந்தான். ஆகிலும் பாச்சாயியுடைய தளம் பின்வாங்கிப் போச்சுதென்று[105] யீரிஷையைப் பத்தி[106] அனவற்திகான் பெருசேனைகளை சவாற்[107]

---

95. பேஷ்கஷ் - வரி - Tribute; பேஷ்கிஸ்திப்பணம் (டி3119)

96. சபாபு சால பண்ணினான் - சவாபு சலாம் பண்ணினான் (டி3119); அதிகார முறையில் சொல்லியனுப்பினார் (போ. வ. ச. பக். 97)

97. ஞாயதாக - வாசிபாக (டி3119); உசிதமென்று (போ. வ. ச. பக். 98)

98. அவனுக்கு அது தோணாமல் - அதைப்பற்றி யோசிக்காமல் (போ. வ. ச. பக். 98)

99. மாபுசுகான் - Mahfuz Khan; இவர் அனவாருத்தீனின் மூத்த மகன் - (The Maratha Supremacy, Page 321)

100. சேனையுடனே - பவுசுடன் (டி3119)

101. காத வழிக்கப்பாலே - இரண்டு மைல் தூரத்தில் (போ. வ. ச. பக். 98)

102. மாபூசுகான் தோற்றுன் என்று இங்குக் கூறியிருக்கத் தஞ்சை மாவட்ட மானுவல் (பாகம் V பக்கம் 779 இல்) தஞ்சையரசர் தோற்றார் அதாவது நவாபுவென்றுர் என்றிருக்கிறது:-

In two letters the Nawab speaks in boastful language of victories gained by his troops over those of the King of Tanjore in two separate battles. In the first of these conducted by his eldest son **Maphuz Khan** the Tanjorean army consisted of 5000 horse and 30000 foot composed of natives of Balghat and other countries and the loss by Tanjore amounted to 200 men killed and 400 wounded and about forty taken prisoners"

103. இந்த வாக்கியம் போ. வ. ச. வில் இல்லை

104. ஆத்திரப்பட்டு - அவசரப்பட்டு (போ. வ. ச. பக். 98)

105. அங்கு அடுத்து "இருக்கக்கூடாது என்று" என்ற சொற்கள் போ. வ. ச. பக். 98இல் உள்ளன

106. யீரிஷையைப்பத்தி - பொறாமையடைந்து (போ. வ. ச. பக். 98)

107. சவாற் - சுவரா (டி3119); குதிரைப்படை (போ. வ. ச. பக். 98)

பாற[108] பீறங்கி காளஅஸ்தி [109] வெங்கடகிரி வேட்டவல்லம் முதலான பாளையக் காரரையும் கூட அழைத்துக் கொண்டு தஞ்சாவூர் றாட்சியத்தின்பேரிலே சண் டைக்கு எத்தினமாகப் பிறபட்டு தஞ்சாவூருக்கு ஈசானியத் திக்குலே ஆறுனாழி வழியில்[110] பசுபதி கோயில் கிறாமத்துச் சமீபமாய் மைதானத்திலே இறங்கி னான். அப்போ பிறதாப சிம்ம றாஜா தம்முடைய சேனைகளிலே மூவாயிரம் சவாறும் கொஞ்சப்பாறும் பீரங்கி முதலானதுகளை கூட கோவிந்தறாவு சேட்டி கையும் மனோஜிறாவு ஜெகதாபையும் கூட அனுப்பிவித்தார்.[111] இருவர் சேனை யும் நெருங்கி விடிய நேரத்தில் சண்டையானத்தில் தஞ்சாவூர் சேனைகள் உள்ளே நெருங்கி அவாள் பீரங்கிக்களையும் பின்னாலே போட்டுவிட்டு அன வற்திகானுடைய சேனைகள் யெல்லாம் கலைத்து தஞ்சாவூர் சேனையினாலே[112] வெகுபேர் அடிபட்டு போனார்கள். பெரியபெரிய சற்தாற்களும் யெதிர்த்து நிற்க்க மாட்டாமல் ஓடிப் போய் விட்டார்கள். அப்போ கடசியிலே தஞ்சா வூர் பாளையத்து சனங்கள் அனவற்திகானுட சொந்த சவாரி ஆனைக்கு பாலா பறசியுடைய அடியினாலே [113] அசையாமல் நிண்ணுபோயிருக்கிற ஆனையின் பேரிலே யேறி அம்பாரியுடைய கவுத்தை அறுக்கத் தலைப்பட்டார்கள். அப்போ அனபற்திகா னகப்பட்டுக் கொண்டு னாலுநாழிகை மட்டுக்கும் தம்முட வாயி னாலே [114] தஞ்சாவூர் சேனைகளுக்கு பிறதாப சிம்மறாஜா பேரிலே ஆணை போட்டு நிறுத்தி வைத்தார்.[115] இதுக்குள்ளே கோட்டை சமீப மானபடியினாலே மஹா றாஜா அவர்களுக்கு இந்த சேதி தெரிந்து மஹா றாஜா அவர்கள் பாச்சாயியுடைய சுபேதா ரானபடியினாலே அந்த அனவற்தி கானை விட்டு விடச் சொல்லி உத்தாரம் பண்ணினபடியினாலே பாளையம் பிறப்பட்டு வந்து விட்டுது. அப்பால் அனவற்திகான் மஹாறாஜாவுக்கு வஸ்த்திரமுங் கடுதாசியும் அனுப்பிவித்து மஹா றாஜா கிட்டயிருந்து தானுமப்படியே வஸ்த்திரமுங் கடுதாசியும் பத்திக்கொண்டு[115] ஒரு மாற்கமாய் சந்தி பண்ணிக் கொண்டு அனவற்திகான் ஆற்க்காட்டுக்கு பிறப்பட்டு போய்விட்டான்[116] அந்தச் சந்தியிலே தஞ்சாவூருக்கு ஒரு வெள்ளையானை வந்து யிருந்துது.

---

108. பாற - பார - பெரிய 109. காளஅஸ்தி - காளஹஸ்தி; திருக்காளத்தி

110. ஆறுனாழிவழியில் - ஆறுமைலுக்கப்பால் (போ. வ. ச. பக். 98)

111. இவர்களுடன் உதவிக்குச் சென்ற அரச பரம்பரையினர் எழுவர் பெயரும் சர்தார்கள் நால்வர் பெயரும் திருமுடிசேதுராமன் சுவடியில் உள்ளன (பக். 332). இப்போர் நடந்தது சகம் 1673 (கி. பி. 1751) (திருமுடிசேதுராமன், பக். 333)

112. சேனையினாலே - பவுசுனாலே (டி3119)

113. பாலாபறசியுடைய அடியினாலே - ஈட்டி முதலியவைகளால் தாக்கி (போ. வ. ச. பக். 99)

114. தம்முடைய வாயினாலே - தன் பேச்சு வன்மையால் (போ. வ. ச. பக். 99)

114 முதல் 115 வரை: தஞ்சாவூர் சேனைகளுக்கு பிறதாபசிம்ம றாஜா பேரிலே ஆணை போட்டு நிறுத்திவைத்தார் - தஞ்சைசேனையின் முன்பாகத் தன் பேச்சுவன்மையால் தனக்கு ஏதாவது தீங்கு நேரிட்டால் பிறதாபசிம்ம ராஜாவைப் பழிவாங்க நேரிடும் என்று எச்சரித்து சமாளித்துக் கொண் டார் - (போ. வ. ச. பக். 99)

115. பத்திக்கொண்டு - அழைப்பித்துக்கொண்டு (டி3119)

116. இந்தப்போரிலே கலந்து கொண்டவர்களில் "நாகஜிராஜா" என்றொருவர் பீஷ்மர் போல்

முன்னாலே றாகோஜி போசலேயும் பத்தேசிங்கும் திருச்சினாப்பள்ளி மேலே சண்டைக்கு வந்திருந்தார்கள். அப்போ சந்தாசாயபுவை பிடித்துக் கொண்டு[117] கெடியின் பேரிலே போட்டு வைத்து வயணம் எழுதி யிருக்குதே அந்த சந்தா சாயபுவை அழைப்புவித்து உன்னைவிட்டு விடுகிறோம் நீயெங்கே வோணுமோ அங்கே போய்விடு ஆனால் தஞ்சாவூர் றாட்சியம் நம்முதானபடி யினாலே அந்த வழிக்கு நீ போகத் தேவையில்லை எண்ணு[118] அவன்கிட்ட யெழுதி வாங்கிக்கொண்டு பிறமாணமும் வாங்கிக் கொண்டு அந்தச் சந்தா சாயபுவை விட்டு விட்டார்கள்.[119] அவன் அவடம் விட்டு பிறப்பட்டு ஆதவானி யிலே யிருக்கும்[120] யிறாசத் மோதீன்கான்[121] கிட்ட போயி அவனுடனே பேசிக்கொண்டு இருவத்தய்யாயிரம் சவார்[122] அதுக்குத் தக்க பாற தோப்பு கானா[123] முதலான சன்னாகத்துடனே இறாசத் மோதின்கானை சந்தா சாயபு டனே கூடதெக்ஷணை பிறாந்தியத்துக்கு வருகிற சமையத்திலே பிறாஞ்சுக் காரருக்கும் கடுதாசி அனுப்பிவித்து சவவிதானம்[124] பண்ணிக்கொண்டு அவர்களுடைய கும்மக்கும் கூடவாங்கிக் கொண்டு ஆற்காட்டு சுபேதார் அனவற்திகானை அடித்துப்போட்டு ஆற்காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.[125]

அப்போ ஆற்காட்டிலே யிருந்த மமுதலிக்கான்[126] ஒருத்தருக்கும் தெரியா மல் பிறப்பட்டு நாகபட்டணத்துக்குப்போய் ரெண்டு மூணு நாளங்கேயிருந்து

---

சிறப்பாகப் போர்புரிந்தார் என்றும், கலியுக பீஷ்மர் என்று பேரடைந்தார் என்றும் திருமுடி சேதுராமன் சுவடி (பக். 336 - 37) கூறும்.

117. "Trichinopoly was taken on 26-3-1741 and Chanda Sahib was captured and imprisoned" - (The Maratha Supremacy, Page 180)

118. எண்ணு – இது டி3119இல் இல்லை; என்று (டி3762)

119. "Chanda Sahib was released in 1748 on a payment of seven lakhs of rupees" - (Srinivasan, Page 255)

120. "ஆதவானியிலே யிருக்கும்" என்பது போ. வ. ச. வில் இல்லை (பக். 99). (ஆதவானி- ஆதோனி)

121. யிறாசத் மோதின்கான் - ராஸ்த் மோஹிதீன்கான் (போ. வ. ச. பக். 99). இவர் உதவி யைக் குறிப்பிடாமல், நிஜாமின் பேரன் முசஃபர்ஜங் (Muzaffar Jang) உதவி கிடைத்தது என்பர் வரலாற்றாசிரியர்கள்.

"The rival claimant to the subhadarship, Muzaffar Jang, joined Chanda Sahib"- (Srinivasan, Page 256)

122. சவார் - சுவரா (டி3119); காலாட்படைகள் (போ. வ. ச. பக். 99)

123. பாறதோப்புகானா - பீரங்கி (போ. வ. ச. பக். 99)

124. சவவிதானம் - உடன்படிக்கை (போ. வ. ச. பக். 99)

125. "At Ambur (1749) they defeated Anvaruddin and marched to Arcot" -(Srinivasan, Page 256)

"Before he (Anwar-ud-din) reached his intended victim, a bullet from a passing French battalion struck him and he fell dead on his howdah"- (District Manual, N.A., Page 55)

126. மமுதலிக்கான் - முகம்மது அலி; இவர் அனவாருத்தின் மகன் ஆவர்

கொண்டு பிறதாப சிம்ம றாஜாவுக்கு கடுதாசி பத்திரம் அனுப்பிவித்தான். மஹாறாஜாவும் அந்த கடுதாசியை றம்பவும் மரியாதையுடனேயும் வேளை சமயத்தையும்[127] யோசினை பண்ணிக்கொண்டு, நம்மை பிறார்த்திச்சவனுக்கு[128] நாம் ஆசறா பண்ணுகிறது விகிதம்,[129] அப்பால் சந்தாசாயபு யிறாசத் மோதின் கான் கிட்டயிருந்து வருகிற உபத்திரவம் வரட்டும்,[129அ] பார்த்துக்கொள்ளுவோமென்று[130] தீர்க யோசனை பண்ணி நவாபு மமுதல்லிகானை[131] அழைத்தனுப்பி வித்து தம்முடைய அரண்மனையிலே சொந்த தோட்டத்திலே யிடம்பண்ணிக் கொடுத்து சவரக்ஷணை பண்ணிக் கொண்டு வந்தார். நவாபு மமுதல்லிகானும் மூணுமாதம் மஹாறாஜாவுடை ஆசறா[132] விலே யிருந்து சீரங்கப் பட்டணத்து கற்த்தா தேவறாஜா தளவாய்க்கும்,[133] தெற்கு பிறாந்தியத்து பாளையகாறரெல்லாருக்கும், அயிதறாபாதுலே நாஜறசிங்குக்[134]கும், பின்னையும் ஆற்க்காட்டு சுபாவைச் சேர்ந்த காளஅஸ்தீ வெங்கிடகிரி பொம்மறாஜா முதலான பெரிய பாளையக்காறருக்கும், கடுதாசிகளை எழுதி அனுப்பிவிச்சிப் போட்டு மூணு மாஸத்தையிலே[135] தாம் திருச்சினாப்பள்ளிக்கு[136] போய் சேர்ந்தார்.

அப்போ பிறதாபசிம்ம றாஜா தம்முடைய குமாரன் துளசா மஹாறாஜாவுக்கு, நவாபு மமுதல்லிக்கான் தஞ்சாவூர் அரண்மனையில் வந்திருக்காதத்துக்கு[137] முன்னே, முதல் கல்லியாணம் மோத்தேவுடைய பெண்ணை பண்ணினார். அந்த பாயி சாயபுடைய பேர் றாஜேஸபாயி சாயபு. அப்பால் சில நாளைக்கு பிற்பாடு மஹாறாஜாவுடைய முதல் பெண்சாதி அஹில்லியாபாயி சாயபு பரமபதமடைந்தாள். நாலாவதுஸ்ரீ யெசவந்து பாயி சாயபு கெற்பத்தில் ரெண்டு கன்னிகை பிறந்துது. அப்பா லந்த ரெண்டு பெண்ணுக்கும் கலியாணம் பண்ண வேண்டிய சமையத்தில் மாடிக்கு வீட்டிலே ஒரு கன்னிகை நிம்பாளகற் வீட்டிலே ஒரு கன்னிகையும் குடுத்து விவாக மாச்சுது. பிறதாபசிம்ம றாஜா வைப்பு ஸ்ரீகள் யேழு பேரிலே அன்னபூரணாபாயி

---

127. அந்தக் கடுதாசியை றம்பவும் மரியாதையுடனேயும் வேளை சமையத்தையும் - அக் கடிதத்தின் வணக்கமான போக்கையும் அப்போதைய காலநிலைமையையும் (போ. வ. ச. பக். 100)

128. பிறார்த்திச்சவனுக்கு - அண்டினவனுக்கு (போ. வ. ச. பக். 100)

129. ஆசறாபண்ணுகிறது விகிதம் – உதவி செய்ய வேண்டும் (ஷை)

129அ. வரட்டும் - வரமட்டு (டி3119) 130. இதுவரையிலுமே டி3119இல் உள்ளது

131. மமுதல்லிகான் - முகம்மது அலி

132. ஆசறா - பாதுகாவல் (போ. வ. ச. பக். 100) 133. தளவாய் – படைத்தலைவர்

134. நாஜறசிங்கு - நாஸர் ஜங்; Nazir Jung; இவர் ஹைதராபாது நிஜாம்; நிஜாம் உல் முல்க் என்பவரின் இரண்டாவது மகன். இவருக்குப் போட்டியாக அமைந்தவர் முசஃபர்ஜங் (Muzaffar Jung); இவர் நிஜாமின் பேரனாவர் (District Manual, N.A., Page 54)

135. மூணுமாசத்தையிலே - மூன்று மாதத்திற்குப் பிறகு (போ. வ. ச. பக். 100)

136. "At Ambur (1749) they defeated Anwaruddin and his son Muhammad Ali fled to Trichinopoly"- (Srinivasan, Page 256)

137. வந்திருக்காதத்துக்கு – வருகிறதற்கு (போ. வ. ச. பக். 100)

என்று ஒருதி; அவள் கெற்பத்திலே றாமசுவாமி[138] கிஷ்ட்டண சுவாமி யென்றும் ரெண்டு பிள்ளைகள் பிறந்துது. ஆனால் அவாள் செம்மையான மாற்கமாய் பிறவாமல் விஹிஜிதமாகப் பின் வழியிலே[139] பிறந்தவர்களென்று லோக[140] வசந்தையாக யிருந்தது. அதில் சின்ன பிள்ளை கிஷ்ணசுவாமி என்கிறவன் சில நாளிருந்து அப்பால் தெய்வகதி யானான். மூத்த பிள்ளை றாமசாமி என் கிறவ னிருந்தான். அவனுக்கு அமறசிங்கென்று வசந்தை யாச்சுது.[141]

இந்த மேலெழுதிய காரியம் நாலும் அஞ்சாறு வருஷம்[142] முன்பின்னாய் நடந்து இருக்கும்; தெரிய வேண்டியதாக எழுதினேன். அப்பால் நடந்த சேதி கள்: இறாசத் மோதீன்கான் சந்தாசாயபுடனே கூட தெற்கு பிறாந்தியங்களை சாதிக்கிற நிமித்தியம் பிறப்பட்டு புதுச்சேரி மாற்கமாய் திருச்சினாப்பள்ளிக்கு போறவாள்[143] பிறதாப சிம்ம றாஜாவை சேனைகளுடைய சிலவுக்கு கொஞ்சம் கேட்டு அனுப்பிவித்தார்கள். மஹா றாஜா அவர்கள் நவாபு மமுதல்லிகானுக் கும் நமக்கும் சினேகம் விசேஷமானபடியினாலே அவருடைய சத்துருவுக்கு நாம் கும்முக்கு பண்ணுகிறது செம்மையல்ல வென்று நிராகரித்துப் போட்டார். அந்த கோபத்தினாலே இறாசத் மோதீன்கானும் சந்தாசாயபும் தஞ்சாவூர் மேல் வந்து இறங்கி கோட்டையை சுத்திக் கொண்டார்கள்.[144] அப்போ மஹா றாஜாவுடைய சேனைகளும் வெளியிலே பிறப்பட்டு ரெண்டு மூணு சண்டை நல்ல சண்டை போட்டார்கள். சந்தாசாயபு முதலானவர்கள் ரெண்டு மூணுதிரம் கோட்டையை யிடிச்சு அல்லா பண்ணினார்கள்.[145] மஹா றாஜா யிடிந்து போனத்தை உடனுக்குடனே செம்மை பண்ணி எந்தெந்த வேளையிலே வந்து விழுந்தார்களோ அந்தந்த வேளையிலே சாகிறதையாக யிருந்து தம்முடைய சொந்த சாமாற்த்தியத்தினாலே துரத்திவிட்டார். இதினாலே சந்தாசாயபு முத லான சற்தார்கள் அபசெயப்பட்டு, கொஞ்சம் சண்டை போடுகிறது, கொஞ்சம்

---

*138.* அமர்சிங்கின் தாய் பெயர், அமர்சிங்கின் இயற்பெயர் ஆகியவை திருமுடி சேதுரமான் சுவடியில் இல்லை.

*139.* விஹிஜிதமாகப்பின்வழியிலே - ஒழுங்கற்ற முறையில் (போ. வ. ச. பக். 101)

*140.* லோகவசந்தை - ஊரில் வதந்தி (ஷெ)

*141.* வசந்தையாச்சுது - வழக்கத்தில் வந்தது (போ. வ. ச. பக். 101) அமர்சிங்கு பிறந்தது சகம் 1672 (கி.பி. 1750) (திருமுடி. பக். 320)

*142.* அஞ்சாறு வருஷம் - ஏழு அல்லது ஐந்து வருஷங்கள் (போ. வ. ச. பக். 101)

*143.* "Dupleix.......... proposed to Chanda Sahib that he must next attack Trichinopoly wherein Muhammad Ali had taken refuge... and left Pondicherry on 28th October 1749 towards Trichinopoly" - (Srinivasan, Page 256)

*144.* "On December 13 (1749), the combined forces of Chanda Sahib and Muzaffar Jung crossed the Coleroon into the Tanjore Kingdom and in a few days reached Tanjore which they began to siege"-(Srinivasan, Page 257)

*145.* அல்லா பண்ணினார்கள் - நாசம் செய்தார்கள் (போ. வ. ச. பக். 101); அல்லா - வருத்தம் (Tamil Lexicon M.U.)

சமாதானம் பண்ணுகிறது, இப்படிக்கு பண்ணிக்கொண் டிருந்தார்கள்.[146] அதுக்கு மஹாறாஜா இடங்கொடாமல் ரெண்டு ரெண்டரை மாதம் சண்டை போட்டுக் கொண்டிருந்தார். யிதுக்குள்ளே நாதராசிங்கு[147] வெகு சேனை களுடனே அயிதுறாபாத்திலே யிருந்து பிறப்பட்டு ஆற்க்காட்டுக்கு வந்தான்.[148] அவாள் சேனைகள் முன்னே வந்துது. ஆற்க்காட்டிலே சந்தாசாயபுடைய மனுஷன் சற்தார் செஷாறாயனை இவாள் கொண்ணுபோட்டார்க ளென்கிற சேதி சந்தா சாயபுக்கு தெரிந்தவுடனே சந்தாசாயபு முதலான பேர்கள் கோட்டையை சுத்திக் கொண்டிருந்தவாள் இறாசத் மோதின்கானுடனே கூட எல்லோரும் சிறுது சாமான்களைக் கூடப் போட்டுவிட்டு புதுச்சேரிக்கு பிறப்பட்டு போய்விட்டார்கள்.[149] நவாபு மமுதலிகான் திருச்சினாப்பள்ளியிலே யிருந்து பிறப்பட்டு நாதறாசிங்குக்கு முன்னுதாக ஆற்க்காட்டுக்குப் போய் சேர்ந்தார். அப்போ தஞ்சாவூர்க்கு கும்மக்கு அனுப்பிவிக்க வேண்டுமென்று சொல்லி அனுப்பிவித்தார்கள். அப்போ பிறதாபசிம்ம மஹாறாஜா தம்முடைய சேனாபதி மானாஜி றாவுக்கு சேனைகளுங் குடுத்து நாதர் சிங்கு பாளையத்துக்கு கும்மக்கு அனுப்பிவைத்தார். அவர் போய் கொஞ்ச நாளிருந்து மறுபடியும் வந்து சேர்ந்தார்கள். அதுக்கு பிற்பாடு நாதர்சிங்கு தெய்வகதியான வற்தமானமும் வந்து சேர்ந்துது.[150]

உடனே சந்தாசாயபு என்கிறவன் நாதர்சிங்கு செண்ணுபோனவுடனே மறுபடியும் பிறப்பட்டு திருச்சினாப்பள்ளிக்கு உயித்தத்துக்கு வந்து பிறாஞ்சுக் காறர் கும்மக்கும் வாங்கிக் கொண்டு ஸ்ரீறங்கத்திலே வந்து யிறங்கினான்.

---

146. "At Tanjore their doings were not fruitful; the Rajah procrastinated"- (The Maratha Supremacy, Page 321)

147. நாதறாசிங்கு - நாஸர் ஜங்

148. "Suddenly news reached that Nazir Jung was fairly well on his march into the Karnatak with a huge army"- (Maratha Supremacy, Page 321)

149. "With very great difficulty, the French troops, Muzaffar Jung and Chanda Sahib reached Pondicherry"- (Srinivasan, Page 260)

150. "Nazir Jung ......without trying the hazard of a battle, agreed to signa treaty dictated by Dupleix. While carrying on the negotiations, Dupleix had been playing a double game and had entered into a plot with three powerful pathan nobles in Nazir Jung's army whom he found willing to betray their chief...... His arrangements with these traitors having been matured, Dupleix ordered up a detachment from Gingee to attack the unsuspecting prince........ The prince came upon the contingent of the Nabob of Cuddapah one of the leaders in the treason. Nazir Jung rode up to him and told him that he was a dastardly coward who dared not to defend the Mughal's standard. The traitor replied that he knew no enemy but Nazir Jung and at the same time gave the signal to the fusilier who rode by him on the same elephant, to fire. The shot missed, on which Cuddapah himself discharged a carbine, which lodged two bullets in the heart of the unfortunate Nazir Jung who fell dead upon the plain"- (District Manual, N.A., Page 56-57)

அப்போ தஞ்சாவூரிலே சேவகமாயிருக்கிற சமேதார்[151] அலம்புகான்[152] பட்டான்[153] ஒருதன் நூறு குதிரைக்கு இசமானாயிருக்கிறவன்[154] பிறதாப சிம்ம றாஜாவுடனே பிகிடாச்சுக்கொண்டு[155] தன் நிலுவை சம்பளத்தையும் வாங்கிக் கொண்டு சந்தாசாயபுடனே சேர்ந்து சிறுது பட்டாளங்களை சேர்த்துக் கொண்டு அந்த அலம்புகானுட மச்சினன் மதிரை சீர்மையிலே துறும்பூர் சாகிர்[156] காறன் ஒருதன் அவனையும் நாட்டிலே சிறுது கள்ளனையும் சேர்த்துக் கொண்டு மதுரைமேலே போயிறங்கி மதுரைக் கோட்டையிலே யிருக்கும் மரிபூசி கானுடனே[157] சண்டைபோட்டு அவனை திருச்சினாப்பள்ளிக்குத் துரத்திவிட்டு மதுரை திருநல்வேலி றாச்சியஞ் செயித்துக்கொண்டு கொஞ்சநாளைக்குள்ளே மூவாயிரம் நாலாயிரஞ் சேனைகளை சேகரம் பண்ணிக்கொண்டு அந்த சேனை களுடனே கூட சந்தாசாயபுக்கு கும்மக்காக வந்தான்.[158]

இந்த சந்தாசாயபு பிறாஞ்சுக்காரர் அலம்புகான் இப்படி மூணுபேரும்

---

151. சமேதார் - சுபேதாருக்கு அடுத்த ராணுவ உத்தியோகஸ்தர் (Tamil Lexicon, M.U.)

152. அலம்புகான் - அலம்கான் (போ. வ. ச. பக். 102)

153. பட்டான் - பட்டாணியர் (போ. வ. ச. பக். 102); உருது மொழி பேசும் முகமதியர்

154. இசமான் - அதிபதி (போ. வ. ச. பக். 102)

155. பிகிடாச்சுக்கொண்டு - மனஸ்தாபப்பட்டுக்கொண்டு (ஷெ.)

156. ஜாகிர் - அரசாங்க ஊழியத்தின்பொருட்டு ஒரு நிலத்தின் வருவாயைப் பாரம்பரியமாய் அனுபவிக்கும்படி முகம்மதியர் ஆட்சியில் விடப்பட்டு வந்த நிலமானியவகை-(Tamil Lexicon, M.U.)

157. மரிபூசிகான் - மாபூஸ்கான்; (Mak'hphuz Khan - Madurai Manual, Part III, Page 266)

158. "From the time of the expulsion of the Mahrathas by the Nizam in 1744 until 1747 or 48 the Madura country appears to have been held by officers appointed by Anwarud-din and Muhammad Ali...... (It seems) the Nizam appointed Mak'hphuz Khan and Muhammad Ali Khan to rule the country... (These) two sons of the nabob left the country in charge of one Mayana in 1748 and went away ...... This Mayana seems to have been supplanted by a Mehometan named Abdul-hakimat Khan ... and this man was in his turn ousted by Allum Khan who is called in the Sritala book a cousin and in the Record office Ms. a brother in law of Mayana. Orme states that Allum Khan was a soldier of fortune who had formerly been in the service of Chanda Saheb and afterwards in that of the king of Tanjore and that having left the service of the latter he came to Madura where his reputation as an excellent officer soon gained him influence and respect which he employed to corrupt the garrison and succeeded so well that the troops created him governor and consented to maintain the city under his authority for Chanda Sahib whom he acknowledged as his sovereign.

This account agrees sufficiently well with that given in the Sritala book which makes him to have come with two thousand cavalry by way of the Tondaman's country and to have taken the fort & ruled the country for one year......After ruling Madura for a year, Allum Khan went to Trichinopoly to take part in the war that was going on round that fortress at the beginning of 1752 and was soon afterwards killed there"- (Nelson, A Manual of Madura country, Part III, Pages 268-69 and 271-72)

ஒண்ணாய் சேர்ந்து திருச்சினாப்பள்ளி மேலே உயித்தத்துக்கு போக தயாறானார்கள்.

அப்போ திருச்சினாப்பள்ளியி லிருந்த மமுதலிகான் தமக்கு றொம்பவும் ஆப்த்தமா யிருக்கப்பட்ட தஞ்சாவூர் மஹா றாஜாவுக்கு சொல்லி யனுப்பிவித்த நாழிகைக்கு மஹா றாஜா அவர்கள் தம்முடைய சேனைகள் அய்யாயிரம் குதிரை சவார்[159] பதினைய்யாயிரம் கால்தளம் பெரிய பீறங்கிகள் றஸத்து முதலானதும்[160] கொடுத்து சற்தார் மானாஜி றாவையும் கும்மக்காக அனுப்பிவித்தார்.[161] அந்தப்படியே விசைய றகுநாதறாய தொண்டமான் கொஞ்சம் சேனைகள் கொடுத்து அனுப்பிவித்து கடைசிவரைக்கும் றஸத்துக்கும் கும்மக்குப் பண்ணினான். இப்படியே றாமநாதபுரம் மறவர் உடையா தேவர் என்கிற பாளையக்காறர்களும் கொஞ்சம் கும்மக்கு அனுப்பிவித்தார்கள். இது தவிர[162*] ஸ்ரீறங்கப்பட்டணம் நந்திறாஜாவுடைய தளவாய்க்கு மமுதலிகான் சயிது மகத்தும் சறதார் கிட்டயிருந்து சொல்லி யனுப்பிவித்தபடியினாலே[163*] தம்முடைய சறதார் கத்தி கோபால றாஜாவை திருச்சினாப்பள்ளி கோட்டைக்கு அனுப்பிவித்து நவாபு மமுதல்லிகானுக்கு சிலவுக்கு கொஞ்சம் திரவியமுங் கொடுத்து அனுப்பி தாமும் பாரி சேனைகளுடனே மமுதல்லிகானுக்கு கும்மக்காக வந்தார். அப்படியே முறாஜிகோறப்படேயும் நவாபுக்கு கும்மக்காக வந்தான்.

இப்படி மமுதல்லிகானுக்கு கும்மக்காக வந்ததுகளை சந்தாசாயபு நிதானித்துக் கொண்டு உயித்தத்துக்கு ஆயித்தமாய் ஆலம்பு கான் என்கிறவன், முன்னாலே தஞ்சாவூரிலே சேவுக மிருந்தவன், அப்பிறம் மதுரை சீமையை செயித்துக்கொண்டு சந்தாசாயபுக்கு கும்மக்காக வந்தவன், தன் சேனைகளுடன் மத்த சேனைகளையும் கூட்டிக்கொண்டு, தஞ்சாவூர் சற்தார் மானாஜிறாவுடன் சண்டைக்கு வந்தான். அப்போ மானாஜிறாவும் தன்னுடைய சேனைகளையும் முஸ்த்திப்பு பண்ணிக்கொண்டு உயித்த முகமாயி ஒண்ணுக்கொண்ணு கைகலந்து பீரங்கி துபாக்கி குண்டுகளால் சண்டை யாகிக்கொண் டிருக்கச்சே இங்கிலீஸ் காறருடைய சற்தார் மேஜர் உத்தியோகஸ்தர், கொஞ்சம் சேனையுடனே திருச்சினாப்பள்ளி கோட்டைக்கு போறவர், வழியிலே மானாஜிறாவு சண்டை போட்டுக்கொண் டிருக்கிறத்தைப் பார்த்து மானாஜி றாவண்டையில் வந்து சண்டையின் காரணத்தை விசாரித்தார். அந்த பூர்வோத்திரம் விஸ்த்தார

159. சேனைகள் அய்யாயிரம் குதிரை சவார் - சேனையிலிருந்து 1000 குதிரைப் படைகளையும் (போ. வ. ச. பக். 103)

160. றஸத்து முதலானதும் - சேனைக்கு வேண்டிய உணவுப்பொருள்களையும் (போ. வ. ச. பக். 103)

161. "Pratap Singh sent to Trichinopoly 3000 horse and 2000 foot under general Manoji to help Muhammad Ali" (Srinivasan, Page 265)

162* முதல் 163* வரை போ. வ. ச. வில் பிற்கண்டவாறு தெளிவாக வுள்ளது:-

"நவாப் மகம்மது அலிகான் சொல்லியனுப்பியதற் கிணங்கி ஸ்ரீரங்கப் பட்டணத்துப் பெரிய சேனையுடன் நந்தராஜ் தளவாய் எல்பவர், சைதம் கதா என்கிற சர்தாருடன் கிளம்பி".

மாக மானாஜிறாவு அவருக்குச் சொன்னார். அதை மேஜர்[164] கேட்டு பீரங்கி யிருக்கிற விடத்தில் வந்து தன் கையினாலே பீரங்கியை சிமாறாக குறிப்புப் பண்ணி நாலஞ்சு திரம் சுட்டார். அதிலே ஒரு குண்டு போய் அவுதாவிலே உளுக்கார்ந்திருக்கிற ஆலம்புகானுடைய கழுத்திலேபட்டு தலை தெறிச்சுது. உடனே தஞ்சாவூர் குதிரை சவார்கள் ஆலம்புகான் சேனைகள் பேரிலே விழுந்து அடிக்குறபோது செண்ணுபோனது போக மீதியான சேனைகள் சின்னாபின்ன மாக போய் விட்டுது. கொஞ்சம் சேனைகள் அகப்பட்டுக் கொண்டத்தை பிடித் துக்கொண்டு மானாஜிறாவண்டையில் வந்து சேர்ந்தார்கள். இந்தப் பிறகாரம் முதல் ஜெயம் மமுதல்லிகானுக்கு தஞ்சாவூராராலே கிடைச்சுது.

அதின் பிற்பாடு மமுதல்லிகானுக்கும் சந்தாசாயபுக்கும் சண்டை வெகு நாள் வரைக்கும் வளந்துது. ஸ்ரீ றங்கம் திருச்சினாப்பள்ளிக்கும் காவேரி ஆற்று நடுவிலேயிருக்கிற படியினாலே[165] காவேரி ஆத்தின் வடகரையில் சந்தாசாய புவைச் சேர்ந்த பிறாஞ்சுக் காறருடைய மோற்ச்சாபோட்டு இந்தப்பிறகாரமாக சண்டையாய் கொண்டு வந்தது. அப்போ மைசூர் நந்திராஜா முறாஜிகோற் படே மானோஜிராவு செகதாபு இவாளனைவரும் சந்தாசாயபுடைய பாளை யத்துக்கு ஒருதானியம்[166] போகவொட்டாமல் நாலுபக்கமும் சுத்திக்கொண்டு நிற்பந்தம் பண்ணினபடியினாலே சந்தாசாயபுக்கு சிலவுக்கு மில்லாமல் றஸத்து மில்லாமல் சேனைகளோரட்டுக்கும் தத்தளித்து மோசம் பண்ணின சமையத்தில் சந்தாசாயபு பிறப்பட்டு போகவேணுமென்றாலும் ஒரு பக்கமும் வழியில்லாமல் தன்னுடைய சேனை தன் சுவாதீனமில்லாமல் சந்தாசாயபு பண்ணின யோசனை: நான் பண்ணின பிறையெத்தினங்களில்[167] ஒண்ணாகிலும் வாய்க்காமல் போச்சுது இவ்விடம்விட்டு ஆரண்டையாகிலும் போவோமென்றாலும் வழியில்லை. நல் லது. போவோமென்றால் தன் சேனைகள் விடாது; பிறத்தியாருடைய சேனை களும் சூழ்ந்து கொண்டிருக்குது; தம்முடைய சேனையே நாளையிறத்தினம் அல்லது நாளை நண்ணைக்குள்ளாக[168] நம்மைப்பிடித்து மமுதல்லிகானண்டை யில் ஒப்புவித்து போடுவாள்; மமுதல்லிகானுடைய தொகப்பனை நாம் அடித் திருக்கிறபடியினாலே[169] அந்தப்பழியை வாங்குவான்; ஆகையால் தஞ்சாவூரார் நல்லவாள்; சொதுசூறாள்; அவாளண்டையில் போய் சேர்வோமென்றால், அவாளாகிலும் நம்மை ரெஷ்சிப்பார்களா என்றால், அவர்களும் ரெட்சிக்க மாட்டார்கள்; ஏனென்றால் ஆதி முதல்க்கொண்டு நாம் அவாள் சினேகம் வைக்கவில்லை; இதுவுமல்லாமல் மஹாஷருக்கு தஞ்சாவூர் வழிப் போறதில்லை

---

164. மேஜர் - மேதர் (போ. வ. ச. பக். 104): இராணுவ அதிகாரி

165. காவேரியாற்று நடுவிலே யிருக்கிறபடியினாலே – "நடுவிலே காவேரியாறு இருக்கிற படியி னாலே" என்று மாறிப்படிக்கலாம்.

166. பாளையத்துக்கு ஒரு தானியம் - சைனியத்தை ஒரு வழியிலும் (போ. வ. ச. பக். 105)

167. பண்ணின பிறையெத்தினங்களில் - நினைத்த எண்ணங்களில் (போ. வ. ச. பக். 105)

168. நாளையதினம் அல்லது நாளை நண்ணைக்குள்ளாக - இன்னும் இரண்டுநாளில் (போ. வ. ச. பக். 105)

169. அடித்திருக்கிறபடியினாலே - கொன்றிருக்கிறேன் (போ. வ. ச. பக். 105)

என்று பிறம்ாணம் பண்ணிக் கொடுத்துப்போட்டு வந்து, இப்போ தஞ்சாவூர் மேலே சண்டைபண்ணினபடியினாலே அவாள் நம்மை எப்படி ரெட்சிப்பார்கள்; இதுவுமல்லாமல் மமுதல்லிகானும் இங்கிலீஸ்காறரும் அவாளுக்கு றொம்ப சினேகமாயிருக்கிறார்கள்; அந்த சினேகத்தினாலேயும் நம்மை ரெட்சிக்க மாட்டார்கள்; நல்லது; நாம் நம்மை சீவனோடே மமுதல்லிக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டு பிறாணனை யிழந்து போறத்தைப் பார்க்கிலும், தஞ்சாவூரா ரன்டையிலே போய் அவாள் கையினாலே கொல்லப்படுகிறது தாவிளை[170] யென்று நிச்சயம் பண்ணி அற்த றாத்திரியிலே ஒருதருக்கும் தெரியாமல் ஒரு குதிரைமேலேறிக்கொண்டு ஒரு மனுஷனைக் கூடக் கூட்டிக்கொண்டு தஞ்சாவூர் பாளையம் திருச்சினாபள்ளிக்குக் கிழக்கே காவேரிக்குத் தெற்கே யிறங்கி யிருந்துதே அந்த பாளையத்திலே வந்து சற்தார் மானாஜிறாவுக்கு றகசியமாய் சொல்லி அனுப்பிவித்தான். அப்போ மானாஜிறாவு தனியே வெளியிலே வந்து சந்தா சாயபுடனே கண்டு பேசினது: நீர் யேன் வந்தீர்; உம்மை ரெட்சிக்க நம்மாலே யெந்தவிதத்திலேயு மாகாது; யெங்கள் மகாறாஜாவுக்கு உம்முட பேரிலே றொம்பவுங் கோப மிருக்கிறபடியினாலே உம்மை னான் ரெட்சிக்க மாட்டோம்; உமக்கு சிலவுக்கு வேணுமென்றால் கொடுக்கிறேன்; உம்முடைய பாளையத்துக்குப் போய் சேரும்; அங்கே போக மனதில்லாவிட்டால், விசுவாசமுள்ள மனுஷனை கூட்டுகிறேன்; இவடம் விட்டு தெற்கு பக்கத்திலே மகாகாடு யிருக்குது; அங்கே போய் அப்பாலே யெங்கே போகவேணுமோ அங்கே போகலாம்; யில்லையென்று இவடம்விட்டு உடையார்பாளையத்துக் காட்டுக்குப் போய் சேர்ந்து அப்பாலே வேட்டை வல்லம்[171] திருணாமலை[172] காட்டுவழியே போகலாம்; உமக்கு சரிபோனபடியே செய்யுமென்று சொன்னத்துக்கு, சந்தா சாயபு சொன்னது; இதுகளெல்லாந் தெரிந்துதான் வந்தேன்; நீர் பண்ணுகிற உபகார மென்னவென்றால் மமுதல்லிகான் கையிலே உயிரோடே மாத்திரம் ஒப்புவிக்காதேயும்; அப்படி ஒப்புவிக்கத் தக்கனையான அவசரம் விழுந்தால்[173] உம்முடைய மனுஷன் கையினாலே கொண்ணுபோடும்; இவளவு அவையம்[174] கொடுமென்று கேட்டார். அப்போ மானோஜி றாவு அவனுக்கு சீவனோடே ஒப்புவிக்கிறதில்லை யென்று பாவசங்[175] கொடுத்து அவனுக்கு பிறத்தியேகமாய் இடம்பண்ணிக் கொடுத்து ரகசியமாய் வைத்து அந்த னாழிகைக்கு தஞ்சாவூருக்கு நடந்த சமாசாரங்களை யெல்லாம் சவவிஸ்தாரமா யெழுதி அனுப்பிவித்தார். அதுக்கு பிறதாபசிம்ம றாஜா உத்தரவு யெழுதி அனுப்பிவித்தது:

---

*170.* தாவிளை - நன்று (போ. வ. ச. பக், 106)

*171.* வேட்டைவல்லம் – வேடவல்லம் (போ. வ. ச. பக். 106)

*172.* திருணாமலை - திருவண்ணாமலை

*173.* அப்படி ஒப்புவிக்கத் தக்கனையான அவசரம் விழுந்தால் - அப்படி நேரும் பக்ஷத்தில் (போ வ. ச. பக். 106)

*174.* இவளவு அவையம் - இந்த அபயம் (போ. வ. ச, பக். 107)

*175.* பாவசம் - அபயம் (போ. வ. ச. பக். 107)

இந்த சந்தாசாயபு பண்ணிய கிறித்தியத்துக்கு[176] நாமவனை வைக்கப் போகாது;[177] ஆகிலும் சரணம் வந்தடைந்த படியினாலே அவன் பண்ணின தெல்லாம் மனதிலே வைக்கப்போகாது; அவனைக் காப்பாத்துகிறதே விஹிதமானபடியினாலே அந்த சந்தாசாயபுவை தஞ்சாவூருக்கு அனுப்பிவிக்கச் சொல்லி யெழுதி அனுப்பிவித்தார்.

அப்போ சந்தாசாயபுவை காணோ மென்கிற சேதி நவாபு மமுதல்லி கானுக்கு தெரிந்து சோதித்துப் பார்க்கிற யிடத்தில் மூணாம் னாள் தஞ்சாவூர் பாளையத்திலே யிருக்கிற சேதி தெரிந்து கொண்டு மானோஜிறாஜாவுக்கும் மஹா றாஜாவுக்கும் பிறார்த்தனை பண்ணினது யென்னவென்றால், மஹா ருஜா வாலே யென்பிராணன் நிண்ணுது; மஹா ருஜா அவர்கள் ஆசறா பண்ணின படியினாலே[178] பிழைத்து மறுபடியும் என்னுடைய பதவிக்கு வந்து சேர்ந்தேன்; அந்த வேளையிலே இறாசத்மோதின்கானும் சந்தாசாயபும் வந்தார்கள்; அந்த அவசரத்தில் யெனக்கு ஆசறா பண்ணுகிறத்துக்கு யெந்த தயிரிய வந்தானிருந் தார்கள்; அப்படிக்கொத்த வேளையிலே யென் நிமித்தியம், பின்னாலே யெந்த பலம் வந்தாலும் வரட்டும், பார்த்துக் கொள்ளுவோமென்று தயிரியமாய் எனக்கு ஆசறாபண்ணின படியினாலே நான் (மறுபடியும்)* என்னுடைய தவலத் துக்கு வந்து சேர்ந்தேன்; இப்பவும் அப்படியே தயவுபண்ணி என்னுடைய தொகப்பனார் பழி நான் வாங்கத் தக்கதாய் சந்தாசாயபுவை என்கிட்ட ஒப்புவித்துப் போடவேணுமென்று பெகுவிதத்திலே பிறார்த்தினை பண்ணினார். இதுவுமல்லாமல் நந்திறாஜா முறாஜிகோறபடேயும் சந்தாசாயபுவை ஒப்புவிக்கச் சொல்லிக் கெட்டார்கள்.[179] அப்படியே யிங்கிலீஸ்காறரும் அந்த சந்தாசாயபுவை ஒப்புவிக்கச் சொல்லி பலோத்காறமாய்[180] கேட்டார்கள். அப்போ மானோஜி றாவுக்கும் அவாளுக்கும் சற்சை[181] யாய் சிவனோடு ஒப்புவிக்கிறதில்லை என்று சொல்லி சந்தா சாயபுவை கழுத்தறுத்து ஆயிரத்து எழுநூற்று அன்பத் திரண்டாம் வருஷம் சூன்மாதம் ௧௨ [182] அந்த தலையை நவாபுகிட்ட அனுப்பி

---

176. கிறித்தியத்துக்கு - காரியத்துக்கு (போ. வ. ச. பக். 107)

177. வைக்கப்போகாது - காப்பாற்றவே கூடாது (ஷை)

178. ஆசறா பண்ணினபடியினாலே - அபயமளித்ததால் (ஷை)

* முத்திரைவிழுந்து மறைந்த பகுதி - "மறுபடியும்" (டி 3762)

179. The next morning they (the Nabob, the Mysorean and the Morattoe) repaired together with Monackjee to Major Lawrence's tent in whose presence they held a council. Each of them insisted that Chanda Saheb ought to be delivered to himself supporting the demand with the superior importance each thought he bore in the cause"- (Robert Orme, A History of the Military Transactions of the British Nation in Indostan, Vol I (IV Edition, London, Madras 1861, Page 238)

180. பலோத்காறமாய் - அதிகார தோரணையில் (போ. வ. ச. பக். 108)

181. சற்சையாய் - சம்பாஷணை தொடங்கி (போ. வ. ச. பக். 108)

182. "On 17th June 1752 Chanda Sahib was executed"- (Rajayyan, Page 33)

வித்துப் போட்டு மானோஜிறாவு தஞ்சாவூருக்கு பிறப்பட்டு வந்தார். இதுக்கு முன்னே தஞ்சாவூர் சேனைகள் நவாபுக்கு கும்மக்காய் வருகிறபோது ஆங்கிரஸ வருஷம் ஏப்பிறில் மீ 21உ[183] மானாஜிறாவு கோவிலடி கில்லாவிலே பிறாஞ்சுக்காரர் டாணைய மிறங்கியிருந்ததை எடுத்துப் போட்டு கோட்டையை சுவாதீனம் பண்ணிக் கொண்டார்.[184] சந்தாசாயபு தலையை அறுத்த பிற்பாடு நவாபு மமுதல்லிகான் பிறதாபசிம்ம மஹா றாஜாவுக்கு தற்ம சிலவுக்கென்று இளங்காடு[185] சீர்மை லக்ஷம் றூபாய் பெறுகிறதும் குடுத்து கோவிலடிக் கோட்டையைக் கொடுத்தார்.[186] அப்படியே விசைய றகுநாதறாய தொண்டைமானுக்கும் பேஷ்கஷ் மாப்பு பண்ணிப் போட்டார்.[187] நந்திறாஜாவும் முறாஜி கோறபடே என்கிறவனும் திருச்சினாப்பள்ளி கோட்டை ஆசையினாலே நவாபு மேலே உயித்தத்துக்கு ஆரம்பித்தார்கள்.[188] அப்போவும் தஞ்சாவூர் மஹா றாஜா நவாபுக்கு கும்மக்கு அனுப்பி வித்தார்கள். கொஞ்சம் நாள் சண்டையாச்சுது. அந்த சண்டையிலே நந்திறாஜா பாரிசத்திலே யிருந்து ஒரு ஆனை ஓடிவந்து தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்துது. நந்தி றாஜா பாரிசத்தில் ஒரு பீரங்கியை தஞ்சாவூர் சற்தார்கள் போய் விழுந்து கொண்டு[189] வந்தார்கள்.

அப்பால் நவாபு மமுதல்லிகான் திருச்சினாப்பள்ளிக் கோட்டையிலே இங்கிலீஸ் காறருடைய சேனைகளை மசுபத்தாய் வைத்துப் போட்டு[190] தாம் சறூறாய் கொஞ்சம் இங்கிலீசுகாறருடைய பாளையத்தை கூட அழைத்துக் கொண்டு சென்னபட்டணத்துக்குப் போனார். அந்த சேதி நந்திறாஜா முறார்ஜி கோறபடேயுக்கும் தெரிந்து தங்களை மோசம் பண்ணிப் போட்டு போய் வீட்டாரென்று முறார்ஜிகோறபடே தம்பி புஜங்கறாவும் அவர் மருமகன் கூட கொஞ்சம் சேனைகளுடனே பின்னாலே வந்து வளைந்து கொண்டு பண்ணு

---

183. 21—4—1752

184. "On 26th April 1752 Maratha General Manoji captured Koviladi from the French"- (Srinivasan, Page 265)

185. இளங்காடு - அளங்காடு (போ. வ. ச. பக். 108)

186. "The Nawab in regard for the aid given by the Raja granted a release for ten year's peshcush or tribute outstanding and ceded to the Rajah under a Sanad the two districts of Koiladi and Yalangadu who had previously belonged to Trichinopoly"- (Tanjore Dt. Manual, Part V, Page 788)

187. மாப்பு பண்ணிப் போட்டார் - விட்டுக் கொடுத்தார் (போ. வ. ச. பக். 108)

188. "In return for the services rendered by Mysore for the over throw of Chanda Sahib, Muhammad Ali had promised the cession of Trichinopoly. But on gaining victory he flatly refused to honour the solemn pledge. In frustration Mysore entered into an alliance with Murari Rao and commenced hostilities against Muhammad Ali and his ally, the English"- (Rajayyan, Page 24)

189. விழுந்துகொண்டு - வீழ்த்திக்கொண்டு (போ. வ. ச. பக். 108)

190. சேனைகளை மசுபத்தாய் வைத்துப்போட்டு - இடங்களை நன்றாய்ச் செப்பனிட்டு (போ. வ. ச. பக். 109)

றுட்டி திருவாதி[191] கிட்ட நவாபுடைய பல்லாக்கு மேலே வந்து விழப் போனார் கள். அப்போ கிட்டயிருந்த மனுஷியாள் துப்பாக்கியினாலே சுட்ட போது முறார்றாவு தம்பி புஜங்கறாவும் அவன் மருமகனும் விழுந்து போனார்கள். நவாபு அப்பால் பிறப்பட்டு போய்விட்டார். இந்த சேதி முறார்றாவுக்குத் தெரிந்தவுடனே றம்பவும் விதனமாய் தம்முடைய சேனைகளுடனே சொந்த தேசம் குத்திக்குப்[192] போய் விட்டார். நந்திறாஜா[193] உபைய காவேரி தீரத்தை ஆக்கிரமித்துக்கொண்டு சிறுது நாள் செம்புகேசுவரம்[194] பிறாந்தத்திலே யிருந்தீ அப்பால் ஸ்ரீறங்கபட்டணத்துக்கு பிறப்பட்டு போய் விட்டார்.

அப்பால் பிறதாப சிம்ம மஹா றாஜா தம்முடைய பிள்ளை துளஜா மஹா றாஜாவுக்கு மாடிக்கு வீட்டுப் பொண் றாஜ குமாரபாயி சாயபுவை ரெண்டாவது கல்லியாணம் பண்ணிவைத்தார். உடனே நாலஞ்சு மாத தையிலே[195] மொத்தே பொண் மோகனாபாயி சாயபுவை மூணாவது கல்லி யாணம் பண்ணிவைத்தார்.*-*

---

191. திருவாதி - திருவதிகை 192. குத்தி - Gooty

193. நந்திராஜாவை நஞ்ச ராஜா எனவும் சொல்வர்

194. செம்புகேசுவரம் - ஜம்புகேசுவரம் - திருவானைக்கா

195. நாலஞ்சுமாததையிலே - நான்கு ஆறுமாதத்திற்குள் (போ. வ. ச. பக். 109)

*-*. இதற்கடுத்துப் பிற்கண்டவை போ. வ. ச. வில் அதிகமாக உள்ளன (பக். 109-111):-

அதன்பிறகு மகாராஜா தன் சேனாதிபதியான மானாஜி ராயரைத் தக்ஷிண பிராந்தியத் திற்கு அனுப்பவேண்டிய ஒரு அவசியம் ஏற்பட்டது. அது என்னவெனில் ராமநாதபுரத்து ஜமீன் தாரான மறவர் எப்போதும் மகாராஜாவின் பாதுகாப்பில் இருப்பவர். இருந்தபோதிலும் தற்சமயம் புதிதாக யௌவன தசையிலுள்ள அவருக்கு அதிகாரம் கிடைத்ததால் யௌவன மதத்தினால் கொஞ்சம் உதவியைத் தேடிக் கொண்டு, நவாப் மஹமத் அலிகானின் சிநேகம் தனக்குச் சாசுவத மானது என்று எண்ணித் தக்ஷிணப் பிராந்தியத்திலுள்ள மகாராஜாவின் ராஜ்யத்தில் சில கொடுஞ் செய்கைகளைச் செய்தார். மகாராஜாவும் இரண்டொரு தடவை மன்னித்துவிட்டார். பிறகு அவருடைய காரியங்களில் நவாபும் உள் கையாயிருப்பதை அறிந்தார். தக்ஷிண பிராந்தியத்திலுள்ள ராஜ்யம் எப்போதும் தஞ்சை சமஸ்தானத்தைச் சேர்ந்தது. மகாராஜா ராமேச்வர யாத்திரைக்குச் சென்றபோது, ராமநாதபுரத்துக்கு அதிபதியான வயது முதிர்ந்த மறவர் ஒருவர் இருந்தார். அவர் மகா றாஜாவுக்கு அநேக சேவைகளைச் செய்து, அவருடைய பிரீதிக்கு வசமானதின் காரணமாக, அந்தத் திருவாடநீரி ராஜ்யத்தை அவர் தாக்ஷண்யத்திற்காகக் கொஞ்ச காலம் அவரிடம் ஒப்படைத் திருந்தார். பிறகு, அந்த மறவரின் மகன், நவாபின் விஷமத்திற்கு வசமாய், மகாராஜாவின் ராஜ்யத்தில் துஷ்ட நடத்தைகளை ஆரம்பித்தபடியால் தன் சேனையையும் சேனாதிபதியையும் தென்திசைக்கு அனுப்பக்காரணம் ஏற்பட்டது. அப்போது மானாஜிராவ் சேனையுடன் சென்று சண்டை செய்து, ஹநுமந்தகட், வருர், மங்கள், குவடி என்ற கோட்டைகளைச் சின்னா பின்ன மாக்கி வசப்படுத்திக் கொண்டு, திருவாடநீர் பிராந்தியத்தையும் ஜயித்து ஆர்முக்கோட்டைக்கு எச்சரிக்கை செய்து யுத்தம் நடத்தினார். ராமநாதபுரத்து அதிபதியும் வசுக்ர கோட்டையில் இருந்து சண்டை செய்தார். அதே சமயத்தில், மகாராஜாவும், ஆர்முக் கோட்டையை விட்டுவிட்டு, வேறு காரியமாய்த் தஞ்சைக்கு வரும்படி மானாஜி ராயருக்குக் கடிதம் அனுப்பினார். மானாஜி ராவும் ஆர்முக் கோட்டையை வசப்படுத்தாமல் திருவாடநீரி பிராந்தியத்தையும் தான் ஜயித்த மற்ற இடங்களையும் பந்தோபஸ்து செய்துவிட்டுத் தஞ்சைக்கு வந்தார்.

இந்தச் செய்தியை, நவாப் மஹமத் அலிகான் அறிந்து, மகாராஜாவுக்கு எச்சரிக்கை செய் வது யுக்தமில்லை என்று கி.பி. 1762இல் ஆங்கிலேயரின் சர்தாரான மாஸ்டர் ஆப்ரி என்பவருக்குக் கடிதம் எழுதினதாவது:- திருச்சினாப்பள்ளி பிராந்தியத்தில் இருக்கிற மறவரின் ராஜ்யத்திலுள்ள அனுமந்தகுடி முதலான ஏழு கோட்டைகளை மகா ராஜா வசப்படுத்திக் கொண்டார். இது மாத்திரமில்லை. கர்னல் க்ளியூ என்பவர், கர்னல் ஹர்நாநாதா என்பவரால் எழுதப்பட்ட ஆங்கிலே

அப்பால் சில நாளைக்கு பிற்பாடு புதுச்சேரி பந்தறுக்கு[196] முசேலாலி[197] என்கிறவன் கெவுனராக[198] வந்தான். அவன் முன்பின் விசாரியாமல் அகாறணமாய் தஞ்சாவூர் றாச்சியத்தின் பேரிலே சண்டைக்கு வந்தான்.[199] தஞ்சாவூர் மஹாறாஜா நீ வர வேண்டிய பிறசக்தி[200] என்னவென்று கேட்டத்துக்கு செம்மையாய் உத்திரவு சொல்லாமல்[201] வந்து தஞ்சாவூர் கோட்டையை வந்து சுத்திக் கொண்டான். அப்போ பிறதாபசிம்ம மஹா றாஜா அவர்கள் ரெண்டுமாசம் வரைக்கும் கோட்டையிலே இருந்து சண்டைபோட்டு கடசியிலே தாம் வெளியிலே சேனைகளை அனுப்பிவித்து முசெலாலி பாளையத்தின் பேரிலே போய் ஒருமித்து விழுந்து பெகுசாய் ஸொஜர் ஆபிசா முதலானவர்களை[202] அடித்துப்போட்டு சிறுது சேனைகளை சீமை மேலே[203] அனுப்பிவித்து அவாள் பாளையத்துக்கு ஒருமணி தானியமாகிலும் றஸத்து வரவொட்டாமல் பந்து பண்ணி யிருந்தார்கள். அதினாலே முசேலாலி காபறாப்பட்டு பெரிய பீரங்கிகள் வெகுசாய் சரஞ்சாமான பாரவாசியா யிருந்ததெல்லாம் சிறுது போட்டுவிட்டு தான் சுறுக்காய் புதுச்சேரி போய்ச் சேர்ந்தான்.[204] **_**

---

யரின் கொடி ஒன்றை எடுத்துக்கொண்டு, ஹனுமந்தகுடியில் இருந்தவர் மகாராஜாவுக்கு அநேக விதமாய்ச் சொல்லியும், மகாராஜா அவர் சொல்லைக் கேட்காமல் கோட்டைகளைக் கைப்பற்றிக் கொண்டது மட்டும் அல்லாமல், கர்னல் க்ளியூவினிடத்திலுள்ள கொடியையும் கிழித்தெறிந்தார்" என்று எழுதினார். இச்செய்தியும் மகாராஜா அறிந்தார்.

196. பந்தறுக்கு - துறைமுகத்துக்கு (போ. வ. ச. பக். 111)

197. முசேலாலி - Monsieur Lally; Count d Lally

198. கெவுனராக - துரைத்தன அதிகாரத்துக்கு (போ. வ. ச. பக். 111)

199. சகம் 1678 (கி.பி. 1756) என்று திருமுடி சேதுராமன் சுவடியில் பக். 370ல் உள்ளது.

200. பிறசக்தி - காரணம் (போ. வ. ச. பக். 111)

201. "His specific object was to recover the amount of the deed which Pratap Singh had given to Chanda Sahib for 56 lakhs of rupees but transferred to the French by Reza Saheb in lieu of the expenses incurred for the wars of the Nevayets"- (Rajayyan, Page 40-41)

202. ஸொஜர் ஆபிசா முதலானவர்களை - அநேக சர்தார்களை (போ. வ. ச. பக். 111)

203. சீமைமேலே - அவருடைய பிராந்தியத்திற்கு (ஷை)

204. "The Tanjore troops subjected the French to severe hardship and the mutilated army commanded by the unlucky governor reached Karaikal on 18th August 1758" - (Srinivasan, Page 283)

"With inexpressible joy I have received news by the Hircaras of the complete victory gained by your troops over the French army on the 9th instant and that the remains of their scattered army were fled as far as Trivolore where they were surrounded and greatly distressed" - (Records of Fort St. George, Country Correspondence, Military Department, 1758, Madras, 1915, Letter to the King of Tanjore, Dated 18th August 1758, No. 147, Page 68)

**—** இதற்கடுத்துப் பிற்கண்டவை போ. வ. ச. வில் உள்ளன (பக். 111-112): அப்பொழுது மகாராஜா தன் ராஜ்யத்தில் ஓர் உத்திரவு போட்டார். இந்தச் சமஸ்தானத்தில் பரம்பரையாய் நடந்த வழக்கமாவது: ஐரோப்பியர் யாராவது ஒருவர் வந்தால், அவர் எங்கிருந்து ராஜ்யத்தில் பிரவேசிக்கிறார்களோ அங்கங்குச் சுங்கவரி வசூலிக்கவேண்டும். அது எவ்விதமென்றால், ஐரோப்பிய

அதுக்குமேல் புதுச்சேரி கெவுனர்[205] சென்னைப் பட்டணம் கோட்டை மேலே மோற்ச்சா போட்டார்கள். அப்போ சென்னப்பட்டணத்துக் கெவுனர் சந்தாசாயபு கலாபம் வந்த னாள் முதல் நவாபுக்கு மஹா றாஜா பண்ணின உபகாரத்தினாலேயும் மஹா றாஜாவுக்கும் நவாபுக்கும் றொம்பவும் சினேகமா யிருந்தபடியினாலே மஹா றாஜாவுக்கு கும்மக்கு அனுப்பச் சொல்லி யெழுதி அனுப்பிவித்தார்கள். அப்போ மஹா றாஜா அவர்கள் கும்மந்தான் மமது யிசப்புகான்[206] திருச்சினாப்பள்ளியிலே யிருந்து போறவனோடே கூட னாநூறு அந்நூறு சபவாற்[207] முதலானதுகளை கும்மக்காய் அனுப்பிவித்தார். அந்த செனங்கள் சென்னபட்டணத்தி லிறங்கியிருக்கிற முசெ லாலி பாளையத்துக்கு றஸத்து ஒண்ணும் வரஒட்டாமல் மேல் பலமும் வரஒட்டாமல் றம்பவுஞ் சோரா வரியாய் வழியந்து பண்ணினத்தின் பேரிலே முசேலாலி பாளையத்துக்கு நிறு வாக மில்லாமல் புதுச்சேரி வந்து சேர்ந்தான். ரெண்டாவது விசை பிக்கட்டு[208] சாயபு காரைக்கால் மேலே வந்து யிறங்கினபோது மஹா ராஜாவினுடைய கும் மக்கு வேணுமென்று கேட்டுக் கொண்டதின் பேரிலே மகாறாஜா கும்மக்கு அனுப்பிவித்து சகாயம் பண்ணினார்.

---

சர்தார் நடந்து வந்தால் ஒவ்வொரு ஆளுக்கும் ஐந்து வராகன் வீதமும், குதிரையின் மேல் சவாரி செய்து வருபவருக்கு அதற்கதிகமாயும், ஐரோப்பியர்கள் யாராவது பல்லக்கில் உட்கார்ந்து வந்தால், அவர்களுக்கு விசேஷ வரியும், மற்றும் சேனையை அழைத்துக் கொண்டு யாராவ தொரு ஐரோப்பிய சர்தார் வருவதாயிருந்தால், அவர் மஹாராஜாவுக்கு முன்பே சொல்லியனுப்பி, வரி வசூலிப் போருக்கு வரியை வசூலிக்காம லிருக்குமாறு உத்திரவு போடுவதும் வழக்கமா யிருந்தது. தற்காலம் கடற்கரையில் இருக்கும் ஐரோப்பியர்கள் சமஸ்தானத்திற்கு வேண்டியவர்களா யிருக்கிறார்கள். மேலும், அவர்கள் வருவதும் போவதும் இனிமேல் எப்போதும் இருக்கும். அதிலும் சைன்யத்தோடு வருபவர்கள் நிச்சயமாய் நமக்குத் தெரிவித்துவிட்டுத்தான் வருவார்கள். மற்றும் வரும் ஐரோப்பியர், எத்துறைமுகத்திலிருந்து எப்படி வந்தாலும் அவர்கள் கொடுக்க வேண்டிய வரியைத் தள்ளிவிட உத்திரவு வேண்டியதில்லை" என்றும் கட்டளையிட்டார்.

இதுபற்றி ஹிக்கி தம் நூலில் எழுதியது பின்வருமாறு:-

"He (Pratap Singh) is said to have a wholesome dread of Feringhees, looking upon them as notoriously bad characters and imposed a payment of five fanams on any European who entered his territory. He established a toll gate for this purpose which money was collected as a guarantee for peaceful behaviour and was paid back to the giver on his returning the ticket on leaving his territory"- (Page 86-87)

205. புதுச்சேரி கெவுனர் - முஸே லாலி "Lally began the long pending siege of Madras (December 12, 1758) which was defended by Colonel Lawrence and Colonel Draper under the invigorating inspiration of Pigot" - (Maratha Supremacy P. 334)

206. மமது யிசப்புகான் - மஹமத் இசுப்கான் (போ. வ. ச. பக். 112) - Muhammad Yusuf: "Mahomad Usuff cawn is valiant, active and prudent man, whose terror has spread every where in these parts" - (Records of Fort St. George, Country Correspondence, Military Dept., 1758, Page 92)

207. சபவாற் - குதிரைப்படைகள் (போ. வ. ச. பக். 112); சவார் (டி3762)

208. பிக்கட்டு – Lord Pigot

மூணாவது திரம்[209] பிக்கட்டு சாயபு புதுச்சேரி கோட்டைமேலே வந்தி றங்கி சண்டை போட்டபோதும்[210] மஹா ராஜாவுடைய கும்மக்கு வேணு மென்று கேட்டுக் கொண்டபோது மஹா ருஜா அவர்கள் பாரி கும்மக்கா யனுப்பிவித்து சகாயம் பண்ணினார்.

இந்தப்படிக்கு மூன்று தடவையும் இங்கிலீசுகாறர் சொந்தக்காரியத்துக்கு மஹா ருஜா அவர்கள் கும்மக்கு அனுப்பிவித்து சகாயம் பண்ணினபடியினாலே பிக்கட்டு சாயபுக்கு சந்தோஷமாய் தாம் சீர்மைக்கு[211] போறத்துக்கு முன்னு தாக மேஸ்தர் டுப் பிரி[212]என்கிற சற்தாரை மஹா ராஜாகிட்ட அனுப்பிவீச்சு மஹா ராஜாவுக்கும் இங்கிலீஸ் காறருடைய சினேகத்துக்கும் புரேுவிருத்தியா யிருக்கும்படியாய் ஒரு உடன்படிக்கை பண்ணினார்.

அப்பால் மானோஜிருவு ஜெகதாபுக்கு சரிக்கிலும் சேனுபதி தினமும்[213] நடந்து வந்துது. ஆனால் மானோஜி ருவு நடத்தை ஒரு யோக்கியதைக்கும் யுக்த்தமா யிராதபடியினாலே அவரை யடித்துப் போட வேணும். ஆனால் முன்னாலே ரெண்டொருத்தரை அவாள் அகுறுத்தியத்தினாலே அடிபட்டுப் போனாலும் அடித்துப்போட்டோமென்று மஹா ராஜாவுடைய மனதிலே பசியா தாபமா யிருந்தபடியினாலே மானாஜிறாவை அடிக்காமல் சரிக்கில் உத்தியோ கத்தை மாத்திரம் எடுத்துப்போட்டு பிறாமணாள் எந்த கிறித்துறமத்துக்கும் துணியமாட்டாள், பின்னையும் பயந்து புத்தியோடே நடப்பார்கள் என்கிற நிச்சயத்தினாலே றாச்சிய விசாரணையை டபீர் நரோ பண்டிதர்[214] சுவாதீனம் பண்ணி முடிய நடப்பித்துக் கொண்டு வந்தார்கள்.

அப்பால் நவாபு மமுதல்லிகான் திருச்சினாப்பள்ளிக்கு வந்து இருந்து தஞ்சாவூர் மஹா ராஜாவுடனே பேஷ்கஷ் பணத்துக்கு சவாபு சால பண்ணி னத்தின்பேரிலே மஹா ராஜா அவர்கள் சொன்ன உத்தரம் சரிப்படாமல் சண்டைக்கு ஆயித்தமாயிருந்தார்கள். அப்போ இங்கிலீசுகாற சற்தாற்கள்

---

209. மூணாவது திரம் - மூணாவது விசை (டி3762)

210. "Towards the end of August 1760 an English fleet appeared on the coast. With its cooperation, Coote proceeded to an active investment of Pondicherry. He soon captured all its outposts and instituted a strict blockade. After more than four months, Lally sick and worn out with despair and exhaustion surrendered unconditionally (January 1761)" - (The Maratha Supremacy, Page 335)

211. சீர்மைக்கு - இங்கிலாந்துக்கு (போ. வ. ச. பக். 113)

212. மேஸ்தர் டுப் பிரி - மாஸ்டர் டுப்ளிகேஸ் (போ. வ. ச. பக். 113) Mr: Josiah Du Pre -(Srinivasan, Page 284)

213. தினமும் - வேலையும் (போ. வ. ச. பக். 113)

214. டபீர் என்ற சொற்குச் செயலர் என்பது பொருள். இவர் இயற்பெயர் நாரோ பண்டிதர் என்பதாகும் (சுப்பிரமணியன், பக்கம் 78, அடிக்குறிப்பு)

நவாபுக்கு தஞ்சாவூர் மஹாராஜா பண்ணின உபகாரத்தையும் தங்களுக்கு காண்பிவித்த சினேகத்தையும் யோசித்துப் பார்த்து நவாபுக்குச் சொல்ல வேண்டிய விதப்படிக்குச் சொல்லி பேஷ்க்கஷ் நிலுவைக்கும் இனி மேலைக்கு நடக்க வேண்டியத்துக்கும் ஒருதிட்டம் பண்ணி அது இங்கிலீஸ்காறர் மாரிபத் தாய் செலுத்துகிறதென்று தீர்ப்புபண்ணி இருவருக்கும் பூதலூரிலே பேட்டி பண்ணி வைத்து சமாதானம் பண்ணி வைத்தார்கள்.[215]

அப்போது துளஜா மஹா றாஜாவுக்கு ரெண்டாவதுஸ்ரீ றாஜகுமார பாயி சாயிபுக்கு ஒரு கன்னிகை பிறந்துது.

முன்னாலே சென்றுபோன சவவாயி சாஜிறாஜா பிழைத்திருக்கிறா னென்று ரூபியுடைய வெள்ளாட்டி மகன்[216] சுபானி என்கிறவனுக்கு தஞ்சாவூர் றாச்சியம் பிறாப்த்தி யாகும்படியாய் பண்ணின[217] கோயாஜி காட்டிகே,[218] ஓடிப் போயிருந்தவன், அரியலூர் காட்டிலே ஒரு கிறாமத்திலே வந்து யிருக்கிறா னென்கிற சேதி மஹா றாஜாவுக்குத் தெரிஞ்சு ரெண்டு பேர் ஆப்த்தமா யிருக் கப்பட்ட சிபாயி அவாளுடனே கொஞ்சம் செனமும் அனுப்பிவித்து அந்த கோயாஜி காட்டிகேயைக் கொண்ணு போட்டார்கள்.

இந்தப்படி பிறதாப சிம்ம மஹா றாஜா றாச்சிய பாரம் பண்ணு கிற போது உத்தமமாய் புண்ணிய கீர்த்தி விஸ்தரிச்சுது. அந்த கீர்த்தியை சிறுது சொல்லுகிறோம். உத்தர தேசம் சாத்தாரா புனா அவரங்கா பாது வரைக்கும், கிழக்கே அச்சி[219] வியாபாணம்[220] கண்டிதேசம் சிங்கள தீபம் வரைக்கும், தெற்கே மலையாளம் கொளம்பு கொச்சி, மேற்கே ஸ்ரீறங்கபட்டணம் பிதலூர் தேசம் குத்தி கிருஷ்ணாதீரம் பண்ணாளகட்

---

215. "The Nawab demanded from Pratap Singh all arrears of tribute. Lord Pigot the governor of Madras deputed Mr. Josiah Du Pre, the Second in Council to settle the terms of the tribute payable to the Nawab. Accordingly it was agreed that the Raja should pay by five instalments in about 2 years, 22 lakhs of rupees in discharge of the outstanding arrears with a further sum of 14 lakhs as a present to the Nawab and also an annual tribute of four lakhs afterwards"- (Srinivasan, Page 284)

*திருமுடி சேதுராமன் சுவடியில், "சகம் 1680 ஆம் வருஷம் கிறிஸ்து 1758 வருஷத்துக்கு தமிழ் வெகுதான்ய வருஷம் முதல் சுவல்பமாய் பேஷ்கஷ பணம் தங்கள் மூலமாய் கொடுத்துவரும் படி சமாதானம் செய்தார்" என்றுளது (பக். 374)*

*216. ரூபியுடைய வெள்ளாட்டி மகன் - குப்பி என்ற வேலைக்காரியின் மகன் (போ. வ. ச. பக். 114)*

*217. பிராப்தி யாகும்படியாய்ப் பண்ணின - அடைய ஏற்பாடு செய்து ஓடிப்போன (போ. வ. ச. பக். 114)*

*218. கோயாஜி காட்டிகே – கோதாஜி காண்டிகா (போ. வ. ச. பக். 144);* Koyaji Ghangte (Srinivasan, Page 279)

*219. அச்சி - சமுத்திர மத்திய பிரதேசத்திலுள்ள அச்சி (போ. வ. ச. பக். 114)*

*220. வியாபாணம் - யாழ்ப்பாணம் (ஷெ)*

வரைக்கும், பிறதாப சிம்ம மஹா றாஜாவுடைய உத்தம நடத்தையும் தானதர்மங்கள் உதாரத்துவமும் சவுரியமும் அன்னிய றாஜாக்களுக்குப் பிதிகர மும்[221] இந்தப்படியாக விஸ்தரிச்சுது. தம்முடைய றாச்சியத்து செனங்களெல்லா ரும் மஹா றாஜாவினுடைய தான அவுதாரிய குணத்தைத் தொட்டும் சனங் களை றம்மியம் பண்ணிவிக்கிற சாமற்த்தியத்தைத்தொட்டும் சகலமான பிற சைகளும் சுகப்பட்டுது. இப்படிக்கொத்த மஹா றாஜாவுக்கு பரலோக பிறயாண னாள் சமீபித்தத்துக்கு சில சின்னங்கள் தெரியப்பட்டுது. அதென்னவென்றால் விழுந்து போறத்துக்கு ஆறுமாசத்துக்கு முன் முதல்க்கொண்டு மஹா றாஜா வுடைய சித்தவிருத்தி அதிக கோபமாச்சுது. அதுக்கு ஒரு திஷ்டாந்திரஞ் சொல் லுகிறேன்: மஹா றாஜா அவர்கள் சுவாமி தெரிசினத்துக்கு திருவாரூருக்கு சவாரி போனார். அப்போ மஹா றாஜாவுடைய சின்ன சேவுகர் மாவளியர்[222] ரெண்டு பேர் பின்னாலே நிண்ணார்கள். அவர்கள் மறா றாஜாவுடைய சேவுகத்தில் ஆலசி யம் வருகுதென்று சீக்கிரமாக சவவாரியுடனே கூடப்போய் சேர வேணுமென்று சுறுக்காய் ஓடிவருகிறபோது அவாளுடைய தேகத்தின் வேகமும் அவாள் அடி வைத்து ஓடுகிற போது பூமியிலேயிருந்து யெழும்புகிற தூசிகள் மஹா றாஜா தேகத்திலே பட்டபடியினாலே[223] மஹா றாஜா அவர்கள் அந்த க்ஷணமே அவாள் ரெண்டு பேரையும் தலையை வெட்டிப்போடச் சொல்லி உத்திரவு பண்ணிப் போட்டார். அப்படியே நடந்துது. அவாள் தலைவெட்டுண்டு போகும்படியாய் குத்தம் பண்ணாதபடியினாலே பிரபஞ்சியத்திலே யிருக்கிறவர்களெல்லாம் மஹா றாஜா யிதுவரைக்கும் நடப்பித்துக்கொண்டு வந்த காரியத்துக்கு இந்தக் கிறுத் தியம் விபரீத சின்னமாய் காண்பிவித்துது. இப்படிக்கு இன்னும் சில பொல்லாத கிறுதியங்களும் நடந்துது. இது தவிர தெய்வீக திஷ்ட்டாந்திரம் ஒண்ணு பிற பலமாய் நடந்துது. அது யென்னவென்றால், மஹா றாஜா அவர்கள் விழுந்து போறத்துக்கு மூணு மாசத்துக்கு முன்னே முதல்க்கொண்டு றாத்திரி காலத் திலே பனிரெண்டு னாழிகைக்கு மேல் இருவத்திரண்டு னாழிகை வரைக்கும் ஒரு பெரிய அழுகைக் கூக்குரலாகிறது. மஹா றாஜா முதல் சகல சனங்களும் இந்த சப்த்தம் கோட்டை வெளியிலே ஆகுதென்று போய்ப் பார்க்க வேணு மென்று போனவிடத்திலே கோட்டையிலே ஆகுறது. கோட்டையிலே பார்த் தால் கோட்டை வெளியிலே ஆகுறாப்போலே யிருக்குறது. இந்தப்படி மூணு

---

221. அன்னிய ராஜாக்களுக்குப் பிதிகரமும் - எதிரிகள் அஞ்சும் பராக்கிரமம் (போ. வ. ச. பக்.115) (பிதிகரம் - பீதிகரம் – அச்சம்)

222. மாவளியர் - மாவள வகுப்பைச் சேர்ந்தவர் (போ. வ. ச. பக். 115);

**The Western part of the Poona district, running along the Western Ghats for a length of 12 to 24 miles is known as Maval or the Sunset land ...the valleys into which this western belt is divided are collectively known as the twelve Mavals... The Maval country is purely agricultural region. Its common people differed from the Marathas and kunbis of the plains only by being stronger built, hardier, simpler and less enervated by luxury or vice"- (Sarkar (1) Page 26)**

223. பட்டபடியினலே - பட்டதென்றெண்ணி (போ. வ. ச. பக் 115)

மாதம் நடந்துது. அப்பால் மஹா ராஜா[224] அரண்மனையிலே மேற்கு பாரிசத்திலே முன்னாலே னாயக்கர் கூட்டம் றாச்சியம் பண்ணின அஜாரத்திலே[225] ஒரு கோபுரம் இருந்துது. அந்த கோபுரத்து சிகரம் இருந்தாப்போலே யிருந்து யிடிஞ்சு வடக்குப் பக்கத்திலே விழுந்துது. பொல்லாத அபசகுனமென்று சகல சனங்களும்[226] சொல்லிக்கொண்டுது. இன்னும் சில அபசகுனங்களும் சனங்கள் திஷ்ட்டிக்கு விழுந்துது.

அதுக்கு பிற்பாடு பிறதாப சிம்ம மஹா றாஜா தம்முடைய தபோபலத்துனாலேயும் யோகப்பியாசத்துனாலேயும் குரு உபதேசத்தின் திருடத்துனாலேயும் தான் விழுந்துபோற னாள் நண்ணா தெரிந்துகொண்டு ஆனந்தத்தை[227] அடைஞ்சு கொண்டிருந்தார்.

அப்போது துக்கோஜி மஹா றாஜாவுக்கு (* வைப்பு ஸ்ரீகளிலே ஆன பிள்ளைகளில்) செண்ணு போனது போக* (மீதியாக யிருந்த னானாசாயபுக்கு பிறந்த ஒரு பிள்ளை அப்பு சாயபு மாத்திரம்) உயிரோடே யிருந்தா ரெண்ணு மேல் எழுதப்பட்டிருக்குதே அந்த அப்பு சாயபு தெய்வகதியானார். அவர் வைப்பு ஸ்ரீகளிலே ஒரு பிள்ளை னானாசாயபு என்று யிருந்தான். அப்பு சாயபுக்கு உத்திறகிறிகையான பனிரெண்டாம் நாள் பிறதாபசிம்ம றாஜா தம்முடைய பிள்ளை துளஜா மஹா றாஜாவுக்கு[228] நல்ல புத்திவாற்தைகளை சொல்லிப்போட்டு நல்ல கியாபகத்துடனே சாலியவாகன சகம் ௲௬௱அ௰ரு[229] சுபானு வருஷம் பிரதாபசிம்ம றாஜா தெய்வகெதி யானார். அவருடனே கூட அவர் மூணாவது ஸ்ரீ[230] யெமுனாபாயி சாயபும் அஞ்சாவதுஸ்ரீ[231] சக்கவாற்பாயிசாயபும் இந்த ரெண்டுபேரும் சாகமனம்[232] பண்ணினார்கள். உடனே துளஜா மஹா றாஜாவுக்கு பட்டாபிஷேக மாச்சுது.

**14 துளஜா** அப்போ நவாபு மமுதல்லிகான் வஸ்திர மரியாதைகளும் கடுதாசும் கொடுத்து அனுப்பிவித்து, ஒரு பக்ஷி[1] அதின் பேர்

---

224. அப்பால் மஹா ராஜா-டி 3763இல் இல்லை

225. அஜாரத்திலே - அரண்மனையில் (போ. வ. ச. பக். 115)

226. சகல ஜனங்களும் - ஜனங்கள் சகலமானபேரும் (டி3762)

227. ஆனந்தத்தை - மனச்சாந்தி (போ.வ.ச.பக். 116)

228. "தம்முடைய பிள்ளை துளசா மகாராஜாவுக்கு" என்ற இடத்தில், திருமுடிசேதுராமன் சுவடியில்" தம்முட புத்திர சிகாமணிகளான துளஜா ராஜா, அமரசிம்ம ராஜா இவர்களுக்கு" என்றுளது (பக்.377)

229. சகம் 1685

230. மூணாவது - இரண்டாவது (திருமுடி.பக்.377) (போ.வ.ச.பக்.82 பார்க்க)

231. அஞ்சாவது — நாலாவது (திருமுடி.பக்.377) (போ.வ.ச.பக்.82 பார்க்க)

232. சாகமனம் - சககமனம் - உடன்கட்டை ஏறுதல்

* பிறைவளைவுக்குள் உள்ளவை டி 3180இல் சரியாகத் தெரியவில்லை; டி3762 பார்த்து எழுதப்பட்டன.

1. பஷ்சி - பக்ஷி (பறவை)

சுதறமுருகு[2] பஷ்சி யென்று சொல்லப்பட்டது; அது உயரம் ஒண்ணரை ஆள் உயரம், அதினுடைய கால் ஒண்டை[3]யைப் போலிருக்கும், இப்படிக் கொத்த அபறூபக்குருவியை[4] அனுப்பிவித்தார்.

அதுக்குப் பிற்பாடு துளஜா மகாறாஜா நாலஞ்சு வருஷம் மட்டும் தம் முடைய தொகப்பனார் எப்படி நடப்பிவிச்சுக் கொண்டு வந்தாறோ அப்படியே தம்முடைய யோக்கிய பரிவாரங்களை யெதாயுக்த்தமாய் நடப்பிவித்துக் கொண்டு, நவாபு மமுதல்லிகானுக்கும் சந்தோஷம் வரத்தக்கதாக, மதுரையிலே யிருந்த கும்மந்தான்[5] மஹமது யிசூபுகான் மேலே ஒருதிரம், அயிதர் நாயக்கன் பேரிலே பெங்களூர் மட்டும் ஒருதிரம், யிந்தப்படி நவாபு றாஜகாரியம் பண்ணபோது, மதுரை கும்மக்கு அருணகிரி அப்பாவையும், வெங்கிட்டறாவு காடெக்கு அயிதர் சீர்மை பேரிலே பொனத்துக்கு கும்மக்காக அனுப்பிவித்து, நவாபு முதல்க் கொண்டு மைத்த றாஜாக்களும் சிலாக்கியம் பண்ணத்தக்கதாக றாச்சியம் பண்ணிக்கொண்டு வந்தார். அப்பால் தம்மை வெகுநாளாய் அனுசரித்துக் கொண்டிருந்த உசேன்கான்சூருக்கு பெரிய மனுஷன் பண்ண வேணுமென்கிற அபேஷ்சையினாலே அவனுக்கு மந்திரி தினம் குடுத்தார். அப்போ ஆற்காட்டு பிறாந்தியத்தின் மேல் அயிதரல்லிக்கான் சண்டைக்கு வந்திருந்தான். அவன் தஞ்சாவூர் சீர்மைக்கும் வந்து திருமுல்லைவாடி[6] யிலே வந்து இறங்கி மஹா றாஜாவுடனேயும் சவாபு சால பண்ணி[7] மஹா றாஜாவும் நாலு லெஷ்சம் விராகன் வரைக்கும் கொடுத்தார். அவனதை வாங்கிக் கொண்டு போய் விட்டான்.[8]

அந்த உசேன்கான்சூர் என்கிறவன் மெத்த றாச்சிய காறுபாறு[9] எந்த விதமாய் பண்ணினாலும் பிரதாபசிம்ம றாஜா முக்கியமாய் பண்ணியிருந்த காரியம்[10] நவாபு மமுதல்லிகானுக்கு செலுத்த வேண்டிய பேஷ்கஷ் இங்கிலீசு காறர் முகாந்திரமாய் தஞ்சாவூர் பேஷ்கஷ் பணம் செல்லும்படியாய் பண்ணி யிருந்த திட்டத்தை இந்த உசேன்கான் சூர் துற்புத்தியினாலே[11]* வெள்

---

2. சுதற முருகு - முதர் முருக் (போ. வ. ச. பக். 117)

3. ஒண்டை - ஒட்டகம் 4. அபறூபக்குருவி - அபூர்வ பக்ஷி (போ. வ. ச. பக். 117)

5. கும்மந்தான் - குமதீன் (பே. வ. ச. பக். 117)

6. திருமுல்லைவாடி - திருமலவாடி (போ. வ. ச. பக். 117); திருமழபாடி

7. மஹா றாஜாவுடனேயும் சவாபு சாலபண்ணி - நவாபுக்குச் சவால் விடுத்தார் (போ. வ. ச. பக். 117)

8. "Tanjore did not escape the depradations of Haidar and in 1769 he made plundering raid into that country... The Raja got terrified and in order to save his peoples' lives he finished the affair with Haidar by paying a trifle (i.e. 4 lakhs of rupees and four elephants)- (Srinivasan, Page 294-95)

9. காறுபாறு - கார்பார் - கார்வார் - ஒரு அதிகாரி

10. பிரதாப சிம்மறாஜா முக்கியமாய் பண்ணியிருந்த காரியம் - முக்கியமான வேலைகள் எல்லாம் பிரதாபசிம்ம ராஜாவின் பேரிலே நடத்தப்பட்டது-(போ. வ. ச. பக். 117)

11 *முதல் 12* வரை: "விபரீதபுத்தி அதிகரித்து வந்ததினால் அவனால் நடத்தப்பட்ட ராஜ்ய

ளத்துக்குத் தடுக்கும் படியாய்போட்டிருந்த அணையை உடைத்தாப் போலே அந்த ஆதாரத்தின்பேரிலே இருந்த சமஸ்தானத்துக்கு அபாயம் வரும்படியாய் பேஷ்கஷ் பணத்தை இங்கிலீசுகாறர் மூலமாய் செலுத்தாமல் தாமே செலுத் தின [12*] படியினாலே சமஸ்தானத்துக்குஅபாயம் வந்ததென்கிறத்துக்கு சந்தேக மில்லை [13*]

அப்பால் துளஜா மஹா றாஜா தம்முடைய கையின் கீழே யிருக்கிறவா ளுடைய புத்தியை அனுசரித்துக்கொண்டு பூற்வம் துக்கோஜி மஹாறாஜா னாள் முதல்க்கொண்டு றாமனாதபுரம் பாளையக்காறருக்கு ஆதரனை பண்ணிக் கொண்டிருக்கிற நடத்தை தஞ்சாவூர் சமஸ்தானத்தில் உண்டாயிருக்க னாகப் பட்டணத்திலிருந்து மஹா றாஜாவுக்கு பெஷ்கஷ் கொடுக்க வேண்டிய ஆனை கப்பலில் வந்துகொண்டிருந்த அந்த கப்பலை றாமனாத புரத்து யெல்லை சறஹத்துலே வந்துதென்று றாமனாத புறத்தான் அந்த ஆனையைப் பிடித்துக் கொண்டு அந்த ஆனை மஹா ராஜாவுதென்று தெரிஞ்சும் கொடாமல் படிக்கு வைத்துக் கொண்டிருந்தபடியினாலே மஹா றாஜாவுககுக் கோபம் வந்து றாமனாத புரத்தின் மேலே பாளையமெடுத்து[14] அந்தக் கோட்டையைச் சுத்திக் கொண்டு சண்டை பண்ணி கோட்டையும் இடித்துப்போட்டு கோட்டை கை வசமாகிற சமையத்தில் துளஜி மஹா றாஜா தூரயோசினை பண்ணி றாம னாதபுரத்தானுக்கு அவன் கோட்டையை நிலைக்கப்பண்ணி தம்முடைய பாளையத்துக்கு செண்ண சிலவுயென்று நஜர்[15] யென்றும் கொஞ்சம் திரவியம்[16] வாங்கிக் கொண்டு தஞ்சாவூர் வந்து சேர்ந்து உடனே தம்முடைய கன்னியை[17] காட்டிகே றாவுக்கு வெகுதிரவியம் சிலவழித்து விவாகம் பண்ணிவைத்தார்.

இந்த சிலவுகளைத் தொட்டு நவாப்புக்கு செலுத்த வேண்டிய தோப்பா பணம் ரெண்டு வருஷத்து பணம் நிலுவை நிண்ணுபோய்விட்டது. அப்போ நவாப்பு மமுதல்லிகான் யோசினை பண்ணினது: தஞ்சாவூர் துளஜி மஹா றாஜா புத்திவந்தர், பிறபலமா யிருக்கப்பட்டவர், வடக்கே யிருக்கிற மறாட்டி யருக்கும் பந்துசனம், சூரனுமானபடியினாலே யெப்போவாகிலும் தம்முடைய

---

பாரம் சமஸ்தானத்துக்கே கேடு விளைவிக்கக்கூடும் என்று சந்தேகமில்லாமல் சொல்லக்கூடிய நிலைமை ஏற்பட்டது''- இங்ஙனம் போ. வ. ச. வில் உள்ளது (பக். 118)

12* முதல் 13* வரை டி 3762 நோக்கி எழுதியவை

14. "The Rajah of Sivaganga captured a few elephants of Tuljaji"- (Rajayyan, Page 56)

15. Nasr, Nazer- a present from an inferior to a superior (Index-Records of Fort St. George, C. C., 1802)

16. "The regent of Ramnad came to terms according to which the Tanjore Raja was allowed to remain in possession of the tracts conquered by him and to receive one lakh of rupees in specie and 30 thousand rupees in jewels, two large elephants and two pieces of cannon"- (Srinivasan, Page 296)

17. கன்னிகை - இரண்டாவது மனைவி (போ. வ. ச. பக். 109) ஆகிய ராஜகுமாரபாயியின் மகள். இவளுக்கு மகன் மாருதிசாமி என்பது (போ. வ. ச. பக். 125) அறியப்படும்.

யோக்கியத்தினாலே பிறபலமாவார்; அப்போ நமக்கு பாரமாயிருக்கும்: ஆகையினாலே யெந்த விதத்திலும் அவரை கையின் கீழே போட்டுக்கொள்ள வேணு மென்கிறத்துக்கு, இப்போ தோப்பா பணம் பாக்கியும் இருக்குது, அது கேழ்க்கிற நிமித்தியம் அதுக்குத் தக்கதாய் சேனைகளைச் சேர்த்து காரியத்துக்குத் தக்கதாய் தஞ்சாவூர் ராட்சியத்தை ஆக்கிரமித்துக் கொண்டு, றாஜாவையும் கைக்குள்ளாக்கிக் கொள்ள வேணும்; ஒரு வேளை தோப்பா பணம் கொடுத்துவிட்டால், னாள வட்டத்திலே ராட்சியத்தை ஆக்கிரமித்துக்கொண்டு, றாஜாவை நம்முடைய கையுங்கீழே வைத்துக்கொண்டிருக்கிறதே உத்தமமென்று நிற்செயம் பண்ணி, தோப்பா பணம் கேட்டு அனுப்பிவித்தான். அப்போ காலத்துக்குத் தக்கதாய் றாஜாவுடைய புத்தியை துற்மந்திரிகள் அபகரித்துக் கொண்டு[18] நிராகரித்து பிறதி உத்தாரம் யெழுதும்படியாய் பண்ணினார்கள். அதினாலே நவாபு மமுதல்லிகான் றாஜாவுடைய தொகப்பனார் பண்ணின உபகாரத்தை நினையாமல் ராஜ்(*யத்தின் பேரிலே திஷ்ட்டியை வைத்து) அதை அபகரிக்கிற புத்தியினா(*லே தம்முடைய மூத்த மகனான உமததுல் உமரா[19] உடனே தக்க சேனையும் குடுத்து) சண்டைக்கு அனுப்பிவித்தார். அவர் தஞ்சாவூர் கோட்டையை சுத்திக் கொண்டு உயித்தம் பண்ணினார். அப்போ துஷ்ட மந்திரிகளுடைய புத்தியை அனுசரித்து சண்டைக்கு ஆரம்பித்தார்கள். இவாளுக்கும் சண்டை போடுகிறத்துக்கும் சாமற்தயம் போராமல் மேல் ஒண்ணும் நடவாதபடியினாலே சமாதானம் பண்ணிக் கொள்ள வேணு மென்று றாஜாவுக்கெச்சரித்தார்கள். அப்போ மஹாறாஜா பூற்வம் பெரியவாள்[20] னாளையிலே யிருந்த சாமாதிகாள் ரெண்டொருத்தருடனே யோசினை பண்ணி சமாதானம் பண்ணிக்கொண்டு பாளையத்துச் சிலவுக்கு அன்பது அறுபது லக்ஷம் றூபாய் தீர்ப்புப் பண்ணிக் கொண்டு றொக்கம் நகை நட்டுகள் கொடுத்தது போக மத்தத்துக்கு பாதி சீர்மை மேலே அடமானமாக எழுதிக் கொடுத்துவிட்டார்.[21] அதன் பிற்பாடு உமமதுல்லுமுறா தஞ்சாவூர்க் கோட்டைக்குச் சமீபமாய் மேர்க்குப் பாரிசம் வல்லத்துக் கோட்டையிலே தம்முடைய சேனைகளை வைத்துப்போட்டு நவாப்புக் கொடுத்திருந்த இளங்காடு சீமையும் தம்முடைய சுவாதீனம் பண்ணிக்கொண்டு[22] தம்முடைய சேனையுடனே திருச்சினாப்பள்ளிக்குப் போய்விட்டார்.

---

18. ராஜாவுடைய புத்தியை துற்மந்திரிகள் அபகரித்துக்கொண்டு - ராஜா துர்மந்திரிகளின் ஆலோசனைக்கு வசமாகி (போ. வ.ச. பக். 119)

*பிறை வளைவுக்குள் இருப்பவை டி3762 நோக்கி யெழுதப்பட்டன

19. Umdut - ul - Umara Amir-ul-Hind Walajah

20. பெரியவாள் - தந்தை (போ. வ. ச. பக். 119)

21. "By the first settlement dated 20th of October 1771, Tuljaji agreed to pay eight lakhs of rupees as arrears of tribute... By the second settlement dated 25th Oct. 1771 the Rajah assigned the district of Mayuram and part of the district of Kumbakonam yielding an annual revenue of sixteen and a quarter lakhs of rupees for two years in lieu of the payment of 32½ lakhs of rupees estimated as war indemnity"- (Rajayyan, Pages 61-62)

22. "As the possession of the fort of Vellum, the key of Tanjore was of

அப்பால் மஹாறாஜா அவர்கள் சூரியவம்சமா யெசவந்தறாவு[23] யென்கிற வனை சென்னைப் பட்டணத்திலே நவாப்பு அண்டைக்கனுப்பிவித்து சிறுது சந்தி வாற்தைகளை சொல்லச் சொன்னார். அதுக்கு நவாப்புடைய மனோ பாவம் வேறே யிருந்த படியால் அந்த சற்தாருடனே கூட ஒரு காண்டா முறுகமும் வஸ்த்திர பத்திரமும்[24] அனுப்பிவித்தாரே அல்லாமல் சந்தி சமா தான வாற்தையே கேழ்க்க யில்லை. அப்பால் நவாப்பு பாக்கி றூபாயெல்லாம் சாடாவாய் செண்ண பிற்பாடு துளஜி மஹா றாஜாவுக்கு சேனைகளுக்கு சம்பளங் கொடுக்க அட்டிவிழுந்த[25] சமையத்திலே நவாபு அவருடைய சனத்துக்கெல்லாம் போதினை பண்ணி[26] சிறுது சற்தார்களை சேர்த்துக்கொண்டு றாட்சியத்தை ஆக்கிறமித்துக்கொள்ள வேணுமென்று (ஏற்பாடு செய்தார்.) அப்போ வடக்கே யிருந்து மாதவறாவ் சதாசிவ் யென்கிறவன் சென்னப்பட்டணத்துக்கு நவாப்புக் கிட்ட னாலத்தொண்ணு[27] வாங்கிற நிமித்தியம் வந்தவனையுங் கையுங் கீழே போட்டுக் கொண்டு[28] தம்முடைய ரெண்டாவது பிள்ளை மதாறமுலுக்கு[29] யென்கிறவனுக்கு சேனையுங் கொடுத்து தஞ்சாவூர் மேல் யாதொரு முகாந்திர மில்லாம லனுப்பிவித்தார். அவாள் தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்து சிறுது சண்டை சிறுது கிறத்திறமத்தினாலே தஞ்சாவூர் கோட்டையும் றாட்சிய மும் ஆக்கிறமித்துக்கொண்டு கோட்டையிலே தம்முடைய சேனைகளையும் வைத்து மஹா றாஜாவுடைய பழைய சேவுகம் டபீர் னாரோ பண்டிதருக்கு றாட்சியத்தின் விசாரணை அதிகாரமும்[30] கொடுத்துப்போட்டு தாம் சிறுது னாள் கும்பகோணத்திலே யிருந்து அப்பால் சென்னப்பட்டணத்து நவாப்புக்

---

utmost importance to the Wallajah interests, the Nawab directed his son Umdut ul Umara who settled the terms, to obtain possession of it. A fresh negotiation ensured and Umdat ul Umara forced the helpless Rajah to restore not only Vellum, but also Koilady and Elangad to the Nawab''- (Rajayyan, Page 62)

23. சூரியவம்சமா யெசவந்தறாவு - சர்தார் சதாசிவராவ் சூரியவம்சி (போ. வ. ச. பக். 120)

24. காண்டாமிறுகமும் வஸ்திர பத்திரமும் - ஒரு குதிரையும் வஸ்திரமும் கடிதமும் (போ. வ. ச. பக். 120)

25. அட்டி விழுந்த - பணமுடை யேற்பட்ட (போ. வ. ச. பக். 120)

26. அவருடைய சனத்துக்கெல்லாம் போதினை பண்ணி - மகா ராஜாவின் சேனையிலுள்ளவர் களுக்கு லஞ்சம் கொடுத்து (போ. வ. ச. பக். 120)

27. நாலத்தொண்ணு - சௌத் (போ. வ. ச. பக். 120)

28. கையும் கீழேபோட்டுக்கொண்டு - தன் ஸ்வாதீனப் படுத்திக்கொண்டு (போ. வ. ச. பக். 120)

29. "Muhammad Ali appointed his second son Amir ul Umara a young lord of intrigue and enterprise as his deputy for southern Carnatic''- (Rajayyan, Page 68)
இதில் அமீர்உல்உமரா என்று கூறியிருக்க மெக்கன்சி சுவடியிலும், போ. வ. ச. விலும் (பக். 120) மதார்முலுக் என்றுளது.

30. "The Nawab spent enormous amounts reconstructing the fort of Tanjore and garrisoned it with his own troops ... He appointed Dubeer, the able minister of Tuljaji at the head of revenue administration''- (Rajayyan, Page 69)

காட்டே போய் சேர்ந்தான். இப்படி தஞ்சாவூர் றாட்சியத்தில் நவாப்புடைய அதிகாரம் ரெண்டு[31] வருஷம் நடந்துது.

தஞ்சாவூர் ராச்சியம் னூறு வருஷமாய் போசலை உத்தம வம்சத்தாருக்கு[32] நடந்து கொண்டு வந்துது. [33*]இதிலே மத்த செனங்க ளெப்படியிருந்தாலும் றாஜாவுடைய ஆப்த்த சேனைகள் மாத்திரம் மஹா சூராளிருப்பார்கள். அப்படி யிருந்து மத்தியானத்திலே இந்தக் கோட்டை அன்னியாயமாய் போய்விட்டுதே என்று எல்லாராலேயும் ஒரு தோஷாரூபமாக[33அ] சொல்லுகிறத்துக்கு காரணமானது[34*]; என்னவென்றால் துளஜா மகாறாஜாவுக்கு பட்டமான நாள் முதல் வெகு தான்தற்மம் அனேக அக்கிறாரம் தேவாலையங்கள் துலுக்க மதஸ்தாருக்குக்கூட அனேக தற்மங்கள் நிரந்தரமா யிருக்கும்படியாய் பண்ணி வைச்சார். றாஜா புத்திவந்தர்; வித்தியவந்தர்; நல்ல றூபவான்; சூரன் இப்படிக்கொத்தவருக்கு பட்டமான னாலஞ்சு வருஷத்துக்கு பிற்பாடு துஷ சாமாதிகாள் சஹவாசத்துக்கு[35] இடங் குடுத்தபடியினாலே அந்த துஷாள் கிட்டயிருந்து சிறுது துஷ்ட்ட கிறுத்தியங்கள் மஹா றாஜாவுக்கு கொஞ்சம் தெரிந்தும் தெரியாமலும் நடந்து கொண்டு வந்துது. அதிலே கெலிபிலி[36] அண்ணா என்கிறவனுக்கு லிங்கோஜி என்றுபேர்; அந்த கெலிபிலிக்கு மந்திரி தினம் கொடுத்தார். அவனுக்கு றாச்சிய தந்திரத்து விதங்களே தெரியாதவன்; அப்படிக்கொத்தவனுக்கு மந்திரிதினம் வந்திருக்கும் போது கோனேறிறாவு என்கிறவர், தேசஸ்தர், ஆறணிகா பிறாமணன், சமேதாற்[37], தம்முடைய சம்பளத்து நிமித்தியம்[38] கிலிபிலி அண்ணாவுடனே சவாபு சாலபண்ணி மறிய

---

31. Tanjore experienced the worst calamity during the three years when the Nawab controlled the kingdom with his men''- (Srinivasan, P. 303). ''During the interval of about 2 years and seven months (from 17th Sep. 1773 to 11th April 1776) between the dethronement and reinstatement of Rajah Tuljaji, the country remained under the direct government of the Nawab''- (District Manual, Tanjore, Page 809)

32. நூறு வருஷமாய் போசலைஉத்தம வம்சத்தாருக்கு - சம்பு மகாராஜாவின் பரம்பரையான போசலை வம்சத்தார்கள் (போ. வ. ச. பக். 121)

33* முதல் 34* வரை பின்வருமாறு போ. வ. ச. பக். 121ல் விளங்குமாறு கூறப்பட்டுள்ளது:- ''மேற்கூறியபடி சேனைகள் எவ்விதமாக இருந்தபோதிலும், அரசரின் ஆப்த பரிவாரங்கள் மாத்திரம் யுத்தத்திற்குச் சென்றிருந்தால் பெரியதோர் சேனையையும் நாசம் செய்திருப்பார்கள். அப்படியிருந்தும் கோட்டை அன்னியர்களால் ஆக்கிரமிக்கப் பட்டதே என்றால் இதற்குக் காரணம் இங்கே நடந்த பெரியதோர் குற்றம் என்று எல்லா ஜனங்களும் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள்.''

33அ. தோஷ ஆரோபம்—தோஷாரோபம். ஆரோபம் என்பது ஆருபம் என்றுகி யிருக்கலாம். ஆரோபமாவது ஒன்றின் மேல் மற்றொன்றின் தன்மையை ஏற்றிக் கூறுதல். தோஷாரோபணம் என்ற சொற்றொடர் ''குற்றம் ஏறிடுகை'' என்று பொருள்படும் (Tamil Lexicon, M.U.)

35. துஷ சாமாதிகாள் சஹவாசத்துக்கு - துர்மந்திரிகளின் சிநேகம் ஏற்பட்டு அவர்களுடைய போதனைகளுக்கு (போ. வ. ச. பக். 121)

36. கெலிபிலி - கிலிபில் (ஷெ); Lingoji Bhonsle, nicknamed kilipillai Anna'' (போ. வ. ச. ஆங்கிலம் பக்கம் XV) கெலிபிலி - கிளிப்பிள்ளை.

37. சமேதார் - சுபேதாருக்கு அடுத்த ராணுவ அதிகாரி

38. தம்முடைய சம்பளத்து நிமித்தியம் - போ. வ. ச.வில் இல்லை (பக். 122)

லாக உளுக்கார்ந்தான்.[39] அதில் அவருக்கு கோபம் வந்த சேதி தெரிந்து, அவர் கிட்ட ஒருதன், அந்த கோனேரிறாயருக்கு அவமரியாதையாக பேசினான். அதினாலே இருவருக்கும் சற்ச்சையாய் கத்தி யுருவிக்கொண்டு ஒண்ணுக் கொண்ணு அடித்துக்கொள்ளுகிற சமையத்தி லஞ்சாறு பேராய் சேர்ந்து கொண்டு கோனேரி றாயர் பேரிலே கைமிஞ்சி நடப்பிவித்தபடியினாலே[40] விசேஷிச்சு காயம்பட்டு பிறாமணன் கீழே விழுந்தான். அந்த வேளையில் இருந்த அவசறத்தைப் பார்த்தால் பிறாமணன் பேரிலே சோராவரி பண்ணி னார்க[41] ளென்கிற சொல்லுக்கு யிடமாச்சுது. இது சேதி மஹா றாஜா வுக்கு தெரிந்த பிற்பாடு அந்த பிறாமணனை வீட்டுக்கு அனுப்பி உபசாரங் களைப் பண்ணியிருந்தால் பிறாம ணன் பிழைக்கட்டும் அல்லது சாகட் டும், சொல்லுக்கிடமில்லாமலிருக்கும். அப்படிக்குப் பண்ணாம லந்த கிலிபிலி அண்ணா சொன்ன வாற்தையை விசுவாசமாக நம்பி அவன் மனதின் படியே மஹா றாஜாவும் அங்கீகாரமாக யிருந்தப்படியினாலே அந்த ஆறணி பிறாமண னுக்கு காயப்பட்டிருந்தும் சீவனோடே அறிவோடே யிருக்கச்சே காலிலே பிரி யைக்[42] கட்டி பறையரைக் கொண்டு தெருவிலே இழுத்தபோது அவனுடைய றத்தம் சிந்தி றொம்பவும் உபத்திரவமாய் துக்கம் கஸ்த்தி பொறுக்கக்கூடாமல் படிக்கு கொஞ்சத்தூரம் இழுத்துபோன பிற்பாடு பிறாணனை விட்டு விட் டான். அப்போ சகல சனமும் இந்த கிறுத்தியம் சந்தேகமில்லாமல் கடூரம் என்று சொல்லிக்கொள்ளும்படி யாச்சுது. றாச்சியம் போய் விடுகிறதுக் கிதே காறணமென்று சகல சனங்களும் வதந்தையாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

இதின் பிற்பாடு நவாபு கோட்டையை வாங்கின சேதியை இங்கிலீசு சற்தார் கள் சீமைக்கு இங்கிலீசு றாஜா கொறட்டு ஆப் டிறக்கட்டர்[43] முதலானவர்க ளுக்கு யெழுதினத்தின் பேரிலே அவாள் யோசினை பண்ணினது என்னவென்றால் எப்போதும் சென்னப்பட்டணத்திலிருந்து வருகிற சேதியில் நவாபு மமூதல்லி கானுடைய நடத்தையும் கேழ்விப்பட்டுக் கொண்டு வருகிறத்தில் தஞ்சாவூர் றாஜாவினாலே நவாபு மமுதலிகானுக்கு யெந்தக் காரியங்களிலேயும் உபகாரமே தவிர அவரைத்தொட்டு அபகாரமில்லாமலிருக்க நவாபு ஒரு அல்ப காரியம் தொப்பா பணம் செல்லயில்லை யென்று தஞ்சாவூர் றாஜாமேலே பாளைய மெடுத்து தம்முடைய பிள்ளையும் அனுப்பிவித்தார். அப்போ மஹா றாஜா தோப்பா பணமும் பாளையத்துக்கு செண்ண சிலவும் ஒப்புக்கொண்டு அதுக் காக சீமையும் அடமானம் கொடுத்து ஒப்புக்கொண்ட படிக்கு பணமுஞ் சாம வாய்[44] செலுத்திவைத்து இருக்க மறுபடியும் நவாபு அகாறணமாய் தஞ்சாவூர்

---

39. சவாபு சாலபண்ணி மறியலாக உளுக்கார்ந்தான் - அவரை எதிர்த்துப் பேசினார் (போ. வ. ச. பக். 122)
40. கைமிஞ்சி நடப்பி வித்தபடியினாலே - சண்டை செய்தபடியினாலே (போ. வ. ச. பக். 122)
41. சோராவாரி பண்ணினார்கள் - அதிக உபத்திரவம் செய்தார்கள் (போ. வ. ச. பக். 122)
42. பிரியை - கயிறு (போ. வ. ச. பக். 122)
43. கொறட்டு ஆப் டிறக்கட்டர் - Court of Directors (போ. வ. ச. பக். 122)
44. சாமவாய் - ஜமாவாய்; கேட்டதற்குமேல் (போ. வ. ச. பக். 123)

மேலே பாளையமெடுத்து அந்த ராட்சியத்தை ஆக்கிறமித்துக்கொண்டது றம் பவும் அயுக்த்தம்[45]; தஞ்சாவூர் ராஜா வெகு னாளாய் பண்ணிக் கொண்டு வந்த உபகாரத்தை யெல்லா மறந்துபோய் நவாபு நண்ணி கெட்டவனாய் போனபடியினாலே தஞ்சாவூர் மஹா ராஜாவுடைய நல்ல நடத்தையினாலே நவாபுடனேயும் நம்முடைய யிங்கிலீசுகாறருடனேயும் சினேகம் பண்ணி இருக் கிறபடியினாலே லாற்ட் பிக்கட்டு[46] சாயபுவைப் பார்த்து, நீர் இந்த க்ஷணமே சென்னப்பட்டணத்து கெவுனர் அதிகாரமாய்போயி நவாபு கிட்ட யிருக்கிற தஞ்சாவூ ரிறாட்சியத்தை வாங்கி ராஜாவுக்கு கொடுக்கிறது யென்று நிற்ச்செயமாய்ச் சொல்லி அனுப்பிவித்தார்கள். லாற்ட்டு பிக்கட்டு சாயபு சென்னப்பட்டணத்துக்கு வந்து கோற்ட்டு ஆப் டிறக்கட்டருடைய உத்தாரப் படிக்கு னானாவித உபாயத்தினாலே நவாபு கிட்ட யிருக்கிற தஞ்சாவூர் றாட் சியத்தை வாங்கி தாம் தஞ்சாவூர் கோட்டைக்கு வந்து கோட்டையும் சீமை யையும் ராஜாவுக்கு ஒப்புவித்து மஹா ராஜாவுக்குப் பட்டமுங் கட்டினார்.[47]

அப்போ துளஜா மஹா ராஜா கும்பனியாருடைய மேன்மையும் நீதி ஞாயத்துக்கும் அவாள் தயவுபண்ணி பண்ண உபகாரத்துக்கும் சகல விதத்தி லேயும் அவாளுடைய ஆதரணைக்கு தம்மை ஒப்புக்கொடுத்து அவாளுடைய பிறதான ஞாயத்துக்கு மனப்பூறுவமாக நம்பி தஞ்சாவூர் கோட்டையினுடைய கில்லேதார் பவுசுதார்[48] இந்த ரெண்டு அதிகாரத்தையும் இங்கிலீசுகாறருக்கு ஒப்புவித்து அந்த சேனைகள் சிலவுக்கு இம்மாத்திரமென்று ஒரு நிஷ்க்கரிஷை பண்ணி இங்லீசுக்காறருக்கு யினாம்[49] லட்சம் பொன் சீமையும் னாகூர்பந்தறும் தாம் ஆற்றும்[50] சந்தோஷமாய் கொடுத்தார்.[51] அதுக்குப் பிற்பாடு நவாபு மமு

---

45. றம்பவும் அயுக்த்தம் – மிகவும் பிசகான காரியம் (போ. வ. ச. பக். 123)

46. லாற்ட் பிக்கட்டு - Lord Pigot

47. "They expressed their disapproval of the conduct of the Madras government...The Court of Directors immediately ordered the restoration of Raja Tuljaji to the Tanjore throne (Page 304); It was left to Lord Pigot, the governor of Madras to perform the most honourable duty of restoring Tuljaji to the throne which was done in April 1776, the governor himself going to Tanjore to witness the installation ceremony"- (Srinivasan, Page 306)

48. பவுசுதார் - Foujdar - சேனைத்தலைமை வகிக்கும் அதிகாரம் (போ. வ. ச. பக். 124)

49. "இங்கிலீசுக்காரருக்கு இனாம்" என்பது போ. வ. ச. வில் இல்லை

50. ஆற்றும - ஆத்தும (டி3762)

51. "The Madras Council compelled the Raja to cede the important commercial centre of Nagore with its 277 villages yielding an annual revenue of 22 lakhs of Rupees"- (Rajayyan, Page 75)

"The 277 villages are classified as under:-

| Names of Maghanas | | Number of villages |
|---|---|---|
| Kivalur | ,, | 41 |
| Sikkal | ,, | 62 |
| Sempia Mahādevi | ,, | 34 |
| Palakkurichi | ,, | 27 |
| Maghilie | ,, | 27 |

தல்லிகான் வருஷாவருஷம் தொப்பா பணம் தனக்கு வரவேணுமென்று பிறை யெத்தினம் பண்ணினான். அதுக்கு துளஜா மஹா றாஜா தம்முடைய கோட்டையை அகாறணமாய் வாங்கிக் கொண்டதுமல்லாமல் தம்முடைய அரண்மனையிலே பரம்பரையாய் றாஜாக்கள் ளஉடு[52] வருஷமாய் சம்பாதித்து வைத்திருந்த நகைகளெல்லாம் கொண்டுபோய் விட்டான். அந்த உடமைக்கு வட்டி வருஷா வருஷம் கணக்குப் பார்த்தால் ஒரு வருஷத்து வட்டிப் பணம் ரெண்டு வருஷத்து பேஷ்க்கஷ்க்கு ஈடா யிருக்குது. இதுவுமல்லாமல் தாம் எந்த விதத்திலும் இங்கிலீஸ்காறரை சேர்ந்தவர்; நவாபு தம்முடைய றாச்சியத்தை வாங்கிக் கொண்ட[53] காரணத்தினால் தாமுயிரோடே யிருக்கிறவரைக்கும் பேஷ்கஷ் பணங் குடுக்கிற தில்லை[54] என்று கொடுக்காம லிருந்துவிட்டார்.

நீதிவந்தாளா யிருக்கப்பட்ட இங்கிலீஸ்காறர் முகாந்திரமாய் மகா றாஜாவுக்கு தம்முடைய சொந்த றாச்சிய பத பிறாப்பத்தியான பிற்பாடு மகா றாஜா பண்ணின யோசினை யென்னவென்றால் வறன சங்கரசாதி[55] யீனசாதியாக யிருக்கப்பட்டவர்களை சமீபத்திலே சேர்த்துக்கொண்டு அவர்களுக்கு மந்திரித்தனம் கொடுத்தபடியினாலே பிறம்மஹத்தியாதி பாதகமும் றாச்சிய மிழந்து பொறத்துக்குக் காறண மாச்சுது. இனிமேலைக்கு பிறாமணாள் உத்தம சாதியானபடியினாலே துரோகம் பண்ணமாட்டார்கள். அகாதமாக யிருக்கப்பட்ட கிறுத்தியம்[56] பண்ணுகிறத்துக்கு பயப்படுவார்களென்று தம்முடைய மந்திரி அதிகாரத்தை ஒருத்தர் பிற்பாடு ஒருத்தர் பிறாமணனுக்குக் கொடுத்து முத்திலும் நடப்பித்துக் கொண்டு வந்தார்கள்.

அதுக்குமேல் துளஜா மஹா றாஜாஸ்ரீ மூணாவதுஸ்ரீ மொகனாபாயி

---

| | | |
|---|---|---|
| Killugudi | ,, | 25 |
| Tevur | ,, | 31 |
| Adiyakka mangalam | ,, | 8 |
| Port of Nagore | ,, | 1 |
| Valivalam | ,, | 21 |
| | Total | 277 |

-(Venkasami Rao, Manual of Tanjore, Page 809)

52. 125 53. வாங்கிக்கொண்ட - அபகரித்த (போ. வ.ச. பக். 124)

54. "In 1785 with the termination of (the second Mysore) war...... the company demanded the payment of all war debt; or in lieu thereof to surrender his right of receiving tribute from Tanjore. Unable to raise any resources, the Nawab accepted the second alternative"- (Rajayyan, Page 81).

"The company acquired the right of the Nawab in Tanjore, namely that of receiving four lakhs of rupees as the annual tribute"- (Rajayyan, Page 82)

55. வறன சங்கரசாதி - வணிஸ்கரஜாதி (போ. வ. ச. பக். 124): கலப்புச்சாதி

56. அகாதமாக இருக்கப்பட்ட கிறுத்தியம் - கொடுஞ் செயல்கள்(போ. வ. ச. பக். 124)

சாயபு மமுதல்லிகான் கோட்டையை வாங்கினத்துக்கு முதல் வருஷம் பிரசவமாய் புத்திரனுடனே தெய்வகதியானாள். மைத்த ரெண்டு ஸ்ரீகளிலே றாசேசபாயி சாயபு மூத்தவள், ரெண்டாவது றாஜ குமாரபாயி சாயபு, இந்த ரெண்டு பேருக்கும் புத்திர சந்தான மில்லை. இனிமே லாகுமோ ஆகாதோ வென்று சந்தேகத்துக்கிடமானபடியினாலே, புத்திறார்த்தம் ரெண்டு பேர் ஸ்ரீகள், ஒருத்தி மாடிக்கறாவுடைய பெண் சுலட்சணாபாயி சாயபும், இங்களேவுடைய பொண்ணு மோகனாபாயி சாயபு, இப்படி ரெண்டு விவாகம் பண்ணிக்கொண்டதில், இந்த மொகனாபாயி சாயபு கெற்பத்தில் முதல் புத்திர சந்தானமாய் பத்து நாளைக்குள்ளே அந்தக் குழந்தை விழுந்து போச்சுது. அதின் பிற்பாடு மொஹனாபாயி சாயபு கெற்பத்தில் ஒரு பிள்ளை பிறந்துது. அதுக்கு அப்துல் பிரதாப றாஜா[57] என்று பேர் வைச்சு ஆறு வருஷம் வளர்ந்து வையிசூரியினாலே பரலோகத்தை யடைந்துது. இது தவிர றாஜாவுடைய ரெண்டாவது ஸ்ரீ உடைய கெற்பத்தில் பிறந்த பொண் காட்டிக்கே றாவுக்கு[58] கல்லியாணம் பண்ணிக் கொடுத்திருந்த சேதி முன்னமே எழுதியிருக்குது.[59] அந்தப் பொண்ணுடைய கெற்பத்தில் ஒரு பிள்ளை பிறந்துது. அதுக்கு மாருதசாமி என்று பேரும் வைத்தார்கள். அதின் பிற்பாடு ஒரு பொண்ணு பிறந்துது. அதுக்கு சாந்தம்மாள்[60] என்றுபேர். இந்த ரெண்டு பிள்ளைகளையும் வைத்துப்போட்டு அந்த றாஜாவுடைய பொண் அபரூபபாயி சாயபு தெய்வகெதியானாள். [61*]அந்த இரண்டு மகள் பிள்ளை மஹா றாஜா தாயைப் போலே[62] சவரக்ஷணை பண்ணிக் கொண்டு வந்தார். அந்த ரெண்டுபிள்ளையும்[63] தெய்வகதியாய்ப் போச்சுது.[64*] இப்படி தம்முடைய பொண் பிள்ளைகள் பேரன் பேத்தி இத்தனையும் தெய்வகதி யானபடியினால் துளஜா மஹா றாஜாவுக்கு சஹிக்கக் கூடாத விதனத்தினாலே மனவடிவாய்[65] அதிக வயிராக்கியத்தோடே அன்னந் தண்ணி முதல் சாப்பிடுகிரத்தை விட்டு காலத்தைத் தள்ளிக் கொண்டு வந்த படியினாலே சரிகரத்துலே[66] வெகு றோகமுண்டாய் அந்த றோகத்தோடே மூணு வருஷக்காலத்தை பினமுரிட்டார்.[67]

இப்படியிருக்கச்சே அயிதரல்லிகான், ஆற்க்காடு சென்னை பட்டணத்தின்

---

57. அப்தல் பிரதாப ராஜா - அப்துல் பிரதாபராம் (போ. வ.ச. பக். 125)

58. "காட்டிக்கேறுவுக்கு" என்றவிடத்தில் "எட்டுவயதில்" என்று போ. வ. ச. வில் (பக்.125) உள்ளது.

59. பக்கம் 114, 118 போ. வ. ச.

60. சாந்தம்மாள் - சாந்தா பாயி (போ. வ. ச. பக். 125)

61* முதல் 64* வரை டி 3762 இல் இல்லை

62. தாயைப்போலே - தாயாரிடமுள்ள அன்பினால் (போ. வ. ச. பக். 125)

63. இந்த இடத்தில் (போ. வ. ச. வில் பக். 125) "அப்துல் பிரதாப ராமராஜா தெய்வகதி அடைந்த வருஷத்திலேயே"- என்பது அதிகமாக உள்ளது.

65. மனவடிவாய் - மனமடியாயி (டி 3762)

66. சரிகரத்துலே - சரீரத்தில் (டி 3762)

67. பினமுரிட்டார் - கழித்தார் (போ. வ. ச. பக். 126): பின்னிட்டார் (டி 3762)

பேரிலே[68] சண்டைக்கு வந்தவன், தஞ்சாவூர் கோட்டைக்கும் மேல்வந்து சண்டை போட்டான்; சீர்மை யெல்லாம் சப்த்தி பண்ணினான்[69]. தஞ்சாவூர் றாச்சியத்திலே அப்போ ஒரு பெரிய பொல்லாத பஞ்சம்[70] வந்து தானியம் கொள்ளக்கிடையாமல் வெகு பிறசைகள் நித்தம் அறநூறு எழுநூறு இந்தப் படிக்கு செத்துப் போய்விட்டார்கள். அந்தச் சாமத்திலே மனுஷாள் மனுஷாளை கூட பட்சித்தார்கள். அத்தோடே அந்த க்ஷாமமும் கலாபமும் நிவாறணமாய் போச்சுது.

அப்பால் தம்முடைய சரீரம் இனிமேல் நிக்கமாட்டாதென்று நிச்சயமாய் தெரிந்த பிற்பாடு யோசனை பண்ணினது என்னவென்றால், தமக்குப் பிறந்த பிள்ளையும் பேரமாரும் நமக்கு முன்னுதாகத்தானே பரலோகத்தை அடைந்தார்கள். இப்பவும் நம்முடைய சரிகரம்[71] நிக்கமாட்டாது. நம்முடைய உத்திர கிறிகைக்கும் றாச்சிய பரிபாலனம் பண்ணுகிறத்துக்கும் யாரும் யோக்கியமாய் பாத்தியமானவன் இல்லாதபடியினாலே புத்திரன் வேணுமாகிலும் நம்முடைய தொகப்பனார் கேவலம் றாஜரிஷி பிறமாண[72] வந்தார் வெகுகீற்த்தி சம்பாதிச்சு எல்லா உறமுறை சனங்களையும் அவாளுடைய யோக்கியத்துக்குத் தக்கதாய் அவாளை அங்கீகாரம் பண்ணி அவாள் தாங்களாய் தானே வந்து சேருகிறாப் போலே பண்ணிக் கொண்டார். ஆகிலும் துக்கோஜி றாஜா கல்லியாணம் பண்ணாதவள் கெற்பத்திலே இவர் பிறந்தவர் என்கிற ஒரு கலங்கம் நிண்ணு போய் விட்டுது. இப்போது அப்படிக்கு யாதொரு சப்த்தத்துக்கும்[73] இடம் வராமல்படிக்கு யோசனை பண்ணி தம்முடைய சொந்த குலத்திலே சொந்த கோத்திரத்திலே தாயாதிகளுக்குள்ளே றூபமாயும் குணமாயும் யுக்தமாயிருக்கப் பட்ட பிள்ளையை யுக்தப்படிக்கு தத்துவாங்கி சாதகம் கற்மங்கள்[74] முதலானது

---

68. பட்டணத்தின் பேரிலே - முதலிய நாடுகளின் பேரில் (போ.வ.ச.பக்.126)

69. சண்டை போட்டான் சீர்மையெல்லாம் சப்த்திபண்ணினான் - சண்டையிட்டுத் தஞ்சாவூர் பிராந்தியம் முழுமையும் சூழ்ந்து கொண்டார் (போ. வ. ச. பக். 126)

"On the 20th July 1780 Haider Ali with a formidable army descended into the Carnatic Payenghat through the Chengamma Pass. Slowly extending his depredations, he crossed the Coleroon in May 1781 and entered the Tanjore Kingdom. He overran the entire country"- (Srinivasan, Page 307)

70. "Closely following this devastation, famine broke out in the Tanjore country...... Many thousands have died of want"- (Srinivasan, Page 308)

71. சரிகரம் - சரீரம் (டி3762) 72. பிறமாணம் - போல் (போ. வ. ச. பக். 126)

73. சப்தத்துக்கு - பேச்சுக்கு (பே. வ. ச. பக். 126)

74. சாதகம் கற்மங்கள் - ஜாசதகர்மம் முதலிய சடங்குகள்;

ஜாதகர்மம் - பிள்ளை பிறந்தவுடனே பிதா வடக்குத்திசையிற் சென்று ஸ்நாநம்பண்ணி, எள், நெல், பொன், வஸ்திரம், பசு, பூமி இவைகளில் இயன்றதான தருமங்கள் செய்து, சுபக்கிரக முதயமாகத் தன் பந்துக்களுடனே புத்திர தரிசனஞ் செய்து, பிள்ளை பிறந்த பதினொரு தினத்துக்குள்ளே, சுபவாரங்களிலே, அச்வினி, ரோகிணி, புநர்பூசம், பூசம், உத்திரம், அத்தம், அனுஷம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், இந்த நக்ஷத்திரங்களிலே இருத்தை*, அமாவாசை பூரணை ஒழிந்த திதிகளில், விருஷபம், மிதுனம், கர்க்காடகம், கன்னி, துலாம், தனு, மீனம் இவ்விராசிகளில் சுபகிரக முதயமாக ஜாதகருமஞ்செய்வது.

*இருத்தை - சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி என்னும் திதிகள்) - (அபிதான சிந்தாமணி பக். 615)

களை தண்டகப்படிக்கு பண்ணிவைச்சு சறபோஜி றாஜா என்று பேரும் வைத்தார்கள். இந்த சறபோஜி றாஜாவுடைய வமிசம் யெந்த வமிசத்தி லானவரென்று கொஞ்சம் தெரியும்படியாக பின்னால் எழுதி வருகுது.

அதென்னவென்றால் போசலே வமிசத்தில் முதல்[75] செம்புறாஜா முதல் பதிமூணாவது[76] புருஷன் பாவாஜி றாஜா அவருக்கு மாளோஜி றாஜா விட்டோஜி றாஜா என்று ரெண்டு பிள்ளைகள் பிறந்துது. மாளோஜி றாஜாவுக்கு சாஜி றாஜா பிறந்தார். சாஜி றாஜாவுக்கு சிவாஜி றாஜா பிறந்தார்; யேகோஜி றாஜா பிறந்தார். அவாளுடைய சவவிஸ்த்தாரம் எழுதி இரண்டாவது புத்திரன் விட்டோஜி றாஜாவுடைய கீர்த்தியும் கொஞ்சம் எழுதி, அந்த விட்டோஜி றாஜாவுடைய சந்ததியி லிப்போ சாதாரிலேயும் பாணாளாவிலேயும்[77] றாச்சியம் பண்ணுகிறவாளுடைய பூற்வோத்திரம் சவவிஸ்தாரமாய் மேலே எழுதியிருக்குதே, இப்போ துளஜா மஹா றாஜா தத்து வாங்கின சறபோஜி றாஜா அந்த விட்டோஜி றாஜாவுடைய வமிசத்தி லுண்டானவ ரானபடியினாலே அந்த விஸ்த்தாரம் கொஞ்சம் எழுதுகிறேன்.

விட்டோஜி றாஜாவுடைய பிள்ளைக ளெட்டுப் பேரிலே கடைசி பிள்ளை திறியம்பக றாஜாவுக்கு பிறந்த பிள்ளைகளிலே கெங்காஜி றாஜாவென்று ஒரு பிள்ளை; அந்த கெங்காஜி றாஜாவுக்கு பூவாஜி[78] றாஜா என்று ஒருத்தர்; தாபூஜி றாஜா என்று ஒருத்தர். இந்த ரெண்டு பிள்ளைகளில்[79] பூவாஜி றாஜா[80] வுடைய பிள்ளை கெங்காஜி ராஜா. கெங்காஜி ராஜாவுடைய பிள்ளை சுபான்ஜி றாஜா. சுபான்ஜி றாஜாவுடைய பிள்ளைகள் பூவாஜி[80] றாஜாவென்றும் சாஜி றாஜாவென்றும் ரெண்டு பிள்ளைகள். இந்த சாஜி றாஜாவுக்குப் பிறந்தவர் சறபோஜி றாஜா. அவரை துளஜா மஹா றாஜா உத்தம வமிசமானபடி யினாலே விகிதப்படிக்கு[81] சாஸ்த்திரப்படிக்கு தத்துவாங்கி ஆனையின்பேரிலே நவபத்து அடித்துக்கொண்டு[82] பயணமூச்சுடும்[83] சக்கரை வழங்கி யெல்லா உறமுறையார்களோடே சகலவிதமும் பண்ண வேண்டிய சடங்குகளை நிறைவேற்றி[84] அந்த வேளை

---

75. முதல் — ஆதிபுருஷரான (போ. வ.ச. பக். 127) 76. அட்டவணை I பார்க்க

77. பணாளாவிலேயும் - புனாவிலேயும் (டி3762)

78. பூவாஜி - உவாஜி (போ. வ. ச.பக். 127)

79. இங்கு, போ. வ. ச. வில் (பக். 127) "தாவோஜி ராஜாவின் சந்ததி விஷயமாய்ப் பிறகு வேண்டிய இடத்தில் விவரிக்கப்படும்" என்று ஒரு வாக்கியம் அதிகமாக உளது.

80. பூவாஜி - உவாஜி (போ. வ. ச. பக். 127)

81. விகிதப்படிக்கு - சரியானமுறையில் (போ. வ. ச. பக். 128)

82. நவபத்து அடித்துக்கொண்டு - சகல வாத்ய வைபவங்களுடன் (போ. வ. ச. பக். 128)

Noubet: Cermonial Music the right to use which was specially granted by the government- (Records of Fort St. George, Country Correspondence Military Dept., 1757, Madras 1913, Index, Page XIII)

83. பயணமூச்சுடும் — ஊரில் எல்லோருக்கும் (போ. வ. ச. பக். 128)

84. றமுறையார்களோடே சகல விதமும் பண்ணவேண்டிய சடங்குகளை நிறைவேற்றி — சுற்றத்தாருக்கும் விருந்து செய்வித்தார் - (போ. வ. ச. பக். 128)

யில் கும்பினியாருடைய சற்தார்கள் கோட்டையி லிருந்தவர்கள் றிசிடெண்டு சான் ஆட்டிலிஷ்டன்[85] சாயபு, பேமெஹிதா யிபசலி கற்ணல் இஷ்டுட் சாயபு,[86] பாதிரி மேஸ்த்தர் சுவாற்ட்சு[87] சாயபு, இந்த நாலு பேர் கையிலே யும் இந்த சறபோஜி றாஜாவை றாச்சியத்துக்கு சகசியமாய்[88] பாத்திய கற்த்த ராக இருந்தாலும் சாஸ்த்திர பிறகாரமாய் நாமும் தத்து வாங்கியிருக்கிறோம்; இவர் தாம் நம்முடைய றாட்சியத்துக்கும் பாக்கியத்துக்கும் வமிசத்துக்கும் அதிகாரி; இவரை உங்கள் கையிலே ஒப்பிவிக்கிறோம்; பிற்காலம் இந்த சற போஜி றாஜாவைக் கொண்டு தானே றாச்சிய தந்திரம் நடப்பிவிச்சு யெந்த விதத்திலேயும் இவரை அபிமானமாய் சவரஷணை பண்ண வேணுமென்று இந்த நாலு சற்தார் கையிலேயும் சறபோஜி றாஜாவை ஒப்பிவித்தார்.

உடனே நாலஞ்சு நாளையிலே வசந்த பஞ்சமியில்[89] உத்தம முகூர்த்தத் தில் பிறதாப றாம சாமி மாலிலே சதற்பண்ணி[90] சிம்மாசனம் போட்டு அந்த சிம்மாசனத்தின் பேரிலே சறபோஜி றாஜாவை உளுக்கார வைத்து சகல சாமா திகள் கிட்டவும்[91] றாஜாவுக்குப் பண்ண வேண்டிய மரியாதைகள் வந்தனாதி கள் எல்லாம் பண்ணி வைத்து தாம் நிச்சிந்தையாக இருந்தார். சென்ன பட்ட ணத்து கெவுனர்மென்றாருக்கும்[92] நடந்த பூறவத்திரமெல்லாம் சவவிஸ்த்தார

---

"He on the 22nd of January 1787 adopted as his son Prince Serfoji" (Rajayyan, Page 82)

85. சான் ஆட்டிலிஷ்டன் - ஜான் ஹாடலேப்ஸன் (போ. வ. ச. பக். 128) – Mr. Hudleston (Pearson Vol II Page 106)

86. பேமெஹிதா யிபசலி கற்ணல் இஷ்டுட் - சேனைத்தலைவர்களான கர்னல் இப்ஸ்லி, கம்மாண் டர் உஷ்டோட் (போ. வ. ச. பக். 128) பேமெஹிதா - பேமேஸ்த்தர் (டி 3762)
(Colonel Stuart, the commander of the garrison - (Pearson Vol. II, Page 106).

87. சுவாற்ட்சு – Schwartz 88. சகசியமாய் - சகஜமாய் (டி 3762)

89. வசந்த பஞ்சமி - காமனுக்குரியதாய் மாகமாதத்துச் சுக்கிலபக்ஷத்து வரும் பஞ்சமி திதி - (Tamil Lexicon M.U.)

90. சதற்பண்ணி - தர்பார் நடத்தி (போ. வ. ச. பக். 128)

91. சகல சாமாதிகள் கிட்டவும் - எல்லாச் சபையோர்களிடமிருந்தும் (போ. வ. ச. பக். 128); சாமாதிகள் - சாமயாசிகாள் (டி 3762)

92. கெவுனர்மென்றாருக்கும் - அரசாங்கத்தாருக்கும் (போ. வ. ச. பக். 129); கெவுனர்மெண் டாருக்கும் (டி 3762)

93. Letter dated January 26th 1787 to Sir Archibald Campbell, Governor of Madras as translated by the Mahratta interpreter:-

"It has been my wish for two or three years past to adopt a son; but as I have had no opportunity of carrying it into execution, it has hitherto been delayed. Having now resolved to choose one out of my near relations, I have fixed upon the son of Shahajee (the son of Soubajee rajah my near cousin by lineal descent) who is ten years old and proper in all respects. Accordingly on the 2nd of Rubbi Sanni (22nd January) in consequence of my wishes, I adopted and named him Serfojee rajah with all the forms of our religion: this has afforded great relief to my mind. As your excellency is my friend and favourer I have written a letter to give you this pleasing information. I am firmly convinced that whatever favour and protection I have received

மாய் எழுதி யனுப்பிவித்தார்.[93] இப்படி யானத்துக்கு துஷ்ட சாமாதிகாள்[94] சேர்ந்து யோசினைப் பண்ணின தென்னவென்றால் மஹாறாஜாவுக்கு நிரியாண காலம்[95] சமீபித்துது. மஹா றாஜா தம்முடைய வம்சத்துக்கும் றாச்சியத்துக்கும் உத்தமகுலத்திலே பிறந்த சறபோஜி றாஜாவை றாஜாவென்று இங்கிலீஸ் சற்தாற்கள் கையிலே ஒப்புவித்தபடியினாலே இதுக்குமேல் மஹா றாஜாவுக்கு நிரியாணமான உடனே இங்கிலீஸ்காறர் அபிமானத்தினாலே சறபோஜிறாஜா (வைப் பட்டத்திலே வைச்சு*) சகல விசாரணைக்கு தாங்கள் முன்னே நிற்பார்கள் (அப்போது நம்முடைய சீவனமெல்லாம்*) முழுகிப் போய்விடும் (னாம் என்ன பிரைத்தினம்பண்ணினாலும் நடக்கமாட்டாளென்று*) யோசினை பண்ணி வைப்பு சம்மந்தத்தில்[96] பிறந்த அமறசிங்கு ஒருத்த னிருக்கிறானே அவன் றாச்சிய பாரத்துக்கு அயோக்கியனா யிருந்தாலும்[97] வயதிலே யெவ்வறணமா[98] யிருக்கிறபடியினாலே சற்வ பிறெயெத்தினமும் பண்ணி பலக்கட்டி அவனை முன் நிறுத்தி தான் சகலமும் அனுபவிக்கலாமென்று மஹா றாஜா உயிரோட யிருக்கச்சே அமறங்க சிங்குவை றூபுறூபு[99] அழைக்கும்படியாய் பண்ணிவித்து ஆறம்பம் பண்ணிவைக்க வேணுமென்று நிச்சய யோசனை பண்ணி எல்லாரும் ஒருமனப்பட்டு, துளஜா மஹா றாஜாவுக்கு மனது றொம்பவும் ஒடுங்கிப் போயிருக்கிற சமையத்திலே[100] மஹா றாஜா அழைக்கிறாரென்று அமறசிங்குவை றூபுறுயாய் கொண்டு வந்து[101] விட்டு மஹா றாஜா பண்ணின தீர்ப்பு என்று ஒரு வசந்தை கல்பிவித்து[102] சென்னபட்டணத்து கெவுனர்மென்றாருக்கும்[103] மஹா றாஜா பேராலே ஒரு கடுதாசி எழுதி சிகாவும் பண்ணி[104] அந்த காகிதத்தை அனுப்பிவித்தார்கள். உடனே மறுநாள்

---

**from the honourable company, and from your excellency will hereafter be continued to my child Serfojee without deviation"- (Pearson, Vol. II, Pages 132-133)**

94. துஷ்ட சாமாதிகள் - துர்நடத்தையுள்ள சபையோர் சிலர் (போ. வ. ச. பக். 129)

95. நிரியாணகாலம் - முடிவுக்காலம் (போ. வ. ச. பக். 129)

96. வைப்பு சம்பந்தத்தில் - அரசருக்கு முறைப்படி விவாகமாகாத ஸ்திரிகளில் ஒருவர் வயிற்றில் - (போ. வ. ச. பக். 129)

* பிறைவளைவுகளுக்குள் இருப்பவை டி 3762 பார்த்து நிறைவு செய்யப்பட்டவையாகும்

97. றாச்சிய பாரத்துக்கு அயோக்கியனா யிருந்தாலும் - இராச்சியத்தை நடத்தும் பாத்தியம் சற்றுக்குறைவாக இருந்த போதிலும் (போ. வ. ச. பக். 129)

98. யெவ்வறணமாய் - யௌவனமாய்; பெரியவராய் (போ. வ. ச. பக். 129)

99. றூபுறூபு - ரூபுரூபு - ரூப்ரூப் - முன்னிலையில் – **face to face (Tamil Lexicon M.U.)**

100. மனது றொம்பவும் ஒடுங்கிப் போயிருக்கிற சமையத்திலே - மனது குன்றியிருந்தபோது (போ. வ. ச. பக். 129)

101. றூபுறுயாய் கொண்டு வந்து – கூப்பிட்டனுப்பி (போ. வ. ச. பக். 129) றூபுறுயாய் – றூபுறூபாயி (டி 3762)

102. கல்பிவித்து - பொரப்பிச்சு கல்பிச்சு (3762)

103. கெவுனர்மென்றாருக்கும் - கெவுனர்மென்டாருக்கும் (டி 3762)

104. இது பற்றிப் பியர்ஸன் கூறுவது பின்வருமாறு.-

**"The next morning the rajah who was rapidly sinking requested the attendance of the Resident Mr. Hudleston, Colonel Stuart the commander of**

சாலியவாகன சகம் ௲எளஅ[106] பறாபவ வருஷம் துளஜா மஹா றாஜா பரமபத மடைந்தார். அவர் உத்திரகிறிகை துஷ்சாமாதிகளுடைய பலத்தினாலே லவுகீகத்துக்கு[107] சறபோஜி றாஜாவை கிட்ட வைத்துக்கொண்டு அமறசிங்கு தான் முன்னின்று சாஸ்த்திர மரியாதை பார்க்காமல் நடப்பிவித்தான்.

அப்பால் சென்னபட்டணம் கெவுனர் சற் ஆற்சிபால் கேமல்[108] சாயபுக்கு இந்த துஷ்ட சாமாதிகள் தாங்கள் பண்ணின யோசினை சேகரமாகிறத்துக்கு[109] பலம் எப்படியோ அப்படி யோசினை பண்ணி லேடி கேமலைக் கொண்டு சற் ஆற்சிபால் கேமல் சாயபுக்கு போதினை பண்ணிவித்தார்கள். அப்படியே சற் ஆற்சிபால் கேமலும் இது காரியத்துக்கு பங்காளத்து கெவுனருக்கு எப்படி பறிகாரமாய் எழுத வேணுமோ அப்படிக்கு எழுதி உத்திரவும் அழைப்பிவித்துக் கொண்டு தாமும் தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தார்.

இதுக்கு முன்னேதானே துஷ்ட்ட சாமாதிகாள் தஞ்சா வூரிலே யிருக்கப் பட்ட இங்லீசு சற்தார்களை தங்கள் யோசனைக்கு அனுசரணையாக இருக்கும் படியாய் பண்ணிக்கொண்டு எந்த பேச்சுகளுக்கும் பின்வாங்காம லிருக்கும்படியாய் சொல்லி திட்டப்படுத்தி வைத்தார்கள். சற் ஆற்சிபால் கேமலும் தஞ்சாவூருக்கு வந்த பிற்பாடு சறபோஜி றாஜா அமறசிங்கு கிட்ட யிருக்கிறவாளைத் தவிர மத்தியஸ்தமா யிருக்கப்பட்டவாளை விசாரித்துத் தெரிந்துகொண்டோ மென்று யுக்த்தப்பிரகாரமாக காண்பிவித்து மத்தியஸ்தம் பனிரெண்டு பண்டிதரென்று எப்போதும் சாஸ்த்திர மறியாதவர்களா யிருககப்பட்டவர்களை கொண்டு

---

the garrison and Mr. Swartz...The dying prince then sent the following message to them. After stating that in compliance with the suggestion of Mr. Swartz, he has appointed Ameer Sing to be the guardian of the child and regent of the country, till he should be capable of succeeding to the throne"- Pearson, Vol. II, Page 136)

"In the course of the evening after the preceding conversation, the Raja's mother visited him and earnestly interceded in behalf of Ramaswamy, afterwards called Ameer Sing. This combined with the advice of Swartz determined Tuljajee to adopt the plan proposed. He accordingly sent for his brother delivered his adopted son into his hands, desired him to be his guardian and earnestly commended him to his care and affection"- (Pearson, Vol. II Page 135-136)

"But before his death he wanted to adopt some one to succeed him and for that purpose he chose Serfoji from a collateral branch and appointed his brother Amar Singh as regent till the boy came of age"- (Srinivasan, Page 313)

சிகாவும் பண்ணி - முத்திரையிட்டு (போ. வ. ச. பக். 129)

106. சகம் 1708; "On the 31st of January (1787), a few days after the settlement of succession issue, the old ruler departed the world"- (Rajayyan, P. 83)

107. லவுகீகத்துக்கு - பாவனைக்காக (போ. வ. ச. பக். 130)

108. சற் ஆற்சிபால் கேமல் - சிராஜ்வல் காமல் (போ. வ. ச. பக். 130)

109. சேகரமாகிறத்துக்கு - கைகூடுவதற்கு

வந்து விட்டார்கள். அவாளை சேர்த்துக்கொண்டு சாஸ்த்திர மாறக்த்தை ஒரு பக்கத்தில் வைச்சுப் போட்டு லவுகீக ஞாயமு தெரியாதவாளைக் கொண்டு தங்களுடைய மனதின்படியே அவாள் சாஷ்சி பிறப்படும்படியாக பண்ணி வைத்து ௰௨ செனத்து சாஷ்சி பலத்தினாலே இந்த றாச்சியத்துக்கு அமரசிங்கே பாத்தியமென்று சாலியவாகன சகம் ௲௭௱௯[110] பலவங்க வருஷம் அமறசிங்குக்கு தஞ்சாவூர் றாச்சியத்துக்கு பட்டம் கட்டி வைத்தார்கள்.

15 அமர்சிங்கு அதுக்குப் பிற்பாடு அமற்சிங்கு றாச்சிய பாரம் பண்ணுகிறத்தில் நிஜபாத்தியமா யிருக்கப்பட்ட சறபோஜி றாஜா ச ஹஜியமாய் பாத்தியமா யிருந்தாலும்[1] துளஜாமஹா றாஜா ஞாயப்பிறகார மாய் யுக்தப் பிறகாரமாய் தத்துவாங்கி கும்பினியார் கிட்ட ஒப்பிவித்தபடியினாலே சகலவிதத்திலேயும் பாத்தியமாயிரு்க்கப்பட்ட சறபோஜி றாஜாவுக்கு அமறசிங்கு மாச்சல்லியத்[2] தினாலே பண்ணிக் கொண்டு வந்த உபத்திரம் சகலமும் மேஸ்த்தர் சுவாற்ட்சு பாதிரி சாயபு அவர்கள் பூற்வமுதல் சோதித்துப்பார்த்து விசாரணை பண்ணவிடத்திலே சறபோஜி றாஜாவுடைய நிசத்துக்கு சுவாற்ட்சு பாதிரி சாயபு அவருடைய அன்பும் இடைவிடாத விசாரணையாக இருந்தபடியினாலே அவரிந்த சமாசாரமெல்லாம் கும்பினியாருக்குத் தெரியப்படுத்தினார். அப்போ மேஸ்தர் றாம் தஞ்சாவூர் றெசிடெண்டாக வந்தார்.[3] அந்த றெசிடெண்டு மேஸ்தர் றாமுக்கு முன்னாலே மேஸ்தர் சுவாற்ட்சு பாதிரி சாயபு கும்பினியாருக்கு அறியப் பண்ணிவித்த சேதி சீர்மைக்குப் போய் அங்கேயிருந்து கோற்ட்டு ஆப் டிறக்கட்டர்[4] உத்தாரப் படியே கெவுனர் மெண்டா[5] ரெழுதினது. சறபோஜி றாஜாவை அமற்சிங்குவுடைய உபத்திறவத்துக்கு ' நீங்கலாகப்பண்ணிவைத்து அவரை சவரக்ஷணை பண்ணச் சொல்லியும் றாஜாவுக்கு அலாயிதாய் அரண் மனையிலே இடமும் பண்ணி[6] வைத்துக் கொண்டு அதில் வைத்து சவரக்ஷிக்கிறத்துக்கு கும்பனி பாராவும்* வைத்து அப்பால் மேஸ்த்தர் சுவாறட்சுபாதிரி சாயபு அவர்கள் முகாந்திரத்தில் சிலதும் தஞ்சாவூர் பண்டிதாள் முகாந்திரத்தில் சிலதும் சறபோஜி றாஜாவுடைய பாத்தியத்தை அறிந்துகொண்டு தக்க காலத்தில் சறபோஜி றாஜாவுக்கு நடக்க வேண்டிய சிலவுக்கும் கும்பனியாருக்கு அறி

---

110. சகம் 1709: "Sir Archibald Campbell... en throned Amir Singh on the 7th of April 1787"- (Rajayyan, Page 85); பராபவ ஞு பங்குனிமீ 28௨ (3-227)

1. மேல் பக்கம் 140 காண்க.

2. மாச்சல்லியம் - பொறாமை (போ. வ. ச. பக். 131)

3. "Mr. Ram succeeded MacLeod as Resident of Tanjore (October 1789)" -(Pearson, Page 183)

4 Court of Directors 5. கெவுனர்மென்டு - Government

6. "The next morning he (Serfojee), for the first time, since his confinement, saw the sun;.........having noticed that the house was nearly cleaned out and Serfojee's furniture removed there...I (Resident) conducted him to it and placed a guard of 12 sepoys* over him. I have ordered a proper person, recommended by Mr. Swartz, a Mahratta Brahmin named Dada Row, to attend to his education"-(Pearson, Page 188; Oct. 1789)

யப்பண்ணிவிச்சார்கள். அப்போ கும்பனியார் யோசினை பண்ணி சறபோஜி றாஜாவுக்கும் அவருடைய தாய்மார்களுக்கும்[7] வித்திமானத்துக்குத் தக்கதாய் சிலவுக்குப் பண்ணிவைத்துக் கொடுத்தார்கள்.[8] அதுக்குப்பிற்பாடு சறபோஜி றாஜா விறுதா காலக்ஷேபம் பண்ணாமல் மேஸ்தர் சுவாற்ட்சு பாதிரி சாயபு கிட்ட இங்கிலீஸ் பேசுகிறத்துக்கும் எழுதுகிறத்துக்கும் அற்பியாசம் பண்ணார். அப்போ மேஸ்தர் சுவாற்ட்சு பாதிரியார் அவர்கள் அன்போடே அப்பியாசம் பண்ணி வைத்தார். அதினாலே யிங்கிலீசு அற்பியாசம் செம்மையாய் பண்ணினார். அப்படியே சுவசாதிவித்தை[9] மாறாஷ்டம் பாளபந்தும்[10] தமிழ்வித்தையும் அற்பியாசம் பண்ணினார்.

இப்படியிருக்குச்சே அமறசிங்கு பிரதிதினம் உபத்திறவம் பண்ணிக் கொண்டு வந்ததுகளை எல்லாத்தையும் மேஸ்தர் சுவாற்ட்சு பாதிரி சாயபுக்கு ஒவ்வொரு காரியத்தையும் தெரியப் பண்ணிக்கொண்டு[10அ] அவர் சொல்லும் உத்தமமான புத்திமதிகளை அனுசரித்துக் கொண்டு வந்தவிடத்தில் அவரும் இந்த கஸ்த்திகளை[11] கும்பினியாருக்கு தெரியப்பண்ணினத்தின் பேரிலே கும்பினியாரும் சறபோஜி றாஜாயுடையவசம் அவருடைய தாய்மார்கள் மனோ பாவமும் அறிந்துகொண்டு அதுக்குத் தக்கதாய் ([12]ருஜாவை சென்னப்பட்டணத்துக்கு வரச் சொல்லி உத்தாரம்) அனுப்புவித்தார்கள். அதுக்கு[12*] கொஞ்ச நாளைக்குமுன் சென்றுபோன தாயார் சுலக்ஷணாபாயி சாயபுடைய உத்தறக் கிறியாதிகளை நிறைவேத்திப்போட்டு[13*] மத்த ரெண்டு தாயாரோடே[14] மெஸ்த்

---

7. தாய்மார்களுக்கும் - குடும்பத்திற்கும் (போ. வ. ச. பக். 131)

8. "An establishment was formed amounting to one thousand and seventy seven star pagodas monthly for Serfojee and his relatives and one thousand star pagodas each to the three widows of the deceased rajah" (24th September, 1790) - (Pearson, Vol.II Page 212)

9. சுவசாதிவித்தை - சுய பாஷை (போ. வ. ச. பக். 132)

10. பாளபந்து - மகாராஷ்டிர பாஷைக்குரிய எழுத்துமுறை

10அ. "I will not again explain the various vexations which I have hitherto suffered from Ameer Singh MahaRaja, because you know them and having mentioned to government...That I still live, I owe to the kindness of Government...He continues to torment us......I entreat you to send this my letter to the honourable Board and to beseech them either to call me to Madras, which I heartily wish or put a guard of Europeans near the gate to protect me and my two mothers; or to give a room out of the fort, in your garden. I entreat you to lay my grief before the honourable Board. Now ,they can help me, and I trust that they will protect me"- (Letter of Serfojee to Swartz in 1792)-(Pearson, Vol. II, Pages 265-266)

11. கஸ்த்தி - கஷ்டம்; துக்கம் (Tamil Lexicon, M.U.)

12. பிறைவளைவுக்குள் இருப்பவை டி 3762 இல் காணப்படும்.

12* முதல் 13* வரையுள்ளவை போ. வ. ச. வில் இல்லை (பக். 132). "Sulatshana Baie Saheb behaved to me as a mother from my infancy. Upon her recent death, I wished to honour her by performing the funeral rites. But as the governor and Council determined that Ameer Sing should fulfil the duty. I was quiet.

தர் சுவாற்ட்சு பாதிரி சாயபும் றாஜா சவறட்சணாற்த்தம் சில இங்கிலீசு சற்தார்களும் கொஞ்சம் கால் தளத்தோடே கூட வந்தவர்களோடே சென்னப்பட்டணம் போயி சேர்ந்து கும்பினியாருடைய ஆசராவிலே யிருந்தார்கள்.[15] கூடவந்த மேஸ்த்தர் சுவாற்ட்சு பாதிரிசாயபும் அவடத்தில் கொஞ்ச நாளிருந்து வித்தியாப்பியாசம் பண்ணி வைத்துக்கொண்டு றாஜாவுடைய காரியங்களையும் ஒரு ஒழுங்கிப்படுத்தி தாம் தஞ்சாவூருக்கு வருகிற போது தம்முடைய ஸ்தானத்துக்கு மேஸ்த்தர் சேரிக்கு[16] சாயபு அவர்களை நேமித்துப்போட்டு தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தார். றாஜாவோடே கூட சுவாற்ட்சு பாதிரி சாயபிருந்தால் எத்தனை தயிரியமும் சந்தோஷமும் றாஜாவுக்கிருக்குமோ அப்படியே செரிக்கு பாதிரி சாயபு அவர்களிடத்திலும் இந்த தயிரியத்தையும் சந்தோஷத்தையும் யாதொரு காரியத்துக்கு விதனமில்லாமல் சேரிக்கு சாயபு அவாளுடைய பஷ்ச மென்கிற நிழலிலே சென்னபட்டணத்தில் வாசம் பண்ணிக் கொண்டு வந்தார்.[17] கும்பினியாரும் பஷ்சமாய் நடப்பிவித்துக் கொண்டார்கள். அந்த வேளையில் சறபோஜி றாஜா றாட்சியத்துக்கும் பாத்தியமா என்று விசாறணை செம்மையாய் பண்ண வேணுமென்று யோசனைபண்ண சமையத்திலே சறபோஜி றாஜா இந்த காரியத்துக்காக தஞ்சாவூர் பண்டிதாளை நிஷ்கரிஷை பண்ணியிருந்த பொஸ்த்தத்கதை[18] கும்பனியாருக்கு கொடுத்தார். அப்போ கும்பனியார் இது காரியத்தைத் தொட்டு அமறசிங்குவைக் கேட்டத்துக்கு அவன் அதுக்கு விரோதமாய் எழுதிக் கொடுத்தத்தையும் வாங்கிக் கொண்டு காசி முதலான இடங்களில் அனுப்பிவித்து விசாறணை பண்ணினார்கள்.[19] சறபோஜி றாஜா

---

As he insisted upon it he should have performed it, but instead of this, he sent a hired man and he himself went out of the fort as soon as the corpse was carried away which disrespect to my mother grieved me very much"– Letter of Serfojee- (Pearson, Page 265)

14. "மத்த ரெண்டு தாயாரோடே" என்றவிடத்தில். போ. வ. ச. வில் (பக். 132) 'அவருடைய தாயாரும்' என்றுளது.

15. "Orders were transmitted to Tanjore that Serfojee and the Baie Sahebs should be rescued from the vexatious interference of Ameer Sing......

On the 21st of Nov. this plan...was carried into effect... and on the 10th of January 1793, the whole party accompanied by their faithful friend and protector, safely reached the presidency"- (Paerson, Page 268)

Governor William Medows, the successor of Oakaley in the presidency of Madras removed prince Serfoji from the Rajah's palace and placed him under the care of Rev Swartz"- (Rajayyan, Page 90)

16. Gericke (-Pearson, Page 170); இவர் சென்னையிலிருந்தவர்

17. "They were accommodated in the Garden House of the Governor" -(Rajayyan, Page 103)

18. இந்த காரியத்துக்காக தஞ்சாவூர் பண்டிதர்களை நிஷ்கரிஷை பண்ணியிருந்த பொஸ்தகத்தை - அவ்விஷயமாய்த் தஞ்சாவூர்ப் பண்டிதர்கள் எந்த நூலிலிருந்து நிச்சயம் செய்தார்களோ அந்த நூலை (போ. வ. ச. பக். 132)

19. "(The Board) resolved to call on the most learned pundits in Bengal and Benares for answers to the substance of the questions put to the pundits

வையும் தஞ்சாவூருக்கு அமறசிங்கு உபத்திறவமில்லாமல்படிக்கு போயிருக்கச் சொல்லி உத்தாரம் பண்ணினார்கள். 20*றாஜாவும் அப்படியே அவடம் விட்டு சேரிக்கு சாயபுடனே கூட பிறப்பட்டு வரச்சே வழிகளிலே திருக்கழுக் குண்ணத்திலே[21] பஷ்சி தெரிசினம் பண்ணிக்கொண்டு தஞ்சாவூருக்கு வந்து சுகமாயிருந்தார்.21*

அப்போ முன்னாலே அமறசிங்குவுடைய பயத்தினாலேயும் ஆசை வாற்தையினாலேயும் சாஸ்த்திரம் தெரியாதவாள் பொய் சாக்ஷி எழுதிக் கொடுத்த பனிரெண்டு பேரில்[22] சென்னுபோனவர்கள் போக மைத்த பண்டிதாள் தாங்கள் பண்ணினது அன்னிதமென்று மேஸ்த்தர் சுவாற்ட்சு பாதிரிசாயபு[23] கிட்ட நிசத்தைச் சொல்லிப் போட்டார்கள்.[24] அதை அவர் கெவுனர்மென்டாருக்கு[25] எழுதிஅனுப்பிவித்தார்.

அப்போ மேஸ்த்தர் சுவாற்ட்சு பாதிரி சாயபு 26*தொகப்பனடவான அன்பும் பிறியமுமாய் சறபோஜி றாஜாவை சவரஷ்சணை பண்ணிக் கொண்டு வந்தத்திலும், இவருடைய யாதொரு காரியங்களையும் இளைப்பு ஆயாசமில்லாமல் கும்பனியாருக்கு எழுதிக்கொண்டும், சறபோஜி றாஜாவுக்கு என்னேரமும் இதம் அல்லது நன்மையும் கோறிக் கொண்டும், அதுக்கடுத்த புத்திமதி ஆலோசனைகளை சொல்லிக்கொண்டு வந்தவர்27* தெய்வகதியானார்.[28] அதினாலே சறபோஜி றாஜாவுக்கு சொல்லி முடியாத விதனமாய் தத்தளித்துக் கொண்டு இருக்கிற சமையத்திலே செரிக்கு பாதிரி[29] சாயபும் செனிக்கு[30] பாதிரி

---

at Tanjore, that those questions were translated by the late Sir William Jones into Sanskrit and transmitted to the pundits of Bengal and Benares whose answers had been duly received and translated for the use of the Board"- (Pearson, Page 328)

20* முதல் 21* வரையுள்ள வாக்கியத்துக்குப்பதில் போ. வ. ச. வில் "சரபோஜி ராஜாவும் அப்படியே இருந்தார்" என்று மட்டும் உளது.

21. திருக்கழுக்குண்ணம் - திருக்கழிகுண்டம் (டி 3762); திருக்கழுக்குன்றம்

22. பன்னிருவர் பெயர் கே. எம். வே. பக். 53 காண்க

23. "சரபோஜி ராஜாவிடமும்" என்று போ. வ. ச. வில் (பக். 132) அதிகமாகவுளது

24. பன்னிருவர் பெயரும் அவர்கள் சொன்னவையும் "தஞ்சை மராட்டிய மன்னர்கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்" என்ற (கே. எம். வே) நூலில் பக்கம் 43இல் காண்க.

25. கெவுனர்மென்டாருக்கு - கம்பெனியாருக்கு (போ. வ. ச. பக். 133)

26* முதல் 27* வரையுள்ளவை போ. வ. ச. வில் இல்லை

28. இறந்தது 13-2-1798இல்.

"A second letter from Mr. Gericke dated at Tanjore on the 13th of the same month (Feb. 1798) and written, as he observed, in great haste, informed the Society that it had pleased God to take from them their father and friend (Swartz) between four and five o' clock that evening"- (Pearson, Vol. II Page 352)

29. அடிக்குறிப்பு 16க்குரியதைக் காண்க.

30. செனிக்கு - Joenicke; "In the month of Oetober 1788, the Rev. Mr.

முதலானவர்கள்[31*] சென்னுபோன மேஸ்த்தர் சுவாற்சு சாயபுடைய பிறியத்தையும் அன்பையும் முதலான உத்தம குணங்கள் யெல்லாத்தையும் பின்பத்தி யிருந்தபடியினாலே சறபோஜி றாஜாவுக்கு யிருந்த விசனம் சூரியனைக் கண்ட பனிப்போலே சின்னாபின்னமாய் போய் சந்தோஷத் துக்கு ஹேதுவாய்க் கொண்டு வருகிற சமையத்தில்,[32*] செனிக்கு சாயபுக்கு மிகவும் பிறியமான சினேகிதர் மேஸ்தர் டூரியன்[33] சாயபு தாஞ்சாவூ ரிசிடென்டாக குறிக்கப்பட்டு வந்தவருக்கு,[34*] சறபோஜி றாஜாவுடைய வற்தமானங்களை யெல்லாம் சவவிஸ்தாரமாகத் தெரியப்பண்ணி, ஒவ் வொரு காரியத்திலும் றாஜாவுக்கு மஹா அனுகூலமாக இருந்து கொண்டு வந்த மேஸ்தர் செரிக்கு சாயபு செனிக்கு பாதிரி சாயபு முதலானவர்களுடை யவும், விசேஷமாக சென்னுபோன மேஸ்தற் சுவாற்சு பாதிரி சாயபுடைய எழுதிமுடியாத உபகீரங்களையும், சறபோஜி றாஜா என்னேரமும் அவர் ஆயிசுள்ள வரைக்கும் அவருடைய பரம்பரையாய் நினைவு கூறவும் பிறதான நினைவு கூறுதலாக யிருக்குது.[35*]

மேஸ்த்தர் டூரியன் சாயபு றிசிடெண்டு உத்தியோகத்துக்கு வந்தவர் மகா உபகாரமுள்ளவரும் ஞாயமும் நீதியுள்ள நடத்தையும் பாற்கும்போது றாஜா வுக்கு னாளுக்கு னாள் சந்தோஷத்தின் பேரில் சந்தோஷமாகிறத்துக்கு காறண மாச்சுது. கும்புனியார் பண்ணின விசாறணையில் யெந்த விதத்திலும் சறபோஜி றாஜாவுடைய பாத்தியமே பலவந்தமென்று அறிந்துகொண்டு தஞ்சாவூர் ரிசி டெண்டு மேஸ்தர் டூரியன் சாயபுக்கு உத்தாரம் பண்ணி அவர் முகாந்திரமாய் இப்போ அமறசிங்கு பாத்தியமில்லாம லிருக்கப் பட்டவன் பதினொரு வருஷம் சில னாளும் இராட்சியம் பண்ணினத்தில் குடிகளுக்குஞ் சவுக்கிய மில்லை. சீமையிலேயும் செம்மையான மாற்கமாய் பணமும் தண்டல் பண்ணாமல் தண் டலான பணம் அரண்மனைக்குச் சேராமல் சம்பளக்காறருக்கு சம்பளமும் செல் லாமல் கும்பினி யாருக்குச் செலுத்த வேண்டிய நேமகம் பண்ணின பணமும்[36] செல்லாமல் கடன் மட்டும்[37] சிறுது கடன் இல்லாமலிருக்கச்சேயும் பொய்ச்சீட்டுக ளுண்டுபண்ணி இப்படிக்கெல்லாம் விவஸ்த்தை யில்லாமல் பண்ணிக்கொண்டு

---

Joenicke, who had been recommended to the Society for promoting Christian knowledge by Professor Schultz of Halle as well qualified for the important office of a missionary, arrived at Tanjore" - (Pearson, Page 162)

31* முதல் 32* வரையிலுள்ள செய்திக்குப் பதில் "அவர் சரபோஜி ராஜாவின் நடத்தையைக் கவனித்து வந்ததினால் அவருக்கு அவரிடத்தில் அதிகப் பிரியமுண்டாயிற்று" என்ற வாக்கியம் காணப் படுகிறது (போ. வ. ச. பக். 133).

33. டூரியன்- Torin

34* முதல் 35* வரையுள்ளவற்றுக்குப் பதிலாகப் (போ. வ. ச. வில் (பக். 133) "அவரும் அரசரு டைய ஒழுங்கான நடவடிக்கைகளைக் கவனித்து வந்ததினால் அரசரின் விசனத்திற்கு ஒருவாறு ஆறுதல் ஏற்பட்டது" என்றுள்ளது.

36. (The Tanjore Treaty of 1793) "The sixth article clarified that the Rajah was to pay annually a total of 4,60,000 star pagodas, 3,50, 000 as his share of military expenses, 60,000 on account of private debts, and 50, 000 to clear arrears of tribute, all in nine instalments"- (Rajayyan, Page 95)

37. "The nature of the administration forced the king to raise loans at

வந்த அமறசிங்குவை தள்ளிப்போட்டு, எந்தவிதத்திலேயும் பாத்தியமா யிருக்கப் பட்ட சறபோஜி றாஜாவுக்கு சாலியவாகன சகம் ௲௭௱௨௰[38] காலயுக்தி வருஷம் ஆனி மீ' தஞ்சாவூர் சிம்மாசனத்துக்குடையுவராயி பட்டம கட்டினார் கள்.[39] உடனே இந்த காரியத்தைத் தொட்டு விசாரணை பண்ணின தீர்ப்பு களின் தாத்பரியங்களை பயங்கரமாய் தெரியப்பண்ணினபடியினாலே சகல செனங்களுக்கும் கும்பனியாருடைய நீதியும் ஞாயவிசாறணையும் பிறக்கியாதி யாக யிருக்கப்பட்டது வெகுதிட்டமாய் தெரிய வந்துது.

**16**
**சரபோஜி IV** * அப்பால் சறபோஜி மஹா றாஜா தம்முடைய சொந்த றாச்சியத்துக்கு அதிபதியான பிற்பாடு இதுக்கு முன்னாலே அமறசிங்குவுடைய நாளையிலே நடந்த அன்னிதமாற்கம்[1] மெல்லாம் தள்ளிப்போட்டு விஹிதமாற்க[2]மாய் தம்முடைய சனங்களுக்கும் யுக்த்தமான சவுக்கியங் கொடுத்துத் தம்முடைய தஸ்த்திரத்து கணக்கு[3] வழக்குகளுக்கும் ஒரு பத்ததிபண்ணி அரமனையெல்லாம் கீலமாய் போயிருந் ததுகளையெல்லாம் பழுதுபார்த்து சிறுது மால்கள்[4] நூதினமாயுங் கட்டி வைத்து ஞாயப்படிக்கு றாச்சியபாரம் பண்ணிக் கொண்டிருக்கிற நாளை யிலே கும்பினியார் டிப்பு சூல்தான் பேரிலே றாசகாரியம் பண்ணபோது[5]

---

exhorbitant rates of interest......The country was given to the management of five or six rapacious agents of the king who demanded high rates from the people and appropriated the entire revenue for themselves. As a result of this the treasury always remained empty and Amar Singh was not able to fulfill his obligations to the company"- (Srinivasan, Page 320)

38. சகம் 1720

39. "The intelligence of this important event reached India in the month of June 1798 when Ameer Sing was formally deposed and the young prince was raised to the throne"- (Pearson, Page 379)

"செக்கம் ௲௭௱௨௰ க்கு செல்லாநிண்ட தமிழ் காளயுத்தி வருஷம் ஆனிமீ' ௰௭௨ வியாழக் கிழமைக்கு சரியான கிரிஸ்து ௲௭௱௯௰௮ வருஷம் சூன்மாதம் ௨௰௧ தேதியில் ௨௰௧ தலைமுறைவரையில் யேக செக்கிருதிபத்தியமடைந்து வந்த அமர்சிம்மேந்திர பூபாலருடைய இறாஜ பதவியை நீக்கினர்-" (திருமுடி சேதுராமன் சுவடி, பக்கம் 447)

"1798 கி.பி. மொஹரம் 15க்குப் பட்டாபிஷேகம்" (3-223); இது 29-6-1798.

1. அன்னித மாற்கம் - அக்கிரமங்கள் (போ. வ. ச. பக். 134)

2. விஹித மாற்கம் - ஒழுங்கான முறை (ஷை)

3. தஸ்த்திரத்துக் கணக்கு - அரசாங்கக் கணக்கு (ஷை) தஸ்திரம் - தஸ்தரம் - Bundle of documents and papers tied in a cloth record, register, account; the whole body of papers pertaining to an office (Tamil Lexicon-M.U.)

4. மால்கள் - மஹால்கள்; இவை பன்னிரண்டெனப்பெறும் (கே. எம். வே. பக்கம் 453)

5. "The renewal of the war with Tippoo excited considerable alarm at Tanjore and some apprehensions were entertained of an attack from the Mahommedan troops. This danger was however happily averted by the English army under Lord Cornawallis entering Mysore"- (Pearson, Page 234)

*குறிப்பு: ஏகோஜியின் இரண்டாவது மகன் சரபோஜியை மூன்றுவது சரபோஜி என்று போ. வ. ச. பக்கம் 80இல் (இந்நூலில் பக்கம்87) கூறியுள்ளதால் துளஜாவின் சுவீகார மகனுகிய சரபோஜியை சரபோஜிIV என்று இங்குக்குறிப்பிடலாயிற்று.

மஹா றாஜா அவர்களுக்கு றஸத்து முதலானதுகள் வேணுமென்று அறியப் பண்ணிவிச்சவிடத்திலே மஹாறாஜா அவர்களும் தம்முடைய சக்த்திக்கு அதிகமாய் ஆடுகள் மாடுகள் தமக்கு இருக்கிற குதிரைகளில் தம்முடைய பிருது சவவாரி முதலான குதிரைகளில் கூட குடுத்து ஆனையும் யிது முதலானதுகள் கும்பினியார் கோறின இடத்திலே கொண்டு போய் செலுத்திப்போடச் சொல்லி உத்தாரம் பண்ணார்.

மஹா. றாஜா அவர்கள் அப்போ தம்முடைய சமான குலத்திலே காட்டிகே றாவுடைய பொண் யெமுனாபாயி சாயபு அஹில்லியா பாயி சாயபு இந்த ரெண்டு பேரையும் கல்லியாணம் பண்ணிக் கொண்டார்.

அப்பால் மூன்னாலே அமறசிங்கு றாச்சியபாறம் பண்ணின கடைசி நாளையிலே கும்பனியார் நிஷ்பத்தி[6] ரெசிடெண்டு மேஸ்தர் மக்ளவுட்டு[7] சாயபு மஹா றாஜாவுக்கு பட்டமாகாதத்துக்கு முன்னே மஹா றாஜாவுக்கு நிஷ்கரிஷை பண்ணியிருந்த பணம் செலுத்தினதில் வித்தியாசமாக இருக்குதென்று கும்பினி யாருக்கு அறியப்பண்ணின உடனே மஹா றாஜாவுக்கு செல்ல வேண்டிய பணத்தை செலுத்திப் போட்டார்கள். அதுக்கு அந்த மக்களோட்டு சாயபு மஹா றாஜா அறியப் பண்ணிவித்த வாற்தை நிஜத்துக்கு வரமாட்டாதென்று பிரதி உத்திரவு எழுதிக் கொடுத்ததை றிசிடெண்டு மேஸ்த்தர் டூரியான் சாயபு மஹா ராஜா சாயபுக்த சொன்னத்தும்பேரிலே மஹா றாஜா தம்முடைய நிச சமாசாரத்தை கும்பினியாருக்கு வியக்த்தமாய் தெரியும்படிக்கு யுக்த்த மாயிருக் கப்பட்ட சாஷ்சி அத்தாட்சிகள் ரெசிடெண்டு மேஸ்த்தர் டூரியான் சாயபுக்கு ௲அ௱ வருஷம் மேமீ ௨௰௭௨.[8] எழுதின கடுதாசி குடுத்தத்தை மேஸ்தர் டூரியான் சாயபு சாஷ்சி சம்பந்தம் நடந்த அனுபோகமெல்லாம் விசாரித்துக்கொண்டு மஹா றாஜாவுடைய நிசமும் நல்ல நடத்தைகளையும் கும்பினியாருக்கு செம்மை யாய்தெரியப்பண்ணிவித்தத்தின்பேரிலே கும்பினியார் அதைப் பார்த்துக்கொண்டு மஹா றாஜாவுடைய காரியக்காறரை சென்னப்பட்டணத்துக்கு அனுப்பிவிக்கச் சொல்லியனுப்பிவித்தார்கள். அப்போ மஹா றாஜா தத்தாஜி அப்பாவையும் இதில் அனுபோகமா யிருக்கப்பட்ட ரெண்டொரு காரியஸ்தர்களையும் அனுப்பிவித்தார்கள். இவர்களுக்கு மரியாதையாக அழைப்பிவித்து விசாரணை பண்ணினவிடத்தில் மஹா றாஜாவுடைய நிசம் செம்மை தெரிந்து கும்பினியார் தங்களுடைய சொந்த சாதிமானம்[8அ] வைக்காமலும் பட்சபாதமில்லாமலும் ஞாயத்திலே நிண்ணு விசாறணை பண்ணினது எல்லாரும் சிலாகித தக் கினையான யோக்கியமாயும் கீற்தியுமா யிருந்துது.[9] இந்த மக்களவுட்டு

---

6. நிஷ்பத்தி - உதவி; உண்மை (Tamil Lexicon, M.U.) 7. மக்ளவுட்டு - Macleod
8. 27-5-1800 8.அ. சாதிமானம் - சாதிஅபிமானம்
9. மாக்லோடு தொடர்பாகத் தீர்ப்பு வழங்கின அந்நாளைய கவர்னர் கிளைவ் அவர்கள் 7-4-1801இல் சரபோஜிக்கு எழுதிய கடிதம் பின்வருமாறு:-

(No. 30) TO HIS EXCELLENCY THE RAJAH OF TANJOUR

Para 1. I am concerned that the difficulty of investigating the points at issue between your Excellency and Mr. Macleod should have been so much

சாயபுடைய அனனீதமான காரியத்துக்கும் அவர் யெத்தாய் உண்டுபண்ணின வகைக்கும்[10] சறபோஜி மஹா றாஜா கும்புனியாருடைய ஞாயத்தினாலேயும்

---

increased by the necessity of referring to transactions of a remote period, as to have protracted my decision untill this time but the importance due to the representation made by a person of your Excellency's exalted rank on a subject involving the honor and fame of a gentleman holding a high confidential trust under this government rendered it indispensible to the purposes of respect to your Excellency, of public justice, and of the delicacy and humanity due to the situation of an individual that my enquiries into the subject should be conducted with great caution, and that my determination of the question should be founded on the most clear and satisfactory evidence.

2. I am now happy in aquainting your Excellency that the measures taken by me for this purpose have enabled me to pass a decided judgement on the conduct of Mr. Macleod, the late Resident at Tanjour. It is not necessary to trouble your Excellency with the particular points, into the consideration of which I have been led in the pursuit of the truth, but it will be satisfactory to your Excellency's mind to know that I have found the representation transmitted by your Excellency and the Queens of the late Maharaz Tulzagee to Lord Hobart to be strictly correct, that Mr. Macleod having received from Amer Sing the stipends destined for the maintenance of the late Rajah's family withheld the money from that purpose to the great distress of your Excellency's family and to the disparagement of the Character of the Rajah Amer Sing, and finally that Mr. Macleod having by these means betrayed the trust reposed him by this Government has aggravated that offence (Sic) by producing false accounts to calumniate your Excellency.

3. In the grounds of these facts I have considered it to be my indispensible duty to punish Mr. Macleod in the most exemplary manner by removing him from the Company's Service, and I think it necessary to communicate my resolution on this subject to your Excellency, in order to manifest to your Excellency and to the World, the principles on which it is the earnest wish and intention of the British government in India to administer justice and to afford protection to the friends, allies, or dependents of the Company.

4. Having availed myself of the information which I expected to derive from your Excellency's Minister Dettagee, I have permitted him to return to Tanjour; and recommend to your particular notice his fidelity and attachment to your Excellency's interests. Your Minister will communicate to your Excellency all futher particulars.

5. Having been informed by the late Resident Mr. Torin that your Excellency was desirous of restoring the accoutrements and arms of your Body Guard, I have delivered to Dettagee fifty pairs of pistols, and fifty hussar Swords, of which I request your Excellency's Acceptance.

Fort St. George, What can I say more?
7th April 180 . (Signed) CLIVE

(Records of Fort St. George, Country Correspondence, Political Department, 1801, Madras, 1909, Page 39-40)

10. மேல் 9இல் "Producing false accounts" என்பதைக் குறிக்கும்.

தம்முடைய நிஜத்துவ மென்கிற ஆயுதத்தினாலேயும் அந்த வலையைச் சேதிச் சுப்போட்டு அந்த வலைக்கு நீங்கலாய் அவருடைய கீற்தியும் மேன்மையும் முன்னிருந்ததைப்பார்க்க அதிகமாக சென்னப்பட்டணம் முதல் சீமை வரைக்கு மிருக்கிற இங்கிலீசு சற்தார்கள் சறபோஜி மஹா ருஜாவுடைய நிசத்துவக்கு சந்தேகமில்லை என்று எண்ணிக்கையாக எண்ணப்பட்ட முகாந்திரத்துக்கு மேஸ்த்தர் டூரியன் சாயபு மேஸ்தர் செரிக்கு சாயபு மேஸ்தர் சுவாற்சு சாயபுடைய கையெழுத்துக் கடுதாசிகளே யேதுவாக யிருந்துது.[11] இந்த மக்கள வுட்டு சாயபுக்கு சங்கட்ட பிறாப்த்தியான[11அ] சமையத்திலே மக்களவுட்டும் அவன் பெண்சாதியும் தங்களுடைய கஸ்த்தியை மஹா ருஜாவுக்குத் தெரிய பண்ணி பிறார்த்தினை பண்ணினபோது மஹா ருஜா முன்னாலே தம்முடைய ருட்சிய சுவதந்திரம் சீறிது மக்களவுட்டுக்கு அறியப்பண்ணிவித்த உபகாரத் துக்காகவும் தம்முடைய மேன்மைக்காகவும் மேஸ்தரிசு[12] மக்களவுட்டு பிறார்த் தனையைத் தொட்டும் இப்போ மக்களவுட்டு பண்ணின அபகாரத்தை கூட நினையாமல்படிக்கு அவாளுக்கு பதினாயிரம் றூபாயிக்கு அதிகமாய் கொடுத் தார்.

இதுக்கு முன்னே மஹா றாஜா அவர்கள் கல்லியாணம் பண்ணியிருந்த ரெண்டாவது அஹில்லியா பாயி சாயபு கெற்பத்திலே கன்னியா றெத்தினம்[13] செனனமாச்சுது. அதுக்கு சுலட்சணாபாயி சாயபு என்று பேர் வைத்தார்கள்.

அப்பால் கும்பினியார் முன்னாலே அமறசிங்கு பண்ணின ருட்சிய பாரத்தில் தஞ்சாவூர் தேசத்தில் அன்னியாயம் நடந்திருந்தபடியினாலே[14] செம்மையான மாற்கமாய் ஞாயம் பண்ணுகிறோமென்று மஹா றாஜாவுக்குத்

---

11. இங்குக் கூறப்பட்டதன் சுருக்கம் பின்வருமாறு: மக்லோட் சரியாக நடந்து கொள்ளவில்லை. இதுபற்றி 27-5-1800இல் டூரியன்துரை வழி கம்பெனியார்க்கு சரபோஜி எழுதினார். கம்பெனியார் ஆணையின்படி மகாராஜா தத்தாஜி அப்பாவையும் மேலும் இரண்டொரு வரையும் அனுப்பினார். விசாரணை நடந்தது. கம்பெனியார் சாதிப்பற்று இன்றி மக்லோட் பேரில் குற்றம் உண்மையை வெளிப்படுத்தினார்கள். உண்மையை அறியப் பயன்பட்டவை டூரியன், செரிக்கு, ஸ்வார்ஷு ஆகியோர்களுடைய எழுத்துச் சான்றுகளேயாகும்.

11அ. சங்கட்ட பிராப்தி - துன்பம் அடைந்தமை; மக்லோட் வேலை நீக்கம் செய்யப்பட்டமை

12. மேஸ்தரிசு - Mistress (Mrs.)

13. கன்னியா ரெத்தினம் - பெண் குழந்தை (போ. வ. ச. பக். 135)

14. தஞ்சாவூர் தேசத்தில் அன்னியாயம் நடந்திருந்தபடியினாலே - தஞ்சை ராஜ்யம் நன்றாய்ப்பரி பாலிக்கப்படாத காரணத்தினாலே (போ. வ. ச. பக். 135). எனினும் இதுபற்றிப் பின் வரு வனற்றை ஒப்புநோக்குக:-

"A liberal prince, no doubt, he worked for the welfare his people. Anxious to promote cultivation, **he granted an increase of the ryot's share of the produce***, suspended the collection of duties on grain exported for the relief of the famine stricken Ramnad in 1794, set up a court and introduced individual settlement in the place of the village settlement"- (Rajayyan, Page 106)

* சிவராயரைப்பார்த்துத் தஞ்சாவூர் சம்ஸ்தானத்தில் ஏற்பாடாயிருக்கிற குடிவாரம் எவ்வளவு என்று கேட்க, "அநேக நாளாய்க் குடிமக்கள் 100க்கு 30 வாரம் பெறுகின்றனர்" என்று பதில்

தெரியப்பண்ணினார்கள். அப்படிக்கு ஞாயம் பண்ணுகிற காரியத்தை மஹா ருஜா அங்கீகாரம் பண்ணி தம்முடைய தேசத்தை கும்பினியார் கிட்ட ஒப்பு வித்தார்.[15] கும்பினியார் மஹா ருஜாவுடைய கோட்டையிலே இருந்த டாணை யத்தை யெடுத்துப்போட்டு கோட்டையை மோக்களா பண்ணிக் கொடுத் தார்கள்[16].

அப்போ கும்புனியாருக்கும் மஹா ருஜாவுக்கும் ஒரு திரீட்டி[17] அல்லது உடன்படிக்கை பண்ணினத்தில் மேஸ்த்தர் டூரியன் சாயபு சஹாயமாய் இருந்து மஹா ருஜாவுக்கு யுக்த பிறகாரமாய் சிறுது காரியங்களை சுலபம் பண்ணிக் கொடுத்தார்.

அதின் பிழ்பாடு கும்பினியாருக்கு மருதப்ப சேர்வைக்காற பாளையக் காறன் பேரிலே றாஜகாரியம் பண்ணுகிறத்துக்கு அவசறமான வேளையிலே[18*] மஹா ருஜாவுக்கு தெரியப்பண்ணின னாழிகைக்கு மஹா ருஜாவுக்கு தம்மு டைய தேசத்தை ஒப்புக்கொடுத்த பிற்பாடும்[19*] தம்முடைய சவரக்ஷணை நிமித் தியமிருந்த கொஞ்சம் சேனைகளிலேயும் சிவப்பா என்கிற சற்தார் பின் னோடே துறுப்பு சவ்வார் அன்பது மொகலாய சவ்வார் இருபது கால் துறுப்பு சிபாய்கள்[20*] எப்போதும் தம்முடைய சவாரி முன்பாக

---

சொல்ல, அமர்சிங்கு நூற்றுக்கு 40 விதம் குடிகள் பெறுக என்று உத்தாரவிட்டதாகத் திருமுடி சேது ராமன் சுவடியிலுள்ளது (பக். 433-434).

15. "In the elevation of Serfoji to the throne, the Madras Council poised the hope of taking quick possession of Tanjore......The Bengal Council instructed Fort St. George to proceed with the assumption of administration, if Serfoji himself conveyed such a device...It was indeed no difficult a task for the Madras Council to extract a desire from the young ruler. Within a few days Serfoji confessed that he had no experience in the transaction of public business and requested Fort St. George to take over the administration of his state for not more than two years"-(Rajayyan, Page 107)

16. டாணையம் - சேனை; மோக்களா - காலி செய்தல்

"It was also decided with a view to the accommodation and satisfaction of His Excellency, that the said fort of Tanjore shall be evacuated by the company's troops entirely and that His Excellency shall be at full liberty to garrison the said fort in such a manner as to him shall seem fit"-(Aitchison, Vol. V Page, 289)

17. திரீட்டி - Treaty (25th October 1799)

"The Seventh article (of the treaty) stipulated that the Rajah would receive from the company every year one lakh of star pagodas and a proportion of one fifth of what remained of the net revenue after deducting all charges of collection and the amount alloted for the support of Amir Singh. The eighth article appropriated 25,000 star pagodas annually for the support of Amir Singh - (Aitchison, Vol. V Page 289)

18* முதல் 19* வரையுள்ளவை போ. வ. ச. வில் இல்லை (பக். 136)

20* முதல் 22* வரை உள்ளவற்றுக்குப் போ. வ. ச. வில் "மற்றும் அநேக படைகளையும்" என்றுள்ளது. சிபாய்கள் - Persian Siphai, soldiery, a native soldier disciplined and dressed

கலேப்பு[21] போட்டது பாக்கி வைத்துக் கொண்டு போறசிபாய்கள் இப்படிக்கொத் தவர்கள் எல்லாம் இருனூறு பேர்[22] இதுகளுக்கெல்லாம் சிலவுக்குத் தாமே குடுத்து ரிசிடெண்டு மேஸ்த்தர் பிளாக்குபிறன்[23] சாயபு பின்னாலே அனுப்பிவித் தார். இது ஶ்ரீஅளக[24] வருஷம் சூன்மீ" 7௳.

முன்னாலே மஹா ருஜா தமக்குக் கல்லியாணம் பண்ணிக் கொள்ளா தத்துக்கு முன்னே[25*] ஒரு ஸ்ரீ ரூபசாலி குணசாலி யோக்கியமுள்ளது யெவ்வற ணம் இப்படிக்கொத்த ஸ்ரீயை[26*] வைத்துக் கொண்டிருந்தார். அவாளும் மஹா றாஜாவுடைய சித்தானுசார[27] மாய் நடந்து கொண்டு வந்தார்கள். அப்படிக் கொத்த ஸ்ரீக்கு ரெண்டு பிறசவமாய் ரெண்டு பிறசையும் நஷ்டமாய்[28] போய் விட்டுது. ரெண்டாம் பிறசவத்தில் அந்த ஸ்ரீயும் நஷ்டமாய்ப் போனபடியி னாலே அந்த ஸ்ரீயுடைய குணாதிசெயத்தினாலே மஹா றாஜாவுக்கு அதே ஒரு விசனத்துக்கிடமாச்சுது. ஆகிலுமந்த ஸ்ரீ நிரியாண சமையத்தில்[29] தன் பேராலே ஒரு நல்ல தற்மம் அன்னசத்திரம் ஆக வேணுமென்று கோறினாள். அதை அங்கீகாரம் பண்ணி உத்தம உபையுக்த்தமான[30] சேதுமாற்கத்திலே சத்திரம் அக்கிரகாரம் தேவாலையம் ஸ்ரீங்காரவனம்[31] குளமித்தனையுமாகத் தக்கனேயா யாறம்பித்து அந்த ஸத்திரத்துக்கு முக்த்தம்மாள் சத்திரம் மென்று பேரும் வைத்து வேலையும் நடந்து கொண்டு வருகுது.[32] இதுகளெல்லாம் அந்த ஸ்ரீயு டைய ஸ்மறனை யென்னேரமும் பண்ணுகிறதுக் கேதுவாயிருக்குது.[33]

---

in European style (Records of Fort St. George, Country Correspondence, Military Department 1757, Madras, 1913 Index Page XVI)

21. கலேப்பு - Gallop (?)

23. Captain William Black burne (Letter of Clive to the Rajah of Tanjore dated 5-4-1801 and the acknowledgement of the Rajah dated 11-4-1801 - Records of Fort St. George, Country Correspondence, Political Dept. 1801, Page 39-40)

24. கி.பி. 1801

25* முதல் 26*வரையுள்ளவற்றுக்குப் போ. வ. ச. வில் "எல்லா குணங்களும் பொருந்திய" என்றுள்ளது (பக்.136)

27. சித்தானுசாரம் – மனதுப்படிக்கு (போ. வ. ச. பக். 136)

28. நஷ்டமாய்-இறந்து (ஷை) 29. நிரியாணசமயத்தில் - இறக்கும் தறுவாயில் (ஷை)

30. உபையுக்த்தமான – உபயோகமுள்ளதுமான (ஷை) 31. ஸ்ரீங்காரவனம்–சிங்காரவனம்

32 வேலையும் நடந்துகொண்டு வருகுது- அதை நன்றாய் நடத்துவதற்கான ஏற்பாடுகளையும் செய்து வைத்தார் (போ. வ. ச. பக். 136). இச்சத்திரம் 16-1-1802 துன்மதி புஷ்யசுத்த திரயோதசியில் கட்டத்தொடங்கப் பெற்றதாதல் வேண்டும் (3 - 229, 230). இச்சத்திரத்தின் நுழைவாயிலில் உள்ள கல்வெட்டு:-

ஸ்ரீமத் போஸல வம்சோத்தம இந்தரபதி ச்ரேஷ்ட ப்ரஸாத ஜனித ப்ரதாப ஸ்வீக்ருத தில்லீ வானுபாக ஸ்வாதந்த்ரய விபக்ஷக்ருத தில்லீராஜ்ய ஸார்வ பௌம க்ஷோணீச குலலலாம சோளாவனீ நாயக தஞ்சபுராதீச ஸ்ரீமந்த மஹாராஜா சத்ரபதீ சரபோஜி ராஜே ஸாஹேப யானீ ஸ்திரீ ஸௌபாக்யவதீ முக்தாபாயி அம்மாசே நாவே ஸ்ரீஸேது மார்கீந்த தஞ்சபுரவ பட்டுக்கோட்டை யாதினிஸ்தலாஸ மத்யபூமீந்த அன்னஸத்ரவ அக்ரஹாரவ சிவாலயவ விஷ்ணுஸ்தல இத்யாதி அமோகதர்ம ப்ரதிஷ்டிலா தாரீக - சாலீவாகன சகம் 1723 துர்மதி நாம ஸம் வத்ஸரம் புஷ்ய சுத்த த்ரயோதசி ஸ்திரவாஸரதிகனீ தைமாஸம் தேதி பாஞ்சு (ஆங்கிலம் 16—1—1802 ஆகும்)

33. இவைகளெல்லாம் அந்த அம்மாளின் சாசுவாதமான ஞாபகச் சின்னங்களாக இருக்கின்றன- (போ. வ. ச. பக். 136)

அதின் பிற்பாடு தீர்த்த யாத்திரைக்கு உத்தேசிதது சோள தேசம் ஓரட்டும்[34] ஒரு விசை, ஸ்ரீரங்க யாத்திரை ஒரு விசை. சங்குமுகம் ஒருவிசை,[35] பழனி யாத்திரை ஒரு விசை, இப்படி நாலு விசை யாத்திரை பண்ணச்சே கூட றெசிடெண்டு மேஸ்த்தர் பிளாக்கி பறன் சாயபும் வந்து[36] வழிகளிலே அந்தந்த இடங்களிலே மஹா றாஜாவுடைய மேன்மையின் படி மரியாதைகளை நடப்பிவிச்சிக் கொண்டிருந்தார். அவருடைய உபகாரத்தை மஹா ரா‌ஜா ரொம்பவும் எண்ணுகிறார். கும்பினியாருக்கும் மஹா றாஜாவுக்கும் ஆன திறீட்டியிலே மஹா ரா‌ஜாவுக்கு தம்முடைய சீர்மையைப் போலே கும்புனி சீர்மை ஓரட்டுக்கும் மரியாதைகள் நடக்கு[37] மென்று வாக்குத்தத்தம் பண்ணி இருந்தத்தை ரெசிடெண்டு மேஸ்த்தர் பிளாக்கிபறன் உறுதியாக்கினார்.

இன்னமொரு உபகாரம் மேஸ்த்தர் பிளாக்கிபறன் சாயபு பண்ணினதென்னவென்றால் கும்பினியாருக்கு மஹா றாஜா அவர்கள் தேசத்தை ஒப்பிவிக்கிறபோது மஹா ரா‌ஜாவுக்கு உபயுக்தமாயிருக்கிற[38] காரியங்களை கும்பனியார் சம்மதிக்கத் தக்கனேயாகப் பண்ணினது மல்லாமல், அந்த திறிட்டியிலே அன்னிய தேசத்தான் பேரிலே கும்பனியார் பாளைய மெடுக்கச்சே யாகட்டும், அன்னிய தேசத்தார் கும்பனியார் பேரிலே பாளைய மெடுக்கச்சே யாகட்டும் மஹா ரா‌ஜாவுடைய கோட்டையிலே இங்கிலீசுகாறர் டாணையம் வைக்கிறதென்று கறாறாயிருந்துது.[39] அப்படியே கும்பனியார் அன்னிய தேசத்தின் பேரிலே பாளையமெடுத்த போது கறார்படிக்கு டாணையம் வைக்கிறத்துக்கு பிறையெத்தினமானார்கள். அப்போ மேஸ்த்தர் பிளர்க்கிபறன் சாயபு, மஹா ரா‌ஜாவுடைய நடத்தை யோக்கியதை விசுவாசம் கும்பனியாருக்கு அறியப்பண்ணி,[40*] அவாளுடைய பிறியம் மஹாரா‌ஜாவுக்கு கிடைக்கத்தக்கனேயாகப் பண்ணி,[41*] அந்த வார்த்தையை நிறுத்தினார். அதைத்தொட்டும் (மேஸ்த்தர்) பிளாக்கிபறன் சாயபுடைய உபகாரத்தை அநேகமாய் எண்ணுகிறார்.[42]

---

34. ஓரட்டும் - முழுவதும் (போ. வ. ச. பக். 136)

35. கங்கா யாத்திரை ஒரு விசை என்று போ. வ. ச. வில் உள்ளது. மராட்டியக் கல்வெட்டிலும் **Ganga Yaatra Ek Kitha** என்றுள்ளது. (சங்கமுகம் - சங்குமுகம் - காவிரிகடலொடு கலக்குமிடம் ஒருவிசை - ஒரு தடவை)

36. ''வந்து'' என்ற சொல் போ. வ. ச. வில் இல்லை (பக். 137)

37. The ninth article affirmed that the Rajah would be treated with all the attention, respect and honour which was due to a friend and ally of the British nation - (Aitchison, Vol. V Page, 289-90)

38 உபயுக்தமா யிருக்கிற = சாதகமான (போ. வ. ச. பக். 137)

39. The tenth article left the fort of Tanjore in possession of the Rajah but authorised the company to use it as a military post if the English found it so essential during a war fought in the Carnatic - (Rajayyan, Page 110)

40* முதல் 41* வரை டி3762 சுவடியில் இல்லை

42. அநேகமாய் எண்ணுகிறார் – மிகவும் மெச்சினார் (போ. வ. ச. பக். 138)

அப்படியே மேஸ்தர் டூரியன் சாயபு நிசெடெண்டில் மேஸ்த்தர் மக்களவுட்டு[43] சாயபு விவகாரத்தைத் தொட்டு[44] மஹா ருஜா நிசமாய் எழுதின அற்தங்களும் மஹா ருஜாவுடைய நிசத்துவத்தையும் சாட்சி பலங்களையும் கும்புனியாருக்கு வெயக்த்தமாய் தெரியப் பண்ணின உபகாரத்தை அல்லாமலும் தாம் சீர்மைக்குப் போன பிற்பாடும் மஹா ருஜாவினிடத்தில் பிறீதியாய் மகா ருஜாவுக்கு சில பொஸ்த்தகங்களும்[45] பூகோளத்தின் படமும்[46] வெள்ளிப்பாத்திரங்களான சில சாமான்களும் அனுப்பிவித்தார். அதினாலேயும் மஹா ருஜா மேஸ்த்தர் டூரியன் சாயபுடைய உபகாரத்தை றொம்பவும் எண்ணுகிறார்.[47]

இந்தப் பழணிசாரி[48] போசரத்துக்குமுன் முதல்பொண்ணு பிறந்த சவுபாக்கியவதி அகல்லியா பாயி சாயபு கெற்பத்தில் ரெண்டாம் பொண்ணு பிறந்துது. அந்த குழந்தைக்கு ருஜகுமார பாயி சாயபு என்று பேர் வைத்தார்கள்.

மஹா றாஜாவுடைய ருச்சியபாரத்தில் பாஜ் என்கிற குருவி[49] இந்த தேசத்துக்கு எண்ணைக்கும்[50] வராத அபறூபமான குருவி வந்திருந்தது.*-*

---

43. மக்களவுட்டு - மக்லோடு

44. அடிக்குறிப்பு 9, 10, 11 அவற்றுக்குரிய மூலமும் பார்க்க

45. 18-7-1821இலும் டூரியன் சீமையிலிருந்து சில புத்தகங்களை அனுப்பினார் என்று தெரிகிறது (5-86). இது பிற்காலத்தில் நிகழ்ந்தது.

46. பல பழைய பூகோளப்படங்கள் தஞ்சை சரசுவதி மகாலில் உள்ளன. இதற்குப் பிறகு போ. வ. ச. வில். "புத்தகம் கட்டுவதற்காக ஜரிகை வேலை செய்த துணிகளையும்" என்பது அதிகமாக வுளது.

47. றொம்பவும் எண்ணுகிறார் - எப்போதும் மெச்சுகிறார் (போ. வ. ச. பக். 138)

48. சாரி — சவாரி (டி. 3762); தீர்த்தயாத்திரை (போ. வ. ச. பக். 138)

49. குருவி - பக்ஷி (போ. வ. ச. பக். 138)

"The common name given to a class of "Shikar" hunting hawks is Gulab Chesma. As many as six pairs of distinctive variety are explained. The 'term used to denote the female bird is 'Baj' which is generally bigger in size while the term used to denote male bird is 'Jura' which is smaller in size than the female variety ......... The birds are reputed to live up to a period of twenty years and the first five years are considered to be the best period for utilising them for hunting purposes except the variety of 'Basheen' which though it becomes old it is yet capable of hunting. The bird should be procured when they are young ones & trained to hunt"- (Gaja Sastra Sara with Pakshi Lakshana & Chikitsai (Baja Namah) - Ed. by A. Krishnaswami Mahadick Rao Saheb B.A., T.M.S.S. Library, Thanjavur – 1951 - Introduction)

50. எண்ணைக்கும் - எண்ணும் (டி.3762); என்றும், எப்பொழுதும்.

*-* இந்த இடத்தில் போ. வ. ச. வில் (பக்கம் 138) பின்வரும் செய்தியுள்ளது:-

"மகா ராஜாவின் தர்மபத்தினியான சௌபாக்யவதி அகல்யாபாயி சாகேபாவின் வயிற்றில் முன் கூறப்பட்ட இரண்டு கன்னிகைகள் பிறந்த பிறகு அந்த அம்மாளிடத்திலேயே மகாராஜாவுக்கு

இப்போ சறபோஜி மஹா ருஜா சகல செனத்தையும் சகல மதஸ்தாரையும்[51] வைசம்மிய மன்றியில் சந்தோஷமாய்[52] அந்தந்த மதத்து வேதத்தின்படியே நடப்பிவித்து சகலசெனத்துக்கும் விசனம் வராமல்படிக்கு யுக்திமாற்கமாய்[53] பரிபாலனம் பண்ணிக்கொண்டு யெப்போதும் சிவபூசை பண்ணிக்கொண்டு சிவ புராணங்கள் முதலான உத்தம சரித்திரங்களைக் கேட்டுக் கொண்டு யாத்திரைகளையும் பண்ணிக் கொண்டு சன்மாற்கத்திலே யிருக்கிறார்.

ஸ்ரீமத் போசல வம்சத்தின் பூரண சந்திரன் - இந்துபதி[54]சிரேஷ்டியாயிருக்கப்பட்டவர் – ஸ்ரீசாம்பசிவ பிறசாத பிறபாவத்தினால்[55] அடையப்பட்ட மாற்காபத்தினாலே[56] டில்லி சாத்துற்பாகத்துக்கு சுவாதந்திரியர் - டில்லி யுடைய ருஜாவுக்கு விபஷ்சத்துக்கு யோக்கியர்[58] சறுவபூம[59] ருஜாக்களுக் கெல்லாம் சோபாயமானவர்[60] - மஹாறாஷ தேசம் சோள தேசம் அதிபதியாயிருக்கப்பட்ட புண்ணிய சுலோக ராஜாக்களுடைய சரித்திரம் சகல மனோபீஷ்டத்[61]தையும் குடுக்கப்பட்டத்தை மாறாஷ்ட்ட பிறாமண சாதி[62]இப்போ சோளர தேசாதிபதி ஸ்ரீமத் சத்திரபதி மஹா றாஜா ஸ்ரீ சறபோஜி றாஜா சாயபு அவர்களுடைய திஜ[63] சேவுகன் சிட்டினிசு[64] பாபு றாய[65]றாலே யெழுதப்பட்டது.

---

மூன்றாவது கன்னிகை பிறந்தாள். அந்தக் குழந்தைக்கு பாயம்மா பாயி சாகேப் என்று பெயரிட்டனர்.''

இச்செய்தி டி 3762 டி 3180 என்ற இரண்டு மெக்கன்சி சுவடிகளிலும் இல்லை.

தமிழ்ப்பகுதியை மராட்டியில் மொழிபெயர்த்துக் கல்வெட்டுச் செய்யுங்கால் சில விடுபட்டும், சில சேர்க்கப்பட்டும் உள்ளன. அங்ஙனம் சேர்க்கப்பட்டவற்றுள் இப்பகுதியும் ஒன்றாதல் கூடும்.

51. சகல மதஸ்தாரையும் - எல்லா ராஜ்யங்களிடத்திலும் (போ. வ. ச. பக். 139)

52. வைசம்மிய மன்றியில் சந்தோஷமாய் - துவேஷ புத்தியை நீக்கி யாரிடமும் அலக்ஷ்ய புத்தியில்லாமல் (போ. வ. ச. பக். 139).

53. யுக்த மாற்கமாய் - சரியான மார்க்கத்தில் (போ. வ. ச. பக். 139)

54. பூரணசந்திரன், இந்துபதி - உதித்தவர்களும் தம்பதி (போ. வ. ச. பக். 139)

55. பிரசாத பிரபாவத்தால் - அருளால் (போ. வ. ச. பக். 139)

56. மாற்காபத்தினாலே - இச்சொல் போ. வ. ச. வில் இல்லை

57. சாத்துற்பாகத்துக்கு சுவாதந்திரியர் - 4-ல் ஒருபாகம் வாங்கும் பாத்தியதை நிலை நாட்டி வந்தவர் (போ. வ. ச. பக். 139)

58. விபஷ்சத்துக்கு யோக்கியர் - எதிர்த்து நின்றவர் (போ. வ. ச. பக். 139)

59. சறுவபூம - சார்வபௌம - சக்கரவர்த்தி

60. சோபாயம் ஆனவர் - நல்வழி காட்டுபவர்

61. மனோபீஷ்டம் - மனவிருப்பம்

62. பிறாமணசாதி - முதல் வர்ணத்தைச் சேர்ந்தவர் (போ. வ. ச. பக்.139) இதற்குப்பிறகு போ. வ. ச.வில் ''பகவந்தராயரின் பௌத்திரரான விட்டலராயரின் புத்திரரும்'' என்றுளது.

63. திஜ - நிஜ (டி 3762) - உண்மையான (போ. வ. ச. பக். 139)

64. சிட்டினிசு - Chitnis - காரியதரிசி (போ. வ. ச. பக். 139)

65. Bapu Rayar - T.V. Mahalingam, Mackenzie Manuscripts Vol. I. Madras University 1972, Page 142 (Under Manuscript No. 21.) Bapu Rao என்று

சாலியவாகன சகம் ௲௭௱௨௫[66] ருத்துரோத்தகாரி ௵ சித்திரை மீ[67] ௲௮௱௩[68]; மாற்ச்சி மீ ௨௫[69]

---

போ. வ. ச. ஆங்கிலப் பகுதி பக்கம் XXX இல் காணப்படுகிறது. ஆனால் போ. வ. ச. மராட்டியப் பகுதியில் Babu Rayar என்றுள்ளமை கவனித்தற்பாலது.

"Report of Babu Rao, Maratha Translator to Col. C. Mackenzie of his journey to Pondicherry, Karaikal along the coast for the purpose of collecting historical information coins etc., from the 24th December, 1816 to 27th May, 1817 - (H. Wilson's Mackenzie collection, Pages 599-621)

என்ற இம்மேற்கோளிலிருந்து அவர் பெயர் Babu Rao ஆதல் கூடும், Bapu Rao அன்று எனக் கொள்ளலாம். மேலும் இம்மேற்கோளால் பாபுராவ் மெக்கன்சியிடத்தில் வரலாற்றுச் சுவடிகளைத் தேடிச் சேர்க்கும் பணியில் 1916-17க்கு முன்பின் அமர்ந்திருந்தமை பெறப்படுகின்றது.

66. சகம் 1725; போ. வ. ச. வில் தமிழ்ப் பகுதியில் 1795 என்றிருப்பது அச்சுப்பிழை! மராட்டியப் பகுதியில் 1725 என்றே உளது.

67. "சித்திரை" மீ என்பதற்குப் பதில் "மார்க்க சீர்ஷம்"[7] என்று போ. வ. ச. விலுள்ளது

68. 1803

69. "மாற்ச்சி மீ 25" என்றவிடத்தில்" டிசம்பர் 13உ என்று போ. வ. ச. வில் உள்ளது (பக்கம். 139).

எனவே மார்ச்சு 25ஆம் நாள் தமிழ்ச் சுவடி எழுதிமுடிந்தது எனவும், டிசம்பர் 13ஆம் நாள் கல்வெட்டு வெட்டி முடிந்தது எனவும் கொள்ள இடம் தருகிறது.



# தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு

(சுருக்கம்)

1 போசல வமிசத்தின் ஆதி முதல்வர் திருமால். அவர் வழியில் வந்தவர் சூரிய நாராயணர். சூரியனிடத்தில் தோன்றியவர் மனு. மனுவின் வழியில் வந்தவர் இக்குவாகு. இவர் வழியில் கலியுகத்தில் சம்புமலைப் பகுதியில் சம்பு என்பவர் மகாராட்டிர தேயத்தலைவர் ஆனார்.

இச்சம்புவுக்குப் பிறந்தவர் முதல் ஏகோஜி. முதல் ஏகோஜிக்குச் சாம்பசிவனருளால் முதல் சரபராஜா பிறந்தார். முதல் சரபராஜர் சோமாஸ்கந்த மூர்த்தியை உபாசித்து மந்திரோபதேசம் பெற்றார். அந்தச் சிறப்பினால் பாதுஷா பிந்தளிபுரம் என்ற ஊரைச் சாகீர் கொடுத்தார். முதல் சரபராஜருக்கு மகாசேனர் என்றவர் பிறந்தார்.

மகாசேனருக்கு 50 பிள்ளைகள்; மூத்தவர் ஏகசிவ சிவராஜா. ஏகசிவ ராஜாவின் மகன் இராமச்சந்திர ராஜா. இராமச்சந்திர ராஜாவுக்கு மகன் பீமராஜா. பீமராஜாவின் மகன் இரண்டாம் ஏகோஜி ராஜா. இரண்டாம் ஏகோஜி ராஜா சாத்தார் கெடியைத் தனதாக்கிக் கொண்டார். இவர் மகன் வராக ராஜா.

வராக ராஜா 55000 குதிரைகளுடன் பாதுஷாவுடன் போர் செய்து வெற்றி பெற்றார். இவரது மகன் மூன்றாம் ஏகோஜி.

மூன்றாம் ஏகோஜியின் மகன் பிரமாஜி. பிரமாஜியின் மனைவி அனுசா. இவர்களது மகன் முதல் ஸஹாஜி. முதல் ஸஹாஜியின் மனைவி உமாவூ. இவர்களின் மகன் அம்பாஜி. அம்பாஜியின் மனைவி ரேணுகாவூ. இவ்விருவருக்கும் பிறந்தவர் பரசோஜி.

பரசோஜியின் மனைவி உமாஹு. இவர்களின மகன் பாபாஜி.. பாபாஜியின் மனைவி ரேகாவூ. இவர்கட்கு இருவர் மக்கள். மூத்தவர் மாலோஜி; இளையவர் விட்டோஜி.

விட்டோஜியின் மனைவி ஆவுபாய். இவர்களுக்கு மூத்த குழந்தை பெண்; அம்பாபாயி என்று பெயர்; பிறகு எட்டுப் பிள்ளைகள் பிறந்தனர்.

மாலோஜியின் மனைவி உமாபாயி. இவர்கள் நாளில் தேவகிரியில் நிஜாம்பாதுஷாவும், விஜயதுருக்கத்தில் இப்ரஹிம் பாதுஷாவினுடைய மகன் அல்லி ஏதில்ஷாவும் ஆட்சி செய்து கொண்டிருந்தனர். இவ்விருவருக்கும் போர் மூண்டது. மாலோஜியும் விட்டோஜியும் தேவகிரி நிஜாம் பாதுஷா பக்கம்

நின்று போர் புரிந்து நிஜாம்ஷாவை வெற்றி பெறச் செய்தனர். நிஜாம்ஷா மகிழ்ந்து நாலிலொரு பங்கு (சௌத்)சாகிர் கொடுத்து அவ்விருவரையும் தம்மிடமே இருத்திக் கொண்டார்.

மாலோஜிக்குக் குழந்தைகள் இல்லை. ஷா ஷரீஃப் பே அலி கலந்தர் என்பவரை வணங்க அவர் நாகினி பத்மினி ஏன்ற பட்டாக்கத்திகளும், லங்கோடு, கலந்திரா, பஞ்சா ஆகியவற்றையும் கொடுத்து இரண்டு பிள்ளைகள் பிறக்கும் என்றருள் செய்தார். சகம் 1531 (கி. பி. 160 ) இல் பிறந்த குழந்தைக்கு ஷாஜியென்றும், அடுத்துப் பிறந்தவருக்குச் சரபோஜி (ஷரீஃப்ஜி) என்றும் பேர் வைக்கப்பட்டது.

ஷாஜிக்கு ஐந்து வயதாகிற போது கோலாபுரத்தரசருக்கும் நிஜாம் ஷாவுக்கும் போர் ஏற்பட்டது. மாலோஜி நிஜாம்ஷா பக்கம் போர்க்குச் சென்று இறந்தார்.

ஷாஜியும் சரபோஜி (ஷரீஃப்ஜி)யும் சிறுகுழந்தைகள் ஆயினமையின் அவர்களுடைய சிறிய தகப்பனார் விட்டோஜியின் அரவணைப்பில் வளர்ந்தனர்.

ஷாஜி, துக்காவுபாயியை முதல் திருமணம் செய்து கொண்டார். பின்னர்ச் சகம் 1543 (கி.பி. 1620)இல் சாதாராவில் அரசரானார். அப்பொழுது யாதவ ராஜா (லகோஜி ஜாதவ்ராவ்) தனது மகள் ஜிஜாபாயியை இரண்டாவது மனைவியாகத் திருமணம் செய்து கொடுத்தார்.

ஷாஜியின் தம்பி சரபோஜி (ஷரீஃப்ஜி)க்கு விசுவாசராவுடைய மகள் துர்க்காபாயி திருமணம் செய்விக்கப்பட்டாள்.

விட்டோஜியின் எட்டு மக்களும் நிஜாம் பாதுஷாவின் அரவணைப்பில் இருந்தனர்

**2** ஒருகால் நிஜாம்ஷா ஒரு சதிர் நடத்தினார். அச்சதிர்க்குப் பலர் வந்திருந்தனர். சதிர் கலைந்து போகிற போது கண்டாகலே என்கிற பெரிய சர்தாரின் யானை பலரைக் கொன்றது. யாதவ ராஜாவின் மகன் தத்தாஜி அந்த யானையை வெட்டப் போனரர். விட்டோஜியின் மக்களில் சம்பாஜி கேலோஜி ஆகிய இருவரும் தத்தாஜியை, "அந்த யானையை வெட்டாதே" என்று தடுத்தனர். தத்தாஜி அவர்களோடு சண்டை போட்டார்; சம்பாஜியின் கையால் வெட்டுண்டு இறந்தார். யாதவராஜா, சம்பாஜி கேலோஜி ஆகியோர் பேரில் போர்க்கு வந்தார். அப்பொழுது ஷாஜி தன்னுடைய மாமனார் என்றும் பாராமல் யாதவ ராஜாவுடன் போர்க்கு வந்து அடிபட்டு மூர்ச்சையாய் விழுந்தார்; சம்பாஜி இறந்தார். ஷாஜி மூர்ச்சை தெளிந்து எழுந்து போர் செய்ய வருங்கால், நிஜாம்ஷா செய்தி யறிந்து போர் செய்வதை நிறுத்தச் செய்து எல்லோரையும் அனுப்பி விட்டார்.

யாதவராஜா வெறுப்புற்றார். இதனை அல்லியேதில்ஷா அறிந்து யாதவ ராஜாவைத் தம்பக்கம் சேர்த்துக்கொள்ள முயன்றார். அதற்கு இசைந்த யாதவ

ராஜா ஜஹாங்கீர் பாதுஷாவின் உதவியையும் பெறுதல் வேண்டும் என்று கூறினார். நிஜாம்ஷா பக்கம் ஷாஜி, அவர் தம்பி சரபோஜி, விட்டோஜியின் மக்கள், மேலும் பல சர்தார்கள் இருந்தமையின், நிஜாம் ஷா அல்லியேதில் ஷாவை மதிக்கவில்லை. ஆகவே அல்லியேதில்ஷா ஜஹாங்கீரின் உதவியுடனும், யாதவராஜாவின் உதவியுடனும் நிஜாம்ஷாவுடன் போர் செய்தார். இந்தப் போரில் ஷாஜி, ஏதில்ஷாவுக்கு உதவியாக வந்த முகலாய சேனையைத் தோற்றோடுமாறு செய்தார். அப்பொழுது அல்லியேதில்ஷாவைச் சேர்ந்த சர்தார்களில் ஒருவர் ஆகிய ஜோஹர்கான் போர்க்கு வந்தார். ஷாஜியின் தம்பி சரபோஜி (ஷரீஃப்ஜி) போர் செய்து வீரசுவர்க்கம் அடைந்தார். பிறகு ஷாஜி போர் செய்து வாகைசூடிப் போர்க்களத்தைத் தனதாக்கிக் கொண்டு சேனாபதி அம்பர்கானுடன் நிஜாம்பாதுஷாவிடம் வந்தார். நிஜாம்ஷா, ஷாஜிக்குச் சிறப்புச் செய்தார்.

விட்டோஜியின் மகன் கேலோஜி, ஷாஜிக்குச் சிறப்புச் செய்தவாறு தனக்கும் செய்ய வேண்டுமென்று விரும்பினார். சேனாபதி அம்பர்கானும் பரிந்துரை செய்தார். அங்ஙனமே கேலோஜிக்கும் சிறப்புச் செய்யப்பட்டது.

இதனை ஷாஜி கேள்விப்பட்டார்; மனக்கலக்கம் அடைந்தார்; சாதாராவுக்குச் சென்றுவிட்டார்.

இதனை யறிந்த அல்லி யேதில்ஷா ஷாஜியைத் தன்பக்கம் சேர்த்துக் கொள்ள முயற்சி செய்தார். ஷாஜியும் உடன்பட்டார்; பெருஞ்சேனையுடன் நிஜாம் ஷாவின் பேரிலே பாளைய மெடுத்தார். நிஜாம்ஷாவின் சேனைகளும் அம்பர்கானும் தோற்றுப்போக, ஷாஜி வெற்றியடைந்தார். ஷாஜிக்கு அல்லியேதில்ஷா தன்னுடைய ஆட்சியின் கீழ் உள்ளவற்றுள் பாதி சாகீர் கொடுத்தார். பிறகு ஷாஜி முத்தேகான் என்பவனை வென்றார்; மேற்குப் பக்கத்தில் கேரளம் முதலான தேசங்களை வென்று அல்லியேதில்ஷாவுக்குக் கப்பம் கட்டுமாறு செய்தார்.

பின்னர் விஜாபுரத்திலிருக்கையில், ஷாஜிக்கு அவரது இரண்டாவது மனைவி ஜீஜாவின் வயிற்றில் சகம் 1549 (கி.பி. 1627)ல் முதல் மகன் சம்பாஜி பிறந்தார்.

ஏறத்தாழ இந்தச் சமயத்தில் நிஜாம்ஷாவின் சேனைத்தலைவர் அம்பர்கான் இறந்தார்; அல்லியேதில்ஷாவின் தந்தை இப்ராஹிம்கானும் இறந்தார்.

ஜிஹாங்கீர் இதையறிந்து, நிஜாம்ஷாவின்பேரிலே படையெடுக்குமாறு தரியாகானைப் படைகளுடன் அனுப்பினார்.

இச்செய்தி நிஜாம்ஷாவுக்குத்தெரிந்தது. "நம்மிடம் ஷாஜியும் இல்லை; யாதவராஜாவுமில்லை; ஆகையால் அவர்களை வருவிக்க வேண்டும்" என்று நினைத்து அவர்களுக்குச் சொல்லியனுப்பினார். இருவரும் தாராகிரிக்கு வந்தனர். அதனருகில் சிவனேரி என்ற கோட்டை; அதற்குரியவர் விசுவாசராவ்; அவருக்கு ஒரு பெண்; செயந்திபாய் என்று பேர்; அப்பெண்ணை ஷாஜியின் மகனாகிய சம்பாஜிக்குக் கொடுத்துத் திருமணம் நடந்தது.

அப்பொழுது நிஜாம்ஷா, ஒரு சேனையுடன் சென்று தரியாகானை எதிர்க்குமாறு ஷாஜியை ஏவினார்; யாதவராஜாவைத் தன்னைக் காணுமாறு பணித்தார்.

அப்பொழுது ஷாஜியின் இரண்டாவது மனைவி ஜிஜாபாய் கருவுற்றிருந்தாள். ஷாஜி அவளுக்குக் காவலாகச் சில சேனைகளைச் சிவனேரியில் வைத்துத் தரியாகானொடு போர்க்குச் சென்றார். அவர் வெற்றியோடு திரும்புவதற்குள், ஜிஜாபாய் சகம் 1551 (கி.பி. 1629)இல் ஆண்மகவை ஈன்றாள். ஷாஜியும் வெற்றியுடன் திரும்பினார். சிவனேரியில் பிறந்தமையாலே அந்தப் பிள்ளைக்குச் "சிவாஜி" என்று பெயரிட்டார்.

இதற்கிடையில், யாதவராஜா நிஜாம்ஷாவைக் காணச் சென்றார். அப்பொழுது சேனைத்தலைவராக இருந்தவர் பத்தேகான் (Futeh Khan); இவர் அம்பர் கானின் மகனாவர். யாதவராஜா வந்தால் தன் செல்வாக்குக் குறையும் என்று நினைத்த பத்தேகான், நிஜாம்ஷாவின் மனத்தைக் கலைத்து, யாதவராஜா வரும்பொழுது சிறிது மரியாதைக்குறைவு செய்யுமாறும், அதனால் வருந்தித் திரும்பினால் கொன்றுவிட வேண்டுமென்றும் கூறினார். நிஜாம்ஷா இதனை ஏற்றுக் கொண்டார். யாதவராஜாவும் வந்தார். மரியாதைக் குறைவு ஏற்பட்டது. யாதவறாஜா பொறுக்காமல் தன் மக்களுடன் திரும்புங்கால், பத்தேகான் ஏவலின்படி சிலர் சூழ்ந்துகொண்டு யாதவராஜாவைக் கொன்றனர்.

இவற்றை ஷாஜி கேள்விப்பட்டார்; நிஜாம்ஷாவின் தொடர்பை வெறுத்தார்; சிவனேரியிலிருந்த தன் மனைவியை அழைத்துக்கொண்டு சாத்தாராவுக்குச் சென்றுவிட்டார்.

பின்னர் நிஜாம்ஷாவின் நாட்டில் பெரும் பஞ்சம் ஏற்பட்டது.

சாத்தாராவில் ஷாஜியிருக்கும் பொழுது அவர் முதல் மனைவி துக்காபாயி ஆண் மகவைப் பெற்றெடுத்தாள். அப்பிள்ளைக்கு நான்காவது ஏகோஜி என்று பெயர். பிறந்தது சகம் 1552; கி. பி. 1630.

3 தரியாகான் தபதிநதிக்கரையில் தங்கியிருந்தார். 'யாதவராஜா கொலையுண்டார்; ஷாஜி சாத்தாராவுக்குச் சென்று விட்டார்'- என்பவற்றையறிந்த தரியாகான், நிஜாம்ஷா பேரில் படையெடுத்தார். நிஜாம்ஷா தாராகிரிக் கோட்டையிலிருந்தார். தாராகிரிக் கோட்டையைத் தரியாகான்பிடித்துவிட்டால் தனக்குத் தொல்லை மிகுமென்று நினைத்த அல்லியேதில்ஷா அந்தக் கோட்டையின் பேரில் படையெடுத்தார். இது டில்லிக்குத் தெரிந்தது. உடனே அவுரங்கசீபு தக்காணத்துக்கு வந்தார். தரியாகானுடன் சேராமல் தான் ஒரு பக்கத்தில் போர் செய்தார். அல்லியேதில்ஷாவும் பிறிதொரு பக்கத்தில் போர் செய்தார். நிஜாம்ஷா தோற்றார்; அவுரங்கசீபுக்கு அடங்கியவரானார். பின்னர் அவுரங்கசீபு அல்லியேதில் ஷாவுடனே போர் செய்து துறத்தித் தேவகிரியில் தங்கியிருந்தார்.

நிஜாம்ஷா தனக்கு முன்னாலே வழங்கிய சீர்மைகளைத் தனதாக்கிக் கொள்ள வேண்டுமென்று நினைத்த ஷாஜி, தேவகிரி துர்க்கத்தைச் சேர்ந்த எண்பது கோட்டைகளைப் பிடித்துக் கொண்டார். இப்பொழுது 96 மராட்டிய சாதியார்கள் எல்லோரும் இவருடன் சேர்ந்தார்கள். (இதன்பின்னர்ச் சூரிய வம்சம் சந்திர வம்சத்தரசர் பற்றியும், 96 மராட்டிய சாதியினர் பெயர்களும் சுவடியில் தரப்பெற்றுள்ளன).

மராட்டிய சர்தார்களெல்லாரும் ஷாஜியுடன் சேர்ந்த அளவிலே ஷாஜிக்குப் பெருமை மிகுவதாயிற்று.

இதையறிந்ததும் டில்லி பாதுஷா அல்லியேதில்ஷாவுடன் சேர்ந்து கொண்டு பீமா எனும் ஆற்றின் கரையில் இறங்கினார். ஷாஜி மூன்றாண்டுக் காலம் அவர்களுடன் போர்புரிந்தார். ஷாஜி ஆராதனை செய்யும் தெய்வம் கனவில் கூறிய வண்ணம் ஷாஜி போரை நிறுத்தித் தான் வென்ற பகுதிகளை இருவருக்கும் பகிர்ந்து கொடுத்து விட்டுத் தான் சாத்தாராவிலிருந்தார்.

பின்னர் அல்லியேதில்ஷா, ஷாஜியை அழைத்து அவருடன் ரணதுல்லா கானையும் அனுப்பித் தெற்குப் பகுதியில் உள்ள அரசர்களை வெற்றி கொண்டு தோஃபா பணம் பெற்று வருமாறு ஏவினார். அவ்விருவரும் சென்று இக்கேரி அரசர் வீரபத்திரர், கொங்கநாயக்கர், காவேரிபட்டணத்துச் செக தேவர், சீரங்கப்பட்டணத்துக் கண்டீரவர், தஞ்சாவூர் விஜயராகவர், செஞ்சி வெங்கட்ட நாயக்கர், மதுரைத் திருமலை நாயக்கர் முதலாகிய அரசர்களை வென்று, அவர்தம் நாடுகளைக் கைப்பற்றினர். அல்லியேதில்ஷா மகிழ்ந்து ஷாஜிக்குப் பெங்களூரைச் சாகீர் கொடுத்தார்.

பெங்களூர் தங்குவதற்கு வசதியாயிருந்தமையின் ஷாஜி சாத்தாரிலிருந்த தன் மனைவியரை அழைத்துக்கொண்டு வந்து பெங்களூரிலே தங்கியிருந்தார். சிவாஜிக்கும் ஏகோஜிக்கும் கல்வித்துறை பல கற்பித்தார்.

இப்பொழுது சிவாஜிக்கு ஆண்டு பன்னிரண்டாயிற்று. சாம்பசிவன் ஷாஜி கனவில் தோன்றினார்; சிவாஜியைச் சாத்தார் பூனா தேயங்களுக்கு அனுப்புமாறு கூறினார். ஷாஜி, தன் முதல் மனைவியின் மகனாகிய ஏகோஜி வயதில் சிறியவராயினும் மரியாதைக்குப் பெரியவர் என்று கருதி அவருக்கு இளவரசுப் பதவியும் பெங்களூர்ப் பட்டமும் சகம் 1562 (கி. பி. 1640) இல் கொடுத்தார்; சிவாஜியைச் சாத்தார் பூனாவுக்கு அதே ஆண்டில் பட்டம் கட்டி யனுப்பினார். சிவாஜி சாத்தார் கெடிக்குச் சென்று பல கோட்டைகளைப் பிடித்துக்கொண்டு அரசாளத் தொடங்கினார்.

ஷாஜி பெங்களூரிலிருந்தார். அவரை அல்லியேதில்ஷா பலமுறை அழைத்தபோதிலும் போகவில்லை. ஆகவே அல்லியேதில்ஷா அவரை வஞ்சனையாகப் பிடித்து வருக என்று கூறிப் பல சர்தார்களுடன் முஸ்தஃபகான் என்பவரைப் பெங்களூர்க்கு அனுப்பி வைத்தார். முஸ்தஃபகானின் வஞ்சனையை அறிந்த ஷாஜி, தன் மூத்த குமாரன் சம்பாஜியைப் பெங்களூரிலேயே ஏகோஜிக்கு

உதவியாக இருக்கச் செய்து, பல சர்தார்களுடன் முஸ்தஃபகானைப் பார்க்கச் சென்றார். பத்துப் பதினைந்து நாட்கள் யோசனை பண்ண வேண்டுமென்று முஸ்தஃபகான் சொல்லிப் பக்கத்திலேயே ஒரு கூடாரத்தில் ஷாஜியைத் தங்கி இருக்குமாறு செய்தார். ஒரு நாள் இரவு முஸ்தஃபகான், ஷாஜியிருந்த கூடாரத்தைச் சுற்றிக் கொள்ளச் சர்தார்களுக்கு ஆணையிட்டார். அப்பொழுது நடந்த போரில் ஷாஜி காயம் பட்டுக் கீழே மூர்ச்சையாய் விழுந்தார் முஸ்தஃபகான், மூர்ச்சை தெளியச் செய்து. ஷாஜியை விஜயாபுரத்துக்கு அனுப்பினார்.

4 இதனையறிந்த சம்பாஜி முஸ்தஃபகானுடன் போர் செயத் தொடங்கினார். சிவாஜி யிதனை யறிந்து அல்லியேதில்ஷா பேரில் போர்க்குச் செல்ல நினைத்தார். இவற்றை யறிந்த அல்லியேதில்ஷா, மூன்று சர்தார்களைச் சிவாஜியிருக்கும் புரந்தர்க்கோட்டைக்குச் சென்று சிவாஜியைச் சிறைப்படுத்திக் கொணருமாறு ஏவினார். அம்மூவரும் முதலில் சிரோபலம் என்ற கோட்டையைப் பிடித்து, அவர்களுள் ஒருவராகிய பல்லாளனை அங்கு இருக்கச் செய்து பத்தேகான் முசேகான் ஆகிய மற்ற இருவரும் சிவாஜியிருந்த புரந்தர்க் கோட்டையைச் சுற்றிக் கொண்டார்கள், சிரோபல் கோட்டையை விடுவிக்குமாறு பீமன் என்பவரைச் சிவாஜி அனுப்பினார். பீம சேனாபதி, பல்லாளனைக் கொன்று, சிரோபல் கோட்டையைப் பிடித்துக் கொண்டு, சிவாஜியிடம் வந்தார். சிவாஜி தன் எதிரிகளோடு கடுமையாகப் போர் செய்தார்; கோட்டையின் பேரிலேறி வந்த சேனையைத் துரத்தினார். இரண்டாம் விசை அவர்கள் கோட்டை வாசலருகில் வந்த பொழுது, சிவாஜி எதிரிகளில் முசேகானைக் கொன்றார்.

சித்திரகல் கோட்டையிலே இருந்தவர், விச்சகத்தி பரமா என்பவர் ஆவர். இவருக்கு வலது பக்கம் மூவாயிரம் குதிரைக்காரர்; இடதுபக்கமும் மூவாயிரம் குதிரை. இவர் இவற்றுடன் வந்து பீஜாபூர்க்கோட்டையைக் கொள்ளையடித்துக்கொண்டு சென்றார்.

இவற்றை யெல்லாம் அறிந்த அல்லியேதில்ஷா, ஷாஜியை விடுதலை பண்ணுவதே தகுந்தது என்று கருதி, அவரை அழைப்பித்து, நடந்தவற்றை மறக்குமாறு சொல்லி, அவரை விடுதலை செய்து, சம்பாஜியையும், மற்றுமுள்ள குடும்பத்தாரையும் பெங்களூரிலிருந்து சாத்தாராவுக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்றும், சிவாஜி, சிம்ஹகட் கோட்டையைவிட்டு விட வேண்டுமென்றும், சித்திரகல் துருக்கத்துப் பரமாவை அடக்க வேண்டுமென்றும் கூறினார். அங்ஙனமே ஷாஜி பெங்களூரை விட்டுவிட்டார்; சம்பாஜி ஏகோஜி மற்றுமுள்ள குடும்பத்தார் யாவரையும் சாத்தாராவுக்கு வருமாறு செய்தார்; சிம்ம கெடியையும் விடுவித்தார்; சித்திரகல்லுக்குச் சென்று, பரமாவுடன் போர் செய்து கொன்று, பரமாவின் தலையைப் பரமாவின் விருதுகளுடன் அல்லியேதில் ஷாவிடம் கொணர்ந்து வைத்தார். அல்லியேதில்ஷா எல்லாவிருதுகளையும் ஷாஜிக்கு அளித்தார். ஷாஜி சாதாராவுக்குப் போய்ச் சேர்ந்தார்.

5 சிவாஜி புரந்தர்க்கோட்டைக்குச் சென்றிருந்தார். தன்னுடைய அமைச்சராகிய சுவர்ணர் என்கிற சோனாஜி பண்டிதரை யழைத்து அதுகாறும் நடந்த செய்திகளைக் கூறி, அவுரங்கசீபுவையும் அல்லியேதில்ஷாவையும் அடக்க வேண்டும் என்று தன் எண்ணத்தைக் கூறினார். சுவர்ணரும் இசைந்தார். தான் அவர்களோடு போர் தொடுப்பதற்கு முன் தக்க இடத்தைத் தேர்ந்தெடுத்தார். மேற்குக் கடற்பக்கம் பிரதாபகெடிக்கு அருகில் ஜாவளி என்ற நகரத்தைத் தனக்குரியதாக ஆக்கிக் கொள்ள வேண்டுமென்றும், வழியிலுள்ள பல பேரும் அல்லியேதில்ஷாவுக்குத் தோஃபா கொடுக்கிறவர்கள் என்றும் அறிந்து அவர்களையும் வெற்றி கொள்ள வேண்டும் என்று எண்ணினார். முதலில் சிம்ம கெடியைப் பிடிக்க வேண்டும் என்று கருதிப் பெரும் படையொன்றைக் கூட்டினார்; விஜயதசமி நாளில் படைகளுடன் புறப்பட்டார்; வழியில் பலரையும் வென்றார்; பாசிராஜா, கிருஷ்ணராஜா, ஜனகராஜா சந்திரராஜா இந்த நான்கு பேருக்குரிய கோட்டையைப் பிடித்து (ராய்காட் என்று பெயரிட்டு)ப்பின் ஜெயவலி நகரத்துக்கு வந்தார்; சந்திரராஜாவைத் துரத்தினார்; இதற்கு அருகிலுள்ள பிறதாப துருக்கத்தையும் கைவசப்படுத்திக் கொண்டார்; இவ்விரண்டிடங்களிலும் தன் படையை நிறுத்தினார்; மேற்குக் கடற்கரைக்குச் சென்று, கடலில் ஒரு கோட்டையெடுப்பித்துச் சிவலங்கை யென்று பேர் வைத்தார்; அங்கு அரியணையிலேறித் தம் பேரால் சிவசகம் என்று ஆண்டுமுறை ஏற்படுத்தினார். இவற்றையெல்லாம் செயவலி நகரத்துச் சந்திர ராஜா, அல்லியேதில்ஷாவுக்குத் தெரியப்படுத்தினார்.

சிவாஜியைத் தொலைத்துவிட வேண்டும் என்று எண்ணிய அல்லியேதில் ஷா, தன்னிடத்திலிருந்த பன்னிரண்டு பிரபுக்களில் அஃப்சல்கான் என்கிற அப்துல்லாகானை அழைப்பித்துச் சிவாஜியின் செயல்களைக் கூறி, வக்கீல் கிருஷ்ணாஜி பண்டிதரையும் அழைத்துக்கொண்டு பன்னிருவரும் ஒருங்கு சென்று சிவாஜியைச் சிறைப்பிடித்துவருமாறு ஆணையிட்டார். இப்பொழுது சிவாஜி பூனாவுக்கு வந்ததாகத் தெரியவந்தது. உடனே சந்திரராஜா, பண்டரிபுரத்து வழியாக ஜாவளிக்குச் சென்று ஜாவளியையும் பிறதாப கெடியையும் பிடித்துக் கொள்ளலாம் என்று கூறினார். அஃப்சல்கானும் புறப்பட்டார். சில அப சகுனங்கள் தோன்றின. பத்தேலஷ்கர் என்ற பட்டத்துயானை இறந்துவிட்டது. இதனையும் பொருட்படுத்தாது அஃப்சல்கான் மேற்கொண்டு சென்றார்.

அப்பொழுது சிவாஜிக்குக் குல தெய்வமாகிய ஸ்ரீஜெகதாம்பா துளஜா பவானி தோன்றி, ஜாவளிக்குச் செல்லுமாறு பணித்து, அங்கு அஃப்சல்கானை அழிப்பதாகக் கூறியது. சிவாஜி, பூனாபக்கலிலுள்ள கோட்டைகளை வலுப் படுத்தி ஜாவளியை நோக்கிச் செல்கிறவர், வழியிலுள்ள கோட்டைகளுக்குரிய சர்தார்களுக்கு அஃப்சல்கானைச் செல்வதற்கு விடுமாறும், தம் சேனைகளைக் காட்டாமல் மறைத்து வைக்குமாறும் பணித்துச் சென்றார்; 'வெற்றி பெற்றதும் நகரா அடிக்கப்படும்; அப்பொழுது வெளிப்பட்டு அஃப்சல்கான் படைகளை அழிக்க வேண்டும்' என்றும் அறிவித்தார்.

அஃப்சல்கான் பண்டரிபுர வழியாகச் செல்லாமல் விட்டோபா மூர்த்திக்கு

ஊறுவிளைவிக்க நினைத்தார். விட்டோபா மறைந்தருளினார். பிறகு துளஜா புரத்துக்குச் சென்று துளஜாபவானிக்கு ஊறு செய்தார். அந்த மூர்த்தியும் மறைந்தார். பின்னர்ச் செம்பு மகாதேவருக்கு ஊறு விளைவித்தார். உடன் வந்த சர்தார்களே மறித்தார்கள். பின்னர்ப் பல்லிவனத்துக்குச் செல்ல, அங்கே கண்டோராவ் மறைந்தருளினார்.

பிறகு சிவாஜியிடம் கிருஷ்ணாஜி பண்டிதரை அஃப்சல்கான் தூது அனுப்பினார். அஃப்சல்கான் சொல்லியவண்ணம் கிருஷ்ணாஜி பண்டிதர், சிமாகெடி, பீமநதி, புரந்தர கெடி ஆகியவற்றை விட்டுவிட வேண்டுமென்றும் பேட்டியான பிற்பாடு மற்றவை தெரிய வரும் என்றும் சிவாஜியிடம் கூறினார். சிவாஜி மகிழ்ந்து ஜாவளியில் காண்பதற்கு இசைவு அளித்தார்.

இதற்கிடையில், அஃப்சல்கான் பல சீர்மைகளை வெற்றி கொண்டு வருங்கால், சம்பாஜி அஃப்சல்கானை எதிர்த்தார் என்றும், அஃப்சல்கான் சம்பாஜியைக் கொன்றார் என்றும், இச்செய்தியை அறிந்த ஷாஜி வருத்தத்தினால் இரண்டு திங்கட்குப் பின் இறந்தார் என்றும் சிவாஜி அறிந்தார். (சம்பாஜி யிறந்தது சகம் 1580; கி.பி. 1658.) ஷாஜியின் இறுதிச் சடங்குகளை ஏகோஜி நடத்தினார். ஜிஜாபாய் சிவாஜியைக் காணவந்தார். அவரைப் பிரதாப கெடியில் இருக்கச்செய்து சிவாஜி சினத்துடன் இருக்குங்கால் அஃப்சல்கானின் வருகையை அறிந்தார்.

சிவாஜி அஃப்சல்கான் இருக்கும் இடத்துக்கு வந்தார். அஃப்சல்கான் சிவாஜியைக் கட்டிப்பிடித்துக் கொண்டு மடியிலிருந்த கட்டாரியை யுருவிச் சிவாஜியின் வயிற்றிலே குத்தினார். சிவாஜி மெல்லிய இரும்புக் கவசம் அணிந் திருந்தமையின் அஃப்சல்கான் முயற்சி வீணாயிற்று. சிவாஜி தன் பிச்சுவாவி னால் அஃப்சல்கானை அடித்து, இடது கையிலேயிருந்த புலிநகத்தாலே வயிற்றைக் கிழித்தார். அஃப்சல்கான் குடலை உள்ளே தள்ளிப் போர்வையினாலே கட்டிக் கொண்டு பட்டாக் கத்தியாலே சண்டை செய்தார். சிவாஜியும் பட்டாக் கத்தியால் அஃப்சல்கானை வீழ்த்தினார். இது சகம் 1581இல் (கி.பி. 1659) நிகழ்ந்ததாகும்.

உடனே வக்கீல் கிருஷ்ணாஜி பண்டிதர் கத்தியை எடுத்துக் கொண்டு போர் செயத் தொடங்கினார். சிவாஜி அவருடன் போர் செய்யாமல் விலகிச் சென்றார். மெய்க்காவலாளன் ஒருவன் கிருஷ்ணாஜி பண்டிதரை வெட்டிப் போட்டான்.

முன்னர்க் கூறியிருந்த வண்ணம் நகரா அடிக்கப்பட்டது. அஃப்சல்கா னுடைய சைனியங்க ளெல்லாம் கொல்லப்பட்டன. அகப்பட்ட சர்தார்கள் மரியாதையோடு அனுப்பப்பட்டார்கள். அல்லியேதில்ஷா அஃப்சல்கானின் அழிவைக் கேள்விப்பட்டு மனம் நொந்தார்.

6 சிவாஜி ஜாவளி கெடிக்குப் போகுங்கால் நேதாஜி என்பவரைப் புனா தேயத்தில் இருக்கச் செய்தார். அஃப்சல்கான் இறந்ததும் அல்லியேதில்

ஷா சேனைகளைக் கூட்டுகிறார் என்பதை நேதாஜி கேள்விப்பட்டுச் சிவாஜி யைக் காணவந்தார்.

சிவாஜி நேதாஜியுடன் அல்லியேதில் ஷாவின் கோட்டைகள் பலவற்றை வென்றார். அப்பொழுது ஹிலால்கான் என்பவர் சிவாஜி பக்கம் சேர்ந்தார். தான் வென்ற இடங்களில் சேனைகளை வைத்துப் "பனால்கட்" கோட்டையைக் கைப்பற்றிச் சிவாஜி அங்கேயே தங்கி யிருந்தார். சிவாஜி பனால் கெடியைத் தாக்கக் கூடும் என்று நினைத்த அல்லியேதில்ஷா, ருஸ்தும்கான் என்பவரை அனுப்பினார். ருஸ்தும்கான், பனாலகெடியைச் சிவாஜி பிடித்துக் கொண்ட செய்தியை அல்லியேதில்ஷாவுக்குத் தெரிவித்தார்.

இவற்றை அல்லியேதில்ஷா அவுரங்கசீபுக்குத் தெரியப் படுத்தினார். அவரங்கசீபு சுலுபுகான் (ஜுல்ப்கார்கான்) என்பவரைப் பெரும்படையுடன் அனுப்பினார். இச் சர்தாரும் மேற்கூறப்பட்ட ருஸ்தும்கானும் பனால கெடி நோக்கி வந்தனர். சிவாஜி இடைமறித்து அவர்களைத் தோற்றோடுமாறு செய் தார். மீண்டும் சுலுபுகான் பிற சர்தார்களுடன் வந்து தோற்றோடினார். இங்ஙனம் 16 தடவை சுலுபுகான் படைகள் தோற்றழிந்தன.

இதனை அறிந்த அவுரங்கசீபு சிவாஜி இருக்கும் இடத்தை அறிய விழைந் தார். சிவாஜி ஜெயவலி முதலாகிய இடங்களை வென்றார் என்றும், அவ ருடைய சேனைத்தலைவன் நேதாஜி, பாதுஷாவின் சீர்மைகள் பலவற்றை வென்று கொண்டிருப்பதாகவும் கூறினர். அப்பொழுது அவுரங்க சீபு தன் னுடைய மாமனார் ஷயிஸ்டகான் என்பவரைப் பல சர்தார்களுடன் சென்று சிவாஜி வென்ற நாடுகளை மீட்டுக்கொண்டு சிவாஜியைக் கண்டித்து வருமாறு ஏவினார். ஷயிஸ்டகானும் சக்கிராபதிப் பகுதியை நோக்கிச் சென்றார். இதைச் சிவாஜி யறிந்தால், ஷயிஸ்டகானை வழி மறிப்பார் என்று கருதிய அல்லி யேதில்ஷா பனாலகெடியைவிட்டுச் சிவாஜி வெளியே புறப்படாதவாறு செய்ய வேண்டுமென்று நினைத்துக் கர்நூலிலிருந்த ஜோஹர்கான் என்பவரைச் சிவா ஜியை எதிர்த்துப் படை செலுத்துமாறு ஏவினார். அவரும் அங்ஙனமே சென்று பனாலகெடியை ஐந்துமாதம் முற்றுகை யிட்டார்.

ஷயிஸ்டகான், சக்கிராபதி துருக்கத்தை முற்றுகை யிட்டார். சிவாஜி இதனையும் பொருட்படுத்தவில்லை.

சிவாஜி, பனால கெடியில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்ற செய்தி ஜிஜாபாயி அறிந்தார்; சங்கிராம சக்ராபதிக்கோட்டையை ஷயிஸ்ட கான் முற்றுகை யிட்டிருக்கிறார் என்பதையும் அறிந்தார்; பனாலாவுக்குச் சென்று சிவாஜியை விடுவிக்க வேண்டும் என்று நினைத்தார். அப்பொழுது நேதாஜி என்ற சேனைத்தலைவர் ஷிலால்கான் என்பவருடன் வந்து ஜிஜாபா யியை வணங்கினார்; பின்னர் ஜிஜாயியின் ஆணையின்பேரிலே பனாலாவுக்குச் சென்றனர். ஷயிஸ்டகான் இவர்களை இடைமறிக்கச் சேனையை அனுப்பினார். கடும்போரில் ஷிலால்கானின் மகன் இறந்தார். இவற்றைச் சிவாஜி கேள்வி

யுற்றார்; வருந்தினார்; உறங்கும்பொழுது துளசிபவானி கனவில் தோன்றிக் கூறியவண்ணம், திரியம்பக பாஸ்கர் என்பவரைப் பனாலாவில் வைத்துவிட்டு, இரவில் புறப்பட்டு ஐந்து காதவழிக் கப்பாலிலுள்ள விசால்கட் கோட்டையை அடைந்தார். ஷயிஸ்டகான் இதனையறிந்து மஹசூத் என்பவரைச் சிவாஜியைப் பிடித்து வருமாறு ஏவினார். இதற்குள் பல்லிவனத் தரசர் எசவந்த ராஜா சிருங்கார்பூர் சூரியராஜா ஆகியோர் விசால்கட்கோட்டையை முற்றுகையிட்டுத் தோற்றனர். பின்னர்ச் சிவாஜி அங்கிருந்து புறப்பட்டு ராஜகெடிக்கு வந்து தன் தாயார்க்கு வணக்கம் செலுத்தினார். மஹசூதும் மானமிழந்து திரும்பி னார்.

சிவாஜியின் கூட்டளைப்படி திரியம்பக பாஸ்கர் பனாலகெடியை ஜோஹர் கானுக்கு ஒப்படைத்துப் பல பரிசுகளும் பெற்றுச் சிவாஜியிடம் வந்தார். ஜோஹர்கான் சிவாஜியிடம் கையூட்டுப் பெற்றுக்கொண்டு சிவாஜியை விட்டு விட்டார் என்று அல்லியெதில்ஷா கருதி, அத்தொகையைத் தன்னிடம் ஒப்ப டைக்குமாறு பணித்தார். ஜோஹர்கான் வருந்தித் தன் சேனையுடன் கர்னூ லுக்குச் சென்றார். இதை யறிந்தயேதில்ஷா ஒரு படையை அனுப்பினார். அப்படைஞர் ஜோஹர்கானுக்கு நஞ்சு கொடுத்துக் கொன்று விட்டனர்.

சிவாஜி பின்னர்த் தன் அமைச்சருடன் கலந்து கொண்டு, ஷயிஸ்டகான் கரதலப்கான் என்பவருடனே சிறிது படைகளுடன் ராஜகெடியிலே வந்திருப் பதை அறிந்து, சிறிது படைகளை ஜெயவலிப் பகுதியில் காட்டிலே பதுங்க வைத்துக் கொண்டிருந்தார். கரதலப்கான் பல சர்தார்களுடன் வந்து பல கோட்டைகளைப் பிடித்துக் கொண்டு சிவாஜியிருக்கும் காட்டுக்குள் நுழைந்தார், பெரும் போர் நடந்தது. தான் அழிவது உறுதியென்று நினைத்த கரதலப்கான். இராசா வியாக்கிரி என்பவருடைய தூண்டுதலின் பேரில், சமாதானம் செய்து கொண்டு, எல்லாப் பொருள்களையும் கொடுத்துவிட்டு ஷயிஸ்டகானிடம் போய்ச் சேர்ந்தார்.

சிவாஜி, நேதாஜியுடன் பல்லிவனத்துக்குச் சென்றார். அதன் அரசர் ஜெயவந்தி ராஜா ஆவர். அவர் சிருங்கார்ப்பூர் அரசர் சூர்யாராஜாவிடம் போயிருந்தார். அவர்களை மன்னித்துச் சிவாஜி சித்ரபுளினத்துச் சென்றார்; அங்குள்ள பரசுராமர் கோயிலுக்குச் சென்று வணங்கினார்; பிறகு சங்கமேசு வரத்தில் இருந்த சூரியராவ் என்பவரைத் தனக்கு ஆதரவாக இருக்கச் செய்து, மேற்குக் கடற்கரை யோரத்தில் வாணிகத்தின் பொருட்டு வந்திருந்த வெள்ளைக் காரர் முதலாகிய எல்லாரையும் தனக்கு அடங்குமாறு செய்து கொண்டு, அவர் கள் அளித்த பலப்பல பொருள்களை ஏற்றுக்கொண்டு, எல்லாநாடுகளையும் தனக்குரியதாக்கிக் கொண்டு, ராஜபுரத்திலிருந்தார்.

அல்லியேதில்ஷா, பிரபாவளியின் அரசராகிய சூரியராவுக்கு எழுதியதின் பேரில், அவர் சங்கமேசுவரத்தை இரவில் தாக்கினார். ஆனால் மல்லிகூர் என் கிறவர் சூரியராஜாவைத் துறத்திவிட்டார். சிவாஜி சங்கமேசுவரத்துக்கு வந்தார்; சூரியராஜாவை மன்னித்தார்; தன் பக்கம் இருக்குமாறு பணித்துத் தன்னிடம்

வரச் சொன்னார். ஆனால் அவர் வரவில்லை. பின்னர்ச் சிவாஜி சிற்துருக்கம் என்ற கோட்டையைப் பிடித்து அதற்கு மண்டனகட் என்று பேர் சூட்டினார்; சிருங்கார்ப்பூரைக் கைக்கொள்ள வேண்டுமென்று படையெடுத்துச் சென்றார். சூரிய ராஜா ஓடிப் போய்விட்டார். அந்த இடத்தைக் கைப்பற்றித் திரியம்பக பாஸ்கரைப் பிரபாவளியில் இருக்கச் செய்து தாம் சிருங்கார்ப்பூரில் தங்கியிருந் தார். பின்னர்த் தெற்குப்பகுதியில் பெங்களூர் செஞ்சி ஆகியவற்றுள் செஞ்சி யைக் கைப்பற்றி (கி.பி. 1677இல்), பிரஞ்சுக்காரருடன் கி.பி. 1680இல் உடன் படிக்கை செய்துகொண்டு, பூனாவுக்குத் திரும்பிச் சென்றார்.

அல்லியேதில்ஷாவும், அவுரங்கசீபும் சிவாஜியின் போர்த்திறமையை வியந்து, சிவாஜியோடு போர் செய்வது பயன்தாராதென்று நினைத்துத் தத்தம் இடத்திலேயே வாளா இருப்பது நல்லது என்று முடிவெடுத்தனர். எனினும் அவுரங்க சீபுக்குச் சிவாஜியை உயிரோடு பிடித்து அவரைக் காண வேண்டு மென்ற விருப்பம் இருந்தது; முடியவில்லை; ஆகையால் சிவாஜியின் உருவச் சித்திரத்தையாவது காணவேண்டுமென்று ஒரு சித்திரக்காரனை அனுப்பினார். அச்சித்திரக்காரர் பல தடவை முயன்றும் சிவாஜியைக் காண முடியவில்லை. ஒரு நாள் சிவாஜி, மிக விரைவாகப் போகிறவர், குதிரை மேல் இருந்து கொண்டே சோளக்கதிரைப் பறித்துச் சோளத்தைத் தான் தின்று, குதிரைக் குச் செத்தையூட்டிக் கொண்டு, விரைந்து சென்றார். அச்சித்திரக்காரர் அக் காட்சியை வரைந்து அவுரங்கசீபுக்குக் கொடுத்ததும், அவுரங்கசீபு அக்காட் சியைக் கண்டு அத்தகையவரை வெல்வது எளிதன்று என்று முடிவெடுத்தார்.

**7** பின்னர்ச் சிவாஜி, தன் தமையன் சம்பாஜியின் மனைவி மக்களையும் ராஜாபுரத்தில் இருக்கச் செய்தார். சம்பாஜியின் மகன் உமாஜி; உமாஜியின் மனைவி சகுப்பாயி. சக்குபாயிக்கு ஒருமகன் பிறந்தான். அவற்குப் பறசோஜி என்று பெயரிடப்பட்டது.

ஷாஜியின் மூத்த மனைவியின் மகன் ஏகோஜி ஆகையால் அவருக்கு ஷாஜியின் விருதுகள் யாவும் கொடுக்கப்பட்டன. அவர் தன் மனைவியர் தீபா பாயி, சயிபாயி ஆகிய இருவருடன் சிறிது சைனியங்களுடன் பெங்களூர்க்கு அனுப்பப்பட்டார்.

ஏகோஜிக்குத் தீபாபாயியின் வயிற்றில் சகம் 1593இல் மூன்றாவது ஷாஜி பிறந்தார்.

இவ்வமயத்தில் அல்லியேதில்ஷா, ஏகோஜியின் நட்பைப் பெற்றால் தனக்கு நன்மை பயக்கும் என்று கருதி அவருடன் பேச்சு வார்த்தை நடத்தி னார். ஏகோஜியும் ஏதில்க்ஷாவின் விருப்பப்படி நடக்கலானார்.

இந்நாளில் தஞ்சை நாயக்கருக்கும் திருச்சி நாயக்கருக்கும் மன வேறுபாடு தோன்றியது. திருச்சியார் தஞ்சாவூர் பேரில் போர் தொடுத்தனர். தஞ்சை நாயக்கர் அல்லியேதில்ஷாவின் உதவியை நாடினார். ஏதில்ஷா, காதர்கலாஸ் கான் என்பவரையும் அப்துல்ஹலீம் என்பவரையும் அனுப்பினார். அவர்கள்

இருவரும் தமக்கு உதவியாக ஏகோஜியையும் அழைத்துக்கொண்டு போக வேண்டுமென்று வேண்ட அதற்கு ஏதில்ஷா இசைவளித்தார். ஏகோஜியும் அதற்கு இசைந்து பெரும்படையோடு வந்தார்; வழியில் ஆரணியை வென்று, வேதாஜி பாஸ்கர் என்பவரை அங்கிருக்கச் செய்து, தஞ்சைக்கு வந்து, திருச்சியாரைத்துறத் திப் பெங்களூர்க்குப் புறப்பட்டவர், திருமழபாடியில் தங்கினார். அப்பொழுது சகம் 1596இல் தீபாபாய் இரண்டாவது மகனைப் பெற்றெடுத்தார். அவர் மூன்றாவது சரபோஜி ராஜா எனப்பட்டார். தஞ்சாவூரிலே ஒருவருக்கொருவர் கலாம் விளைவித்துக் கொண்டு ஏகோஜியிடம் வந்து தஞ்சாவூர் அரசை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டிக் கொண்டனர். ஏகோஜியும் தஞ்சாவூர்க் கோட்டைக்கு வந்தார்.

8 சிவாஜிக்கு எட்டு மனைவியர் இருந்தனர்; அவர்கள் சயிபாயி, காசி பாயி, சக்வராபாயி, புதுளாபாயி, சகுணாபாயி, சோயரிபாயி. மாளவோ, விசாரே குலத்துப் பெண்கள் ஆக எண்மர்.

மூத்தாள் சயிபாயிக்கு மூன்று பெண்களும் ஒரு ஆணும் பிறந்தனர். ஆண் மகன் சம்பாஜி, சகம் 1596இல் பிறந்தார். சிவாஜி முதற்பெண் சக்வார்பாயியை நிம்பால்கர் வீட்டிலேயும், இரண்டாவது பெண் ராணு பாயியை ஜாதவ் வீட்டிலேயும், மூன்றாமவள் அம்பிகாபாயியை மாடிக்கு வீட்டிலேயும் கொடுத் தார்; ஷாஜி மாடிக்குக்குச் செஞ்சிப் பகுதியில் சிறிது ஜாகீரும் கொடுத்தார்.

சக்வராபாயிக்குக் கமலாபாயி என்றொரு பெண். அவளைச் சிவாஜி நேதோஜிக்குக் கொடுத்தார்.

சகுணாபாயிக்கு ராஜகுமாராபாயி என்றொரு மகள். அவள் கேனோஜி சிற்கே என்பவருக்கு மணம் செய்விக்கப்பட்டாள்.

சோயரிபாயிக்கு ராமராஜா என்ற மகனும், தாதுபாயி என்ற பெண்ணும் பிறந்தனர். எஞ்சியோர்க்கு மக்கள் பிறக்கவில்லை.

மூத்த மகன் சம்பாஜிக்குச் சகம் 1602இல் பட்டம் கட்டிப் புனா பகுதி யும், இளைய மகன் ராஜா ராமுக்குச் செஞ்சி அரசும் கொடுக்கப் பெற்றன.

புனா முகமதியர்க்கு உரியதாயிற்று. ராஜா ராமும் செஞ்சியை விட்டுத் தஞ்சைக்குச் சென்று சின்னாள் பின்னர்ச் சிவாஜியிடம் சென்றடைந்தார். ராஜா ராமுக்குப் பனாலகெடி கொடுக்கப்பட்டது.

சிவாஜி சேதுயாத்திரையில் ஒருவருக்கும் தெரியாமல் வந்து போனார். ஏகோஜி ஆண்ட காலத்தில் தஞ்சாவூர்க் கோட்டைக்கு வந்து, கோட்டையைச் சுற்றிப் பார்த்துத் தன் கருத்தை எழுதி அனுப்பினார். தான் வந்த பொழுது சிகா மோதிரம் ஒரு கடையில் அடகு வைத்ததாகவும், அதை வாங்கி யனுப்பு மாறும் எழுதியிருந்தார். பின்னர் இந்த உலக வாழ்வை நீத்தார்.

9 சம்பாஜி ஆட்சி செய்கையில் அவுரங்கசீபு, அவுரங்கபாது என்ற ஊரில் எல்லாஅரசர்களையும் வரச் செய்தார். வந்த யாவரும் அவுரங்க் சீபுக்கு வணக்கம் செலுத்தினர். ஆனால் சம்பாஜி மட்டும் வணங்கவில்லை. அவுரங்க சீபு சினம் கொண்டு சம்பாஜியைச் சிறைப்படுத்தினார். சில மாதங்களில் சம் பாஜி தப்பியோடினார். இதையறிந்த அவுரங்கசீபு ஒரு படையையனுப்பினார். அப்படை தோற்றது. பெரும்படை மீண்டும் சென்று சம்பாஜியைக் கைது செய்து கொணர்ந்தது. வணக்கம் செலுத்தினால் சமபாஜியை விட்டுவிடுவதாக அவுரங்கசீபு கூறினார். சம்பாஜி வணங்கவில்லை. மீண்டும் சிறையில் வைத்துச் சின்னாள் பின்னர் ஓரிடத்தில் சிறிய வாசற்படி வைத்து அதன் வழியாய்ச் சம்பாஜியை அழைத்துவரச் சொன்னார். சம்பாஜி முதலில் காலை வைத்துக் குனியாமல் வந்தார். அவுரங்கசீபு மகிழ்ந்து துலுக்கனாய்ப் போனால் சம் பாஜியை விடுவிப்பதாகக் கூறினார். அவுரங்கசீபு தன் மகளைத் தந்து மணம் செய்விப்பின், சம்பாஜி முகமதியனாக மாறுவதாகக் கூறினார். அவுரங்கசீபுக் குச் சினம் மிகுவதாயிற்று. சம்பாஜியைக் கொன்று விடுமாறு ஆணையிட்டார். சகம் 1617இல் சம்பாஜி கொல்லப்பட்டார்.

இதனை அவுரங்கசீபின் பெண் கேள்விப்பட்டுச் சம்பாஜியின் வீரத்தைப் போற்றித் தான் சம்பாஜிக்கே மனைவி என்று கூறி அதற்கேற்பத் தாச்சினா பொடியைத் தன் பல்லில் போட்டுக் கொண்டாள். அவுரங்கசீபு வருந்தி அவள் மனத்துக்கேற்ற முறையில்அவளுக்கு இன்பம் தர வேண்டுமென்று நினைத்துச் சம்பாஜியின் வழியினர் யாரேனும் உளரோ என்று அறிந்துவரச் சொன்னார். சம்பாஜிக்கு ஷாஹு என்ற மகன், சகம் 1614இல் பிறந்தாரென்று அறிந்து அவரை டில்லி பாதுஷாவிடம் கொணர்ந்தனர். அப்பிள்ளையை அவுரங்க சீபு தன் மகளிடம் அளித்தார். அவருக்குப் பன்னிரண்டு வயதாகிற போழ்து சக்வார் பாயியை மணம் செய்வித்தனர். அவுரங்கசீபுவிடம் பிள்ளையையும் பெண்ணையும் காண்பிக்க அனுப்புங்கால் சக்வார்பாயியை அனுப்பாமல் வீரு என்ற வேறொரு பெண்ணை யனுப்பினர்.அவுரங்கசீபு மகிழ்ந்து ஷாஹுவுக்குரிய அரசச்செல்வ மெல்லாம் வீருவுக்கு அளித்தார். பாட்சாவுடைய பெண் பரிந்து உரைத்தமையால் தன் வருமானத்தில் நாலத்தொன்று ஷாஹுவுக்கு அளித்துப் புனாதேயத்துக் கனுப்பினார். ஷாஹுவும் சகம் 1627இல் சாத்தாராவில் அரசு கட்டிலேறினார்; தம் தாயத்தாருள் ரகோஜி யென்பவரை வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றார்; ஒரு நாள் ஒரு குழந்தையைக் கண்டு அவற்குப் பத்தே சிங்கு என்று பெயரிட்டு வளர்த்து அக்கல்கோட்டையை அளித்தார்; ரகோஜியை வீருவுக்குப் பிள்ளை யாக்கினார். மாலோஜியின் தம்பி விட்டோஜி ராஜா வின் வழியில் வந்த ராமராஜாவை வளர்த்தார். (அட்டவணை II பார்க்க)

ஷாஹு இறந்த பிறகு சகம் 1647இல் ராமராஜா அரசர் ஆனார். இவருக்குப் பின் சகம் 1694இல் கேலோஜியின் பேரன் ஷாஹு அரசரானார்.*

சிவாஜியின் இரண்டாவது மகன் ராஜாராம். அவருக்குப் பனால தேயம் அளிக்கப்பட்டிருந்தது. அவருக்குப் பிறகு அவர் மகன் சம்பாஜி ஆட்சி

செய்தார். அவருக்குப் பிறகு அவர் தாயத்தாரில் ஒருவராகிய சிவாஜி யென்ப வர் அரசரானார்.*

10 தஞ்சாவூரை வென்ற ஏகோஜியை நான்காம் ஏகோஜி என்னலாம். சகம் 1596இல் மூன்றாவது சரபோஜி ராஜா திருமழபாடியில் பிறந் தார். நாயக்கர்களிடமிருந்து பேஷ்கஷ் பணம் வரவில்லை. தஞ்சையிலுள்ள நாயக்கர்கள் கோட்டை வெளியிலே தங்கியிருந்த இரண்டு முஸ்லிம் பிரபுக்களை யும் ஏமாற்றத் திட்டமிட்டனர். பாதுஷாவிடம் சென்று வந்த வக்கீல் இச் செய்தி களை அவ்விரண்டு பிரபுக்களிடம் கூறித் தஞ்சை அரசை அவர்களே ஏற்று நடத்தலாம் என்றார். அப்பிரபுக்கள், நிலைமையை நன்கு அறிந்தவராய், ஏகோஜியிடம் சென்று கூற, ஏகோஜி சகம் 1596இல் மாசி மீ தஞ்சைக்கு வந்து இரண்டு பிரபுக்களையும் கலந்து கொண்டு, வடக்குவாயில் வழியாகத் தஞ்சைக் கோட்டைக்குள் புகுந்தார். சிறிது கலாம் நடந்த பிறகு கோட்டையைத் தன் வயமாக்கிக் கொண்டு கீழவாயில் வழியாக வெற்றியுடன் வெளிப் போந்தார். பின்னர்த் தன்னுடன் வந்த இரு பிரபுக்களிடமும் பெங்களூர்க்குத் தான் போவ தற்கு விடை கேட்டார். அவ்விரு பிரபுக்களுக்குள் மனவேறுபாடு தோன்றினமை யின், ஏகோஜியையே தஞ்சையாட்சியை ஏற்குமாறு செய்தனர். பின்னர் ஏகோஜி அவ்விருவரையும் பீஜப்பூருக்கு அனுப்பி வைத்தார். அல்லியேதில் ஷாவும் மிக்க மகிழ்ச்சியடைந்து தஞ்சாவூர் அரசை வழிவழி ஆட்சி செய்யும் உரி மையை ஏகோஜிக்கு அளித்தார்.

பின்னர்த் திருச்சி நாயக்கர்கள் ஏகோஜியுடன் போர்புரிந்து, தோல்வி யுற்றுச் செந்தலைப் பகுதியை ஏகோஜிக்கு விட்டுக் கொடுத்தனர். சகம் 1598 இல் ஏகோஜிக்கு மூன்றாவது மகன் துக்கோஜி பிறந்தார். ஏகோஜியின் இரண்டாவது மனைவி அண்ணுபாயிக்கு ஒரு மகள் பிறந்தாள். இவர் சேர்த்து கொண்ட ஒன்பது மனைவியரிடத்தில் ஏழு பிள்ளைகள் பிறந்தனர்.

இவர் சகம் 1604இல் இறந்தார்.

11 ஏகோஜியின் மூத்த மகன் ஷாஜி III பட்டமேற்றார். இவரது மனைவி சிம்மாபாயி. இவரால் சேர்த்துக் கொள்ளப்பட்ட மனைவியர் பலர். இவர் தன் தாய் தீபாபாயியின் மனத்துக் கேற்ப நடந்து கொண்டு அரசாட்சி நடத்தினார்.

இவர் காலத்தில் முல்லா என்பவருடைய கலாமும், சுலுபுகான் (ஜல் ஃபிகர்கான்) என்பவருடைய படையெடுப்பும் நிகழ்ந்தன.

இவருடைய இரண்டாவது தம்பி துக்கோஜிக்கு சகம் 1617இல் ஐந்தா வது ஏகோஜி பிறந்தார். இவ் ஏகோஜிக்குப் பாவா சாயபு என்றும் பேருண்டு.

---

*இவ்விருவரும் தஞ்சை மராட்டியக் கல்வெட்டுக் காலத்தில் ஆட்சி செய்து கொண்டிருந்தனர்.

இந்த ஷாஜி சகம் 1633இல் இறந்து போனார்.

ஷாஜியின் முதல் தம்பி மூன்றாவது சரபோஜி அரசாளத் தொடங்கினார். இவரது மனைவியர், சுலக்ஷணா பாயி, அபரூப பாயி, ராஜஸபாயி எனும் மூவர் ஆவர்.

இவர் காலத்தில் அல்லியேதில்ஷா ஆட்சியிலிருந்து வந்த பிரபுக்கள் சிலருக்கு ஆதரவளித்துக் காப்பாற்றினார்.

இவருடைய தம்பி துக்கோஜியின் மனைவியர் அருணாபாயி, ராஜகுமாராபாயி, மோகனா பாயி, மஹினாபாயி, லக்ஷ்ம் பாயி எனும் ஐவர் ஆவர்.

துக்கோஜியால் சேர்த்துக்கொள்ளப் பெற்ற மனைவியர் அறுவரில் ஐவர் நாயக்கர் கூட்டம்; ஒருவர் மராட்டியர்; இம் மராட்டியரைக் கத்திக் கல்யாணம் செய்து கொண்டார். இவர் பெயர் அன்னபூரணாபாயி. இவர் வயிற்றில் சகம் 1665இல் பிரதாப சிம்மர் தோன்றினார். சாமாபாயி என்ற பெண்ணும் பிறந்தது.

மேலே கூறிய துக்கோஜியின் மகன் ஐந்தாவது ஏகோஜி ராஜாவெனப் பட்ட பாவா சாயபுக்குச் சுஜான்பாயி, ஜயந்திபாயி, சக்வார்பாயி, சுகுமார் பாயி, கிரிஜாபாயி, பார்வதிபாயி ஆக அறுவர் மனைவியராவர். இவர்கள் தவிரச் சேர்த்துக் கொள்ளப்பட்டவர் மூவர் மனைவியர்.

பிரதாப சிங்கருக்கு, அஹல்யாபாயி, யமுனாபாயி, சக்வார்பாயி, துரௌபதிபாயி, எசவந்த் பாயி ஆக மனைவியர் ஐவர். இவர் சேர்த்துக்கொண்ட மனைவியர் எழுவர்.

பிறதாப சிங்கருடைய தங்கை சாமாபாயி, மல்லார்ஜி காடேராவுக்குத் திருமணம் செய்விக்கப்பட்டார்.

துக்கோஜியின் மகன் நாநாசாயபுக்கு அப்புசாயபு என்றொரு மகன்; அப்புசாயபுக்கு நாநாசாயபு என்று ஒரு பிள்ளை.

சரபோஜிக்கும் துக்கோஜிக்கும் வீட்டுச் சண்டையேற்பட்டது. ஆகவே துக்கோஜி சிறிது ஆட்சிப்பகுதியைப்பெற்றுக் கொண்டு மகாதேவி பட்டணத்தில் தன் குடும்பத்துடன் தங்கியிருந்தார்.

சரபோஜியின் இரண்டாவது மனைவி அபரூபாபாயிக்குச் சில கெட்ட பெண்களின் நட்புக்கிடைத்தது. சரபோஜிக்குப் பிள்ளைகள் இல்லை. சரபோஜியின் தம்பி துக்கோஜிக்கோ பிள்ளைகளுண்டு. ஆகவே ஆட்சி துக்கோஜியின் மக்களுக்குத் தானே சேரும் என்று அபரூபாபாயிக்குக்கூறினர். பொறாமைத்தீ மூளப்பெற்ற அபரூபா பாயி தான் கருவுற்றதாகக் கூறி வேறொருவருடைய குழந்தையைக் கொணர்ந்து தான் மகப்பேறடைந்ததாகவும் கூறி அந்தப் பிள்ளைக்குச் சவாயி ஷாஜி என்று பேரும் வைத்தார்கள்.

இப்பொய் ஆட்டம் மகாதேவபட்டணத்திலிருந்த துக்கோஜியால் சரபோஜிக்குத் தெரிந்தது. அரசர் வியந்து அப்பிள்ளையைக் கொன்றுவிடச் செய்தார். பின்னர்ச் சகம் 1649இல் சரபோஜி இறந்தார். இவரது மனைவியருள் சுலக்ஷணாபாயி, ராஜஸாபாயி ஆகிய இருவர் உடன்கட்டையேறினர்.

உடனே துக்கோஜி அரசெய்தினார். அந்நாளில் திருச்சியில் மீனாட்சி என்பவர் அரசாட்சி செய்து கொண்டிருந்தார். உள்நாட்டுக் குழப்பம் நடந்தமையின், துக்கோஜி மீனாட்சிக்குதவியாகப் படையை அனுப்பி உதவி செய்தார்.

துக்கோஜி சகம் 1657இல் இறந்தார்.

12 துக்கோஜியின் மூத்த மகன் ஐந்தாவது ஏகோஜி அதாவது பாவா சாயபு ஆட்சியெய்தினார். அவர் யாரையும் நம்புவதில்லை. இப்படி எல்லார் பேரிலும் ஐயப்பாடு கொண்டு ஆட்சி செய்யுங்கால் சந்தா சாயபு தஞ்சாவூர் பேரில் படையெடுத்தார். உடல் நலமில்லாத போதிலும் அரசர் விடாது போர் புரிந்தார். சந்தாசாயபு கோட்டையைப் பிடிக்க முடியாதவராய்ச் சிறிது பணம் பெற்றுக்கொண்டு திருச்சிக்குப் போனார். இப்பாவா சாயபு சகம் 1658இல் இறந்தார்.

ஆட்சி செய்ய வேறெவரும் இன்மையால், பாவா சாயபுவின் மனைவி சுஜான்பாயி ஆட்சியை ஏற்றுக் கொண்டார். அவர் ஏறத்தாழ ஈராண்டுகள் ஆட்சி செய்தார். இவர் ஆட்சி புரிகையில் முன்னர்ச் சரபோஜிக்கு ஒருமகன் பிறந்ததாகப் பொய்யாகக் கூறிக் கொன்று விட்டார்களே அவன் பிழைத்திருக்கிறான் என்று ஒரு வதந்தியை எழுப்பிக் கோயாஜிகாட்டிகே என்பவர், ரூபி என்றவளின் மகன் சுபான்யா என்பவனைக் கொணர்ந்து, தேவினாம்பட்டினத்திலிருந்த (Fort St. David) ஆங்கிலேயரிடம் சிறிது உதவி பெற்றுச் சகம் 1660 இல், தஞ்சையை யடைந்து, காட்டு ராஜா வென்று பேர் வைத்து, சுஜான் பாயியை நீக்கி, அரசாட்சி எய்தச் செய்தார். இச் சூழ்ச்சி வெளிப்பட்டது. ஆகவே சகம் 1661 இல் சுபான்யாவை நீக்கிப் பிரதாப சிம்ம ராஜா அரசு எய்தினார். இதே ஆண்டில் பிரதாப சிம்மருடைய இரண்டாம் மனைவி திரௌபதாபாயி வயிற்றில் துளஜா ராஜா பிறந்தார்.

13 தஞ்சாவூரில் இந்நாளில் சையிது என்னும் முகமதியர் கில்லேதாராகவும் சேனைத் தலைவராகவு மிருந்தார். ஏகோஜி காலம் முதல் நடந்துவந்த தருமங்கள் எல்லாவற்றுக்கும் இக்கில்லேதார் தடைகள் ஏற்படுத்தி வந்தார். இவர் கெட்ட நடத்தையுள்ளவர்; தன் அலுவல்களினால் பெற்ற செல்வாக்கினாலே சுபானியாவை அரசனாக்கினார்: பாவா சாயபுடைய சர்க்கேல் சித்தோஜியைத் துன்புறுத்தினார்; பிரதாப சிங்கரையும் அரசுகட்டிலேற்றினார்; தன் மகளைச் சந்தா சாயபுவின் மகனுக்கு மணம் செய்வித்து, அம்மருமகனைத் தஞ்சைக்கு அரசராக்க விரும்பினார்.

இச்சையிதுக்கு ஒரு தம்பியுண்டு; சயிதுகாசிம் என்று பெயர். அரசரிடம்

மிகுந்த பற்றுக் கொண்ட காசிம் தன் தமையனுடைய சூழ்ச்சிகளையெல்லாம் அரசரிடம் தெரிவித்தார். இதனால் அரசர் சயிதுவின் மகள் திருமணத்தைத் திருவிடைமருதூரில் வைத்துக் கொள்ளச் செய்தார். திருமணமும் நடந்தது. மறு நாள் வழக்கப்படி கோட்டையின் வாசல் திறக்கும்போது சையிது சேனை களுடனே கோட்டையில் நுழைந்து கோட்டையைப் பிடிப்பது என்று திட்ட மிட்டிருந்தார். இத்திட்டத்தைச் சயிதுவின் தம்பி காசிம் வழி உணர்ந்த அரசர், மல்லார்ஜிகாடே, அன்னப்பா சேட்டிகை மானோஜிராவ் முதலானவர்களோடு கலந்து சையிதை அழைத்து வரச்செய்து, கொல்லச் செய்தார். பின்னர் அன்னப்பா சேட்டிகை சர்க்கேல் சேனாபதி பதவியிலும். மல்லாற்ஜி காடேராவ் கில்லேதார் பதவியிலும் அமர்த்தப்பட்டனர்.

பின் அரசர் இராமேசுவரம் சென்றுவந்தார். இராமநாதபுரத்து அரசர் தஞ்சை அரசரைத் தன் கோட்டைக்கு அழைத்துச் சென்று வரவேற்றார்.

திருச்சியைக்கைப்பற்றியசந்தாசாயாபு, தஞ்சையை முற்றுகையிட்டு, ஆற் காட்டிலிருந்து உடன்வந்த ஸஃப்தர்அலியிடம், தஞ்சை அரசை ஒப்பித்துத்தான் திருச்சிக்குச் சென்றுவிட்டார். ஸஃப்தர்அலியும் திருவையாற்றுக்கு மேற்கே அணையொன்று கட்டி இரண்டாண்டுக்காலம் இருந்தார்.

பிரதாப சிம்மர் சாதாராவில் இருந்த ஷாஹூவின் உதவியை நாடினார். ஷாஹூ வீருபாயியின் புதல்வன் ரகோஜியையும் பத்தேசிங்கையும் அறுபதினா யிரம் குதிரைகள் கொண்ட படையுடன் அனுப்பினார். இதனை யறிந்ததும் ஸஃப்தர்அலி திருச்சிக்கு ஓடினார். ரகோஜியும் பத்தேசிங்கும் திருச்சியைத் தாக்கிப் பிடித்துக்கொண்டு, அதனை முரார்ஜிராவ் கோர்படேயிடம் ஒப்பு வித்துச் சந்தாசாயபுவைச் சிறைப்படுத்திக்கொண்டு சதாராவுக்குச் சென்றார்கள்.

அன்னப்ப சேட்டிகை சரிவர நடந்து கொள்ளாமையினால் சர்க்கேல் வேலையிலிருந்து நீக்கப்பட்டார்.

திருச்சியிலிருந்த முரார்ஜிகோர்படே தஞ்சாவூரைத் தனக்குரியதாக ஆக்க நினைத்துக் கொண்டு, தன் அமைச்சர் இன்னிசுகானை ஒரு படையுடன் அனுப் பினார். பிரதாப சிங்கர் தன் சேனைத் தலைவர் மானோஜிராவை ஒரு படை யுடன் அனுப்பினார்; இன்னிசுகான் ஓடி ஒளிந்து கொண்டார்.

பின்னர்ச் சந்தா சாயபுவின் நண்பன் மகம்மது அரபு என்பார், பிரெஞ் சுக்காரருடைய உதவியைப் பெற்று இராக்காலங்களில் கொள்ளையடித்து வந்த மையை அறிந்த பிரதாபசிங்கர், மல்லார்ஜிகாடேராவ், மானோஜிராவ் ஆகிய வர்களை அனுப்ப அவர்கள் முகம்மது அரபைக் கொன்று அவருடைய விருது களையும் கொண்டு வந்தனர்.

தீவுக்கோட்டை (தேவிக்கோட்டை)யை ஆங்கிலேயர் பிடித்துக்கொள்ள வந்து தோற்றனர். இரண்டாம் விசை ஆங்கிலேயர் படையெடுத்து வந்த பொழுது, தஞ்சாவூர்ப் படைகள் கொள்ளிடத்து ஆற்று மணலிலே அகப்பட்டுத்

தோற்றார்கள். கி.பி. 1749இல் ஒரு உடன்படிக்கையின்படி தீவுக்கோட்டை ஆங்கிலேயருக்குரியதாயிற்று.

அயிதராபாதில் இருந்த நிஜாம் உல்முல்க்என்பவர் தெற்குப் பகுதிகளில் நடந்த செய்திகளைக் கேள்விப்பட்டு, ஷாஹூவினிடத்திருந்து பெரிய படைவுதவி பெற்றுக் கொண்டு திருச்சிக்கு வந்தார்; மொரார்ஜிகோர்படேயைத் திருச்சியினின்று வெளியேற்றித் தன்னுடன் வந்த அனவாருதீனிடம் திருச்சியை ஒப்படைத்துப்பின் அயிதராபாதுக்குத் திரும்பினார்.

அனவர்த்திகானின் மகன் மாஃபூசுகான் தஞ்சாவூர் அரசரைப் பேஷ்கஷ் செலுத்துமாறு பணித்தார். பிரதாபசிங்கர் பேஷ்கஷ் சிறிது தள்ளிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டரீர். மாஃபூசுகான் இதனைக் கேளாமல் தஞ்சையின் பேரில் படையெடுத்துத் தோற்றோடித் தன் தகப்பனிடம் நடந்ததைத் கூறினார்.

தன் மகன் பக்கம் தவறு இருந்த போதிலும், தன் சேனை தோல்வியுற்றது என்ற பேச்சுக்கிடமிருக்கலாகாதென்று நினைத்த அனவர்த்திகான் தஞ்சாவூர் பேரில் படையெடுத்தார். அனவர்த்திகான் படைகள் தோற்றன. அரசரும் அனவர்த்திகானை விட்டுவிடச் சொன்னார். அனவர்த்திகானும் ஆற்காட்டுக்குத் திரும்பினார்.

இப்படியிருக்கையில் சந்தாசாயபு சாதாராவில் சிறையினின்று விடுவிக்கப் பட்டார்; தஞ்சாவூர்ப் பக்கம் போகக் கூடாது என்று சந்தாசாயபுவிடம் சொல்லப்பட்டது. சந்தா சாயபு ஆதோனியிலிருந்த இராசத் மொஹிதீன்கான் என்பவருடன் தெற்கே போந்து, பிரஞ்சுக்காரர் உதவியும் பெற்றுக் கொண்டு, ஆற்காட்டுக்குச் சென்று அனவர்த்திகானைக் கொன்றார்.

உடனே அனவர்த்திகானின் மகன் முகம்மது அலி நாகப்பட்டினத்துக்குச் சென்றார்; பிரதாபசிங்கருக்குக் கடிதம் எழுதினார்; பிரதாபசிங்கரது உதவியைப் பெற்றார்; திருச்சிக்குச் சென்றார்.

இந்நாளில் பிரதாப சிங்கர் மகன் துளஜாவுக்கு ராஜஸபாயி கல்யாணம் செய்விக்கப் பெற்றார். பிரதாப சிங்கரது முதல் மனைவி அஹல்யாபாயீ இறந்தார். நான்காவது மனைவி எசவந்த பாயிக்கு இரண்டு பெண்கள் பிறந்தனர். பிரதாப சிம்மரின் வைப்பு மனைவியருள் அன்னபூரணாபாயி என்பவருக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். ஒருவர் இராமசாமி; இவரே பின்னாளில் அமர்சிங்கு எனப்பெற்றார். இன்னொருவர் கிருஷ்ணசாமி; இவர் சின்னாட்களில் இறந்து போனார்.

இராசத் மோதின்கான் சந்தாசாயபுவோடு திருச்சி நோக்கிப் படையெடுத்தார்; வழியில் தஞ்சையரசரிடம் சிறிது பணம் கேட்டார். அரசர் கொடுக்கவில்லை. ஆகவே அவ்விருவரும் தஞ்சையை முற்றுகையிட்டனர். ஏறத்தாழ 2½மாதம் போர் நடந்தது. இதற்குள்ளாக ஐதராபாதிலிருந்து நாஜூர்

ஜங்கு பெரும் படையுடன் வந்ததை அறிந்து, முற்றுகையை விட்டுப் புதுச் சேரிக்கு ஓடினார். பின் புதுச்சேரியின் உதவி பெற்று நடத்தியபோரில் நாஜர் ஜங்கு கொல்லப்பட்டார்.

சந்தா சாயபு இப்பொழுது திருச்சியை நோக்கிப் படையெடுத்தார். அப் பொழுது அல்லும்கான் என்பவரும் சந்தா சாயபுக்கு மதுரையினின்று உதவிக்கு வந்தனர்.

திருச்சியிலிருந்த மகம்மது அலி தஞ்சையரசரது உதவியை நாடினார். மானாஜிராவைப் பெரும்படையுடன் தஞ்சை அரசர் அனுப்பினார். விஜயரகு நாதத் தொண்டைமானும், இராமநாதபுரத்தரசரும், சீரங்கப்பட்டணம் அரசர் நந்திராஜாவும், மூராா்ஜிகோர்படேயும் முகம்மது அலிக்கு உதவியாக வந்தனர். அல்லும்கான் மானாஜிராவுடன் சண்டையிட்டார். அப்பொழுது ஆங்கில மேஜர் ஒருவர் ஒரு பீரங்கியைச் சுட்டார்; அல்லும்கான் குண்டுபட்டிறந்தார்.

சந்தா சாயபுக்கும் முகம்மது அலிகானுக்கும் பல நாட்கள் போர் நடந்தது. சந்தாசாயபுடைய பாளையத்துக்கு உணவுப் பண்டங்கள் போகாத வாறு தடுக்கப்பட்டது. சந்தாசாயபு இன்னது செய்வது என்று தெரியாமல் தஞ்சாவூர்ச் சேனைத் தலைவராகிய மானாஜிராவிடம் வந்து அடைக்கலம் புகுந்தார். மானாஜிராவ் இச் செய்தியை அரசருக்குச் சொல்லியனுப்பி, அரசர் ஏவலினால் சந்தாசாயபுவைத் தஞ்சைக்கு அனுப்பி வைத்தார். இதை அறிந்த முகமமது அலிகானும், முரார்ஜி கோர்படேயும், நந்திராஜாவும், இங்கிலீஷ் காரரும் சந்தாசாயபுவைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு கேட்டனர். மானோ ஜிராவ் 3-6-72 இல் சந்தாசாயபுவின் தலையை வெட்டி முகம்மது அலி கானிடம் அனுப்பினார். இதற்குள்ளாகவே 21-4-1752 இல் கோவிலடியைத் தஞ்சைச்சேனைகள் கைப்பற்றின. முகம்மது அலிகான் கோவிலடித் கோட்டை யையும் இளங்காடு சீர்மையையும் பிரதாபசிங்கருக்கு அளித்தார்.

நந்திராஜாவும், முரார்ஜிகோர்படேயும் திருச்சியைத் தாம் பெற வேண் டும் என்று முயன்றனர். இதற்கிடையில், திருச்சியில் பெரிய சேனையை வைத்துவிட்டு. முகம்மது அலி சென்னையை நோக்கிப் போனார். இதையறிந்த முரார்ஜியின் தம்பி பண்ணுருட்டி திருவதிகையில் முகம்மது அலியை மடக்கிப் போரிட்டு இறந்தார். இதையறிந்த முரார்ஜி தம்முடைய ஊராகிய குத்திக்குப் போய்விட்டார். நந்திராஜாவும் சின்னாள் இருந்து பின் சீரங்கப்பட்டணத் துக்குப் போய்விட்டார்.

இந்நாளில் பிரதாப சிங்கர் தன் மகன் துளஜாவுக்கு ராஜகும்மாராபாயி யைத் திருமணம் செய்து வைத்தார்; அடுத்து மோகனாபாயியையும் மூன்றாவது மனைவியாகத் திருமணம் நடத்தி வைத்தார்.

புதுச்சேரிக்கு ஒரு புதிய கவர்னர் வந்தார்; அவருக்கு முசேலாலி என்று பெயர். அவர் தஞ்சையை முற்றுகையிட்டுத் தோற்றோடினார்.

பின்னர் அப்புதுச்சேரி கவர்னர் சென்னைக்குச் சென்று முற்றுகை

யிட்டார். ஆங்கிலேயர் தஞ்சையரசரை உதவியனுப்புமாறு கேட்டனர். அரசரும் திருச்சியினின்று செல்லும் முகம்மது யூசுப்கானுடன் ஒரு படையை அனுப்பி வைத்தார். முசேலாலி தோற்றுப் புதுச்சேரிக்குத் திரும்பினார்.

பிகட்துரை காரைக்கால்மேல் படையெடுத்தபோதும், புதுச்சேரியை முற்றுகையிட்ட போதும், தஞ்சையரசர் ஆங்கிலேயருக்குப் படையுதவி செய்தார்.

பின்னர்த் தஞ்சையரசர் மானோஜிராவைச் சர்க்கீல் பதவியினின்று நீக்கினார்; டபீர் பண்டிதரை அந்த இடத்தில் நியமித்தார்.

முகம்மது அலி திருச்சிக்கு வந்து, பிரதாப சிங்கரைப் பேஷ்கஷ் பணம் கொடுக்குமாறு கேட்டார். ஆங்கிலேயருடைய உதவியினாலே பேஷ்கஷ் நிலுவைக்கும், இனிமேல் செலுத்த வேண்டியதற்குமாகத் திட்டம் செய்து, ஆங்கிலேயர் வழியே பேஷ்கஷ் கொடுப்பது என்று உறுதி செய்யப்பட்டது,

பிரதாப சிங்கரின் மகன் துளஜாவின் இரண்டாவது மனைவி ராஜகுமாரா பாயிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

சவாயிசாஜிக்கு உதவியாக இருந்த கோயாஜிகாட்டிகே இருக்கிற செய்தியறிந்து, அரசரது ஆணைப்படி அவரைப்பிடித்துக் கொன்று போட்டனர்.

பிரதாப சிங்கர் தமது இறுதிக்காலத்தில் அதிகக் கோபம் கொண்டவராக இருந்தார். இறப்பதற்கு மூன்று மாசத்துக்கு முன் இரவு 12 நாழிகைக்குமேல் வெளியேயிருந்து கேட்டால் கோட்டையில் அழுகைக் குரல் கேட்கும்; கோட்டையிலிருந்து கேட்டால் வெளியே இருந்து அழுகைக் குரல் கேட்கும். இப்படி மூன்று மாதம் நிகழ்ந்தது.

பிரதாப சிங்கர் சகம் 1685–இல் இறந்தார். அவருடன் யமுன பாயி சக்வார்பாயி ஆகிய இரு மனைவியர் உடன்கட்டை ஏறினர்.

14 துளஜா பட்டத்துக்கு வந்ததும் முகம்மது அலி, முதர்முருகு என்ற பெயருடையதும், கால் ஒட்டகம் போன்றதும், ஒன்றரை ஆள் உயரமுடையதுமான பறவை யொன்றை அனுப்பி வைத்தார்.

துளஜா, மதுரையிலே ஆண்ட முகம்மது யூசப்கான் பேரிலும், பெங்களூர்க்கு ஐதர் பேரிலும் படையெடுத்தார். மதுரைக்கு அருணகிரி அப்பாவையும், பெங்களூருக்கு வெங்கடராவ் காடேவையும் அனுப்பினார்;

அயிதர் தஞ்சையின் பேரில் வந்தபொழுது துளஜா அயிதருக்கு நான்கு யானையும் ஒரு லக்ஷம் வராகனும் கொடுத்தனுப்பினார்.

உசேன்கான்சூர் என்பவர் மந்திரியாக்கப்பட்டார். இவர் நவாபுக்குச்சேர வேண்டிய பணத்தை ஆங்கிலேயர் வழி செலுத்தாமல் தானே செலுத்தினார்.

இராமநாதபுரத்தரசருக்கும் தஞ்சை அரசருக்கும் மனவேற்றுமை ஏற்பட்டது. துளஜா இராமநாதபுரத்தின் மேல் படையெடுத்தார். இறுதியில் போர்க்குரிய செலவு பெற்றுத் திரும்பினார்.

நவாபுக்குச் செலுத்த வேண்டிய தொகை நின்று விட்டது. முகம்மதுஅலி தஞ்சையைத் தனக்குரியதாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்துத் தோஃபா கேட்டனுப்பினார். துளஜா செலுத்தவில்லை. ஆகவே தன் மூத்த மகன் உமதத்துல் உமரா என்பவருடன் பெரிய படையையனுப்பினார். துளஜா உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி பாளையத்துச் செலவுக்கு 50 லக்ஷம் கொடுத்தார். பாதிச் சீமையை அடமானமும் வைத்தார்; மேலும் இளங்காடு சீமையை நவாபுக்குக் கொடுத்து விட்டார்.

பின்னர் முகமது அலி தன் இரண்டாவது மகன் மதார்முலுக் என்பவரைத் தஞ்சாவூர் பேரிலே அனுப்பினார். அவர் தஞ்சாவூர்க் கோட்டையைப் பிடித்து, டபீர் நாரோ பண்டிதரை ஆட்சியில் நியமித்துக் கோட்டையில் தன் சேனைகளை வைத்துத் திரும்பினார். (தஞ்சாவூரில் நவாபின் ஆட்சி 17-9-1773 முதல் 11-4-1776 வரை நடந்தது).

கிலிடிலி அண்ணா என்று ஒருவர்; லிங்கோஜி என்றும் இவர்க்குப் பேருண்டு. இவர் மந்திரியாக இருந்தபொழுது கோனேரி ராவ் என்கிற தேசஸ்தர், சமேதார், ஆரணியினின்று வந்தார். அவருக்குச் சம்பளம் கொடுபடாமலிருந்தது. அதனால் மறியலாக வந்து உட்கார்ந்தார். அமைச்சருக்குக் கோபம் வந்தது. இதையறிந்த ஒருவன் கோனேரிராயரை இழித்துப் பேசினான். இதனால் இருவருக்கும் கைகலப்பு ஏற்பட்டது. கோனேரிராயரைப் பிரியில் பிணித்துப்பறையரைக் கொண்டு தெருவில் இழுப்பித்தார்கள். அந்தப் பிராமணன் இறந்தார்.

இது போன்ற செயல்களால் ஏற்பட்ட பாவம்தான் அரசர் தோற்றதற்குக் காரணம் என்று பலரும் எண்ணினர்.

நவாபு கோட்டையைப் பிடித்துக்கொண்ட செய்தி சீமைக்குத் தெரிந்தது. சீமையிலிருந்த மேலாளர்கள் நவாபின் செயலுக்கு ஒப்புதல் அளிக்கவில்லை. லார்டு பிகட்டு என்பவரைச் சென்னைக்கு அனுப்பித் துளஜாவுக்கு அரசை மீண்டும் அளிக்கச் செய்யுமாறு பணித்தனர். லார்டு பிகட்டு தஞ்சைக்கு வந்து கோட்டையையும் சீர்மையையும் துளஜாவுக்கு ஒப்புவித்துப் பட்டமும் கட்டினார்.

இந்த உதவிக்குத் துளஜா மகிழ்ந்து தஞ்சாவூர்க் கோட்டையினுடைய கில்லேதார் பவுஜ்தார் பதவிகளை ஆங்கிலேயருக்கு அளித்தார்; மேலும் இனாம் லக்ஷம் பொன்னும், நாகூரும் அதனை அடுத்துள்ள 277 ஊர்களும் அளித்தார். பின்னர் நவாபுக்குப் பேஷ்கஷ் கொடுக்கவில்லை.

துளஜாவின் மூன்றாவது மனைவி மோகனாபாயி ஒரு குழந்தையை ஈன்று தானும் இறந்தாள். தனக்கு ஆண் குழந்தைகள் இல்லாமையால் சுலக்ஷ்ணா

பாயி, மோகனாபாயி என்ற இருவரைத் துளஜா திருமணம் செய்து கொண்டார். மோகனாபாயி வயிற்றில் ஒரு குழந்தை பிறந்து இறந்தது. பின்னர் ஒரு ஆண் குழந்தை பிறக்க அக் குழந்தைக்கு அப்துல் பிரதாபராம் என்று பெயர் சூட்டினர். இவரும் ஆறாண்டுகள் வளர்ந்து வைசூரியால் இறந்தார். துளஜாவுாகுத் தன் பெண் வழி ஒரு பெயரன்; மாருதி சாமி என்று பேர்; ஒரு பெயர்த்தி சாந்தம்மாள். இவ்விரு குழந்தைகள் பிறந்த பிறகு துளஜாவின் மகள் அபரூப பாயி இறந்தாள்; பின்னர் அக்குழந்தைகளும் இறந்தன. இதனால் துளஜா நோய்வாய்ப் படலானார்.

இந்நாளில் அயிதர்அலி தஞ்சைமேல் படையெடுத்தார். பெரிய பஞ்சமும் ஏற்பட்டது. பலரும் இறந்தனர்.

துளஜாவின் இறுதிக் காலத்தில், தன் மக்கள் பேரப்பிள்ளைகள் யாவரும் இறந்துபட்டமையால், தனக்கு நீர்க்கடன் செலுத்தவும் தனக்குப்பின் அரசாள்வதற்கும் தன் தாயத்தாரில் ஒருவரைச் சுவீகாரம் எடுத்துக் கொண்டு, சரபோஜி என்று பெயரும் வைத்தார். இச்சரபோஜி விட்டோஜி ராஜாவின் வழியில் வந்தவர். அரசர் சரபோஜியை, ரிசிடெண்டு ஹட்லிஸ்டன், கர்னல் ஸ்டூவர்டு, பாதிரி ஸ்வார்ஷு ஆகியோரிடம் ஒப்படைத்தார்.

பின்னர்ச் சரபோஜியை அரியணையில் வீற்றிருக்கச் செய்து, எல்லாரையும் சரபோஜிக்கு மரியாதைகள் செய்யச் செய்து, சென்னைக்கும் எழுதியனுப்பினார்.

இதனையறிந்த சிலர், துளஜாவின் தம்பி அமர்சிங்குக்குப் பட்டம் தர வேண்டும் என்று நினைந்து, அவரை வரச் செய்து, துளஜாவின் ஆணையென்று கூறித் துளஜாவின் மடியில் அமர்சிங்கை இருக்கச் செய்து, இச்செய்தியைச் சென்னைக்கும் எழுதியனுப்பி வைத்தார்கள்.

மறுநாள் (சகம் 1708இல்) துளஜா இறந்துவிட்டார். சரபோஜியை அருகில் வைத்துக்கொண்டு அமர்சிங்கு துளஜாவின் இறுதிக்கடன்களை நடத்தினார். பின்னர்க் கவர்னர் கேமலைக் கொண்டு வங்காளத்துக்கு எழுதவேண்டிய முறைப்படி எழுதினார். கேமலும் தஞ்சைக்கு வந்து, நடுவுநிலையாளர் எனப்பட்ட பன்னிருவரை விசாரித்து, அவர்கள் கூறியவண்ணம் அமர்சிங்கே ஆட்சிக்குரியரென்று வெளிப்படுத்திச் சகம் 1709இல் அமர்சிங்கை அரசராக்கினர்.

15 துளஜாமகாராஜா சுவீகாரம் எடுத்துக் கொண்டிருந்தபோதிலும் அமர்சிங்கு சரபோஜியைத் துன்புறுத்தி வந்தார். சரபோஜியினிடத்தில் ஸ்வார்ஷ்பாதிரியாருக்கு அன்பு இருந்தது. ஸ்வார்ஷ் எல்லாச் செய்திகளையும் கும்பினியாருக்கு அவ்வப்பொழுது தெரியப்படுத்தி வந்தார். இந்நாளில் ராம் என்பவர் ரெசிடெண்டாக வந்தார். அவ்வமயம் அமர்சிங்கு மேற்பார்வையினின்று சரபோஜியை மீட்டு, அவருக்கும் அவரது தாய்மார்களுக்கும் வேண்டிய செலவுகளுக்கு ஏற்பாடு செய்யப்பெற்றது. சரபோஜியும் ஆங்கிலமும் பிறவற்றையும் நன்கு படித்தார். சுலக்ஷணாபாயி இறந்தார்; அவரது இறுதிக்கடன்களும் நிறைவேறின. பின்னர்ச் சரபோஜியும் அவருடைய எஞ்சிய

தாய்மார்களும் சென்னைக்குச் சென்று அங்குத் தங்கினார்கள். அந்நாளில் சர போஜியின் உரிமை நிலை நாட்டுவதற்கு முயற்சிகள் நடந்தன. காசி முதலான இடங்களிலும் இதுபற்றி ஆய்வு நடந்தது. சரபோஜி தஞ்சைக்கு வந்தார். முன்னே இதுபற்றிக் கூறிய பண்டிதர்களில் இறந்தவர்கள் போக எஞ்சியவர்கள் சரபோஜியின் உரிமையை நிலைநாட்டிக் கூறினர். இந்நிலையில் சுவார்ஷ் இறந்துபோனார். அமர்சிங்கு நீக்கப்பட்டுச் சகம் 1720இல் சரபோஜி தஞ்சைக்கு அரசரானார்.

16 சரபோஜி ஆட்சியைப் பெற்றதும் அரசாங்கக் கணக்குகளை ஒழுங்கு படுத்தினார்; அரண்மனையைப் பழுதுபார்த்தார்; சிறிது மால்களைக் கட்டினார்; கும்பினியார் டிப்புவின் பேரிலே படை யெடுத்தபோது தன்னால் ஆன உதவிகள் புரிந்தார்.

சரபோஜி, யமுனாபாயி அஹல்யாபாயி ஆகிய இருவரை மணம் செய்து கொண்டார்.

சரபோஜிக்குப் பட்டம் கிடைப்பதற்குமுன், சரபோஜிக்குச் சேரவேண்டிய தொகைகளை ரெஸிடென்டு ஆக இருந்த மக்லோடு சரிவரச் செலுத்தவில்லை என்று கவர்னருக்கு எழுதியதன் பேரில், கவர்னர், நன்கு விசாரித்து, மக்லோடு செய்தது தவறு என்று கண்டறிந்து, அவரை வேலையினின்று நீக்கி னார். விசாரணைச் சமயத்தில் சரபோஜிக்கு உதவியாக ரெசிடெண்டு டூரியன் இருந்தார்; சரபோஜியின் பொருட்டு தத்தாஜி அப்பா சென்னைக்குச் சென் றிருந்தார். மக்லோடு தன் தவறினையுணர்ந்து தன் மனைவியுடன் போந்து சர போஜியிடம் மன்னிப்புக் கேட்டார். சரபோஜியும், அன்பு கொண்டு அவர் களுக்குப் பதினாயிரம் ரூபா இனாம் அளித்தார்.

அகல்யாபாயி சாயபுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக் குச் சுலக்ஷணாபாயி என்று பேர் வைக்கப்பட்டது.

பின்னர் அரசாட்சியை நன்கு நடப்பித்தற் பொருட்டுத் தன்னுடைய தேசத்தை அரசர் கும்பினியாரிடம் ஒப்பித்தார்.

அப்பொழுது கும்பினியாரிடம் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டார். சகம் 1801 இல் பிளாக்பர்ன் வசம் ஒரு சிறு படை அனுப்பினார்.

சரபோஜி திருமணம் செய்து கொள்வதற்கு முன் ஒரு மங்கையைக் காத லித்திருந்தார். அவர்க்கு இரண்டு குழந்தைகள் பிறந்திறந்தன. இரண்டாம் குழந்தை பிறந்தபொழுது அவ்வம்மையும் மாண்டார். அவர் இறக்கும் தறு வாயில் தன் பேரால் ஒரு அன்னசத்திரம் அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க (ஒரத்தநாட்டில்) அவர் பேரால் முக்தம்மாள் சத் திரம் நிறுவப்பெற்றது.

பின்னர்ச் சோழ நாடு முழுமையும் ஒருவிசை, சேரங்கயாத்திரை ஒருவிசை, சங்கமுக யாத்திரை ஒருவிசை, பழனி யாத்திரை ஒருவிசை - இப்படி நான்கு

யாத்திரை களைச் சரபோஜி மேற்கொண்டார். இவ் யாத்திரைகளில் ரிசிடென்டு பிளாக்பர்ன் ஆணையின்படி அரசருக்கு எல்லா வசதிகளும் செய்து தரப் பட்டன. இவை உடன்படிக்கைக்கேற்ப நடந்தேறியனவாகும்.

அவ்வுடன்படிக்கையில் போர் ஏற்படின் அரண்மனையில் ஆங்கிலேய ருடைய படைதங்கலாம் என்றிருந்தது. ஆனால் சரபோஜியினிடத்தில் கொண் டிருந்த பெருமையால் ஒரு சமயம் கும்பினியார் தம் படையை அரண்மனையில் தங்கச் செய்யாதொழிந்தனர்.

பழநியாத்திரைக்கு முன் அகல்யா பாயிக்கு இரண்டாவது பெண் பிறந் தது. அக்குழந்தைக்கு ராஜகுமாராபாயி என்று பெயரிடப்பெற்றது.

இவர் ஆட்சிக்காலத்தில் "பாஜ்" என்ற ஒரு அரிய பறவை வந்திருந்தது இவர் இப்பொழுது சிறந்த முறையில் ஆட்சி செய்து கொண்டிருக்கிறார்.

மகாராஷ்டிர அரசர்களது வரலாறு எல்லா நன்மைகளையும் தரவல்லது. இவ் வரலாற்றைச் சரபோஜியின் சிட்டினீசு பாபுராயர் என்பவர் எழுதினார்.

சகம் 1725 ருத்ரோத்காரி சித்திரை மாதம்.
கி. பி. 1803, மார்ச்சு மாதம் 25.

## அடிப்படைச்சுவடிகள் - நூல்கள்

# (1) போன்ஸ்லே வம்ச சரித்திரம்

இது மராத்தி மொழியில் அமைந்த பெரிய கல்வெட்டாகும். தஞ்சைப் பெரிய கோயிலின் திருச்சுற்று உட்புறத்தில் தென்மேற்கு மூலையில், இந்நாளில் தேர்க்கொட்டகை உள்ள இடத்துக்குப் பின்புறத்திலும் இடதுபக்கத்திலும் உள்ள சுவரில் இந்தப் பெரிய கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

மராட்டிய மாநிலத்துத் துலியா (Dhulia) என்ற ஊரில் இறுதிக்காலத்தில் இருந்த திரு.வி.கே. ராஜ்வாடே[1] (Vishwanath Kashinath Rajwade) என்பவரால், "பிரபாத்" (Prabhat) என்ற இதழில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தக் கல்வெட்டுப் பதிப்பிக்கப்பட்டது. பின் சகம் 1828 இல் (கி. பி. 1906) நூல்வடிவில் "சத்கார்யோத்தேஜக சபையில்" வெளியிடப்பட்டது.[2]

தஞ்சாவூரில் இருந்த உயர்நீதி மன்ற வழக்கறிஞர் திரு. சாம்பமூர்த்திராவ் என்பவர் 1906-07இல் மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டு படியெடுத்து இம் மராத்திக் கல்வெட்டை 1907இல் அச்சிட்டு வெளியிட்டார். இவர் 1900 முதற் கொண்டு 1906 வரை இரண்டு உதவியாளர்களைக் கொண்டு இக்கல்வெட்டைப் படியெடுத்தார். முதலில் உதவியாளர்கள் படியெடுப்பர்; அதை இவர் ஒப்பீடு செய்து பார்ப்பார். பாதி வேலை முடிந்த சமயத்தில் திருவருட் கொடையாக இவருக்கு இக் கல்வெட்டுக்குரிய கையெழுத்துப் பிரதியொன்று அரண்மனை யினின்று கிடைத்தது. காமாட்சி யம்பாபாயி சாகேபு[3] அவர்களுடைய அலுவலர் நாகராச பண்டிதர் என்றொருவரிருந்தார். அவருடைய பிள்ளைகள் அந்த அரசியாரின் அலமாரியினின்று ஒரு கையெழுத்துப்படியைக் கொணர்ந்து கொடுத்தனர். இச்சுவடி பெறுவதற்குள் பாதிப்பகுதி படியெடுக்கப்பட்டிருந்தது. இது கி.பி. 1905இல் நிகழ்ந்தது. இந்தச் சுவடியை வைத்துக்கொண்டு ஒப்பீடு செய்து அச்சுக்கு ஏற்ற வகையில் சுவடி தயாரிக்கப்பட்டு அச்சிடப் பெற்றது அரண்மனையினின்று கொணர்ந்த சுவடி திருப்பித் தரப்பட்டுவிட்டது. இங்ஙனம் மராத்திக் கல்வெட்டை அச்சிட்ட திரு. சாம்பமூர்த்திராவ் அவர்கள்

---

1. இவர் வரலாறு ஜாதுநாத் சர்க்கார் என்பவர் எழுதிய House of Shivaji என்ற நூலில் பக்கம் 247 முதல் 261 வரை காணலாம்.

2. போ. வ. ச. மராட்டியப் பகுதிக்கு முன்னுரையாக மேஜர் என். பி. கத்ரே எழுதியது.

3. இவர் 1832-1855 வரை தஞ்சையரசராக இருந்த சிவாஜியின் இரண்டாவது மனைவியாவர்.

4. அச்சுவடி இப்பொழுது இருப்பதாகத் தெரியவில்லை.

மெக்கன்சி சேகரித்த சுவடிகள் சென்னையில் இருத்தலைக் கேள்விப்பட்டிருந் தார் எனினும் அவற்றைப் பார்த்தவர் அல்லர்.[5] எனினும் தஞ்சை மராத்தியக் கல்வெட்டை இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே (1906) இலேயே தஞ்சை யில் பதிப்பித்த பெருமை திரு. சாம்பமூர்த்தி ராவ் அவர்களையே சாரும்.

இம்மராத்தியக் கல்வெட்டு கி. பி. 1951இல் தமிழ் மொழி பெயர்ப் புடனும் ஆங்கிலச் சுருக்கத்தோடும் தஞ்சைச் சரசுவதி மகால் வெளியீடாக வந்து, 1980 இல் மறுபதிப்பும் எய்தியது. தமிழ் மொழி பெயர்ப்பை மராத்திக் கல்வெட்டுக்கேற்ப அமைத்துதவியவர் சரசுவதி மகால் நூல் நிலையக் காப்பாள ராக இருந்த திரு. வி. சீனிவாசாச்சாரியா ரவர்களாவர். இப்பணியில் இவர்க்கு உதவி புரிந்தவர் திரு. சிவாஜி காட்டிகே என்பவர் ஆவர்.[6]

போன்ஸ்லே வம்ச சரித்திரமாகிய மராத்திக்கல்வெட்டின் காலம் "சகம் 1725 ருதிரோத்காரி வருஷம் மார்க்க சீர்ஷ மாதம் கிருஷ்ண பக்ஷம் அமா வாசைக்குச் சரியான கி. பி. 1803 டிசம்பர் 13உ என்பதாகத் தமிழ் மொழி பெயர்ப்பில் உள்ளது. இதனை எழுதியவர் 1798-இல் தஞ்சை ஆட்சி யெய்திய சரபோஜி மன்னரின் சிட்னிஸ் பாபுராவ்[7] என்பவர் ஆவர்.

இக்கல்வெட்டின் தமிழாக்கத்துடன் மெக்கன்சி சுவடிகளை ஒப்பீடு செய்வது இன்றியமையாத செயலாகும். மராட்டியக் கல்வெட்டில் ஒரு பெரிய பிழை நேரிட்டு விட்டது. எப்படி ஏற்பட்டது என்று அறிவதற்கு வாய்ப்பில்லை எனினும் இந்நூற்றாண்டில் தமிழாக்கம் செய்தவர் அப்பிழையை எடுத்துக் காட்டியுள்ளார்.[8] மெக்கன்சி சுவடிகள் டி 3762, டி 3180, டி 3119 ஆகியவற் றோடு தமிழாக்கத்தை ஒப்பு நோக்கிப் பார்ப்பின் அப்பிழை எங்ஙனம் நேரிட் டது என்பதை ஓராற்றான் ஊகித்தறியக்கூடும்.

இக்கல்வெட்டுக்குரிய வாசகம் முதலில் தமிழில் எழுதியிருத்தல்கூடும். அதனை மராத்தியில் பெயர்த்தெழுதியவர்,

"1629 பிரமோதூத வருஷத்தில் பிரசவித்துப் புத்திர பாக்கியத்தை பெற் றார்'

---

5. Evidence of T. Sambamurti Rao, in the Court of the Sub-ordinate Judge, Tanjore, the first day of December 1916, in O.S. No. 26 of 1912; No. 117 Pages 573-577 of the depositions.

6. சரசுவதி மகால் நூல் நிலைய வெளியீடு எண் 46 - போன்ஸ்லே வம்ச சரித்திரம், இரண் டாவது பதிப்பு, 1980, நூன்முகம், பக்கம் 2.

7. மேற்படி பக்கம் 130; தமிழ் மொழி பெயர்ப்பில் சகம் 1759 என்று பிழையாக அச்சிடப் பெற்றுள்ளது. இதே பதிப்பில் மராட்டியப்பகுதி பக்கம் 101-இல் 1725 என்றிருத்தலைக் காணலாம்.

8. போ. வ. ச. பக்கம். 17 அடிக்குறிப்பு.

9. இவ்வூகத்துக்குரிய காரணம், இரண்டு பக்கங்கள் தள்ளிப் பக்கம் 186 இல் "சுவடியின் காலமும் கல்வெட்டின் காலமும்" என்றதன் கீழ்க் கூறப்பட்டுள்ளது.

என்ற அளவில் மொழி பெயர்த்த பின்னர்ச் சிறிது கால இடைவெளி ஏற்பட்டிருக்கக் கூடும். பின்னர் மொழி பெயர்க்கத் தொடங்கினார். ஓரிருபக்கங்கள் தள்ளி மேலே கண்டவாறு,

"புத்திரபாக்கியத்தைப் பெற்றார்"

என்ற பகுதியைக்கண்டு அங்கிருந்து மராத்தியில் பெயர்த்தார் என்று கருதலாம். ஆகவே இத்தவறு நிகழ்ந்தது போலும்.

யாதவராஜாவைத் தன்னை வந்து காணுமாறு சொல்லியதாக (பக்கம் 16, இறுதிவரியில்) கூறியதற்குப் பிறகு, "யாதவராஜா தெய்வகதியடைந்து விட்டதையும்" ஏன்று (பக்கம் 17-இல்) கூறியிருப்பது. இடையில், யாதவ ராஜா வருகை, அவர் தெய்வகதியானமை முதலிய சில செய்திகள் விடுபட்டிருத்தலைக் காட்டும்.

இந்த இடத்தில் மெக்கன்சி சுவடிகள் மூன்றும், சகம் 1551 இல் ஜிஜா பாய் மகப்பேறடைந்தமையும், அவ்வாண்மகற்குச் சிவாஜியென்று பேர் வைத்தமையும், பத்தேகான் சூழ்ச்சியும், அதற்கேற்ப யாதவராசா கொலை செய்யப் பட்டமையும், இதனை ஷாஜியறிந்து சாத்தாராவுக்குச் சென்றமையும், ஒரு பஞ்சம் நிகழ்ந்தமையும், சாத்தாராவில் ஷாஜியிருக்குங்கால் துக்காபாயிக்கு ஆண்குழந்தை பிறந்தமையும், அதற்கு ஏகோஜி என்று பெயர் சூட்டியமையும் சொல்லப்பட்டுள்ளன.

மெக்கன்சி சுவடியை இந்தப் பகுதியில் படித்தால் கல்வெட்டிலும் கல்வெட்டின் தமிழாக்கத்திலும் தவறுநேர்ந்த விதம் ஒருவாறு ஊகித்தறியலாம்.

**மெக்கன்சி சுவடிகளில் இல்லாத சில செய்திகள் போன்ஸ்லே வமிச சரித்திரத்தில் காணப்படுகின்றன.** அவை பின்வருமாறு:-

1. ஏகசிவராசா யென்றொருவர் (கால்வழி முறை அட்டவணை I காண்க) மகாசேனர் என்பவருடைய மகனாவர். இவ்வேகசிவராசா சில விருதுகளை ஈட்டினார். தம்மிடம் வேலையில் அமர்ந்த பேஷ்வா, ஸர்நோபத் போவார் முதலிய அலுவலர்களுக்குப் பகிர்ந்தளித்தார்; தாமே சில விருதுகளை ஏற்படுத்திக் கொண்டார்; பல்லக்கு அலங்காரம் - ஆகியவை கூறப்பட்டுள்ளன.[10]

2. அவுரங்கசிபின் குதிரை தண்ணீர் குடிக்கச் சென்று அஞ்சிக் கரைக்கு ஓடி வர, அவுரங்கசிபு "சிவாஜி வந்துளான்" என்றுஅஞ்சுகிறாயா என்றமை.[11]

3. பிரதாப சிம்மர் தன் படைத்தலைவர் மானாசிராயரை இராமநாத புரத்தின் மேல் படையெடுத்துச் செல்லுமாறு செய்தது.[12]

10. போ. வ. ச. பக்கம் 2-4

11. போ. வ. ச. பக்கம் 60

12. போ. வ. ச. பக்கம் 109-110

4. மேற்கண்ட பிரதாப சிம்மா் காலத்தில் ஐரோப்பியரிடமிருந்து சுங்க வரி வாங்கியமை பற்றியது.[13]

5. சரபோஜியின் மாதேவி அகல்யாபாயி சாகேபாவுக்கு மூன்றாவது பெண் குழந்தை பிறந்தமை; அக்குழந்தைக்குப் பாயம்மா பாயி என்று பெயர் வைத்தமை.[14]

6. ''பகவந்தராயரின் பௌத்திரரான விட்டலராயரின் புத்திரரும்'' என்று பாவு ராவினுடைய தந்தை பெயரும் பாட்டனார் பெயரும் கூறியமை[15].

மேற்கண்டவை மெக்கன்சி சுவடிகளில்லாமல் கல்வெட்டில் காணப்படுவதற்கு, அதாவது போ. வ. ச. வில் காணப்படுவதற்கு உரிய காரணம் சரியாகப் புலப்பட்டிலது. மேல் ஐந்தாவதாக உள்ள செய்தியை நோக்கின் தமிழில் எழுதப்பட்ட காலத்தில் நிகழாத செய்தி, மராட்டியில் மொழி பெயர்ப்புச் செய்த இடைக்காலத்தில் நிகழ்ந்தமையின் இடைச்செருகலாகச் சேர்த்தனர் போலும் என்று எண்ணத் தோன்றுகிறது. மேலும் ஆறாவது செய்தியை நோக்கின் அந்நாளைய பழக்கப்படி தந்தைபெயரோடு, பாட்டன் பெயரும் விடுபட்டிருந்தமை கண்டு மராட்டியில் சேர்ந்தனர் என்று கொள்ளக்கிடக்கிறது.

### சுவடியின் காலமும் கல்வெட்டின் காலமும்

சுவடியின் காலம் ''சகம் 1725 ருத்ரோத்காரி வருஷம் சித்திரை மாதம்; 1803 மார்ச்சு மாதம் 25'' என்பதாகும்.[16]

கல்வெட்டின் தமிழாக்கத்தில், ''சகம் 1725 ருத்ரோத்காரி வருஷம் மார்க்கசீர்ஷ மாதம் அமாவாசை கி.பி. 1803 டிசம்பர் மாதம் 13உ'' என்றுள்ளது.[17]

மேற்கண்ட இருவேறு காலக்கூறுகளால் தமிழ்ச்சுவடி முதன் முதலில் தயார் செய்யப் பட்டது என்றும், அது தானும் 25-3-1803 இல் எழுதி முடிக்கப்பட்டது என்றும், இதன் பின்னர் இத்தமிழ்ப் பகுதி மராட்டியில் பெயர்த்தெழுதப்பெற்றுக் கல்லெழுத்தில் பொறிக்கப் பெற்றதாதல் கூடும் என்றும், அச்சிலாசாசனம் தானும் 13-12-1803 இல் வெட்டி முடிக்கப் பெற்றது என்றும் கொள்ளக்கிடக்கின்றன. மேலே எழுதிய வண்ணம், சரபோஜியின் மாதேவி அகல்யாபாயி சாகேபா அவர்கள் மூன்றாவது பெண் மகவீன்றமை கல்வெட்டிலிருக்கச் சுவடியில் இல்லாமையால் சுவடியெழுதி முடித்த பிறகே இச்செய்தி நிகழ்ந்ததென்று கொள்ளலாம். இதனானும் சுவடியினும் கல்வெட்டுப் பிந்தியது என்று உறுதி பெற வாய்ப்புண்டு.

---

13. போ. வ. ச. பக்கம் 111-112
14. போ. வ. ச. பக்கம் 130
15. போ. வ. ச. பக்கம் 130
16. டி 3180 இன் இறுதிப்பக்கம் காண்க
17. போ. வ. ச. பக்கம், 139

## குறிப்பிடத்தக்க செய்திகள்

சுவடிகளிலும் கல்வெட்டிலும் சில சிறப்புச் செய்திகள் காணப் படுகின்றன.

### 1. ஜிஜாபாய் ஷாஜியின் இரண்டாவது மனைவியென்பது

ஷாஜியின் மனைவியர் இருவருள் ஜிஜாபாய் இரண்டாவது மனைவி யென்று சுவடிகளிலும் கல்வெட்டிலும் கூறியிருக்க, வரலாற்றாசிரியர்கள் ஜிஜாபாயியை ஷாஜியின் முதன் மனைவியென்றும், ஷாஜி அவரிடம் விருப்பம் குறைந்து துக்காபாயியை (ஏகோஜியின் தாயை) இரண்டாவது மனைவியாக ஏற்றுக்கொண்டார் என்றும் கூறுவர்.[18]

"The first wife was Jijāi Āū and the second wife Tukāi Āū"

என்று கிருஷ்ணாஜி அனந்த் சபாசத்[18அ] தன் நூலில் கூறியுள்ளமை எளிதில் புறக் கணித்தற்கியலாததாகும். எனினும் கல்வெட்டும் சுவடிகளும் ஜிஜாபாயியை ஷாஜியின் இரண்டாவது மனைவியென்றே கூறுவதைப் பின்வரும் கூற்றுக்களால் அறியப் பெறும்

(அ) மோஹிதே ராஜா என்பவருடைய கன்னிகையான உமாபாயி சாகிபாவை (துக்காபாயியை) முதன்முதலாக விவாகம் செய்து கொண்டார் ... பிறகு யாதவராசா என்கிற அரசர் பிரார்த்தனை செய்து தன்னுடைய கன்னிகை யான ஜிஜாவூவை ஷாஜி ராஜாவுக்கு இரண்டாவது மனைவியாக விவாகம் செய்து கொடுத்தார்.[19]

---

18. "(A. D. 1604) The marriage of Shahjee to Jeejee Bye was celebrated with great pomp" — (Duff, page 61)

"Shahjee, in the year 1630, married into another family which was resented by Jeejee Bye his first wife and she retired to some of her own relation" — (Duff, page 61)

"The marriage of Shahji and Jijabai in 1604 was celebrated with great ceremonial and was honoured by the presence of the king in person" — (Kincaid & Parasnis, Page 116).

"In 1630 Shahji had contracted a second marriage with Tuka Bai, a girl of the Mohite family ... and after his second marriage, JijaBai seems to have broken off all but formal relation with her husband — (Kincaid and Parasnis, P. 124).

"Shaji later took a second wife from the Mohite family of Supa and Jija Bai came to be practically neglected by her husbahd" — (Sardesai, Page 53)

18. அ. Sen page 2—3

19. போ. வ. ச. பக். 8 (இந்நூல் பக்கம் 11)

(ஆ) ஷாஜிராஜாவின் இரண்டாவது மனைவியின் தந்தையான யாதவராஜாவும்.[20]

(இ) ஷாஜி ராஜா விஜயதுர்க்கம் என்ற பீஜாபூரில் இருந்த சமயத்தில் அவரது இரண்டாவது மனைவியான ஜிஜாவுக்குச் சாலிவாகன சகம் 1547 அக்ஷய வருஷத்தில் முதல் புத்திரனாகச் சம்பாஜி ராஜா பிறந்தார்.[21]

(ஈ) ஷாஜி ராஜாவின் இரண்டாவது மனைவி சிசாயிபாயி[22] பூரண கருப்பமுற்றிருந்தாள்.[23]

(உ) ஷாஜி ராஜரது மூத்த மனைவிக்குப் பிறந்த மகனாகிய ஏகோஜி ராஜா வானவர் வயதில் சிறியவராக இருந்தபோதிலும் பாத்தியத்தில் அதிக முள்ளவர்; இக்காரணத்தினால் யுவராஜா பதவியும் பெங்களூர்ப்பட்டமும் 1562 விஷு வருஷத்தில் ஏகோஜி ராஜாவுக்குக் கொடுத்தும் தன் விருதுகள் எல்லாவற்றையும் ஏகோஜி ராஜாவுக்குக் கொடுத்துத் தன் குலதெய்வத்தையும் பூஜை செய்யுமாறு கொடுத்தார்.[24]

(ஊ) சிவாஜி ராஜாவின் மூத்த மாற்றாந்தாய் மாதுஸ்ரீ துகாயி ஆவு சாயேபிற்குப் பிறந்தவராகிய ஏகோஜி மகாராஜா அவர்களுக்கு ஷாஜி ராஜா வின் மூத்த மனைவியின் சந்ததியாதலால்''[25]

(எ) சாத்தாராவிலே சாசிராசா யிருக்கும்போது அவருடைய முதல் பெண்சாதி துக்காபாயி கெர்ப்பத்திலே புத்திர சந்தானமாச்சுது.[26]

இதுகாறும் காட்டிய மேற்கோள்களால் ஜிஜாபாயி ஷாஜியின் இரண்டாவது மனைவியென்று வற்புறுத்துக்கூறுதலே கல்வெட்டு - சுவடிகள் ஆகியவற்றின் நோக்கம் என்பது தெள்ளிதின் புலனாம்.[26அ]

ஜிஜாபாயியை ஷாஜி மணந்த வரலாறு பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:-

---

20. போ. வ. ச. பக். 9 ( இந்நூல் பக்கம் 12 )
21. போ. வ. ச. பக். 15 ( ,, 20 )
22. டி 3119 பக். 24 ( ,, 22 )
23. போ. வ. ச. பக். 17 ( ,, 22 )
24. போ. வ. ச. பக். 22 ( ,, 33 )
25. போ. வ. ச. பக். 62 ( ,, 72 )
26. டி. 3119 பக்கம் 28 ( ,, 26 )

26அ. திருமுடி சேதுராமன் சுவடி (பக்கம் 20)இல் ஷாஜி இரண்டு திருமணம் செய்து கொண்டார் என்றிருப்பினும், பக்கம் 40-இல் ''சாஹாஜி ராஜாவுட ரெண்டாவது பட்ட ஸ்ரீ ஜிஜீவுபாயி சாயேபு'' என்றும், பக்கம் 49-இல் ''அவருட ஜேஷ ஸ்ரீயான துக்காவு பாயி'' என்றும், பக்கம் 66 இல் ஜேஷ்ட பட்ட ஸ்ரீயாகிய துர்க்காவுபாயி சாயபு'' என்றும், பக்கம் 218இல், ''சிவாஜி றாஜாவானவர் தன் தம்பியான யேக்கோஜி றாஜா தம்முட ஜேஷ்ட்ட மாதாவுட குமாறனானதினாலே'' என்றும் கூறியுள்ளமையின், துக்காவுபாயி முதல் மனைவி, ஜிஜாயி இரண்டாவது மனைவி என்பது தென்னாட்டவர் கருத்து என்பது போதரும்.

லகோஜி ஜாதவராவ் என்பவர் தேவகிரி யாதவ் அரசமரபைச் சேர்ந்த வர்; இவர் சிந்த்கெட் பகுதிக்குத் 'தேஷ்முக' [26அ] ஆக இருந்தார். இவர் அகமது நகரில் 10,000 குதிரைகள் கொண்ட படைக்குத் தலைவராக இருந்தார். ஷாஜியின் தந்தையாகிய மாலோஜியும் மாலோஜியின் தம்பி விட்டோஜியும் இந்த ஜாதவ் ராவ் ஆதரவில் இருந்தனர்.

கி. பி. 1599-இல் ஹோலிப்பண்டிகை நடந்த சமயத்தில் மாளோஜி தன் மகன் ஷாஜியுடன் யாதவராஜாவின் வீட்டுக்குச் சென்றார். யாதவராஜாவுக்கு ஒரு மகள் இருந்தனள்; ஜிஜாபாய் என்று பேர். யாதவராஜா ஷாஜியை அழைத்து, ஜிஜாபாயியின் அருகில் அமர்த்தி இருவரும் தகுந்த் இணையாக உள்ளனர் என்றார். இரு குழந்தைகளும் ஒருவர் மேலொருவர் சந்தனப் பொடியைத் தூவி விளையாடினர். யாதவராஜா "இருவரும் தகுந்த இணை" என்று கூறியதைக்கேட்ட மாளோஜி, யாதவராஜா என்னுடன் சம்பந்தம் செய்ய உடன்பட்டிருக்கிறார்" என்று கூறினார். இதனையறிந்த யாதவராஜாவின் மனைவி இதற்கு உடன்படவில்லை. மறுநாள் யாதவராஜா மாளோஜியை விருந்துக்கு அழைத்தபொழுது "ஷாஜியை மருமகனாக ஏற்றுக் கொண்டாலன்றி விருந்துக்கு வரவியலாது" என்று கூறினார். இதனால் இருவருக்கும் மனவேற்றுமை ஏற்பட்டது. இதனையறிந்த நிஜாம்ஷா மாலோஜியை 5,000 குதிரைகட்குத் தலைவனாக்கினார்; பூனா சூபா ஆகியவற்றைச் சாகீராகக் கொடுத்து "ராஜா' என்ற பட்டமும் அளித்துப் பெருமைப்படுத்தினார். இதனால் யாதவராஜாவுக்குத் தன்மகளை ஷாஜிக்கு அளிக்கத் தடை ஏதும் இல்லையாயிற்று. 1604இல் இருவருக்கும் திருமணம் நடந்தது.[27] – இச்செய்திகள் போ. வ. ச. விலோ அல்லது மெக்கன்சி சுவடிகளிலோ குறிக்கப் பெறவில்லை.

இங்ஙனம் குறிக்கப்படாமைக்குரிய காரணம் வெளிப்படை. இச்செய்தி மாலோஜியின் குலப்பெருமையைப் பாதிப்பதாக உள்ளது. ஜாதவராவ் முதலில் திருமணத்துக்கு இணங்காமைக்குரிய காரணம் அவரிடம் மாளோஜி வேலையிலிருந்தமையேயாகும். இரண்டாவது, சுவடி - கல்வெட்டு எழுதியோர் கருத்து ஜிஜாயியை ஷாஜியின் இரண்டாவது மனைவி என்று வற்புறுத்திக் கூறுவதேயாகும். மேற்கண்ட கதை இவர்கள் கருத்துக்கு மாறுபட்டது. ஆகவே இக் கதையை இவர்க்ள் அறவே குறிக்காது விட்டனர் என்னலாம்.

ஜிஜாபாயியின் திருமணம் மாளோஜி உயிருடன் இருந்தபொழுதே நிகழ்ந்ததாக மேற்கண்ட செய்தியினின்று தெரிந்திருக்க, போ.வ.ச. மாளோஜி இறந்த பிறகு திருமணம் நடந்தது என்று கூறும்.[29] சிவபாரத சரித்திரத்திலும்

---

26அ. Deshmukh - A hereditary officer, the head of a district (Takakhav Index)

27. டஃப் (பக்கம் 44-45); கி.பா. (பக்கம் 116-125); 12,000 குதிரைகட்குத் தலைவனாக்கினார் என்றும், 1604 ஏப்பிரல் திங்களில் திருமணம் நடந்தது என்றும் தகாகாவ் (பக்கம் 13-14) கூறுவர்.

29. போ. வ. ச. பக்கம் 8

மாளோஜி இறந்த பிறகே விட்டோஜியின் ஆதரவில் வளர்ந்த பொழுது ஜிஜாபாயியைக் கல்யாணம்செய்வித்ததாகக் கூறப்பட்டுள்ளது.[30] ஏகோஜியைத் திருவயிறு வாய்த்த துக்காபாய் திருமணச் செய்தி சிவபாரதத்திலே இல்லை.

ஆனால் ஜாதுநாத் சர்க்கார் தன் **Shivaji and his times** என்ற நூலில் பக்கம் 19இல் பின்வருமாறு கூறுவது கவனிக்கற்பாலது:- **"In reality they (Jija Bai and Shivaji) seem to have both fallen under his neglect. It is a fair inference from the known facts that by the year 1630 or there about Jija Bai lost her husband's love, probably with the loss of her youth, and Shahji forsook her and her little son Shivaji and took a younger and a more beautiful wife".**

### 2. ஷாஜீக்கும் யாதவ ராஜாவுக்கும் ஏற்பட்ட பகைமைக்குக் காரணம்

ஷாஜியின் மனைவி ஜிஜாபாய்; ஜிஜாபாயின் தந்தை யாதவராஜா. இவ் விருவருக்கும் பகைமை யேற்பட்டமைக்குரிய காரணம் போ. வ. ச. விலும் (சுவடிகளிலும்) சிவபாரத சரித்திரத்திலும் ஒரே மாதிரியாகக் கூறப்பட்டுள் ளன.[31] சுருக்கம் பின்வருமாறு:-

ஒருநாள் நிஜாம்ஷா அரியணையில் அமர்ந்து சதிர் பண்ணினார். பல அரசர்களும் வந்து வணங்கினர். சதிர் கலைந்து போகும்போது கண்டாகலே என்கிறவர் தன் யானையை முன்னே போகவிட்டார். அவ்யானைக்கு மதம் வந்து எல்லாரையும் அடிக்கத் தலைப்பட்டது. யாதவ ராஜாவினுடைய மகன் தத்தவர்மா என்கிறவர் யானையைத் துதிக்கையின் கண் வெட்டி வீழ்த்தினார். விட்டோஜி ராஜாவினுடைய மக்கள் சம்பாஜி கோலோஜி என்பவர்கள் கண்டா கலேக்கு உதவுவதற்கு முன்வந்தனர். தத்தவர்மா சம்பாஜியின்மேல் சண்டைக் குப் போனார். ஷாஜி, தன் தம்பிக்கு உதவச் சென்றார். நடந்த சண்டையில் தத்தவர்மா இறந்தார். யாதவராஜா தன் மகன் இறந்த வருத்தத்தால் சண்டை செய்ய வந்தார். ஷாஜி ராஜா எதிர்த்தார். யாதவராஜா கத்தியினால் வெட்டி னார்; வெட்டுப்பட்ட ஷாஜி மூர்ச்சையுற்று விழுந்தார். தன்மகனைக் கொன்ற சம்பாஜியையும் யாதவராஜா கொன்றார். இதனையறிந்த நிஜாம்ஷா இருவரை யும் சமாதானப்படுத்தி யனுப்பிவிட்டார். ஷாஜிக்கும் யாதவராஜாவுக்கும் மன வருத்தம் வந்தமைக்குரிய காரணம் இங்ஙனமே போ. வ. ச. விலும் சொல்லப் பட்டுள்ளது. இச்செய்தியை வரலாற்றாசிரியர்கள் யாரும் குறிப்பிடவில்லை.

நிஜாம்ஷா முகலாயருக்குத் தோற்றார் என்றும், அப்பொழுது நிஜாம் ஷாவின் சேனைத்தலைவராக இருந்தவர் மாலிக் அம்பர் ஆவர் என்றும், இத் தோல்வி காரணமாகச் சேனைத் தலைவர்களில் ஒருவராகிய லக்கோஜி ஜாதவ்

---

30. சிவபாரதம் பக்கம் 6.

31. இந்நூல் பக்கம் 12-14; போ. வ. ச. பக்கம் 8-11; சிவபாரதம் பக்கம் 8-9.

ராவ் முகலாயர் பக்கம் சேர்ந்தார் என்றும், தன் மாமனார் சென்ற போதிலும் ஷாஜி முகலாயர் பக்கம் செல்லவில்லை யென்றும், அதனால் இருவருக்கும் பகைமையுண்டாயிற்று என்றும் வரலாற்றாசிரியருள் ஒருவர் கருதுகிறார்.[32]

## 3. ஷாஜியின் முன்னோர்

ஷாஜியின் முன்னோர்கள் ஆகப் பன்னிரு தலைமுறையினரைப் போ. வ ச. வும் மெக்கன்சி சுவடிகளும் கூறுகின்றன. இம்மரபினரின் முதல்வர் சம்பு பருவதத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ சாம்பசிவப்பெருமானிடத்தில் அன்பு பூண்டவர் என்று தொடங்கி சம்பு - ஏகோஜி - சரபராஜா - மகாசேனன் - ஏக சிவராஜா - ராமச்சந்திர ராஜா - பீமராஜா – இரண்டாவது ஏகோஜி - வராஹ ராஜா - மூன்றாவது ஏகோஜி - பிரும்மராஜா - முதல் ஷாஜி – அம்பாஜி - பரசோஜி – பாவாஜி - மாலோஜி - ஷாஜி என்று ஷாஜிக்கு முன் பதினைந்து பேர் சொல்லப்படுகின்றனர். இங்ஙனம் வேறு எந்த நூலிலும் கூறியிருப்பதாகத் தெரியவில்லை.

டஃப் தம்முடைய நூலில் (பக்கம் 43) வெரேல் (Verole) என்னும் தவுல தாபாதுக்கு (Doulatabad) அருகில் உள்ள ஊரில் படேல் (Patel - ஊர்த்தலைவர்) ஆகப் போன்ஸ்லேக்கள் இருந்தனர் என்று கூறிப் பாப்ஜி (Babjee) போன்ஸ் லேக்கு இருவர் மக்கள்; மூத்தவர் மல்லோஜி; இளையவர் விட்டோஜி என்று இவ்வமிசத்தைப் பற்றிக் கூறினார்.

கின்செயிடு – பாரஸ்நீஸ் தம் நூல் பக்கம் 112-114-ல் ஷாஜியின் முன் னோர்களில் ஒருவர் ஸஜன சிங்கு (Sajana Sing) என்பவர் ஆவர் என்றும், அவர்களுள் ஒருவர் தேவராஜ்ஜி ஆவர் என்றும், இத்தேவராஜ் உதையபூர் ராணாவிடம் சண்டையிட்டுத் தக்காணத்தக்குச் சென்றார் என்றும், அங்குப் போன்ஸ்லே என்று பெயர் பூண்டு கொண்டார் என்றும் கூறியதோடு, கேல் கர்னாஜி அல்லது கேலோஜியும் அவருடைய உடன் பிறந்தார் மால்கர்னாஜி அல்லது மாலோஜியும் உதயபுரி (Udaipnr) யினின்று அகமதுநகருக்கு வந்தனர் என்றும், கோலோஜி போரிலிறந்தார் என்றும், மால்கர்னாஜி ஒரு ஆற்றில் நீராடுங்கால் இறந்தார் என்றும், மால்கர்னாஜியின் மகன் பாபாஜி (Babaji) தவுலதாபாதுக்கு அருகிலுள்ள வெருல் (Verul) என்ற ஊரின் தலைமைப் பதவியை (Patilki or headship) விலைக்கு வாங்கினார் என்றும், பாபாஜிக்கு மாலோஜி விட்டோஜி என்ற இருமக்கள் என்றும், மாலோஜி, வனங்குபால் நிம்

---

32. "Shahaji greatly distinguished himself in the fighting against the Mughals. But in spite of his gallantry Malik Ambar was defeated. Lakhoji Jadav Rao and many other highly placed Maratha nobles deserted to Shah Jehan. Shahaji, however, remained faithful to Malik Ambar until the latter's death in 1626..." (Page 117); "Before his (Shivaji's) birth, his grandfather Lakhoji Jadhav Rao had joined the Mughals, and Shahaji by refusing to follow his example had incurred his bitter enmity" (Page 124) – (Kincaid & Parasnis)

பால்கருடைய உடன்பிறந்தாள் தீபாபாயியை மணந்தார் என்றும், தீபாபாயி ஷாஜி, ஷரீஃப்ஜி ஆகிய இருமக்களைப் பெற்றெடுத்தார் என்றும் கூறப் பட்டுள்ளன. இவற்றால் பின்வரும் கால்வழி முறை பெறப்படும்:—




* பாபாஜியின் தந்தை அம்பாஜி என்று போ. வ. ச. கூறும். கேலோஜி மாலோஜியின் செய்திகள் போ. வ. சவில் இல்லை. மாலோஜியின் மனைவி தீபாபாயி என்று கி. பா. வும், டஃபும் (பக். 43) கூறப் போ. வ. ச. வும் (பக். 6) சிவபாரதமும் (பக். 3) உமாபாயி என்று கூறும்.

சர்தேசாய்[33] கூறுவது பின்வருமாறு:—

சித்தூரில் அஜய்சிங்கு என்றொருவரிருந்தார். முகமதியர் அவருடைய கோட்டையைப் பிடித்தனர். அஜய்சிங்கு தன் தமையன் மகன் ஹம்பீர்சிங்கு என்பவருடன் வெளியேறினார். இருவரும் ராஜ்நகரில் ஒரு கோட்டையைக் கட்டி அதனைத் தலைமையிடமாகக் கொண்டு புதிய நிலப்பகுதிகளை வென்று பல கோட்டைகளையும் எடுப்பித்து இறுதியில் உதயபுரி (Udaipur) யைத் தலைநகராக ஏற்படுத்திச் சுயேச்சையாக ஆட்சி புரியலாயினர். அஜய்சிங்கு இறந்த பிறகு, அவன் மகன் சஜன்சிங்கு தெற்குப்பிராந்தியங்களின் மேல் படையெடுத்துச் சென்று நாடுகளை வென்றார். அவருடைய வழியினர் டிலிப்சிங்குஜி மகாராணா, சிங்குஜி மகாராணா, போசஜி மகாராணா, தேவராஜ்ஜி மகாராணா என்று சிலர் முகமதியர்களோடு இடையறாது போர்புரிந்தனர். இறுதியில் தேவராஜ்ஜி சிங்கணபுரம் (Singnapur) தலைமைப்பதவி (Patelship) பெற்று அங்கு இருந்தார். பின்னர் அவருடைய வழியினர் கான்வால் ஹிங்கூசி, வெரூல், வாவி, மூங்கி முதலாய ஊர்களின் தலைமைப் பதவி (Patelship) களை விலைக்குப் பெற்றனர். தேவராஜ்ஜியை யடுத்து வந்தவர்கள் முறையே தேவராஜ்ஜி, சுப்கிருஷ்ணாஜி, ரூப் கிருஷ்ணாஜி, பூமிந்திஜி, தீப்ஜி, பார்ஹத்ஜீ காலாஜி என்கிற கால்கர்ணா, கர்ணாசிங்குஜி என்கிற ஜயகர, சம்பாஜி, பாபாஜி என்கிற சிவாஜி.

33. A New History of the Mahrattas Page 5 - 6

இறுதியில் கூறிய பாபாஜி கி.பி. 1533இல் பிறந்தவர். பாபாஜி இரு மக்கள் - மாலோஜி விட்டோஜி. மாலோஜி கி. பி. 1550இலும் விட்டோஜி 1553இலும் பிறந்தனர்.

இந்த வழிமுறை சிட்னீஸ் பக்கரில் (Chitnis' Bakhar) உள்ளவாறு எழுதப் பட்டுள்ளது என்றும், சாதாராவின அரசர் பிரதாபசிங்கர் எழுதுவித்த கால் வழி முறை (Genealogy) யுடன் மேலே கூறிய வழிமுறை ஒத்து வருகிறது என்றும், மேற்கண்ட சாதாரா அரசர் அந்தக் கால்வழிமுறையை அச்சிட்டு வெளிட்டுள்ளார் என்றும், கர்னல் டாட் (Col. Tod) இராசத்தான் (Rajasthan) வரலாற்றில் சிவாஜியின் முன்னோர் பற்றி மீவார் பட்டர்கள் (Bhats or troubadours) இடம் இருந்துபெற்ற வமிசாவளியுடன் ஒத்துவருகிறதென்றும் சர்தேசாய் கூறுவர்.[34]

தஞ்சைப்பெரிய கோயில் கல்வெட்டில் கூறப்பட்ட மாலோஜியின் முன் னோர் பற்றி சி. வி. வைத்யா அவர்கள் கருத்துப் பின்வருமாறு:— The names of twelve ancestors before Maloji, given in the Brihadeeswara inscrip - tion, are imaginary, being a multiplication of the name Ekoji, founder of the Tanjore family and these again do not tally with the names given in the accepted genealogy".[35]

## 4. 96 க்ஷத்திரியவமிசம்

க்ஷத்திரிய வமிசம் தொண்ணூற்றாறு என்றும், அவற்றின் பெயர் விவரமும் போ.வ.ச.விலும் (சுவடிகளிலும்) கூறப்பட்டுள்ளன.[36]

மராட்டிய க்ஷத்திரியர் ஷஹன்னவாகுலி (Shahannevakuli)[37] எனப் பெறுவர் என்றும், அவர்களுக்கிடையேதான் உணவு கொள்வினை கொடுப்பனை நடைபெறும் என்றும்,[38] இப்பெயர்களுள் சில விடப்படுதலும் சில சேர்க்கப் படுதலும் உண்டு என்றும், தொண்ணூற்றாறு என்ற எண்ணிக்கை நிலையாக இருக்கும் என்றும்,[39] இந்த 96 குலப்பெயர்கள் தஞ்சை மராட்டியக் கல்வெட் டொன்றில் தான் உள்ளது என்றும், அந்தப் பட்டியல் மிகவும் முக்கியமானது என்று இதனான் கருதப்பெறும் என்றும் திரு. வைத்யா அவர்கள் கூறியுள்ளார்.[40]

## 5. சிவாஜியைப் பற்றிய செய்திகளுட் சில சொல்லப்படாமை

(அ) அவுரங்கசீபு தன் மாமன் சாஸ்தாகான் (Shaista Khan) தக்கணத் துக்குப் பல பிரபுக்களுடன் அனுப்பியது போ.வ.ச.வில் (பக்.47)இல் சொல்லப்

34. ஷை பக்கம் 6 இன் அடிக்குறிப்பு.
35. Shivaji Souvenir, "Are the Bhonsles Khatriyas", Vaidya C.V., page 8
36. போ.வ.ச. பக். 20; இந்நூல் பக்கம் 30
37. சிவாஜி சாவனீர் பக். 76
38. சிவாஜி சாவனீர் பக். 81
39. சிவாஜி சாவனீர் பக். 82
40. ஷை

பட்டது. ஆனால் சாஸ்தாகான், ரம்ஜான் ஆறாவது நாளில் இரவில் (5-4-1663இல்) தூங்கிக் கொண்டிருக்கும்பொழுது, சிவாஜி சில வீரர்களுடன் சாஸ்தாகான் தங்கியிருந்த இடத்துக்குச் சென்று, கலாம் விளைவித்துப் பலரைக் கொன்று, சாஸ்தாகானைத் தாக்கியபோது சாஸ்தாகானின் கட்டைவிரல் துண்டிக்கப்பட்டது. சாஸ்தாகான் தப்பியோடினான்.[41] இச்சாஸ்தாகான் காதை போ. வ. ச. வில் இல்லை.

(ஆ) **சிவாஜி அவுரங்கசீபின் தர்பாருக்குச் சென்றமை:** சிவாஜி, ஜெய்சிங்கின் ஆலோசனையின்படி அவுரங்கசீபைக் காண்பதற்கு ஆக்ராவுக்குச் சென்றார். அங்குச் சிவாஜியின் பெருமைக்கு ஏற்ப எம்மரியாதையும் கொடுக்கப் பெற வில்லை. ஆகவே சிவாஜி மிகவும் மனம் நொந்தார். சிவாஜி ஆக்ராவின் சிறையில் வைக்கப்பட்டார். சிவாஜி தன் அறிவுக் கூர்மையால் தன் மகனுடன் பழக்கூடைகளில் ஒளிந்துகொண்டு வெளியேறினார். (ராஜ்கெடிக்கு (Rajgarh) 12-9-1966இல் போய்ச் சேர்ந்தார்).[42]

(இ) **சூரத்தைக் கொள்ளையிட்டமை[43]:** சூரத் (Surat) இருமுறை கொள்ளைக் குள்ளாயிற்று. முதல் தடவை 1664இல் ஜனவரி ஆறாம் நாள் முதல் 10ஆம் நாள் வரை நிகழ்ந்தது. இதனால் ஒரு கோடி ரூபா மதிப்புள்ள பொன் வெள்ளி, முத்து, விலையுயர்ந்த மணிகள், சிவாஜிக்குக் கிடைத்தன. 3-10-1670இல் இரண்டாம்விசை சிவாஜி சூரத்தைத் தாக்கினார்; 5-10-1670இல் கொள்ளை யுடன் திரும்பினார். இக்கொள்ளைகளின் மதிப்பீடு 66 லக்ஷம் ரூபாயாகும்.[44]

(ஈ) **சிவாஜியின் கர்னாடகப் படையெடுப்பு[45]:** இப்படையெடுப்பில் செஞ்சி யைக் கைப்பற்றியமை, வாலிகண்டபுரத்தில் ஷெர்கான்லோடியுடன் போர் செய்து துரத்தியமை, திருவாதி (திருவதிகை), தேவனாம்பட்டினம் (கடலூரின் உட்கிடையூர்) ஆகியவற்றைக் கைப்பற்றியமை, கொள்ளிடத்தில் வடகரையி லுள்ள திருமழபாடியில் தங்கியமை, வெங்காஜி சிவாஜியைக் கண்டு, பின்னர்க் கொள்ளிடத்தை கடந்து சிவாஜியினிடம் விடைபெறாது வந்தமை, சிவாஜி மகாராட்டிரத்துக்குத் திரும்பியமை, 1677 நவம்பரில் கொள்ளிடத்தைக் கடந்து வந்த சிவாஜியின் படையொடு ஏகோஜி பொருதமை, இறுதியில் தோற்றமை, ரகுநாத்பந்த் ஏகோஜியைக் கண்டு உடன்படிக்கை செய்துகொண்டமை, பின்னர் 1680இல் பீஜப்பூர் சுல்தானிடமிருந்து

---

41. சர்க்கார் (1) பக்கம்; சென் - (சிவதிக்விஜய) - பக்கம் 201-4

42. சர்க்கார் (1) பக்கம் 151-157; சென் - (சிவதிக்விஜய) பக்கம் 218-19

43. சர்க்கார் (1) பக்கம் 93-100; 171-173

44. சர்க்கார் (1) பக்கம் 174

45. சர்க்கார் (1) பக்கம் 293-300; Sen-Siva Chatrapati - (Sabhasad) Page 122-129; Srinivasan, page 154-167.

கர்நாடகத்தில் தான் வென்ற நாடுகளின் உரிமை பீஜப்பூர் சுல்தானிடமிருந்து பெற்றமை ஆகிய செய்திகளை வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்.

சிவாஜி கி.பி. 1677இல் சந்தி பிரதேசத்தை (செஞ்சையை)க் கைப்பற்றினார். 1680இல் சிவாஜியும் பிரெஞ்சுக்காரரும் உடன்படிக்கை செய்து கொண்டனர் என்பவை மட்டும் போ.வ.ச.வில் உள்ளன (பக். 58). மேலும் போ.வ.ச வில் "சிவாஜி ராஜா சேதுயாத்திரையின் பொருட்டு இரகசியமார்க்கமாகச் சென்று யாத்திரையை முடித்துக் கொண்டு" தஞ்சாவூர்க் கோட்டைக்கு வந்து சென்றதாகக் கூறப்பட்டுள்ளது. மறுமுறையும் சேதுயாத்திரை செய்ததாகவும் உளது.[46] வரலாற்றாசிரியர்கள் சேது யாத்திரையைக் கூறவில்லை.

சிவாஜியும் ஏகோஜியும் கொள்ளிடக்கரையில் கண்டமை முதலியவற்றை சபாஸத்[47], சிவதிக்விஜயம்[48] சிட்னீஸ்[49] கூறியுள்ள போதிலும் போ.வ.ச.விலும் மெக்கன்சி சுவடிகளிலும் இல்லாமை வியப்புக்குரியது.

இங்ஙனம் சில செய்திகள் போ.வ.ச.வில் (மெக்கன்சி சுவடிகள் ஆகியவற்றுள்) சொல்லப்படாமைக்குரிய காரணம் புலப்படவில்லை. ஒரு வேளை சிவாஜியின் பெருமைக்கு இழுக்குவருங்கொல் என்று கருதி இத்தகையவற்றைச் சேர்க்காது விட்டனர் என்று நினைக்க இடம் தருகிறது.

சாஸ்தாகான் தூங்கிக் கொண்டிருக்குங்கால் நள்ளிரவில் சென்று கொல்ல முயன்றமை வீரச்செயலாகக் கருதப் பெறமாட்டாது. அவரங்கசீபின் சிறையினின்று பழக்கூடைகளில் மறைந்து வந்தமையும் வீரச்செயலாகாது; சூழ்ச்சித் திறன் ஆகக் கருதப்பெறலாம். சூரத் கொள்ளையும் கொள்ளையர் செயலாகக் கருதப்படுமேயன்றி வீரச் செயலாவது யாங்ஙனம்? கர்நாடகப் படையெடுப்பில் தன் தம்பியாகிய ஏகோஜியோடு போரிட்டமை முதலியன நிகழ்ந்தமையின் வீட்டுச் சண்டை இருசாரார்க்கும் பெருமை தாராது என்று கருதியிருத்தல் கூடும்.

இன்னோரான்ன காரணங்களால் சிவாஜியைப் பற்றி மராட்டியில் எழுதிய சபாஸத் முதலியவற்றுள் கண்டுள்ள மேற்கண்ட செய்திகள் தஞ்சாவூரில் எழுதப்பெற்ற சுவடிகளிலும் கல்வெட்டிலும் விடுபட்டன.

**பொது:**

**அ. ஆராய்ச்சியாளர் கத்ரே**

தஞ்சாவூரில் தங்கியிருந்து மோடி ஆவணங்களை யெல்லாம் வகைப் படுத்திய மேஜர் நாராயண பாலகிருஷ்ண கத்ரே, "வரலாற்றாசிரியர் ராஜ் வாடே, திரு. சாம்பமூர்த்தி ராவ் ஆகிய இரண்டு வெளியீட்டாளர்களின்

---

46. போ.வ.ச.பக். 40-41
47. சென். (சபாஸத்) பக்.124-128
48. சென் (சிவதிக்விஜய) - பக். 226, 230-236
49. சென் - (சிட்னீஸ்)-பக். 221-226; 227-229

செயல் வரலாற்றின் சாதனை என்றுதான் கூற வேண்டும்'' என்றும், ''இந்தக் கல்வெட்டு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது'' என்றும் கூறுவர். மேலும் 'கல்வெட்டில் மாறுபட்ட சக ஆண்டுகள் பற்றிச் சிந்தனை செய்து பார்க்க வேண்டும்'' என்று கூறியவர்,

''சிவாஜி ராஜாவிற்குப் பட்டாபிஷேகம் ஆனது முதல் ஔரங்கசீப் இறக்கும் வரையில் உள்ள எல்லாக்காலக் குறிப்புக்களும் சுமார் நான்கு வருஷ வித்தியாசம் உடையனவாம்'' என்று எழுதுகிறார்.

மேலும், ''அரண்மனையில் இந்த வரலாற்றுக் குறிப்புக்களின் மூலப்பிரதி இருக்கலாம் என நினைக்க இடமுண்டு'' என்று கூறியிருப்பதால் சாம்பமூர்த்தி ராவுக்கு 1907இல் அரண்மனையினின்று சுவடி கிடைத்தது என்ற செய்தி இவருக்குத் தெரியாது என்பது வெள்ளிடை மலையாகும்.

### ஆ. கல்வெட்டுத்துறை

இந்த மராட்டியக் கல்வெட்டு 1924இல் கல்வெட்டுத்துறையினரால் படியெடுக்கப் பெற்றது; 1923-24ஆம் ஆண்டுக்குரிய வெளியீட்டில் 424ஆம் எண்ணாகக் குறிக்கப் பெற்றுள்ளது.[50] 1923-24க்குரிய அறிக்கையில் இரண்டாவது பகுதியில்[51] பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:-

''இச்சாஸனம் 119 பக்கங்கள் கொண்டதாகத் திரு. சாம்பமூர்த்திராவ் என்பவரால் அச்சிடப்பெற்றுள்ளது; போன்ஸ்லே வமிச சரித்திரத்தை நிரலே கூறுவது; ஷாஜியின் சாதனைகள், அவருடைய மகன் சிவாஜியின் சாதனைகள், தஞ்சை அரசர் சரபோஜி வரையில் இருந்த அரசர் செய்திகள் ஆகியவற்றைக் கூறுகிறது. சரபோஜியின் ஆணையால் இந்தச் சாஸனம் வெட்டப்பட்டது. ரானடே எழுதிய மராட்டிய வரலாற்று நூலிலோ, டஃப் எழுதிய நூலிலோ இல்லாத பல செய்திகளைக் கூறுகிறது. மேலே கூறிய நூல்களில் தஞ்சை மராட்டிய அரசர்களின் வரலாறு காணப்படவில்லை. இந்தக் கல்வெட்டில் கொடுக்கப்பட்ட கால்வழி முறை செவல் எழுதிய நூலில்[52] கூறப்பட்டதற்கு முன் 15 தலைமுறையினரைக் குறிப்பிடுவதாக உள்ளது. இந்த அரிய சாஸனம் கல்வெட்டுத்துறை வெளியீடாக ஆய்வாளர்க்கு பயன்படுவதற்காக விரைவில் வெளியிடப்பெறும்.''[53]

இதற்குப் பின் சரபோஜி சுவீகாரம் எடுத்துக் கொண்ட செய்தியும், சரபோஜி பிறந்த வமிசாவளியும், கல்வெட்டுத்துறையினர் கொடுத்துள்ளனர்.

---

50. ARE for 1923-24; No. 424/1924 51. 67/Part II of ARE for 1923-24
52. Sewell, List of Antiquities Vol. II Page 193.
53. வெளியிட்டதாகத் தெரியவில்லை.

இ. கே. ஆர். சுப்பிரமணியன்

தஞ்சாவூர் மராத்திய அரசர்கள் என்ற நூலை 1928இல் கே. ஆர். சுப்பிர மணியன் என்பார் எழுதி வெளியிட்டுள்ளார். அவர் இந்தக் கல்வெட்டின் பிற் பகுதியை, ஒரு மராத்திய அறிஞரால் மொழிப் பெயர்த்துப் பெற்றதாகத் தம் நூலில் கூறியுள்ளார்.[54] இந்நூலில் இந்தக் கல்வெட்டைப் பல இடங்களில் தஞ் சாவூர் அல்லது மராத்தியக் கல்வெட்டு என்று குறிப்பிட்டிருக்கிறார். இவர் பெற்ற மொழி பெயர்ப்பு இந்நாளில் கிடைக்காதென்பது உறுதி:

ஈ. சி. கே. சீனிவாசன்

கருநாடகத்தில் மராத்தியர் ஆட்சி என்ற அரிய நூல் திரு.சி.கே. சீனிவாசன் என்பவரால் எழுதப்பெற்று, அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீ டாக 1944இல் வெளிவந்துள்ளது. இந்நூல் தஞ்சை மராட்டிய அரசர் வரலாற்றை விளக்கமாகத் தக்க ஆதாரங்களுடன் தருவதோடு ஷாஜி, சிவாஜி இவர்களின் தென்னாட்டுப் படையெடுப்பைப் பற்றி விரிவாக விளக்குகிறது. எனினும் இந்நூலில் முன்னுரையில் தஞ்சை மராத்தியக் கல்வெட்டு அறிமுகம் செய்யப்பட்டுள்ளதேயன்றி, நூலில் ஓரிரு இடங்கள் தவிர்த்து[55] இக்கல்வெட்டுச் செய்திகள் மேற்கோளாகக் கொடுக்கப்பெறவில்லை. முன்னுரையில்[56] கூறியது பின்வருமாறு:-

"A complete account of the Maratha Kings of Tanjore is given in the lengthy inscription in Maratha carved in the year 1803 A.D. on the walls of the Brihadeeswara Temple at Tanjore at the instance of Raja Serfoji. It contains a more or less a good account of the dynasty and was written after a study of all available documents. "Such a large historical inscription" says Mr. Sardesai, "is nowhere else to be found in the whole world" - (Sardesai, Main currents of Maratha History P.64).

உ. சிவச்சத்திரபதி என்ற பெயரில் கிருஷ்ணாசி ஆனந்த் சபாசத் எழுதிய சிவாஜி வரலாற்றையும், சிட்னிஸ் - சிவதிக்விஜயப்பகுதிகளையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்ட எஸ். என். சென் என்பார், பக்கம் 251இல் "குறிப்புக்களும் பிற்சேர்க்கைகளும்" என்றபகுதியில், "The Tanjore temple inscription is interesting only as a wonderful specimen of human industry and has very little intrinsic merit" என்று கூறியுள்ளார். இம்மதிப்பீடு சரியான மதிப்பீடு என்று சொல்வதற்கில்லை.

---

54. சுப்பிரமணியன் பக். 16 அடிக்குறிப்பு, 1; "The author had the second and relevant half of it translated for him by a Marathi gentleman of Tanjore during his stay there" (Preface to his book)

55. சீனிவாசன், பக்கம் 171,243. 56. சீனிவாசன், பக்கம் 17

இதுகாறும் கூறியவாற்றான், இது ஒரு பெரிய கல்வெட்டு என்றும், இது இந்நூற்றாண்டின் முதலிலேயே மராட்டிய ஆய்வாளர் ராஜ்வாடி அவர்களால் மராட்டிய நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டது என்றும், அதற்கு ஓராண்டுக்குப் பின்னரே தமிழ்நாட்டில் மராட்டிப் பகுதி மட்டும் அறிமுகமாக, 1950க்குப் பிறகே தமிழில் மொழி பெயர்க்கப்படலாயிற்று என்றும், முதன் முதலில் இதனை அச்சிட்டவர்கட்கும் இது பற்றிய மெக்கன்சி சுவடிகள் இருத்தல் தெரியாது என்றும், இம்மராட்டியக் கல்வெட்டில் சில சிறப்புச் செய்திகள் உண்டு, அவை ஆய்வுக்குரியன என்றும் அறியப்பெறும்.

•

## Location and measurements of the Marathi Inscription
## BHONSAL — VAMSH — CHARITRA
## in the Brihadeeshwar Temple at Tanjore*

The Brihadeeshwar Temple at Tanjore, south of the Shivaganga Gardans, is at first surrounded by very large open spaces; and beyond those open spaces runs an enormous rampart fortification. Along the inside of this fortification, alround, abuts a vault-shaped verandah, the vaults resting against the rampart walls on the outside and on pillars on the inside.

On the walls at the south-west corner of this long surrounding rampart verandah, facing the leftside and backside of the Diety's Rath Stables, appears the Marathi inscription named BHONSAL–VAMSH–CHARITA. This inscription was published in print by Itihasacharya Sri V. K. Rajwade at Dhulia and by Sri Sambamurti Rao at Tanjore, in the Christian era years 1906–07 A. D. It has also formed part lately of publication No. 46 of the Saraswati Mahal Library at Tanjore.

In print, the inscription covers over 100 pages of demi–octave size printed in 12 point Marathi type. On actual site, it runs over 46 panels of varying sizes, the largest being 93 in. x 68 inches, and the smallest only 15 in. x 38 inches. On the inside of this folder appears a statement showing contents and size of each panel as compared with the printed Marathi pages and lines. Then follows a lay-out plan, and wall-face sketches of the several panels in serial order.

* ஆராய்ச்சியாளர் கத்ரே அவர்கள் எழுதியது

## DESCRIPTIVE CHART COMPARING CONTENTS OF THE 46 PANELS

| Panel No. | Area | Corresponding to Publ. 46 page | line | Total Lines in panel | Area per line | Remarks |
|---|---|---|---|---|---|---|
| 1 | 5984* | 3 | 6 | 50 | 120 | * All areas have been shown in |
| 2 | 5984 | 5 | 16 | 60 | 100 | square inches. Widths and heights |
| 3 | 5984 | 7 | 24 | 58 | 103 | have been measured but are not |
| 4 | 5984 | 10 | 7 | 58 | 103 | shown here. |
| 5 | 5984 | 12 | 20 | 63 | 95 | |
| 6 | 5984 | 14 % | 23 | 53 | 113 | % The page and line shown for |
| 7 | 5984 | 17 | 1 | 53 | 113 | each panel is the last one inscri- |
| 8 | 1920 | 17 | 23 | 22 | 87 | bed in that panel. |
| 9 | 1068 | 18 | 8 | 10 | 107 | |
| 10 | 2390 | 19 | 6 | 23 | 104 | |
| 11 | 1445 | 19 | 23 | 17 @ | 85 | @ Figures of "Area per line" show |
| 12 | 1445 | 20 | 14 | 16 | 90 | how the inscription is carved in |
| 13 | 2390 | 21 | 17 | 28 | 89 | very small letters somewhere and |
| 14 | 1068 | 22 | 2 | 10 | 107 | in lage ones else-where. This |
| 15 | 1920 | 22 | 22 | 20 | 96 | may mean difference in inscrip- |
| 16 | 5984 | 25 | 10 | 63 | 96 | tion years or just a change over |
| 17 | 5984 | 28 | 5 | 70 | 85 | between artisans. |
| 18 | 5984 | 31 | 6 | 76 | 82 | |
| 19 | 5984 | 35 | 14 | 108 | 56 | |
| 20 | 5984 | 40 | 7 £ | 118 | 51 | £ Part lines are overlooked. |
| 21 | 5984 | 44 | 25 | 1.8 @ | 51 | @ In 10 panels 19-28 inscription |
| 22 | 5984 | 49 | 14 | 114 | 53 | space averages 50 sq. inches to |
| 23 | 6314 | 54 | 10 | 121 | 52 | a line. In the 10 panels 1-10 it |
| 24 | 6314 | 59 | 1 | 116 | 54 | needs 105 sq. inches to the line. |
| 25 | 6314 | 63 | 6 | 105 | 60 | In 8 panels 11 to 18 the average |
| 26 | 6314 | 67 | 18 | 112 | 56 | is 87 sq. inches, and in 18 |
| 27 | 5304 | 71 | 8 | 90 | 59 | panels 29 to 46 it is 75 sq. |
| 28 | 4896 | 74 | 14 | 81 | 60 | inches. |
| 29 | 1447 | 75 | 2 | 13 | 111 | |
| 30 | 945 | 75 | 12 | 10 | 95 | |
| 31 & | 570 | 75 | 19 | 7 | 81 | & Sketches on reverse show their |
| 32 | 570 | 75 | 25 | 6 | 95 | relative position on plan as well |
| 33 | 945 | 76 | 10 | 10 | 95 | as shape and size in elevation. |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 34 | 257 | 78 | 11 | 51 | 83 | |
| 35 | 945 | 78 | 23 | 12 | 79 | |
| 36 | 1068 | 79 | 10 | 12 | 89 | |
| 37 | 1920 | 80 | 10 | 25 | 77 | **Important** |
| 38 | 5248 | 83 | 17 | 82 | 64 | |
| 39 | 5952 | 87 | 3 | 86 | 69 | No one within living memory |
| 40 | 5952 | 90 | 1 | 73 | 82 | has read the actual inscription |
| 41 | 5952 | 93 | 11 | 85 | 70 | in full - or even partially. Con- |
| 42 | 5952 | 97 | 4 | 93 | 62 | tents of each panel shewn have |
| 43 | 5248 | 99 | 23 | 69 | 76 | been analysed only now by Major |
| 44 | 1920 | 100 | 21 | 23 | 88 | Gadre. For panels 24, 25 & 28 |
| 45 | 1058 | 101 | 7 | 11 | 97 | content of each line were seen, |
| 46 | 570 | 101 | 14 | 7 | 81 | and have been noted in the book. |



## II மெக்கன்சி சுவடிகள்

தஞ்சை மராட்டிய மன்னர்களைப் பற்றி மெக்கன்சி தொகுப்பில் பின் வரும் சுவடிகள் காணப்படுகின்றன:

1. டி 3119 மராட்டியர் வரலாறு (ஆர். 7453)
2. டி 3180 தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு (எம் 79)
3. டி 3762 தஞ்சை சரபோஜி மன்னர் வமிசாவளி (எம் 75)
4. டி 3190 தஞ்சை மராட்டிய மன்னர் வமிசாவளி
5. டி 3779 தஞ்சை மராட்டிய மன்னர் வமிசாவளி (எம் 76)
6. டி 3926 தஞ்சாவூர் மகாராஷ்டிர மன்னர் வமிசாவளி (ஆர் 4049)

### (1) டி 3119 எண் உள்ள சுவடி (ஆர் 7453)

மேல் 1 இல் குறித்துள்ள மராட்டியர் வரலாறு குறைப்பிரதியாகும். இது காப்பீடு செய்வதற்காக 1954ல் படியெடுக்கப்பட்டுள்ளது. ஆர் 7453 என்ற எண் கொண்ட இச்சுவடி 157 பக்கங்கள் கொண்டது; ஒவ்வொரு பக்கத்திலேயும் 24 வரிகளுண்டு. பிற சுவடிகளை நோக்க இதில் அதிகப் பிழைகள் இல்லை. இதன் மூலச் சுவடி 190 பக்கங்களையுடையது; ஒவ்வொரு பக்கத்திலும் 21-22 வரிகள்;[1] $9\frac{3}{4}$ X $7\frac{1}{2}$ அங்குலம். இதில் முதலிலிருந்து, 1980ல் அச்சிட்ட போ.வ.ச. வில் பக்கம் 100இல் "பிற்பாடு சந்தாசாஹேப் மொஹிதீன்கான் என்பவர்களிடமிருந்து உபத்திரவம் ஏற்பட்டால் பிறகு பார்த்துக் கொள்வோம் என்ற"[2] என்பது வரையில் உள்ளது. மேற்குறித்த போ. வ. ச.வில் பக்கம் 93இல் "பிறகு அன்னப்பா சேட்கே" என்பது முதல், பக்கம் 94இல் "அன்னப்பா மரணமடைந்ததற்காகப் பச்சாதாபப்பட்டார்" என்பது வரை அன்னப்பா சேட்கேயைப் பற்றிய செய்திகள் ஆர் 7453 ஆகிய குறைச்சுவடியில் இல்லை; டி 3180 டி 3762 ஆகிய முழுச்சுவடிகளில் உள்ளன.[3] இம்முழுச்சுவடிகளைப் படித்தறிந்துகொள்ள ஆர் 7453 ஆகிய இச்சுவடி பெரிதும் உதவியாக உள்ளது என்பது ஒருமுறை ஒப்புநோக்கின் தெரியவரும். டி 3119ஐத் திருத்தியெழுதியதே ஆர் 7453 என்பதாகும்.

### (2) டி 3180 எண் உள்ள சுவடி

இது தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு என்ற தலைப்புடையது. இது எம் 79 என்று குறிக்கப் பெறுவதால், இது மெக்கன்சி சேகரித்தவற்றுள் 79ஆவது எண் உள்ள சுவடி என அறியப்பெறும். இது $12\frac{1}{4}$ X $7\frac{5}{8}$ அங்குலம் அளவில்

---

1. Descriptive Catalogue of Tamil Ms. G.O.M.L., Madras, Vol. VIII

2. இந்நூல் பக்கம், 114 காண்க. 3. டி 3180 இந்நூல் பக்கம் 106 காண்க.

85 பக்கங்களுடையது; பக்கம் 1க்கு 54 வரிகளுடையது. எழுத்துருவம் மிக அழகாகவும் உள்ளது. இதில் கூறப்படாத செய்திகள் யாவை அதாவது மெக்கன்சி சுவடிகளில் அதிகமாக உள்ளவை யாவை என்பவை பற்றி இதன் முன் தலைப்பில்[4] கூறப்பட்டுள்ளன.

மெக்கன்சி சுவடிகளுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. அதாவது அச்சிட்ட போ. வ. ச.வில் பக்கம் 17இல்,

''ஜிஜாபாயி சாகேப் சாலி வாகன சகம் 1551க்குச் சரியான இங்கிலீஷ் வருஷம் 1629 பிரமோதூத வருஷத்தில் பிரசவித்துப் புத்திர பாக்கியத்தைப் பெற்றாள். அப்புதல்வனுக்கு ஏகோஜி ராஜா என்று பெயரிட்டார்கள். இந்த ஏகோஜி ராஜாவின் வம்சத்தில் நான்கு யேகோஜி ராஜாக்கள் உண்டானார்கள். சாலி வாகன சகம் 1552 பிரசோற்பத்தி வருஷம்'' என்று காணப்படுகிறது போ. வ. ச. தமிழாக்கம் செய்து அச்சிட்டவர்கள்.

''ஏகோஜி ராஜா ஜிஜாபாயின் குமாரர் என்பது சரித்திரத்துக்கு முரணாகவுள்ளது''

என்று மட்டும் அடிக்குறிப்பு எழுதினார்கள்.[5] மெக்கன்சி சுவடியில் இங்குக் காணப்படுவது[6] பின்வருமாறு:

''ஜிஜாபாயி சாயபு பூரண கெற்பமாக இருந்தவள் சாலியவாகன சகம் 1551 யிங்கிலீஷ் வருஷம் 1628 பிரமோதூத வருஷம் புத்திறோச்சவமாச்சுது. உடனே சஹாஜி றாஜாவும் வந்து சேர்ந்து நமக்குச் செயமான சமையத்தில் புத்திறோச்சவ மாச்சுதென்று றொம்பவும் சந்தோஷத்தை யடைந்து அந்த பிள்ளைக்குச் சிவனேரி கெடியிலே பிறந்தபடியினாலே சிவாஜி றாஜா என்று நாமகரணம் பண்ணினார்''.

இங்ஙனம் மெக்கன்சி சுவடியில் காணப்படுவதால் போ. வ. ச.வில் தவறு நிகழ்ந்தது என்பது பெறப்படும்.

இனி ''அப் புதல்வனுக்கு ஏகோஜி ராஜா என்று பெயரிட்டார்கள்'' என்ற வாக்கியம் மெக்கன்சி சுவடியில் சுமார் 3 பக்கங்கட்குப் பிறகு ''அந்தப் பிள்ளைக்கு யேகோஜி ராஜாவென்று பேர் வைத்தார்கள். இந்த வமிசத்தில் இவர் நாலாவது யேகோஜி றாஜா; பிறந்தது சாலியவாகன சகாப்தம் 1552 பிறசோத்பத்தி வருஷம்'' என்று காணப்பெறும்.

எனவே போ. வ. ச.வில் காணப்படும் பிழையைப் போக்குவதற்கு மெக்கன்சி சுவடிகள் துணை நிற்கின்றவாற்றை அறிந்து இன்புறலாம்.

இந்தச் சுவடியின் முகப்பில் 17-5-34 என்று ஒரு எண் குறிப்பு இருக்கிறது. இதனை நிலைக்கால் தட்டு எண் (**Shelf number**) என்பர் திரு. **T.V.** மகாலிங்கம் அவர்கள். இந்த எண் டெய்லர் அச்சிட்டபட்டியலில் மையால் எழுதப்பெற்றுள்ளது.

---

4. இந்நூல் பக்கம் 185 காண்க.
5. போ. வ. ச. பக். 17 அடிக்குறிப்பு
6. இந்நூல் பக்கம் 22–23 காண்க.

இச்சுவடியே ஆராச்சிக் குறிப்புக்களுடன் இந்நூலில் அச்சிடப் பெறலாயிற்று. இந்தச் சுவடியின் மொழிநிலை பற்றி இங்குச் சிறிது கூறுவது இன்றியமையாததாகும்.

சுவடியை எழுதியோர் காதால் கேட்டும் பார்த்தும் எழுதுங்கால் தன் அறிவுக்கு ஏற்பச் சொற்களை மாற்றியமைத்திருத்தல் கூடும். காதால் கேட்டு எழுதுங்கால் சந்திப் பிழைகள் ஏற்படுதல் எதிர்பார்க்கக்கூடியதே. ஓரிரு எடுத்துக்காட்டுக்கள்:

"கொஞ்சநாளைக்கு பிற்பாடு; அவருக்கு பிறதம"

இவற்றுள்ளகுவ்வுருபிற்குப் பிறகு வன்மை மிகாமை காணப்படுகின்றது.

"பிற்ப்பாடு" என்பதில் றகரத்தையடுத்துப் பகரமெய் வேண்டாவழிக் காணப் பெறுகிறது.

'பிறதம' என்ற சொல்லில் இடையின ரகரம் இருக்க வேண்டிய இடத்தில் வல்லின றகரம் இருக்கிறது.

றாஜா, உயித்தம், ஆச்சுது போன்ற சொற்கள் இவ்வுருவிலேயே பயின்றுள்ளன.

ஐம்பது என்பது அன்பது என்றும், இரண்டு என்பது ரெண்டு என்றும், ஒன்று என்பது ஒண்ணு என்றும், மூன்று என்பது மூணு என்றும் காணப் பெறுகின்றன.

உடம்படுமெய் புணர்த்தல் பெரும்பாலும் தவறாகவே யுள்ளது. இந்த யெட்டு, இருண்டயிடம் என்பன எடுத்துக்காட்டு.

அவர்கள் என்பது அவாள் என்றும், பிராமணர்கள் என்பது பிராமணாள் என்றும் "அர்கள்" என்பது 'ஆள்' ஆகத் திரிந்தமை பெரும்பான்மை.

உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடாது உடம்படுமெய் பெறல் பெரும்பான்மை: கொடுக்கிறதுயென்று; கொண்டுயிருக்கிற என்பன எடுத்துக்காட்டு.

சொல்லடைவு நோக்கின் பிறமொழிச் சொற்கலப்பு அறியப்பெறும்.

மொழி முதலாகா எழுத்துக்கள் இச்சுவடியில் தங்குதடையின்றி மொழி முதல் ஆதல் கண்கூடு:

யிந்த, யெங்கள், யேழு, ராசா, ரெண்டாவது, ரொம்ப, நத்தம், னாகூர், னாள், இன்னோரன்ன பல.

சொல்லிப் போட்டு, கொடுத்துப் போட்டு என்ற வட்டாரவழக்கும். அப்படிக்கொத்த இப்படிக்கொத்த என்ற கூற்றுக்களும் பெரும்பான்மை.

"தாவினே" என்ற சொல்பயன்படுத்தியமையும், போடுவான் (போடுவார்கள்), துணியமாட்டாள் (துணியமாட்டார்கள்) என்று கூறியமையும் இதை எழுதியவர் பார்ப்பனர் என்பதைக்காட்டும்.

பல வாக்கியங்கள், தவறான அமைப்புடையவை; சுவடியை நோக்கின் அறியலாம்.

இம்மெக்கன்சி சுவடி, டெயிலர் தொகுத்த கீழ்த்திசை வரலாற்றுச் சுவடி, கள் மூன்றாம் தொகுதியில்[7] பக்கம் 298இல், எண் 798ஆகக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### (3) டி3762 எண் உள்ள சுவடி

இது தஞ்சை சரபோஜி மன்னர் வமிசாவளி என்ற தலைப்புடையது; எம் 75 என்று குறிக்கப்படுவது. இது 29×17.4 செ. மீ. அளவில் 82 பக்கங்க ளுடையது; பக்கம் ஒன்றுக்கு 40 வரிகள் உண்டு. இதுவும் டி 3180 போன்றே முழுச்சுவடியாகும். இதன் முகப்புப் பக்கம் ஒன்றனுள் இது தஞ்சாவூர் வேத நாயகம்[8] சேகரித்தவற்றைச் சேர்ந்தது என்றும், 4-4-1804 இல் தரங்கம்பாடியில் இருந்த பாதிரிகள் ஜான், ரோட்லர் என்பவர்களின் ஆணையின்படி இது தரங்கம் பாடி "மிஷனரி" யிடம் இருந்த சுவடியினின்று படியெடுக்கப்பட்டது என்றும் தெரிகிறது.[9]

அடுத்த ஏட்டில் 17-6-25 என்று குறிப்பு இருக்கிறது. இதனை (Shelf No.) நிலைக்கால் தட்டு எண் என்று திரு. மகாலிங்கம் அவர்கள் குறிப்பிடுகிறார். இதில் மெக்கன்சியின் அரக்குவைத்த முத்திரை (Seal) காணப்படுகிறது. இதில் C. C. M. என்ற எழுத்துக்கள் இருத்தல் கூடும்.

இச்சுவடியும் முழுச்சுவடியாகும். எழுத்துருவம் செம்மையாக இல்லை. எல்லாம் பிழையாகவே உள்ளன. பழைய கையெழுத்துச்சுவடிகளைப் படித்தலில் மிக்க பயிற்சி யுடையவர்களாலே தான் இச்சுவடியைப் படிக்கவியலும். டி 3180 சுவடியையும் இதனையும் ஒப்பிடின் டி 3180, இதனைப் பார்த்துப் பெரும் பாலும் திருத்தி எழுதப் பட்டுள்ளது என்பது புலனாகும்.[10]

---

7. Taylor, Oriental Historical Manuscripts, Vol. III

8. வேதநாயக சாஸ்திரி (1774-1864); வரலாறு இதன் இறுதியில் காண்க.

9. "Historical account of the Tanjore family copied from a ms. in possession of the Tranquebar Missionary communicated by the Rev. Messrs John and Rottler, Copied April 4,1804" ... (T. V. Mahalingam, Mackenzie Manuscripts, Volume I, University of Madras, 1972, Page 142); William Taylor, Catalogue Raisonne Oriental Manuscripts in the Govt. Library, Madras, 1860) Vol. I, No. 798, Page 278.

10. This (D3180) has the appearance of a fairer copy more lieusurely made than the foregoing (D 3762). This is a duplicate of the foregoing

இது 4-4-1804இல் பெயர்த்தெழுதப்பட்டது என்பதும், தரங்கம்பாடியி லிருந்தது அச்சுவடி என்பதும் வியப்புக்குரியதாகும்.

இதனாலும் பெரியகோவில் மராத்திக்கல்வெட்டு வெட்டி முடிந்த அண் மைக்காலத்திலேயே தமிழ்ச்சுவடி ஒன்று தரங்கம்பாடியில் இருந்தது என்று ஊகிக்க இடம் தருகிறது.

டி. 3762, டி 3180, டி. 3119 என்பவற்றைக் கால அடிப்படையில் முறைப் படுத்தலாம். இவை ஒன்று மற்றொன்றினும் செப்பமாக இருத்தலின் இந்த முடிவு எடுக்கப்பட்டது.[11]

### (4) டி 3779; டி 3190; டி 3926; ஆர் 4049

இவை நான்கும் ஒரே மாதிரியான சுவடிகளேயாகும்.

**டி 3779:** இது தஞ்சை மராட்டிய மன்னர் வமிசாவளி என்ற தலைப் புடையது; 13 பக்கங்கள் கொண்டது; பக்கத்துக்கு 40 வரிகளுண்டு. இதற்கு எம் 76 என்ற எண்ணும் கொடுக்கப்பட்டுள்ளது. இது மிகவும் சிதைந்துள்ளது. இது எம். 76 இல் உள்ள 19 சுவடிகளில் 16 ஆவது சுவடியாகும்; பக்கம் 93 முதல் 109 வரையுள்ளது.

**டி 3190:** இது மேலதின் காப்பீடு சுவடி (Restored) ஆகும். இதில் ஸ்ரீ ராம செயம் என்று தொடக்கத்தில் உள்ளது. இது துரைசாமிப்பிள்ளை என்பவரால் 28-2-1891 இல் காப்பீடு செய்யப்பட்டது என்ற குறிப்புக் காணப்பெறுகிறது.

**டி 3926:** இது 16 பக்கங்கள் கொண்டது: பக்கத்துக்கு 30 வரிகள் உண்டு. பெரிய வால்யூம் எண் IV இல் பக்கம் 277 முதல் 292 வரை எழுதப்பட்டுள்ளது. இச்சுவடி பல இடங்களில் சிதைந்துள்ளது. இது 1838 இல் காப்பீடு செய்யப் பட்டது. இஃது ஒரு கடிதம் ஆகக் கருதப்படுகிறது.

"அமுருதசிங்கு மகாராசா இராட்சிய பாரம் பண்ணுகிற னாளையிலே சரபோசி மகாராசா அவர்கள் கூட்டத்தார் அமுருதசிங்கு மகாறாசாவுக்கு இராட்சியம் செல்லாதென்பதைப் பத்தியும் சரபோசி மகாராசாவுக்குச் செல்லு மென்கிறதை ஒப்பிவிக்கும்படியாகவும் கனம் பொருந்திய மகாராசஸ்ரீ கும்பினி யாரவர்களுக் கெழுதிக்கொடுத்த இயாதியைப்[12] பார்த்த விடத்தில் பெதற்ந்து[12அ] எழுதப்பட்டது"

---

document and has the appearance of being a copy made of it - (A Descriptive Catalogue of the Tamil Manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras, Vol, VIII.

11. The first (marked 17-6-25) bears the autograph of Col. Mackenzie ... The second Manuscript (marked 17-5-34) is a copy from the first and is more legible. The third (17-4-49 D 3190) is an incomplete copy with slight variations; it has not been noticed by Wilson or Taylor" - (T. V. Mahalingam, Page 142)

12. இயாதி - ஆழ்ந்த கருத்துடன் எழுதப்பட்டது 12அ. பெதற்ந்து - பெயர்த்து

என்று இச்சுவடியின்[13] தொடக்கத்தில் காணப்படுகிறது. இதனால் சரபோஜி கட்சியைச் சேர்ந்தவர்கள் கும்பினியாருக்கு அமர்சிங்குக்கு எதிராக ஒரு கடிதம் எழுதினர் என்றும், அமர்சிங்கைக் காட்டிலும் சரபோஜிக்கே அரசுரிமை பெற உரிமையுண்டு என்று வலியுறுத்தி எழுதினர் என்றும் தெரிகிறது.

இந்த யாதி (ஆழ்ந்த கருத்து) பெயர்த்தெழுதப்பட்ட நாள் 8-3-1810 ஆகும்.[14] இது தரங்கம்பாடியில் தின்மாற்கு (Denmark) அரசரின் அலுவலர் வீட்டிலிருந்த ஏட்டை நோக்கிப் பிரதி செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

இச்சுவடியில் மூலபுருஷர் புதாசிராசா வென்று கூறப்பட்டுள்ளது; (இவர் பாவாஜியாகலாம்). புதாசிராசர் மக்கள் இருவர்; மாளோசி, விட்டோசி. மாளோசியின் மகன் சாசி. "அவர்களுடைய வயத்திலே மூத்த பெண்சாதியுடைய மகன் யேகோசி ராசா (............)[15] பெண்சாதியுடைய மகன் சிவாசி ராசா." யேகோசி ராசா தஞ்சாவூரைக் கைப்பற்றினார். அவருக்குப் பிறகு அவருடைய மக்கள் மூவர், சாசி ராசா, சரபோசி, துக்கோசி முறையே ஆட்சி செய்தனர். துக்கோசிக்குப் பட்டத்தரசியின் மகன் பாபா சாயபு. கத்தியைத் தொட்டு விவாகம் பண்ணின பெண் பிள்ளைக்கு மூன்று மக்கள். முதலாவது அண்ணா சாயபு; இரண்டாவது நானாசாயபு; மூன்றாவது பிரதாபசிங்கு. துக்கோசிக்குப் பிறகு பாபாசாயபு பட்டம் எய்தினார். இவர் ஓராண்டு ஆட்சி செய்தார். இவருக்குப் பிறகு புதாசி ராசாவின் பேரப்பிள்ளை கெங்காசி ராசா, பாபா சாயபுடைய பெண்சாதி சுசான்பாயி சிறிது நாள் ஆட்சிபுரிந்தனர். கெங்காசி யிறந்து போனார். ஆகவே சுசான்பாயி மட்டும் ஆட்சி புரிந்தார்.[16] இவர் மூன்றாண்டுகள் ஆட்சிபுரிந் தார். சயிது என்ற கில்லேதார், கோயாசி காட்டகே என்பவருக்குச் சொல்லி யனுப்பி ஒருவருக்குக் காட்டு ராசா என்று நாமகரணம் பண்ணி அவருக்குப் பட்டம் கட்டினார்.[17] இந்தக் காட்டுராசா ஒன்றரை வருஷம் ஆட்சி செய்தார். அக்காட்டு ராசாவும் சயிதோடு பகைமை கொண்டமையால் காட்டுராசா கொல்லப்பட்டார். பிறகு பிரதாபசிம்மர் அரசரானார். சயிது, வஞ்சகமாக

---

13. G. O. M. L. Madras, Big Vol. IV, Page 277; Section 8, Account of the Mahratta Raja's of Tanjore.

14. G. O. M. L. -do- -do-

15. இச்சுவடியில் பல இடங்களில் சிதைந்துள்ளமை போல இவ்விடத்திலேயும் சிதைந்துள்ளது. இங்கு விடுபட்ட இடத்தில் "இளைய" என்றிருக்கலாம். போ. வ. ச. விலும் அதற்குரிய மெக்கன்சி சுவடிகளிலும் ஏகோஜியின் தாய் ஷாஜிக்கு முதல் மனைவியென்று குறிக்கப்பட்டமை இங்கு ஒப்பிட்டு நோக்குதற்குரியதாம்.

16. கெங்காஜி ஆட்சியெய்தியது இதில் கண்ட புதிய செய்தி (டி 3926, பக்கம் 280)

17. சரபோஜியின் மனைவி கருவுற்றதாகப் பொய்கூறிக் கொணர்ந்த பிள்ளை வரலாறும் அடுத்து இங்குக் கூறப்பட்டுள்ளது. (டி 3926 பக்கம் 281-82)

நடந்து கொண்டமையால் கொல்லப்பட்டார். பின்னர்த் துளசா அரசு கட்டி லெய்தினார்; 24 ஆண்டுகள் ஆட்சி செய்தார். இவர் ஆட்சியில் நவாபு தஞ்சை ஆட்சியைக் கைப்பற்றினார். பின்னர் லாட்டு பிக்கட்டு (Lord Pigot) வந்து துளசாவுக்குப் பழையபடி ஆட்சியை அளித்தார். இவருக்குப் பிள்ளைகள் இல்லை. ஆகையால் ஒருவரைச் சுவீகாரம் எடுத்துக் கொண்டு "ரிசிட்டென்று ஆடலிஷ்டன் கற்னல் இஷ்ட்டுட்"[18] முதலானோர் கையில் அவரை ஒப்புவித் தார்கள். சிவராயர். சூழ்ச்சி செய்து 12 பேரை விசாரிக்கச் செய்து கெவுனரை நம்பச்செய்து அமர்சிங்கை அரசனாக்கினார்.

இதுவரையிலும் ஏகோஜி முதல் அமர்சிங்கு அரசாட்சி எய்தியது வரை கூறப்பட்டன. மேல் அமர்சிங்கு அரசாட்சியின் குறைகள் கூறப்பட்டுள்ளன. அவை யாமாறு:-

(அ) கும்பினியாருக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுக்காமல் இருக்கின்றார்.

(ஆ) சிவராயர் பச்சப்ப முதலி ஆகியோர் ஏழைச்சனங்களைத் துன்புறுத்துகின்றார்கள்.

(இ) துளசாவின் இறுதிக் கடன்களைச் சாத்திரப்படிக்கு நடத்த வில்லை.

(ஈ) (சுவீகாரம் எடுத்துக் கொண்ட) அரச குமாரனைத் தன் தாயிடம் கூடச் செல்ல விடுவதில்லை; கல்வியும் அளிக்கவில்லை; வெளியிலே வரவெட்டாமல் காவலில் வைத்துள்ளனர்.

(உ) துளசாவின் பெண்டுகள் பேரிலும் சுலும்பு பண்ணுகிறார்கள்.

(ஊ) தஞ்சை நகரத்தில் ஞாயமில்லை: அநியாயம் நடப்பதால் சனங் கள் பயப்படுகின்றனர்.

(எ) அமிர்தசிங்கு ராஜா அயோக்கிய மானபடியினாலே தம்முடைய அதிகாரம் நன்றாய் நடக்க வேணுமென்று நானாவிதமாய்ச் செலவு செய்கிறார்.

(ஏ) பணமுடை காரணமாகச் சீர்மை யெல்லாம் துபாசிகளுக்கு அட மானம் வைக்கிறார்.

(ஐ) மானியவரி வீட்டுவரி போன்ற வரிகளால் மக்களைக் கொடுமைப் படுத்துகிறார்.

ஆகையால் கும்பினியார் "இந்த ஞாயம் நன்றாய் விசாரணை" பண்ண வேண்டும் என்ற வேண்டுகோளுடன் இந்தச் சுவடி முடிகிறது.

---

18. இந்நூல் பக்கம். 141 காண்க. (Resident Hudleston; Colonel Stuart)

19. ஆர் 4049 (இது தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் பெயர்த்தெழுதிப்பெறப்பட்டுள்ளது). பெயர்த் தெழுதிய சுவடியில் பக்கம் 52-54; 58; 59.

இச்சுவடியில் பல இடங்களில் சொற்கள் விடுபட்டுள்ளன. அவ்விடங்களில் டி 3926 இலும் விடப்பட்டுள்ளது.

இச்சுவடியில், "தில்லையாகிய சிதம்பரத்தில் சபாநாதருக்கும் தில்லைக் கோவிந்த ராஜருக்கும் நித்திய பூசை தடைப்பட்டது. திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்த சிவப்பிரகாச சுவாமிகள் சிதம்பரத்துக்குச் சென்று தில்லை மூவாயிரவர்க்கும் வைணவர்களுக்கும் ஏற்பட்ட சண்டையைத் தீர்த்து வைத்தார்" என்ற ஒரு செய்தி[20] (இடைப்பிறவராலாய்) "நியாயவிசாரணை செய்வது ஆட்சியாளர் கடமை" என்பதற்கு எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது.

**ஆர் 4049:** இது டி 3926 இன் காப்பீடு சுவடியாகும். இது 16 பக்கங்களுடையது. இது தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் பெயர்த்தெழுதிப் பெறப்பட்டுள்ளது.

## (5) டி 3179

இது "சோழர்க்குப்பின் இராயர் வடுகர் மராட்டியர் முதலானோர்களின் பெயர் அட்டவணை" என்ற தலைப்புடையது. இது பற்றிய குறிப்புப்பின் வருவது.[21]

"இது சோழமன்னரது ஆட்சிக்குப் பிற்காலம் இராய மன்னரது அரசாட்சி முறையினையும், அதன்பின் நாயக்க மன்னர்களுடைய பெயர் முறைமையினையும், அதன்பின் போசல மராட்டிய மன்னர்களின் ஆட்சி முறையினையும் முறையாக எடுத்துக்கூறி மெக்கன்சி துரைக்கு ஷியாரின் ஊழியராம் "வேதநாயக்கன்" என்னுமவர் எழுதிவிடுத்த முறையிலே அமைந்திருக்கின்றது. முற்றும் உள்ளது.

நான்கு பக்க அளவுடைய இச்சுவடியில் மராட்டிய மன்னர்களைப் பற்றியது பின்வருமாறு:-

"......விசையராகவ நாயக்கனுக்குப் பிறகு அவன் மகன் செங்கமலதாசு மூன்று மாத மாத்திரம் பட்டத்திலிருந்தான். அதன் பிறகு ௲௬௱௭௰௫[22] துவக்கி புசிலை[23] ராசாக்களாகிய மறாட்டியர் இறாட்சியபாரம் பண்ணிவருகிறது. அதற்கு விபரம் எப்படி யென்னில்,

மறாட்டியனாகிய எகோசி ராசா இராட்சத வருஷம் தை மீ சத்தமியில் சினேகத்தின் பேரில் தஞ்சாவூர்க் கோட்டைக்குள்ளே வந்து கோட்டையை ஆக்கிரமித்துக் கொண்டு அதுமுதல் துன்மதி மட்டும் எ வருஷம் ஆண்டார்

---

20. ஆர் 4049, பக்கம் 54-56
21. A Descriptive Catalogue of the Tamil Mss. of the G. O. M. L. Madras, 1954, Vol. IX, pp. 2838, 2839.
22. 1675 ஆம் வருஷம்
23. புசிலை - போசலே.

௨) எகோசி புத்திரன் சகசி ராசா துந்துமி முதல் விகுறுதி மட்டும் ௨௧ வருஷம் ஆண்டார். ௩) அப்பால் அவர் தம்பி சரபோசி மகாராசா கரவருஷ முதல்ச் சௌமிய வருஷம் வரைக்கும் ௰௮ வருஷமாண்டார் ௪) அவர் தம்பி துளசா[24] மகாராசா சாதாருண வருஷம் முதல் ஆனந்த வருஷம் வரைக்கும் அஞ்சுவருஷ மாண்டார். ௫) துக்கோசி[24அ] புத்திரன் எகோசி ராசா இராட்சத வருஷம் மட்டும் ௰ மாதமாண்டார். ௬) எகோசிராசாவின் பட்ட ஸ்த்திரி பட்டம் கட்டிக் கொண்டு ௨௬ மாதமாண்டார்கள். ௭) சரபோசி ராசாப்பிள்ளை யென்று காட்டுராசா வலோக்காரமாய்[25] பிங்கள காளயுத்தி வருஷ மட்டும் ௰௧ மாத மாண்டார்கள். ௮) அதின்பிறகு துளசி மகாராசாவின் பிள்ளை பறதாப்பு சிங்கு[26] மகாராசா சித்திராவுத்தி[27] வருஷ முதல் சுபானு வருஷ மார்கழி மீ மட்டும் ௨௪ வருஷம் ௯ மாதமாண்டார். ௯) பருதாப்பு சிங்கு[26] மகாராசா புத்திரன் துளசா மகாராசா சுபானுவருஷ மார்கழி மீ ௰௯௨ முதல் பிறபவ௵ மாசிமீ வரைக்கும் ௨௪௵௨ மீ ஆண்டார். ௰ அவர் தம்பி அமுறத்தசிம்ம மகாராசா பிலவங்க வருஷ முதல் காலையுத்தி வருஷம் ஆனி மீ வரைக்கும் ௰௧ வருஷம் ௪ மீ ஆண்டார். ௰௧) அப்பால் துளசா மகாராசாவின் தெத்த புத்திரன்[28] ஆன சரபோசி மகாராசாப் பட்டமாயிருக்கிறார்கள்.

இப்படியாக ராயர் ராட்சியப்பாரம் பண்ணத் துவக்கமான நாள் முதல் இது வரைக்கும் உத்தேசம்...வருஷம் இதற்குள்ளாக மேலாகச் சொன்ன...பட்ட மாண்டார்கள்."

## இணைப்பு (1) கர்னல் காலின் மெக்கன்சி (1754-1821)
### (வரலாற்றுச் சுருக்கம்)

"மெக்கன்சி சுவடிகள்"[1] எனப் பெறும் சுவடிகள் பல, சென்னையில் அரசினர் கிழக்கியல் சுவடிகள் நூலகத்தில்[2] பேணிக்காப்பாற்றப்பட்டு வருதலைத் தமிழுலகு நன்கறியும். இச்சுவடிகள் தமிழ்நாட்டு வரலாற்றாய்வாளர்கட்குப் பெரும்பேறாகவும் திகழ்கின்றன. இவற்றைப் பாடுபட்டுத்தேடித் தொகுத்தளித்துதவியவர் கர்னல் காலின் மெக்கன்சி என்பவர் ஆவர்.

---

24: 24அ. துக்கோசிக்குத் துளசா என்ற பெயருமுண்டு என்பது இதனால் உறுதிபெறுகிறது.

25. வலோக்காரமாய் - பலாத்காரமாய்; வலிமையில்.

26. பிரதாபசிங்கு 27. சித்தார்த்தி.

28. தத்துப்புத்திரன் - சுவீகாரமகன்.

1. Alphabetical Index of Tamil Manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras, Vol. III Parts I and II (Mackenzie's Collection), Madras, 1951.

2. Government Oriental Manuscripts Library

இவர் ஸகாத்லாந்து[3] நாட்டில் லூவித்தீவில்[4] ஸ்டோர்னோ[5] நகரில் கி.பி. 1754-இல் பிறந்தார். இவர் தன்னுடைய முப்பதாவது வயதில் (கி. பி. 1783இல்) இந்தியாவுக்கு வந்தார்; தன் எஞ்சிய வாழ்நாள் முழுவதும் (கி. பி. 1821வரை) இந்தியா, இலங்கை, ஜாவா ஆகிய நாடுகளில் பணியிலிருந்து, அயராதுழைத்துப் படிப்படியாகப் பணி உயர்வு பெற்று வாழ்ந்தார்; ஒருமுறைகூடத் தன்தாய் நாட்டுக்குச் செல்லவில்லை.

இவரது உடன்பிறப்புக்களில் அலெக்சாண்டர் என்பவர் கனடாவிலும், கென்னேத் என்பவர் தெரியாத ஓரிடத்திலும், தமக்கையார் மேரி என்பவர் தன் பிறந்த ஊராகிய ஸ்டோர்னோவிலும் இருந்தனர்.

இவர் 2-9-1783இல் கிழக்கிந்தியக் கம்பெனியில் பணியில் சேர்ந்து சென்னைக்கு ஒரு பொறியாளராக வந்தார். இவர் வந்தபொழுது கவர்னர் ஜெனராலாக இருந்தவர் வாரன்ஹேஸ்டிங்க்ஸ் ஆவர்.

இவர் போர் நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்பட்டுப் படிப்படியாகப் பதவியுயர்வு பெற்றார்.[6]

நில அளவையாளராகப் பணியாற்றியபொழுதும் இவர் பதவியுயர்வுகள் பெற்றார். 1810 டிசம்பரில் சென்னையில் தலைமை நில அளவையாளர்[7] ஆக நியமிக்கப்பெற்றார்.[8] 1815இல் இயக்குநர் குழுவினர்[9] மூன்று மாநிலங்களுக்கும் தனித்தனியிருந்த நில அளவையாளர் பதவியைப்போக்கி, இந்தியா முழுமைக்குமாக நில அளவையாளர் பதவியை உண்டு பண்ணின பொழுது, இவர் அப்பதவி அளிக்கப் பெற்றார்; வில்லியம் கோட்டையில்[10] தங்கியிருந்தார். பொறியாளர்களுக்குரிய நாட்படி, ஊதியம் முதலியவற்றோடு மேற்கொண்டு ஊதியமாக ரூ. 1500 பெற்றார்.

1816இல் ராயல் ஏஷியாடிக் சொசைட்டியில்[11] ஒரு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இவரது பணி 1811இல் ஜாவாவிலும் நடைபெற்றது.

இங்ஙனம் போர்ப் பணியிலும் நில அளவைப் பணியிலும் இருந்தபோதிலும் இவரது தொகுப்புப்பணி சீராக நடைபெற்று வந்தது.

---

3. Scotland 4. Island of Lewis 5. Storno
6. "He was promoted as Lieutenant in March 1789, as captain in August 1793, as Major in January 1805, as Brevet Lieutenant Colonel in October 1809, as Regimental Lieutenant Colonel in November 1810 and finally as Colonel in August 1819 (Mackenzie Ms. Part I Ed., Mahalingam)
7. Surveyor General 8. Mahalingam Page XII 9. Board of Directors
10. Fort William (Calcutta) 11. Fellow of Royal Asiatic Society.

கி. பி. 1796இல் இவர் ஈழத்துக்குச் சென்றிருந்தபொழுது ஈழம் பற்றிய செய்திகளைத் தொகுத்தார். இப்பணியில் இவருக்கு உதவியவர் காவல்லி வெங்கட போரையா[12] என்பவர் ஆவர் என்பர். மெக்கன்சி, இந்தியாவுக்குத் திரும்பியதும் தொகுப்புப்பணியில் ஈடுபட்டு ஓலைச்சுவடிகள், காகிதக் கையெழுத்துச்சுவடிகள் ஆகியவற்றைத் தேடித் தொகுத்தார். இவர் தேடித் தொகுத்தவை பெரும்பாலும் நாட்டு வரலாற்றைப் பற்றியனவேயாம்.

தான் சென்ற இடங்களில் எல்லாம் பல மொழியாளர்களுடைய உதவி இவருக்குக் கிடைத்தது. அவ்வுதவியாளர்கள் இவருக்கு உண்மையான உழைப்பு நல்கினர். அவர்களுக்கு இவர் மிகுந்த மரியாதை காட்டியதோடு அந்நாட்களுக் கேற்பச் சிறப்பாக மாதவூதியமும் அளித்தார். சில சமயங்களில் தன் ஊதியத்திலிருந்தும் அன்னோர்க்குச் சம்பளம் கொடுத்தார் என்றும் அறியவருகிறது.[13]

இப்பணியில் இவருக்கு உதவியாக இருந்தவர்கள் போரையா (புர்ரையா), காவல்லி வெங்கட லெட்சுமையா, அப்துல் அஜீஸ், பாஸ்கரையா பாபுராவ், ராமசுவாமி, சீனிவாசையா, சிவராமையா முதலியவர்கள் ஆவர். இவர்கள் தமிழ் தெலுங்கு கன்னடம் முதலிய மொழிகளில் அறிவுடையராய் இருந்தனர். இவர்கட்கு 40 வராகன் முதல் 50 வராகன் வரை மாதவூதியம் தரப்பட்டு வந்தது.

இவருடைய தொகுப்பு வேலைக்கு உதவும் பொருட்டு 1805இல் இவருடைய மாதவூதியம் 200 வராகனுடன் 100 வராகன் சேர்த்துக் கொடுக்கப்பட்டது. ஒரு சமயம் கம்பெனி இயக்குநர் குழுவினர்,[14] இவரது தொண்டினைப் பாராட்டுமுகத்தான், இவருக்கு 9000 வராகன் நன்கொடை அளித்தனர்.[15]

இத்தொகுப்புப் பணியை இடையீடின்றிச் செய்தமைக்கு இவர் செலவிட்ட தொகை 15000 பவுண்டுக்கு மேல் ஆயிற்று என்று தெரியவருகிறது.[16]

---

12. Cavelly Venkata Boriah (போரையா என்ற சொல்லை "புர்ரையா" என்றும் படிப்பவருண்டு) இதுவே சரியாகலாம். இவர் 1776 இல் பிறந்தவர்; 1803 இலேயே இறந்தார். "Kavali Venkata Borrayya"- Ramachandra Rao, C. V., Administration and Society in Medieval Andhra under the Later Eastern Gangas and the Suryavamsa Gajapatis, Manasa Publications, Nellore, 1976, Page 23 & F.n. No. 36.

13. "So enthusiastic was Mackenzie", says Sandes. "that he spent a large part of his fortune in the pursuit of his hobby"- W.C. Mackenzie, Colonel Colin Mackenzie, Page 210

14. Board of Directors 15. Mahalingam, Page XII.

16. Thewhole expense incurred by the collector is certified by Sir A. Johnston, to have amounted to upwards of £ 15,000" -Rev. William Taylor, Catalogue Raisonnee Oriental Manuscripts, Preface, Page X.

இவ்வுதவியாளர்கள் தத்தம் பகுதிக்கு உரியவர்களே யாவர்; பெரும்பாலோர் பார்ப்பனர்களே யாவர். இவர்களுள் வெங்கட லச்சுமையா என்பவர் மெக்கன்சிக்கு மொழிபெயர்ப்பாளருள் முதன்மையானவர்[17] ஆவர். இதிற் கண்ட பாபுராவ் என்பவர் தஞ்சை மராட்டிய அரசர் வரலாற்றுத் தமிழ்ச்சுவடியையும், தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள மராட்டியக் கல்வெட்டையும் எழுதியவர் ஆவர். இவர் புதுச்சேரி காரைக்கால் முதலாகிய கரையோரப் பகுதிகளில் 24-12-1816 முதல் 27-5-1817 வரை மெக்கன்சியின் பொருட்டு ஆற்றிய பணிகள் பற்றிய நாட்குறிப்பை வில்சன் என்பார் தம் நூலில் கொடுத்திருக்கிறார்.[18]

இத்தகைய வுதவியாளர்களைக் கொண்டு சேமித்த தொகுப்புக்களை, அந்நாளில் கவர்னர் ஜெனரலாக இருந்த ஹேஸ்டிங்ஸ் பெருமகனார்,[19] கிழக்கிந்தியக் கம்பெனியின் சார்பில், மெக்கன்சியின் மனைவியிடத்தில், 10,000 பவுண்டு அளித்து விலைக்கு வாங்கினார்.

இவர் தன்னுடைய அறுபதாவது வயதில் 18-11-1812இல் பெட்ரோனெல்லா ஜாகோமினா பார்டெல்ஸ் என்பவரை மணம் செய்து கொண்டார்.[20]

1820 நவம்பர்த் திங்கள் முதற்கொண்டு இவர் நோய்வாய்ப்பட்டார். 8-5-1821இல் கல்கத்தாவுக்கு அருகிலுள்ள சௌரிங்கீ[21] என்ற ஊரில் தன் இல்லத்தில் 68ஆவது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

**இணைப்பு (2) சுவிசேட கவிராய வேதநாயக சாஸ்திரி (1774-1864)**

வேதநாயகர் திருநெல்வேலியில் கி. பி. 1774இல் வேளாளர் மரபில் தோன்றிய கிறித்தவர் ஆவர். இவரது பன்னிரண்டாவது வயதில் இவரை ஸ்வார்ஷ் (Schwartz) பாதிரியார் தஞ்சைக்கு அழைத்துவந்தார்; தரங்கம்பாடியில் இருந்த ஒரு கல்வி நிலையத்தில் மாணாக்கராகச் சேர்த்து இரண்டாண்டுகள் கல்வி பயிலச் செய்தார். பின் வேதநாயகர் தஞ்சையில் நிறுவப்பட்டிருந்த தத்துவக்கல்வி நிலையத்தில் (Theological Seminary) தலைமையாசிரியராகப் பணியேற்றார். அந்நாளில் தஞ்சையில் அரசு வீற்றிருந்தவர், அருங்கலை விநோதராகிய சரபோஜி மன்னர் ஆவர். வேதநாயகர் ஒரு சிறந்த கவிஞர்.

---

17. "Venkata Lutchmeah - Head Interpreter and translator to the late Surveyor General" - W. C. Mackenzie, Colonel Colin Mackenzie, Page 211
18. "Report of Babu Rao, Mahratta Translator to Col. C. Mackenzie, of his journey to Pondicherry, Karaical along the coast, for the purpose of collecting historical information, coins, etc., from the 24th December, 1816 to 27th May 1817" - Wilson, H.H., Wilson's Mackenzie collection, pp. 599-621.
19. Marquis of Hastings, Governor General of British India.
20. Petronella Jacomina Bartels 21. Chowringhee

இவர் இயற்றிய நூல்கள் 52 என்று கூறப்படுகிறது.[1] திருவிடைமருதூரில் இருந்தவரும், அமர்சிங்கருடைய மகனாருமாகிய பிரதாபராம மஹாராசாவுக்கு வேதநாயகர் 1-2-1828இல் எழுதிய கடிதத்தில் "சிறிதும் பெரிதுமான அறுபது பொஸ்தகங்களையுண்டு பண்ணினேன்" என்றெழுதியுள்ளார். இவற்றுள் சிறந்தது "பெத்தலேம் குறவஞ்சி" என்பதாகும். பிறிதொரு சிறந்தநூல் "பேரின்பக்காதல்" என்பது. இது 1813இல் இயற்றப்பெற்றது. கி.பி. 1815இல் திருச்சியில் இந்நூலை அரங்கேற்றம் செய்தபொழுது இவருக்கு "வேதசாஸ்திரி" என்ற பட்டப்பெயர் வழங்கப்பெற்றது.[2] சுவார்ஷுக்குப் பிறகு தஞ்சையில் வாழ்ந்த பாதிரியார் கொலோஃப் (Rev. Kohlhoff) என்றவருடைய பரிந்துரை யின்படி இவருக்கு ஒரு சால்வையும், சரபோஜி மன்னரைத் திங்களொன்றுக்கு இருமுறை பார்க்கும் உரிமையும், மாதச்சம்பளமும் கொடுக்கப்பெற்றார். இவர் போசலை வமிச சரித்திரத்தைச் செய்யுள் நடையாக இசைத்துக் கொடுத்ததாகத் தெரிகிறது.[3] 1-2-1828இல் திருவிடைமருதூரில் வாழ்ந்த பிரதாப சிம்மருக்கு எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி,

"சங். கொலோப்பையரவர்கள் எனக்காக மெத்தவும் சிபாரிசு பண்ணின தின் பேரிலே மகாராசா அவர்களுண்டுபண்ணின போசலை வம்மிச ராச சரித்திரத்திலே கொஞ்சத்தூரம் விருத்தமாகப் பாடின சில பாடல்களைக் கேட்டமாத்திரஞ்செய்தார்கள்"

என்பதால் இவர் போன்ஸ்லே வமிச சரித்திரத்தைச் செய்யுள்நூலாக இயற்றினார்[4] என்பது பெறப்படுகிறது. ஒரு சமயம், சரபோஜி மன்னர் பிரகதீசுவரர் பேரில் ஒரு குறவஞ்சி பாடுமாறு கேட்டார் என்றும், வேதநாயகர் மறுத்தமையின் இருவருக்கும் மன வேற்றுமை ஏற்பட்டதென்றும் தெரிகிறது.[5] இவர், சில காலம் மெக்கன்சி துரையினிடத்தில்[6] அலுவல் பார்த்து நாட்டு வரலாற்று நூல்களைச் சேர்க்கும் பணியில் ஈடுபட்டிருந்தார்[7]. இவர் 24-1-1864 இல் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

---

1. டாக்டர். தா.வி. வேதநேசன், தஞ்சைவேதநாயக சாஸ்திரியார், கிறிஸ்தவ இலக்கிய சங்கம், சென்னை, 1956, பக். 18.

2. மேற்படி நூல் பக்கம் 36-37 3. மேற்படி நூல் பக்கம் 49.

4. இப்பாடல் நூல் இந்நாளில் கிடைத்தால் சிறப்பாக இருக்கும்.

5. ஷை நூல் பக்கம் 51—52.

6. "Vedanaigen, a Christian in the employ of Colonel Mackenzine" — Taylor William, Oriental Historical Mss. in Tamil Language Vol. II, Page 217.

7. தஞ்சை வேத நாயக சாஸ்த்திரியார் என்ற நூல் பக்கம் 55; மெக்கன்சி சுவடி டி 3762 முகப்பில் "Vedanayagam's collection from Tanjore" என்று இருத்தல் காணலாம்.

## III. திருவிடைமருதூர் மன்னர் சார்பான சுவடிகள்

அமர்சிங்கு அரசிழந்த பின்னர்த் திருவிடைமருதூரில் தங்கியிருந் தார். அவர் பரம்பரையினரும் திருவிடைமருதூரிலேயே தங்கியிருந்தனர். அவ் வரச பரம்பரையினரின் சார்பாகப் போன்சலே வமிச வரலாறு எழுதப்பட்டது. அங்ஙனம் எழுதப்பட்டவற்றுள் இரண்டு சுவடிகள் கிடைத்துள்ளன. அவை (1) திருமுடிசேதுராமன் சுவடி (2) நாகநாத மொயித்தே ராவ் சுவடி.

### (1) திருமுடி சேதுராமன் சுவடி

இது "இறாஜ சரித்திர வமுஷாவளி" என்ற பெயரில் புதுவை மேயர் திருமுடி சேதுராமன் அவர்கள் வசமிருந்த சுவடியாகும். இது 19-2-1956 இல் தஞ்சைச் சரசுவதி மகாலில் நன்கொடையாகப் பெறப்பட்டுக் காப்பீடு சுவடி எண் 1248 ஆகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இச்சுவடி 1954இல் படி யெடுக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது இறுதியில் ஒரு கையொப்பத்துக்குரிய தேதியினால் அறியக்கிடக்கிறது. இச்சுவடி தமிழ்ப் பல்கலைக் கழக அரிய கையெழுத்துச் சுவடித் துறைக்காகப் படியெடுத்துக் கொணரப்பட்டுள்ளது.

இச்சுவடி, "மத்தியார்ச்சுனத்தில் (திருவிடைமருதூரில்) மோகம் (முகாம்) செய்திருந்த றாஜேஶ்ரீ பிரதாப சிங்கஜீ றாஜேசாயபு" காலத்தில் எழுதப்பட்டது இச்சுவடியின் இறுதியில்,

"(பிரதாப சிம்ம ராஜா) சுவீகாரம் செய்து கொண்ட காலம் சகம் 1770 கிறிஸ்து 1849 ஜனவரி 15 ஆம் நாள்"

என்றுள்ளது. மேலும், இதில் பக்கம் 3இல்,

"இது சாலி வாகன செக்கம்[1] 1771 செல்லா நிண்ட[2]சவும்மிய வருஷம் வையாசி மீ 2க்குச் சரியான இஜ்ரி சன் கமம்சயின் மையாதீன் அலப்[3],ஜமா திலாகற்[4] மீ 18௳ கிரிஸ்து வருஷம் 1849 மே 13 ௳"

என்றுள்ளமையால் 13-5-1849இல் மூலச்சுவடி எழுதி முடிக்கப்பட்டது என அறியப்பெறும்.

அமர்சிங்கு காலம் வரையிலும் ஆட்சி செய்திருந்த அரசர் வரலாற்றை எழுதித் தருக என்று புதுச்சேரி கலெக்டர் ஆகிய ஆன்ரபிள் மேஸ்த்தர் மொம்.

---

1. செக்கம் – சகம் 2. செல்லாநிண்ட - செல்லாநின்ற
3. சன் - ஆண்டு (year); கமம்சைன் - 50; மயாதைன் - 200; அலப் - 1000;=1250
4. ஜமாதில் ஆஹர் என்ற மாசம்

பர்ன் ஆணைப்படிக்குப் பிரதாப சிங்கரின் ஒன்றுவிட்ட அம்மானாகிய வஜ ராத்மா சிவாஜி சுப்பராவு காடேராவு என்பவர், தன்னிடம் மராட்டிய மொழி யிலிருந்த "இராஜ சரித்திர வமிசாவளி" என்ற நூலைப் பார்த்துத் தமிழில் எழுதித் தந்தார் என்று தெரியவருகிறது.

தஞ்சை ஆட்சியை யிழந்து, ஓய்வூதியம் பெற்றுத் திருவிடை மருதூரில் தங்கியிருந்த அமர்சிங்கு பற்றியும், அவர் மகன் பற்றியும் இச்சுவடியில் அதிகம் எதிர்பார்க்கலாம். ஆனால் அன்னோர் பற்றி வரலாற்றில் குறிப்பிடத்தக்க சிறப்புச் செய்திகள் இல்லையென்றே சொல்லலாம்.

போன்ஸ்லே வமிச சரித்திரமாகிய மராத்திக் கல்வெட்டு மெக்கன்சி சுவடிகள் ஆகியவற்றினின்று திருமுடி சேதுராமன் சுவடி மிகுதியாக வேறு பட்டுள்ளது என்று கருதுவதற்கில்லை. எனினும் இதனுட்காணும் சிறப்புச் செய்திகள் முன்னே ஆங்காங்கு உரிய இடங்களில் அடிக்குறிப்பாகத் தரப்பெற் றுள்ளன. அவை தொகுத்துக் கீழே தரப்பெறுகின்றன:-

1. சம்பு மகாராசா முதல் ஷாஜி வரையில் போ. வ. ச. வில் ஆண்டு கள் குறிக்கவில்லை. இச்சுவடியில் அன்னோர் பிறந்த சகர யாண்டுகள் குறிக்கப்பட்டுள்ளன.

2. சரபராசா பிதிலியூர் என்கிற சமஸ்தானத்தைச் சாகீராகப் பெற் றார் என்று போ. வ. ச. (பக். 2) இல் கூறியிருக்க, இந்நூல் சகம் 1122 (கி. பி. 1200) இல் பெற்றார் என்றும், அது முதல் இவர் சாகீர்தார் என்று பேரடைந்தார் என்றும் (பக்கம் 7-8இல்) அதிகமாகவுள்ளன.

3. இரண்டாவது யேகோஜி ராஜா சாத்தாராவைப் பிடித்தது போ. வ. ச. வில் உண்டு. பிடித்துக்கொண்டு சிம்மாசனாதிபதி யானார் (பக். 10) என்பதும், அதுமுதல் மகாராஜாசாயபு என்று பேரடையலானார் (பக். 11) என் பதும் இதில் அதிகமானவை.

4. பரசோஜி வரை அதாவது எட்டுப்பட்டம் வரை இரண்டு நகரங் களின் (பிதலியூர், சாத்தாரா) சிம்மாசனாதிபதிகளாய் (பக்கம் 15) ஆண்டு கொண்டிருந்தனர்.

5. பீமசேனன் துச்சாதனனோடு போர் செய்து சிறந்தது போல ஷாஜி (பட்வாடி) போரில் சிறப்புற்றார் (பக். 35)

6. ஷாஜி ராஜாவுக்கு அல்லியெதல்ஷா தன்னுடைய ராஜ்யத்தில் பாதி கொடுத்தார் என்று போ. வ. ச. பக். 15இல் கூறத் திருமுடி சேதுராமன் சுவடி யில் (பக். 39) நாலில் ஒரு பங்கு கொடுத்தார் என்றுளது.

7. போ. வ. ச. பக்கம் 17இல் சில செய்திகள் விடுபட்டுள்ளன என் பதை மெக்கன்சி சுவடிகள் மூன்றினின்றும் அறியப்பெறும். அம் மெக்கன்சி

சுவடிகளில் கண்ட செய்திகள் சுருக்கமாகத் திருமுடி சேதுராமன் சுவடியில் பக்கம் 46 முதல் 50 வரையில் சொல்லப்பட்டுள்ளன. (போ. வ. ச. வில் பக்கம் 17 இல் கண்ட தவறுகளைத் திருத்துவதற்கு இச்சுவடியும் பயன்படுவதாக உள்ளது).

8. சம்பாஜி ராஜாவின் மனைவி சுந்தரபாயி என்று திருமுடி கூற (பக். 67) போ. வ. ச. ஜெயந்திபாய் என்று கூறும் (பக்கம் 16).

9. சிவாஜிக்குச் சயிபாயி சொயிராபாயி ஆகிய இருவரையும், ஏகோஜிக்குத் தீபாபாயி அண்ணுபாயி ஆகிய இருவரையும் ஒரே காலத்தில் திருமணம் செய்வித்தமை (திருமுடி. பக். 67)

10. விச்சகத்தி பரமாவும் ஷாஜியும் ஆகிய இருவர் மட்டுமே தனி நின்று போரிட்டமை (சேனைகள் கலந்து கொள்ளாமை) (பக்கம் 88-90.)

11. விச்சகத்தி பரமாவின் விருதுகள் மூன்று என்று போ. வ. ச. (பக்கம்29), கூறத் திருமுடியில் (பக். 91-92) ஆறு விருதுகளின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

12. சிவாஜியைச் **சிவ லங்காதிபன்** என்றமை (பக். 116)

13. அப்சல்கான் புறப்பட்டபொழுது சிவாஜி பூனாவிற்கு வந்தார் என்று போ. வ. ச. (பக். 26) கூறத் திருமுடியில் (பக். 117) பூனாவில் சிவாஜியின் மனைவி சயிபாயி ஆண்மகனைப் பெற்ற செய்தி ஷாஜி சொல்லியனுப்பியதன் பேரில் சிவாஜி பூனாவுக்கு வந்தார் என்றும், சம்பாஜி சகம் 1576 (கி.பி. 1657) இல் இறந்தார் என்றும் கூறப்பட்டன (திருமுடி பக்கம் 117).

14. கிருஷ்ணாஜி பண்டிதரை மடக்கியவன் "உண்மையாகிய மெய்க்காவலனாகிய ஒருவன் என்று போ. வ. ச. (பக்கம் 43) கூறும். திருமுடியில் **கண்போஜி** என்றுள்ளது (பக். 143); (சிவச்சத்திரபதியில் "ஏசாஜி கங்கு" **(Yesaji Kank)** என்று உளது (பக். 190); சிவதிக் விஜயம் பக்கம் 169).

15. அப்சல்கானைக் கொன்ற பிறகு நடந்த போரில் பகைவர்கள் விட்டுச்சென்ற பொருள்களில் நான்கில் ஒரு பங்கு அந்தணர்களுக்கும், எஞ்சியவற்றுள் நான்கில் ஒரு பங்கு சைனியங்கட்கும் கொடுத்தார்; பின்னும் எஞ்சியவற்றைக் "கஜானா தாக்கல்" செய்யும் படி ஆணையிட்டார் (பக்கம் 145).

16. அப்போரில் இறந்த பீம சேனாபதிக்கு இறுதிக்கடன்களை நடத்தி அப்பதவியை நெத்தோஜி பால்கருக்கு அளித்தார்.

17. கார்தலப்கானுக்கு உதவியாக வந்த ராஜா வியாக்கிரி ஒரு பெண் பிள்ளை யென்பது (பக். 188).

18. சிவாஜிக்கு இரண்டாவது மகன் பிறந்தபொழுது "குப்புறக்கவிழ்ந்து பூ பார்வையாய்ப்" பிறந்ததாகப் பக்கம் 209இல் உள்ளது.

19. சிவாஜி இறந்தது சகம் 1601 (கி.பி. 1679); வயது 52 (பக். 229)

20. சம்பாஜிக்குச் சகம் 1614 (கி. பி. 1692) இல் மகன் பிறந்தார்; சாஹாவு என்று பெயர் (பக்.229).

21. சம்பாஜியைப் பிடித்து வருமாறு காரதலப்கானை அனுப்பியது (பக். 230).

22. சாஹூவை அவுரங்கசீபு தன் மகளிடம் கொண்டு போய்க் கொடுத்தார் என்று போ. வ. ச. கூற (பக்கம் 71), திருமுடியில் அவுரங்கசீபிடத்தில் அக்குழந்தையை "பேகம்" அழைத்துச் சென்றாள் என்றுளது (பக். 240).

23. ரகோஜியை வீருபாய்க்குச் சுவீகாரம் என்று போ. வ. ச. கூற (பக். 73. வீருபாய்க்குக் குழந்தை பிறந்தது என்று திருமுடி கூறும் (பக். 248).

24. சாஹூ தனக்கு மகனின்மையால் பிரதாப சிம்மருடைய மக்களில் துளஜா அல்லது அமர்சிங்கைச் சுவீகாரம் கேட்டதாகவும், மறுக்கப்பட்டதாகவும் திருமுடி கூறும் (பக்கம் 250-251).

25. வடக்குவீதி ராஜ கோபால சுவாமி கோயிலருகில் ஏகோஜிக்கும் நாயக்க அரசருக்கும் போர் நடந்தது (பக். 268-9).

26. கும்பகோணத்துக்கருகில் தன்பெயரால் ஷாஹாக்கோட்டை என்றொரு கோட்டை எடுப்பித்தார்.

27. சரபோஜி ராஜா காலத்தில் தக்ஷண துவாரகபுரம் எனப்பட்ட ராஜ மன்னார் குடியில் ஒரு பெரிய நகரை உண்டாக்கி அதற்கு மகாதேவபட்டணம் என்று பேர் வைத்து அங்குத் துக்கோஜி யிருந்தமை; குடும்பத்தில் மனவேறுபாடு தோன்றியமையால் துக்கோஜி மகாதேவ பட்டணத்துக்குச் சென்றார் என்று போ. வ. ச. கூறும் (பக்கம். 82-83).

28. துக்கோஜி அரசரானதும் மகாதேவ பட்டணத்தைக் கள்ளர்கள் கைக்கொண்டதால் துக்கோஜி தன் மாப்பிள்ளையாகிய சுல்தான்ஜி ஜகதாப் என்பவரைக் கில்லேதாராக அனுப்பியமை (திருமுடி. பக். 290).

29. அவுரங்கசீபு இறந்தபிறகு அவருடைய மகன் காலத்தில் நிஜாம் அல்லிகான் அவுரங்கபாத் சமஸ்தானத்தின் முதன்மை அதிகாரம் பெற்றார்; அதனை "வாச யோக்கியமல்ல" என்று கருதி விஜயபுரத்துக்கருகில் ஒரு நகரமுண்டாக்கி, அயிதராபாதென்று பேர் வைத்து, அங்குத் தன்மக்கள் யானதிகான், நாசர்ஜங்கு, நிஜாமல்லிகான் என்பவருடனும், ஒரு மகள், அவள் மகனாகிய இராசத் மோதீன்கான் என்பவர்களுடனும் இருந்தார்; பின் முதல் மகன் யானதிக்கானை டில்லிக்குத் தன் வக்கிலாக அனுப்பினார்; தன் நண்பர்கள் சாதுல்லாகானை ஆர்க்காடு சுபாவுக்கும், அப்தல் என்பவரைக் கடப்பை சுபா

வுக்கும், தன் பேரனாகிய இராசத் மோஹிதின்கானை ஆதவானிக்கும், தன் மகன் நாசர் ஜங்குவைத் தேவகிரிக்கும், நிஜாம் அல்லிகானை ஜீராவுக்கும் அதி காரம் கொடுத்தனுப்பினார் (திருமுடி. பக்கம் 295-298).

30. அனவர்த்திகான் பசுபதி கோயிலில் தங்கியபொழுது பிரதாபசிங்கர் போரிட அனுப்பிய சர்தார்களின் பெயர்கள்; போர்ச் செய்திகள்; நாகோஜி ராஜா கலியுக பீஷ்மர் என்ற பேரடைந்தமை (பக். 331-337).

31. ஆர்க்காட்டுச் சுபாவை நாசர் ஜங்கு பிரதாபசிங்குக்கு அளித்தமை; அதனை முகம்மது அலிகானுக்கு மானோஜி அப்பா விட்டுவிட்டமை (235-53).

32. ஆங்கிலேயதுரைத்தனத்தார் லார்டு பிகட் (Lord Pigot) வழி துளஜா விற்கு ஆட்சியை ஒப்பித்தனர் என்பது வரலாறாகவிருக்கத் திருமுடியில் (பக்கம் 113), துளஜாவுடைய அரச பதவியை அவர் தம்பி அமரசிம்ம ராஜாவுக்கு அளிப்ப தாக முகம்மது அலிகானிடத்திலேயும் கூறித்தஞ்சைக்கு லார்டு பிகட்டு வந்தா ரென்றும் (403-405), இச்செய்தியை அமர்சிங்கிடம் கூற அவர் அதை மறுத்து (பக். 406) துளஜாவுக்கே பட்டம் தரவேண்டுமென்று கூறினாரென்றும், அங்ங னமே 1775, வைகாசி மீ 30உ துளஜா மீண்டும் அரசரானார் என்றும் திருமுடி யில் (பக். 407) உள்ளன.

33. அமர்சிங்கைத் திருச்சினாப்பள்ளிக்குப் பட்டாபிஷேகம் செய்வதாகக் கூறி லார்டு பிகட் சென்றார் (பக்கம் 408) என்றும், முகம்மது அலிகான் சர்ப்ப யாகம் செய்தமையால் லார்டு பிகட் இறந்தார் (பக்கம் 409) என்றும், துளஜா அமர்சிங்குக்குப் பவானிபாய் பார்வதிபாய் ஆகிய இருவரை மணம் செய்வித்தார் என்றும் (பக்கம் 409), தன் மகனும் தன் மகள்வயிற்றுப் பேர னும் இறந்தமையால் துளஜா வயிராக்கியம் கொண்டு, தன் தம்பியாகிய அமா சிங்குக்குப் பட்டாபிஷேகம் செய்யும்படி ஆணையிட்டார் என்றும் திருமுடி சேதுராமன் சுவடி கூறும்.

**ஒரத்தநாடு சத்திரம்**

காசிராமேசுவரப் பெருவழியில் தஞ்சாவூர்க்குத் தெற்கில் ஒரத்தநாடு என்ற சிற்றூரில் காசி காவடி கொண்டு வருகிறவர்கள் தங்குவதற்கு வசதி யாகச் சரபோஜி சத்திரம் சாவடி தேவாலயம் எடுப்பித்தார் என்று திருமுடி சேதுராமன் சுவடி கூறும் (பக்கம் 450–452).

போ. வ. ச. வில் (பக்கம் 136 - இல்) தனக்குத் திருமணம் ஆவதற்கு முன்னமே ஒரு பெண்மணியிடத்தில் சரபோஜி விருப்பம் கொண்டிருந்தார் என்றும், அவள் இவருக்கு இரண்டு குழந்தைகளையும் பெற்றாள் என்றும், இரண்டாவது பிள்ளைப் பேற்றில் அவளும் இறந்தனள் என்றும், அவ்வம்மை யார் விருப்பத்துக்கிணங்க அவ்வம்மையார் நினைவாகச் சத்திரம் முதலியன அமைத்தார் என்றும் கூறப்பட்டுள்ளன.

**போ. வ. ச. விலிருக்கத் திருமுடி சேதுராமன் சுவடியில் இல்லாதவை:-**

1. ஏகசிவராஜாவுக்கு ஹம்பீர் ராஜா யானை குதிரை முதலிய விருதுகளில் சிலவற்றை வழங்கியமையும், அவற்றைத் தம்மிடம் அலுவலில் அமர்ந்த வர்களில் சிறந்தவர்களிடம் ஒப்புவித்தமையும், தமக்குப் பிடித்த சில விருது களை ஏற்படுத்திக் கொண்டமையும், பல்லக்கு அலங்கார விருதுகளும் போ.வ.ச. வில் பக். 2 - 4 இல் கூறியிருக்கத் திருமுடியில் இவை இல்லை.

2. இரண்டாவது ஏகோஜி, மூன்றாவது ஏகோஜி என்று போ.வ.ச. வில் (பக். 9, 12, இல்) கூறியிருக்கத் திருமுடியில் ஏகோஜி என்று மட்டும் கூறி யுள்ளது.

3. போ. வ. ச. வில் (பக்கம் 5 இல்) முதல் ஷாஹஜி யென்றிருக்கத் திரு முடியில் (பக்கம் 12 இல்) ஷாஹாஜி என்றுமட்டுமுளது.

4. ஷாஹாஜி I, அம்பாஜி, பரசோஜி, பாவாஜி, – இவர்களின் மனைவியர் பெயர் திருமுடியில் இல்லை.

5. மாலோஜி ராஜாவுக்கு ஷா ஷரீப் பே அலி கலந்தர் என்ற சித்தபுருஷர் நாகின் முதலிய ஐந்து பொருள்களை அளித்தமை (போ. வ. ச. பக்.)

6. சம்பாஜி பிறந்த பிறகு ஜிஜாயிக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தனர். இவர்கள் வளர்ந்து பெரியவர்கள் ஆகவில்லை (போ. வ. ச. பக். 15)

7. போ. வ. ச. பக். 19இல் க்ஷத்திரிய வமிசங்கள் பற்றிக் கூறியவை.

8. சிவாஜிக்கு எட்டுமனைவியர், அவர்களின் பெயர், அவர்களைப் பற்றிய செய்திகள் (போ. வ. ச. பக். 65–66); மனைவியர் அறுவர் என்று மட்டும் திருமுடியிலுள்ளது. (திருமுடி பக். 227)

9. சிவாஜியின் சேது யாத்திரை (போ. வ. ச. பக். 66); தஞ்சைக் கோட்டை பற்றிய சிவாஜியின் கருத்து.

10. சம்பாஜி கைது; மிட்டாய்ப் பெட்டியில் தப்பியமை (போ. வ. ச. பக். 68)

11. ஏகோஜியின் இளைய மனைவி அனுபாயிக்கு மகள் பிறந்தமை ஏகோஜியின் சேர்த்துக் கொள்ளப்பட்ட மனைவியர்க்கு ஏழு மக்கள் பிறந் தமை (போ. வ. ச. பக். 79)

12. பாவா சாகேபை ஐந்தாவது ஏகோஜி என்றமை (போ. வ. ச. பக். 80)

13. பிரதாபசிம்மரின் மனைவிகள் ஐவர்; துக்கோஜி ராஜாவின் நாயுடு சாதி மனைவிகளிடம் குழந்தைகள் பிறந்தமை. நாநாசாகேபு; அப்பூசாகேபு; சரபோஜி ராஜாவின் மனைவியருள் அபரூபாபாயி பொய்யாகக் கருவுற்ற தாகக் கூறிப் பிள்ளை பிறந்ததாகவும் கூறி அவனுக்கு ஸவாயி ஷஹாஜி

என்று பெயர் வைத்தமை; உண்மை தெரிந்தபின் "தகுந்தபடி பரிஹாரம்" செய்தமை (போ. வ. ச. பக். 82-83)

14. பாவாசாகேபு எவரையும் நம்பாதிருந்தமை (போ. வ. ச. பக். 84)

15. பாவா சாகேபு இறந்ததும் சுஜான்பாயி பட்டம் அடைந்தமை (போ. வ. ச. பக். 85)

16. கில்லேதார் சயிதுவின் துரோகச் செயல்கள்; அவன் கொல்லப்பட்டமை (போ. வ. ச. பக். 88-90); திருமுடி. பக்கம் 319 பார்க்க.

17. பிரதாபசிம்மரின் இராமேசுவர யாத்திரை; இராமநாதபுர நிகழ்ச்சி (போ. வ. ச. பக். 91)

18. அன்னப்பா சேட்கேயின் செய்தி (போ. வ. ச. பக். 93) (திருமுடி. பக்கம் 319 பார்க்க).

19. தேவிக்கோட்டையை ஆங்கிலேயர் வென்றமை (போ. வ. ச. பக். 96)

20. "பிரதாப சிம்ம ராஜாவினால் எடுத்துக் கொள்ளப்பட்ட ஏழு ஸ்த்ரீகளில் அன்னபூர்ணாபாயி என்பவரின் வயிற்றில் ராம ஸ்வாமி கிருஷ்ண ஸ்வாமி என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தமை...இளையவரான கிருஷ்ண சுவாமி தெய்வகதியடைந்தார். மூத்த மகனான ராமஸ்வாமியின் பெயர் தான் அமர்சிங்கு" -என்று போ. வ. ச. பக். 101இல் இருக்கத் திருமுடி சேதுராமன் சுவடியில் "பிரதாப சிம்ம றாஜாவுக்கு சகம் 1672 கிறிஸ்து 1750 கனிஷ்டபுத்திரனான அமர்சிங்கு மகாறாஜா ஜென்மித்தார்" என்று மட்டும் (பக்கம் 320) உள்ளது.

21. ஆலம்கான் இறந்தது (போ. வ. ச. பக். 104)

22. சந்தாச யபு மானாஜியிடம் அடைக்கலம் அடைந்தது; அவரால் சந்தா சாயபுவைக் காப்பாற்ற முடியாமை; மானாஜி அவரைக் கொன்றாமை ஆகியவை போ. வ. ச. வில் பக். 105-6 இல் கூறியிருக்கத் திருமுடி சேது ராமன் சுவடியில் பக்கம் 365இல் "சந்தாசாயபு சேனைகளைச் சேகரித்து வரும் பொருட்டுச் சென்று கொண்டிருந்த பொழுது மானாஜி சந்தா சாயபுவை வழிமறித்துக் கொன்றார்" என்றுள்ளது.

23. நந்தராஜ் முரார்ஜி கோர்படே செய்திகள் (போ. வ. ச. பக். 108-9)

24. இராமநாதபுரத்தார் மீது படையெடுப்பு (போ. வ. ச. பக். 109-111)

25. ஐரோப்பியருக்கு வரி போட்டமை (பக். 111-112)

26. சென்னைக் கோட்டையை முசே லாலி முற்றுகை (பக். 112-113)

27. கோதாஜி காண்டகேயைச் கொன்றமை (114)

28. பிரதாப சிம்மரின் இறுதிக்காலச் செய்திகள் (போ. வ. ச. பக். 115-117)

29. நாநாசாகேபு முதலியவர்களைப் பற்றியவை (போ. வ. ச. பக். 116)

30. துளஜா காலத்தில் ராமநாதபுரத்தோடு சண்டயிடக்காரணம் - வேறுபாடு (போ. வ. ச. பக். 118; திருமுடி. பக்கம் 379-382)

31. கிலிபிலி அண்ணா - ஆரணிப்பிராமணன் செய்தி (போ. வ. ச. பக். 122)

32. ஹைதர் அலி படையெடுப்பு (போ. வ. ச. பக். 126)

33. தனக்குப் பிறகு ஆட்சி செய்யத் தனக்குப் பிள்ளையில்லாமையால் தனது தாயாதிகளுக்குள் ஒரு பிள்ளையைச் சுவிகாரமெடுத்துக் கொண்டு ஜாத கருமம் முதலியவற்றைச் செய்து சரபோஜி என்ற பெயர் வைத்துக் கர்னல் இப்ஸிலி கம்மாண்டர் உஷ்டோட் சுவார்ட்சு பாதிரி முதலியவர்களிடத்தில் ஒப்படைத்தார் என்று போ. வ. ச. வில் (பக். 126-128 இல்) கூறியிருக்கத் திருமுடி சேதுராமன் சுவடியில் (பக்கம் 412-421 இல்), துளஜா நோய் வாய்ப்பட்டார் என்றும், துளஜாவின் மனைவியரும் அரசருடைய மைத் துனரும் சிலரும் சேர்ந்து கொண்டு சகம் 1708 கி. பி. 1786 ஜனவரி 22இல் சுவீகாரம் செய்து கொண்டதாக வெளிப்படுத்தினர் என்றும், மேலே கூறிய கர்னல் துரை முதலியவர்கட்கு அறிவித்தனர் என்றும், அத்துரைகள் வியந்து அமர்சிங்குக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று முன் வந்த ஆணை அறிந்தவராதலால் அரசர் சுவீகாரம் எடுத்துக் கொள்ளமாட்டார் என்று கூறினர் என்றும், மறுநாள் துளஜாவும் அமர்சிம்மரை அரசராக நியமித்து ஆசி கூறினார் என்றும், துளஜா இறந்ததும் துளஜாவின் தாயாரும் பிறருடன் சேர்ந்து கொண்டு அமர்சிங்கு துளஜாவின் இறுதிக் கடன்களைச் செய்யக் கூடாது என்று தடுத்தார் என்றும், கர்னல் துரை "உத்தரக் கிரியை செய்யட்டும்; பிறகு கவர்னமெண்டார் உத்தரவுக்கேற்ப நடந்து கொள்ளலாம்" என்றும் கூற அங்ஙனமே அமர்சிங்கர் இறுதிக்கடன் களைச் செய்தார் என்றும், பிறகு பன்னிருவர் சாட்சியின்படி அமர்சிங்கு அரச பதவியை ஏற்று 2- 4- 1786 இல் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றார் என்றும் சொல்லப்பட்டுள்ளன.

34. சரபோஜி தந்தையின் முன்னோர் (அதாவது சரபோஜி எந்த வமிசத்தைச் சேர்ந்தவர் என்பது பற்றி) (பக். 127-18)

**அமர்சிங்கரின் ஆட்சியில் சிறப்புச் செய்திகள்**

இது திருவிடைமருதூர் சார்பான சுவடியாகலின், அமர்சிங்கரின் ஆட்சிக்காலச் செய்திகள் சிலவற்றை எதிர்பார்க்கலாம். குறிப்பிடுவதற்குரியன வாக எதுவும் இல்லை யென்னலாம்:-

1. மழையில்லை (பக். 422); குடிகள் முறையிட்டனர்; அரசர் தைரியம் சொல்லியனுப்பினார்; ஊர்களுக்கு அரசர் சவாரி போனார்; மழை பெய்தது

(பக். 424); இவர் சென்ற இடங்களிலெல்லாம் மழை பெய்தமையால் 'மழை ராஜா' என்று பெயர் வந்தது (பக். 425).

2. சமஸ்தானத்தில் புலிகளின் தொல்லை ஏற்பட்டது. அரசர் புலி வேட்டைக்குச் சென்று துப்பாக்கியால் புலியைக் கொன்றார். இங்ஙனம் 22 வேங்கைகளைக் கொன்றார் (பக். 427).

3. கம்பெனிக்குக் கட்ட வேண்டிய தொகை அதிகமாயிற்று. அதனால் தஞ்சைச் சமஸ்தானம் நான்கு சுபாக்களில் இரண்டு சுபாக்களைக் கம்பெனியார் தம்வசப்படுத்திக் கொண்டனர். அப்படிச் செய்தும் கொடுக்க வேண்டியது நிறைய இருந்தது (பக். 428-29)

4. 1795 இல் இராமேசுவர யாத்திரை (பக். 429-432); வழியில் தண்ணீர் கிடைப்பதரிதாயிற்று. இருப்பினும் அரசர் சென்றவிடமெல்லாம் மழை பெய்தது. குடி மக்கள் பலரும் யாத்திரையில் உடன் சென்றனர். இராமேசுர் வரத்தில் துலாபாரதானம் நாகப்பிரதிஷ்டை செய்தமை.

5. குடிவாரம் 100க்கு 30. இது குடிகளுக்குப் போதாமையைச் சிவராயர் கூறக்கேட்ட அமர்சிங்கு குடிவாரம் 100க்கு 40 ஆக்கினார். இது சேதுக்கரையில் கொடுத்த ஆணையாகும் (பக். 433-34)

மேற்கூறிய ஐந்தனுள் இறுதியில் கூறிய 100க்கு 40 வாரம் அமர்சிங்குக்குப் பெருமை தருவதாயுள்ளது.

**அமர்சிங்கு பதவி நீக்கத்துக்குரிய காரணம்**

துளஜாவின் மனைவியர் சரபோஜிக்குப் பட்டம் கிடைக்க வேண்டும் என்று சரபோஜியுடன் சென்னைக்குச் சென்று முயன்றனர்; ஆனால் பலனில்லை (பக்கம் 436).

டூரியன் ரீஸிடென்டாக வந்தார்; சரபோஜிக்குச் செல்வாக்கு அதிகரிக்கலாயிற்று (பக். 437)

(ஆங்கிலேயருக்குச் செலுத்த வேண்டிய) தோஃபா பணம் பாக்கியாயிற்று. ஆகவே ஆங்கிலேயர் தஞ்சைச் சமஸ்தானத்தைத் தம்வசம் ஆக்கிக் கொண்டு "அஞ்சிலொரு பங்கை" அமர்சிங்குக்குக் கொடுப்பதாகக் கூறினர். அமர்சிங்கு இதனை யேற்றுக் கொள்ளவில்லை (பக். 440-443). ரெஸிடெண்டு வந்து சமஸ்தானத்தைக் கைவசப்படுத்துவதே உறுதி என்று கூறிச் சகம் 1720 (கி. பி. 1798) ஜூன் மீ 29 உ அமர்சிங்கை அரசபதவியினின்று நீக்கினார். (பக். 445-447). சரபோஜி பட்டமெய்திய பன்னிரு திங்களுக்குப் பிறகு சரபோஜி உடன்படிக்கை செய்துகொண்டு அஞ்சிலொரு பங்கு பெற்றுக் கொள்ள இசைந்தார் (பக். 449).

## 1803 முதல் 1849 வரை

போ. வ. ச. கி. பி. 1803க்குரியது. திருமுடி சேதுராமன் சுவடி 1849இல் எழுதப்பட்டது. ஆகவே 1803 முதல் 1849 வரையிலான சில நிகழ்ச்சிகள் திருமுடியில் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு:-

1. உமாஜி ராஜாவின் மகன் ஷாஹூ ராஜா சகம் 1695 சாத்தாராவுக்கு அரசர் ஆனார். இப்பொழுது அவரே அரசராக இருக்கிறார் என்று போ.வ.ச.பக். 74இல் கூறப்பட்டுள்ளது.

மேற்கொண்டு திருமுடி சேதுராமன் சுவடியில் பின்வரும் செய்திகள் கூறப்பட்டுள்ளன.

ஷாஹூக்கு நான்கு மனைவியர்; மூன்றாவது மனைவிக்குப் பிராதாப சிம்ஹர், ராமச்சந்திரர், சாஹாஜி என்று மூவர் மக்கள்; ஷாஹூ 30 ஆண்டுகள் ஆட்சிபுரிந்து சகம் 1730 (கி.பி. 1808) இல் இறந்தார்; மூத்த மகனாகிய பிரதாப சிம்மர் ஆட்சி செய்யுங்கால் கும்பினியாரிடம் சகம் 1739 (கி.பி. 1817)இல் நாட்டினை ஒப்புவித்துச் சமஸ்தான மேல் விசாரணை மட்டும் உடையவரானார். தன் தம்பியருடன் சுகமேயிருக்கிறார். (பக்கம் 251-257)

2. சரபோஜியின் இரண்டாவது மனைவி அஹல்யா பாயி சகம் 1729 கி.பி. 1807) இல் சிவாஜியைப் பெற்றெடுத்தாள் (பக்கம் 453–454).

சிவாஜியின் முதல் மனைவி சைதம்பாபாயி சாகேபு (பக்கம் 454).

சரபோஜி காசியாத்திரையாக 1820-இல் சென்று, வங்காள தேசம் வந்து, தன் மனக்கருத்துக்களை நிறைவேற்றிக் கொள்ள ஆவன செய்தமை (பக்கம் 455-456).

சகம் 1753 இல் சரபோஜி இறந்தமை; பின்னர்ச் சிவாஜி தஞ்சாவூர்த் துர்க்காதிபத்தியம் செய்து கொண்டு நலமேயிருக்கிறார் (பக். 437-438).

3. **அமர்சிங்கும் அவர் வழியினரும்:** அமர்சிங்குக்கு அவரது மூன்றாவது மனைவியாகிய பவானிபாயி சாயபுக்குக் கி.பி.1798இல் ஒரு மகன் பிறந்தமை; அவருக்குப் பிரதாப சிங்கர் என்று பெயர் வைத்தமை (பக்கம் 459).

அமர்சிங்கு அரசிழந்த பின்னர்த் தஞ்சாவூர்க் கோட்டை மூலை மாடியில் 22 மாதங்கள் தங்கியிருந்து, பிறகு திருவிடைமருதூர்க்குச்சகம் 1722 (கி.பி.1800) இல் புறப்பட்டமை, இடைவழியில் ஆலங்குடியில் 25 நாட்களும், கும்பகோணத்தில் 57 நாட்களும், தங்கியிருந்து பின் திருவிடைமருதூரை யடைந்தமை,

அமர்சிங்கு சகம் 1724இல் (கி.பி.1802) இறந்தமை; அவர் இறந்தபொழுது சந்தன மழை பொழிந்தமை (பக். 462-465); அவருடன் அவரது நான்காவது மனைவி பார்வதிபாயி உடன்கட்டை ஏறியமை (பக்கம் 465).

அவர் இறந்த பொழுது அவரது "போகஸ்திரீ" ருக்குமணி அம்மாள் தீக் குளித்தமை (பக். 466).

அமர்சிங்கு இறந்த பிறகு "அமரலிங்கம்" என்று கொண்டாடப் பெற்றமை (பக். 467); குடிகளின் நோய்பிணிகள் தீர்க்கப்பட்டமை (பக். 467).

அமரசிங்குக்குக் கொடுக்கப்பட்டு வந்த ஓய்வூதியம் (மொயின்) 25 ஆயிரம் வராகனும் அவர் மகனுக்குக் கொடுக்கப்பட்டு வந்தமை (பக்கம் 469-470).

அமர்சிங்கின் மகன் பிரதாபசிங்கு, யமுனாபாயி சக்வார்பாயி ஆகிய இருவரை மணம் செய்து கொண்டமை (பக்கம் 471).

பிரதாப சிங்குக்குப் பிள்ளைகள் இல்லாமையால் சக்கரவர்த்தி போசலே என்பவரை 15-1-1849 இல் சுவீகாரம் எடுத்துக் கொண்டு ஏகோஜி என்று பெயரிட்டமை (பக்கம் 474).

கும்பகோணம் "சப்ஜட்ஜ்" வந்தபொழுது அவரிடம் தான் சுவீகாரம் எடுத்துக் கொண்ட செய்தி கூறியமை (பக். 476); கவர்னருக்கு எழுதவேண்டும் என்றமை.

பிரதாப சிங்கு கி.பி.1849இல் இறந்தமை (பக். 477).

பிரதாப சிங்கு தன் அம்மான் மகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறியிருந்தார். ஆனால் அவர் இறந்தார். திருமணம் செய்து கொள்ளாமல் இறந்தமையின் தான் அவருக்கே உரியவராகக் கருதிஅந்தப் பெண் கைம்பெண் தன்மையை அடைந்தாள் (பக். 478-479). (இது அவுரங்கசீபு மகள் கதையைப் போன்றுளது).

பிரதாப சிங்கு இறந்த பிறகு பிரதாப லிங்கம் என்று கொண்டாடப் பெற்றுக் குடிகளின் பிணி தீர்த்தமை (பக். 480).

சுவீகார மகனாகிய ஏகோஜி நலனே யிருக்கிறார் (பக். 481).

### (2) நாகநாத மொயித்தேவராவ் சுவடி *

இச்சுவடி 7 - 4 - 04 (1904) என்ற ஆண்டுக்குறிப்பையுடையது. நாகநாத மொயிதேராவ் சாயபு என்று ஆண்டுக்குறிப்புக்கு மேல் எழுதப்பட்டிருத்தலால் இச்சுவடி நாகநாத மொயிதேராவ் என்பவரால் எழுதப்பெற்றது என்னலாம்.

இது ஏன் எழுதப்பட்டது என்பது தெரிய வாய்ப்பில்லை.

---

*இக் காகிதச் சுவடியை அன்புகூர்ந்தளித்தவர் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தை சேர்ந்த திரு. கிருஷ்ணசாமி மாடிக்ராவ் சாகேபு அவர்கள் ஆவர். அன்னாருக்கு நன்றி.

இது 79 பகுதிகளையுடையது. 79ஆவது முற்றுப் பெறவில்லை. இதனை அடுத்து ஒருதாளாவது இருந்திருத்தல் கூடும். இடையில் இரண்டு பக்கங்கள் (16 ஆவது பகுதியின் பிற்பகுதி முதல் 22 ஆவதின் முற்பகுதி வரை) இதில் இல்லை. இதில் தற்போது 26 பக்கங்கள் உள.

இதை எழுதியவர் வரலாற்றுணர்ச்சி ஒரு சிறிதும் இல்லாதவர் என்பது தெளிவு. தானறிந்தவற்றை எழுதவேண்டும் என்று கருதிப் பாபாஜி முதல் அமர்சிங்கு வரை எழுதியுள்ளார்.

திருமுடி சேதுராமன் சுவடியில் மறைத்த செய்திகள் இரண்டு இதில் உண்டு. (1) சுஜான்பாயி ஆட்சி செய்தமை; (2) சுஜான்பாயியை வீழ்த்தி அரச குடும்பத்தில் பிறக்காத ஒருவனை அரசனாக்கியமை.

இதில்கண்ட சிறப்பான செய்தி துளஜாவே அமர்சிங்கை அரசனாக ஆக்கியது என்பதாகும்.

இது ஆய்வாளருக்குச் சிறிதும் பயனில்லாத கையெழுத்துச் சுவடியாகும்.

**திருமுடி சேதுராமன் சுவடியிலுள்ள சில செய்திகளைப் பற்றி நம்கருத்தைக் கூறுவதும் இங்குப் பொருத்தமாகலாம்.**

சகரயாண்டொடு கிறித்துவ ஆண்டும், தமிழ்நாட்டு நடைமுறைக்கேற்ப பிரபவாதி ஆண்டும், சித்திரை முதலிய மாதங்களும் ஒவ்வொரு தடவையும் கொடுத்திருப்பது காலத்தைச் சரிபார்ப்பதற்குப் பயன்படும் என்னலாம்.

முதல் ஏகோஜி இரண்டாம் ஏகோஜி என்று எண்ணொடு பொருத்தி அரசர் பெயரைக் கூறுவது போ. வ. ச. வில் இருக்கத் திருமுடியில் இல்லை. அரசரை எண்ணொடு பொருத்திக்கூறுவது வரலாற்றுக்குப் பெரிதும் பயன்தரும் ஆனால் திருமுடியில் கூறாமைக்குரிய காரணம் அரசுரிமை இழந்த மனக்கசப் பாகலாம்.

முகமதிய சித்த புருஷரின் திருவருளால் ஷாஜி பிறந்தார் என்று போ. வ. ச. கூறியிருப்பினும், போ. வ. சவுக்கு முன்னைய நூலாகிய சிவபாரதம் குறிக்கவில்லை. ஆகையால் திருமுடியிலும் சொல்லவில்லை போலும்.

ஏகோஜி IV முதற்கொண்டு பல அரசர்கட்கும் சேர்த்துக் கொள்ளப்பட்ட மனைவியர் இருந்தமை, அன்னோர்கட்குப் பிள்ளைகள் பிறந்தமை, போ. வ. ச. வில் கூறியிருக்கத் திருமுடியில் கூறப்படாமைக்குரிய காரணம் என்ன? இங்ஙனம் பெண்கள் பலரை மனைவியராகச் சேர்த்துக் கொள்ளுதல் அந்நாளில் பரவலாக வழக்கில் இருக்க, இம்முறையைச் சுவடியை எழுதிய "வஜாராத்மா சிவாஜி சுப்பராவு காடேராவு" முற்றும் வெறுத்தவர் ஆதல் வேண்டும்; அல்லது அரசர்கட்கு இழுக்கு எனக்கருதினார் போலும்! ஒரத்தநாடு சத்திரம் பற்றிய செய்தியைக் கூறுங்காலும் சரபோஜியின் வைப்பு மனைவி (முக்தாம்பாள்) என்பவரைப்

போ. வ. ச. கூறத் திருமுடி கூறாமை இதற்கு அரண் செய்யும். எங்ஙனமாயினும் (மறந்தோ மறக்காமலோ) அமர்சிங்கு இறந்தபொழுது அவரது 'போகஸ்திரீ' ருக்மிணி அம்மாள் தீக்குளித்தமை கூறியமையின், அமர்சிங்குக்குச் சேர்த்துக் கொண்ட மனைவி இருந்தமையை இவர் கூறாமற் கூறினார் என்பது வெளிப் படை.

பெரும்பான்மையான வரலாற்றுச் செய்திகள் (Historical events) திரு முடியில் கூறப்படவில்லை. இச்சுவடி எழுதிய காடேராவுக்கு அவற்றில் நாட்டம் இல்லாமை அல்லது வரலாற்று உணர்வு இல்லாமை காரணம் ஆகலாம்.

அமர்சிங்கு அவர் வழியினர் ஆகியோரைக் தெய்வத்தன்மை வாய்ந்தவர் என்று காட்டவேண்டும் என்பதே இவர் குறிக்கோள் எனக்கருதலாம். அமர்சிங்கு சென்ற விடமெல்லாம் மழை பெய்தமை, அமர்சிங்கு இறந்தபொழுது சந்தன மழை பெய்தமை, அமர்சிங்கும் அவர்மகனும் இறந்தபின்னர்த் தெய்வமாகப் போற்றப் பெற்றமை ஆகியவை இக்கருத்தை வலியுறுத்தும்.

அமர்சிங்கு சார்பான சுவடியாகையால் அமர்சிங்கின் பிறப்பு முதலியன மறைக்கப் பட்டன என்று கருதலாம்,

சுஜான்பாயி ஆட்சி செய்தமை கூறப்பெறவில்லை, பெண்பிள்ளை ஆட்சி செய்ததாகக் கூறுவது பெருமைக்குறைவாகக் கருதினர் போலும், இதற்கேற்ப மேலே குறிப்பிட்ட நாகநாத மொயித்தே ராவு சுவடியில் 43ஆவது பகுதியில் "ஸ்திரீயானவள் ராஜ்யம் செய்கிறதாவது; ஷியார் குழந்தையைக் கொண்டு வந்து பட்டம் கட்ட வேணும்" என்றுள்ளமை பெண் அரசாள்வதைச் சிலர் விரும்பவில்லை என்பதைக் குறிப்பிடுவதாக வுளது.

பிரதாப சிம்மர் ஆட்சியிறுதி வரையிலுள்ள செய்திகள் பெரும்பாலும் போ. வ. ச. வை யொட்டியே உள்ளன. எஞ்சிய பகுதி அமர்சிங்கு சார்பாகக் கூற வேண்டும் என்று கருதியே அதற்கேற்ப எழுதப்பெற்றது.

---

## IV. சிவாஜி வரலாறு கூறும் மராட்டிய நூல்கள்

### 1. சபாஸத் (Sabhasad Bakhar)*

சிவாஜியின் வரலாறு கூறும் மராட்டிய நூல்கள் ஏறத்தாழ ஒன்பது கிடைத்துள்ளன. அவற்றுள் காலத்தால் முற்பட்டது அல்லது முதலாவதாகக் கருதப்படுவது கிருஷ்ணாஜி அனந்த் சபாசத் (Krishnaji Anand Sabhasad) என்பவர் எழுதிய "சிவச் சத்திரபதி சென் சரித்ரா" என்பதாகும்.

இது ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. சென்ற நூற்றாண்டின் இறுதியில் ஜகந்நாத் லக்ஷ்மன் மங்கர் (Jagannath Lakshman Mankar) என்பார் தனக்குக் கிடைத்த ஒரே சுவடியைக் கொண்டு ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இது கே. என். சனே (Sane ) என்பர் வெளியிட்ட மராட்டிய நூலின் மொழிப் பெயர்ப்பாகும். இவ் ஆங்கில மொழி பெயர்ப்பைச் செப்பம் செய்ய வுதவியவர்கள் பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் (Jadunath Sarkar) அவர்களும், குப்தே (B.A. Gupte) அவர்களும் ஆவர் என்று அதன் முன்னுரையால் அறியப்பெறும்.

கிருஷ்ணாஜி அனந்த் சபாஸத் என்பவர் சிவாஜியின் இரண்டாவது மகனாகிய ராஜாராமின் அலுவலர்களுட் சிறந்தவராவர்; ராஜாராமின் ஆணையின்படி இந்நூலைச் செஞ்சியில் 1697இல் இயற்றினார். சிவாஜி இறந்த பிறகு பதினாறாண்டுகள் கழித்து எழுதப்பட்ட போதிலும் இந்நூலைச் சிவாஜியின் சமகாலத்த தாகவே கருதலாம். தான் நேரில் கண்டவற்றையும் கேட்டறிந்தவற்றையும், தொகுத்து இவ்வாசிரியர் எழுதினாரென்றும், புராண நிலையிலுள்ள செய்திகளை இவர் கூறவில்லையென்றும் அரசாங்கச் சுவடிகள் இவருக்குக் கிடைக்கவில்லை என்றும் தெரியவரும்.

இந்நூல் சுருங்கிய அளவினது. செய்திகள் இந்நூலில் கால முறைப்படி சொல்லப் பெறவில்லை. சில தவறானவை. எனினும் சிவாஜி பற்றி இது போன்று எழுதப் பெற்ற மராத்தி மொழி நூல்களில் இந்நூலே நம்பத்தக்கதாகவுளது

---

*"*Bakhar* is the metathetical form of the Arabic word *Khabar* which means news or report. In Marathi this term is used in a limited sense, namely political history of the times. The Bakhars were written to order by court writers for their masters... There are about twelve Bakhars dealing with the life and achievements of Shivaji. A few Bakhars are contemporary while a great many are of later period"— The Maratha Supremacy, P. 666.

2. ஸஹாநவ் கல்மீ (Sahānav Kalmi Bakhar)

சிவாஜியின் காலத்தில் இருந்த '.வாக்னீஸ்'' என்பவர் சிவாஜியின் காலத்து நிகழ்ச்சிகளையெல்லாம் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தவராவர். இவர் ஒரு வரலாறு எழுதினார். அது 1685இல் முற்றுப் பெற்றது. ஆனால் அது முழுமை யாகக் கிடைக்கவில்லை. கிடைத்த சில பகுதிகளை மட்டும் ஒரு தலைமுறைக்குப் பின் வாழ்ந்த கண்டோ அனாஜி மல்கரே (Khando Anaji Malkare) என்பவர் தொகுத்து இடையிடையே சில செய்திகளைச் சேர்த்து எழுதினார். இதனை வாக்னிஸ்-மல்கரே பக்கர் (Bakhar) என்று கூறுவர் (சர்க்கார் (1) பக்கம் 301).

இது ஸஹாநவ் கல்மீ பக்கர் (Sahānav Kalmi Bakhar) என்று வழங்கப் படுகிறது. இது 91 பகுதிகளையுடையது. (Sahanav = 91). இதனைப் பாரஸ் னிஸ் (Parasnis ) ''பாரத வர்ஷம்'' என்ற இதழிலும். ராஜ்வாடே (Rajwade) ''பிரபாத்'' (Prabhat) என்ற இதழிலும், ஸானே (Sane) ''காவியேதிஹாஸ்'' (Kavyetihas) என்ற இதழிலும் வெளியிட்டுள்ளனர். வாகஸ்கர் (W. Wakaskar) என்பார் பல பாட பேதங்களுடன் மிகச் சிறந்த முறையில் பரோடா (Baroda) வில் 1930 இல் அச்சிட்டு வெளியிட்டார். ஃப்ரிஸ்ஸெல் (Lt. Frissel) என்பார் 1806 இல் ராய்கரில் (Raigarh) கிடைத்த சுவடியை ஆங்கிலத்தில் மொழி பெயர்ததிருந்தார். இவ்வாங்கில மொழிபெயர்ப்பும் வாகஸ்கர் (Wakaskar) பதிப்பில் காணலாம்.

3. சிட்ணீஸ் (Chiṭṇis' Bakhar)

இது மல்ஹார் ராம் ராவ் சிட்ணீஸ் என்பவரால் எழுதப்பட்டது. ஷாஹூவின் ஆணையின் வண்ணம் 10-6-1810 இல் சிட்ணீஸ் எழுதத்தொடங்கினார் என்று இந்நூலின் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளது. இந்நூல் ஏழுபகுதிகளையுடையது. மிகப் பெரிய நூல் என்று டஃப் கூறுவர். சிட்ணீஸ் எழுதிய இந்நூற்பகுதிகளுட் பலவற்றை ஆங்கிலத்தில் பெயர்த்துச் சபாஸத் நூலோடு எஸ். என். சென் (Surendranath Sen) வெளியிட்டுள்ளார். காசிநாத் நாராயண சனே (Sane) என் பவர் சிவாஜிக்குரிய பகுதியை 1924 இல் இரண்டாவது பதிப்பாக வெளியிட் டார். சிவாஜியின் பின்னவர் பற்றியதை 1924 இல் முதன் முறையாக வெளி யிட்டார்.*

4. சிவதிக்விஜய (Shiva - digvijaya)

இது நந்தர்பர்க்கர் (P. R. Nandurbarkar), தண்டேகர் (S. K. Dandekar) என்பவர்களால் பரோடாவில் 1895 இல் வெளியிடப்பட்டது. இது 1718 இல் சிவாஜியின் சிட்ணீஸ் பாலாஜி ஆவ்ஜி (Balaji Avji) யின் மகன் கண்டோபல்லால் (Khando Ballal) என்பவரால் எழுதப்பட்டதாகக் கருதப்பட்டது. ஆனால் இதனைப் பின்னோர் ஒருவர் எழுதினார் என்று ஆய்வாளர் கருதுவர். இது பிழைகள் மலிந்தது; செய்திகள் காலமுறையில் குறிக்கப்படவில்லை என்றும் கருதப்படுகிறது. $ இதுவும் மிகப்பெரிய நூல். இதன் சில பகுதிகளின் ஆங்கில மொழி பெயர்ப்பு சபாஸத் நூலின் பிற்பகுதியில் வெளியிடப்பட்டுள்ளது.

---

* J Sarkar, House of Shivaji, Chap. 201; K.N. Sane, Page 265.

$ ''Historical anachronisms of ludicrous absurdity abound'' (Sarkar(1)Page 392)

5. சித்ரகுப்தா (Chitragupta's Bakhar)

இது சபாஸதை அடிப்படையாகக் கொண்டு விரிவாக எழுதப்பெற்ற நூல். சித்ர குப்தர், சிவாஜியின் சிட்னீஸ் ஆகிய பாலாஜி ஆவ்ஜி(Bālāji Āvji) யின் நெருங்கிய உறவினர் ஆவர். இந்நூலை எழுதியவராகிய ரகுநாத் யாதவ் என்பார், சித்ரகுப்தா என்று புனை பெயர் பூண்டார். இவர் கோலாபூரில் ஆண்ட சம்பாஜியின் வேண்டுகோட்கிணங்க எழுதினார் என்று தெரிகிறது. எனவே இந்நூல் 1760-1770 க்கு இடைப்பட்ட காலத்ததாகலாம்.

6. ஷெட் கான்கர் (Shedganvkar Bakhar)

இதுவும் சபாஸதை அடியொட்டி எழுதப்பட்டதே.

7. ராய்ரி (Rāyri)

ராய்ரி கோட்டையினின்று கிடைத்த சுவடி யொன்றுண்டு. இது ஸ்காட் வாரிங் (Scott Waring) என்பவரால் புகழப்பட்டது. இதுவும் ஆங்கில மொழி பெயர்ப்புடையது. ஜஸ்டிஸ் தெலங் (Justice Telang) என்பவர் இந்நூலைச் சிறப்பித்துக் கூறவில்லை.

8. ஜேதே ஷாகாவளி (Jedhe Shakavali)

இதில் கி. பி. 1618 முதல் 1697 வரையில் நிகழ்ந்த செய்திகளுட் சில குறிக்கப்பட்டுள்ளன. ஜேதே என்ற மரபினர் தாம் நேரில் கண்டறிந்த செய்திகளை அவை நிகழ்ந்த சமயத்திலேயே குறித்துவைத்துள்ளனர். இவை தனித்தனித் தாள்களில் குறிக்கப்பட்டு வந்தன. இவை 18- ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தொகுத்து எழுதப்பட்டன. சில குறிப்புக்கள் தவறுடையன என்று கருதப்பெறும் 1298 இல் வெளியிடப்பெற்ற. சிவாஜி நினைவு மலரில் (Shivaji Souvenir)* ஜாதுநாத் ஸர்க்கார் அவர்களின் ஆங்கில மொழி பெயர்ப்பு வெளியிடப்பட்டுள்ளது. மராட்டியில் எழுதப்பட்ட பகுதியானது திலக் (Lok. B. G. Tilak) அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டுப் பூனே பாரத இதிகாச ஸம்ஷோதக் மண்டலியினரால் (Bharath Itihas Samshodak Mandal) 1916இல் வெளியிடப்பெற்றது. கன்னோஜி ஜேதே (Kanhoji Jedhe)யும் அவர் மகன் பாஜி (Baji) யும் சிவாஜிக்கும் அவருடைய தகப்பனாருக்கும் உதவியாளராக இருந்தனர். அவர்கள் காலத்தில் நடந்த சிறந்த நிகழ்ச்சிகளே இதில் குறிக்கப் பட்டுள்ளன. இதில் 243 செய்திக்குறிப்புக்கள் உள.

9. ஜேதே கரீனா (Jedhe Kareena)

இதன் ஆங்கில மொழி பெயர்ப்பு 1928 இல் வெளியிடப் பெற்ற சிவாஜிநினைவு மலரில் அச்சிடப்பெற்றுள்ளது. இது நாகேஷ் (Nagesh) என்பவரால் எழுதப் பெற்றது. இதில் ஜேதே மரபினரோடு தொடர்புடையதாகிய சிவாஜி வரலாறு சுருக்கமாகவும், சம்பாஜி, ஷாஹூ, ராஜாராம் ஆகியவர்களின் செய்திகள் பெயரளவில் (இரண்டு பக்கங்களிலும்) கூறப்பெற்றுள்ளன.

---

* Editor - Sardesai, G.S. Publisher, Kesav Bhikoji Dhavole, Girgaum, Bombay, Shake 1849.

## V வடமொழி நூல்கள்

**1. சிவபாரத சரித்திரம்:** *(வடமொழியும் தமிழும்)*

சிவபாரத சரித்திரமென்னும் வடமொழி நூல் சிவாஜியின் அரசவைக் கவிஞராகிய **கவீந்திர பரமானந்தர்**[1] என்பவரால் இயற்றப்பெற்றது. வடமொழிச் சுவடிகள் நான்கு (டி 4223-4226) தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் உள்ளன. இந்த வடமொழிப் பகுதி, மராத்தி மொழிபெயர்ப்புடன் 1927இல் திவேகர் (S.M. Diveker) என்பவரால் பூனாவில் வெளியிடப்பெற்றது. இது போன்று வேறொரு சுவடியைக்கொண்டு 1930இல் பூனாவில் **ஆனந்த ஆசிரம வெளியீடாகவும்** வெளிவந்துள்ளது.

இந்நூல் 32 அத்தியாயங்கள் வரை யுள்ளது. 32ஆவது அத்தியாயம் ஒன்பதாவது செய்யுளுடன் முடிகிறது.

தஞ்சைச்சரசுவதி மகால் நூல் நிலையத்தில் சிவபாரதத் தமிழ்ச் சுவடியும்[2] உள்ளது. தமிழ்ச் சுவடிகளின் பிரிவில் டி 630 எம் 214 என்ற எண் கொண்ட தனிப் பிரதி மட்டும் உள்ளது. இதுவும் மேற்கண்ட வடமொழிச் சுவடி போன்றே 32 அத்தியாயங்களுடன் உள்ளதாகும். இவ்வோலைச்சுவடி 5-2-1920 இல் காகிதத்தில் பெயர்த் தெழுதப்பட்டுள்ளது; அதன் காப்பீடு எண் 217 ஆகும்.

இத்தமிழ்ப் பகுதி 1972இல் தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத் துணை நூலகர் திரு. ம. சீராளன் அவர்களால் சரசுவதி மகால் நூல் நிலைய வெளியீடாக வெளியிடப் பெற்றுள்ளது.

தஞ்சையில் ஆட்சிபுரிந்த முதலாம் சரபோஜி (கி.பி. 1710-1728) காலத்தில் இந்நூல் தமிழாக்கம் செய்யப்பட்டது என்று சிவபாரதம் (தமிழ் ஆக்கம்) முன்னுரையினின் றறியப்பெறும். இதற்குத் தகுந்த ஆதாரம் கொடுக்கப் பெறவில்லை.[3]

"சிவாஜியைக் கண்டு சூரிய ராஜா அஞ்சி ஓடிப் போனதும், சிவாஜி சிருங்கார்பூரில் தங்கியிருந்தார்" என்கிற வரையிலும் வடமொழிப் பகுதியிலும் தமிழாக்க நூலிலும் கூறியுள்ளன.

---

1. See Jadunath Sarkar, House of Shivaji, Chapter 23, Shivaji's Poet Laureate, Pages 287 to 297.
2. சுவடியின் இருமருங்கிலுமுள்ள கட்டைகள் சித்திரவேலைப்பாடுடையவை
3. "There is also a Tamil version of it (Sivabharata), probably from this reign (Sarabhoji I) called Siva charitram" (Subramanian, Page 40)

"It ends abruptly at Canto 32, Stanza 9, in the midst of Shivaji's campaign in Dabhol in 1661"

என்பர் ஜாதுநாத் சர்க்கார் அவர்கள்.[4]

குறைப்பகுதி கிடைத்ததற்குச் சில ஆண்டுகட்குப் பின்னர், கவீந்திரருடைய நூல் போன்று ஒரு நூல் கிடைத்தது. ஆனால் அது சம்போஜியின் வரலாறு கூறுவதாக இருந்தது. அது கோலாபூரில் ராஜோபாத்யாயரது குடும்பத்தாரிட மிருந்தது.

அடுத்துப் பரோடா கீழ்த்திசை நூலகத்தில்,[5] 1940இல் 215 பக்கங்கள் கொண்ட உதிரி ஏடுகள் கிடைத்தன. இவற்றுள் 78 பக்கங்கள் - வரிசையாக அமைந்த 13 அத்தியாயங்களும் 872 பாடல்களும் உடைய பகுதி - சிவாஜியைப் பற்றிப் பரமானந்தர் எழுதியதாகக் காணப்பட்டது. எஞ்சிய பகுதியில் 137 பக்கங்கள் கவீந்திரருடைய பெயரர் இரண்டாம் கோவிந்தர் எழுதியவையாகவும், தொடர்பற்றவையாகவும், பல பக்கங்கள் இல்லாமலும் காணப்பட்டன. இவ ற்றை ஜி. என். சர்தேசாய் அவர்கள் கெயிக்வாட் கீழ்த்திசை வரிசையில்[6] "பரமா னந்த காவியம்" என்ற பெயரில் அச்சிட்டுள்ளார்.

இச்சுவடியிலிருந்து இப்புலவர் குடும்பத்தைப் பற்றிய சில தகவல்கள் தெரிய வருகின்றன. இப்புலவர் குடும்பம் அஹமத்நகர் வடக்கு மாவட்டத்தில் நெவாசா (Nevasa) என்ற ஊரில் இருந்தது: அங்குக் கோவிந்தபட்டர்[7] என்ற தேசஸ்த பிராமணர் இருந்தார்; அவருக்கு 'அனந்த்' என்ற ஒரு மகன்; இவ்வ நந்தருக்குச் சிவாஜி "கவீந்திர கவீஷ்வர்" என்ற பட்டம் அளித்தார்; பின்னர்ப் "பரமாநந்தர்" என்று தம் பெயரை மாற்றிக் கொண்டார்; இவருக்கு ஸ்ரீதர், தேவத்தத்தர் என்று இரு மக்கள்; தேவதத்தருக்கு ஒரு மகன்; இரண்டாம் கோவிந்தர் என்று பெயர்; இம்மூன்று தலைமுறையினரும் கவீந்திரர் என்ற பட்டம் பூண்டனர்; இக்குடும்பத்தினருக்கு இரண்டு ஊர்கள் வழங்கப் பட்டி ருந்தன – என்பனவாம்.

கி.பி. 1666இல் சிவாஜி அவுரங்கசீபைப் பார்க்க ஆக்ராவுக்குச் சென்ற பொழுது பரமானந்தரும் சிவாஜியுடன் சென்றிருந்தார். சிவாஜி ஆக்ரா சிறை யினின்று தப்பி வந்த பொழுது பரமானந்தர் ஜெய்பூரில் கைது செய்யப்பட் டார். சிவாஜி தப்பியதற்கும் பரமானந்தருக்கும் தொடர்பின்மை யறிந்த பாதுஷா, கவிஞரைச் சிறையினின்று விடுதலை செய்தார். பின்னர் இவர் வார ணாசியில் (Benares) சில காலம் தங்கியிருந்தார்; பிறகு 1670இல் மகா

---

4. House of Shivaji, Page 287.
5. Baroda Oriental Institute Library.
6. Gaikwad's Oriental Series
7. சிவபாரத சரித்திரம், தமிழாக்கம் பக்கம் 1.

ராட்டிரத்துக்கு வந்தார். கி.பி. 1673 மார்ச்சுத் திங்களில் பொலத்பூரில் (Poladpur) இருந்தபொழுது சிவாஜி இவரைக் கண்டுள்ளார்.

கி.பி. 1674 ஜூன் திங்களில் சிவாஜியின் பட்டாபிஷேகத்துக்குப் பின்னரே, சிவாஜியின் வரலாற்றை 100 அத்தியாயங்கள் கொண்ட நூலாக எழுதுமாறு பணிக்கப்பட்டார். சிவாஜி இறந்தபொழுது 32 அத்தியாயங்கள் (32இல் 9 சுலோகங்கள்) வரையிலுமே எழுதப்பட்டிருந்தன.

இந்நூலுக்குக் கவீந்திரர் இட்ட பெயர் சூரியவம்சம் என்பதாகும். இது ஒரு அனுபுராணம் (தற்காலப் புராணம்) ஆகும்.[8]

தமிழ்ச்சுவடியில் அத்தியாயத் தலைப்பு முதல் இரண்டு அத்தியாயங்கட்கு மட்டும் தரப்பட்டிருந்தது. ஆனால் தமிழாக்கத்தை அச்சிடுங்கால் திரு ம. சீராளன் அவர்கள் வடமொழி மூலத்தை ஒப்புநோக்கி அத்தியாயம் பிரித்துள்ளார்.[9]

சம்பாஜி சிவாஜியைப் பிரிந்த கால முதற்கொண்டு சிவாஜி இறக்கும் வரையிலான வரலாறு 13 அதிகாரங்களில் உள்ளது. ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் அத்தியாயத்தின் முடிவு கூறப்பட்டதேயன்றி அத்தியாய எண் குறிப்பிடப் பெறவில்லை.

எனவே 1661 முதல் 1676 வரையிலான செய்திகள் எழுதப்பெறவில்லையென்றும், இறுதி 13 அதிகாரங்கள் சிவாஜி இறந்துபட்டபின்னரே எழுதப்பட்டனவாதல் வேண்டும் என்றும், எஞ்சிய 137 பக்கங்கள் கவீசுவரருடைய மகன் கோவிந்தர் II சம்பாஜியைப் பற்றி எழுதியனவாகும் என்றும் அறியலாம்.

சிவபாரதத்தில் மால்வர்மா என்றவர் சூரியவமிசத்தினர் என்றும், அவர் மனைவி உமாபாயி என்றும், அவருக்கு விட்டோஜி என்று ஒரு தம்பி உண்டென்றும், மகாதேவருடைய அருளால் ஹாஜி சரபோஜி என்று இரு பிள்ளைகள் பிறந்தனர் என்றும் கூறப்பட்டுள்ளன. மாலோஜியின் முன்னவர்கள் பற்றி இந்நூலில் இல்லை.

போ.வ.ச. வில் கூறியுள்ளது போல் ஷா ஷரிப் பே அலி கலந்தர் என்ற முகமதிய ஃபக்கீரின் திருவருளால் ஹாஜியும் அவர்தம்பியும் பிறந்தனர் என்ற செய்தி இந்நூலில் இல்லை.

ஹாஜி–ஜிஜாபாய் திருமணம் இதில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. ஏகோஜி துக்காபாயி திருமணம் சொல்லப்படவேயில்லை.

---

8. J. Sarkar, House of Shivaji, Page 287.
9. சிவபாரத சரித்திரம், தமிழாக்கம், முன்னுரை, பக்கம் ii

ஜிஜாபாயிக்கு ஆறு பிள்ளைகள்; சம்பாஜி சிவாஜி தவிர்த்து மற்றையோர் இறந்தனர் என்பது வரலாற்றாசிரியர்க்கு இந்நூலால் தான் தெரிய வந்தது. மெக்கன்சி சுவடிகளுள்ளும் இச் செய்தி யுள்ளது (இந்நூல் பக்கம் 20 பார்க்க).

சிவாஜி விஷ்ணுவின் அமிசம் என்று இந்நூல் கூறச் சபாசத்தில் "சம்பு மகா தேவரின் அமிசகாக விளங்கியவர் சிவாஜி" (பககம் 3) என்று உள்ளது.

சிவபாரதத்தைப்பற்றித் திரு. சி. கே. சீனிவாசன் அவர்கள் தன் நூலில் (பக்கம் 9 இல் ) பின்வருமாறு கூறியுள்ளார்.

**"Among the Sanskrit works, "SHIVA BHARAT" by the poet Paramantha is the most authentic and accurate one and it gives a very good picture of Shaji's life in the Carnatic and describes his conquests in these parts. Although the work is incomplete its historical framework "is found to be *remarkably accurate*, confirmed as it is, at places, by contemporary records Maratha or English".[10] Little confusion is noticed in the arrangements of facts and on the whole the work may be said *to embody a good account of Shahji* and Shivaji".**

இந்நூலைப் பற்றிய ஜாதுநாத் சர்க்கார்[11] கூற்றுப் பின்வருமாறு:

**"Shivaji's Court poet Paramanand (to whom he gave the title of Kavindra or Jupiter among poets) wrote a Sanskrit epic on the Bhonsle Royal house. This epic (dubbed by its modern editor with the title of Shiva Bharat) is merely a *laudatary poem* written by a Brahman *flatterer* to extol his patron's family to the seventh heaven.... The very training, mode of life and literary model of these Brahman poets made them unfit to be sober recorder of facts....the Hindu Court sycophant ascribes supernatural feats to his hero!"**

**(2) போஸல வமிசாவளி**

இது தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல் நிலையத்திலுள்ள சமஸ்கிருதச் சுவடிகளுள் ஒன்று.

பி. எஸ். எஸ். சாஸ்திரி அவர்கள் எழுதிச் சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் வெளியிட்ட சமஸ்கிருத நூல்களின் விளக்க அட்டவணையில் VII ஆவது தொகுதி பக்கம் 3291 இல் இந்நூலைப் பற்றிச் சில குறிப்புக்கள் உள்ளன.[12]

---

10. Patwardhan & Rawlinson: A Source Book of Maratha History, Page - 2
11. J. Sarkar, House of Shivaji, Page 60.
12. Though the work is known as Bhosalavamsavali one need not be under the notion that the work gives a complete genealogical list of the kings of Bhosala family. The work deals in the main Sahaji alone (1689 — 1710).

இது போசல வமிசாவளி என்று கூறப்பட்டபோதிலும், வராகராசா - ஏகராஜன் - பரசோஜி, - பாபாஜி - மாலோஜி - ஷாஜி - இவருக்கு மூன்று மக்கள் ஏகோஜி, சம்பாஜி, சிவாஜி - ஏகராஜன் மனைவி தீபாம்பாள் - அவளுக்கு மூன்று பிள்ளைகள் - மூத்தவர் ஷாஜி - இவருக்கு இரண்டு தம்பியர் என்று இந்நூல் 1-29 செய்யுட்களினின்று அறியவருகின்றது.[13]

இந்நூல் 38 பாடல்களையுடையது.

இந்நூல் ஷாஜியைப் பற்றிக் கூறும் நூல் ஆகும்.

போசல வமிசாவளியை இயற்றியவர் கங்காதர மகி என்பவராவர். குவலயா நந்தம் என்ற வடமொழி நூலுக்கு இவர் ஒருரை இயற்றியுள்ளார். அவ்வுரைக்கு முன்னுரையில் இந்நூல் இடம் பெறுவதாக உள்ளது. எனினும் இது தனி நூலாகவே கருதப்படுவதாயிற்று.

பர்னல் (Burnell) அவர்களின் புத்தக அட்டவணையில் 5021 ஆம் எண்ணாக இச்சுவடி பதியப்பட்டுள்ளது.

இந்நூலைப் பற்றி "ஸாஹேந்திரவிலாஸ" என்ற வடமொழி நூலில்[14] முன்னுரை பக்கம் 24 இல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது:-

"The Bhosala Vamsavali of Gangadhara: Tanjore Ms. 4232. This has no doubt a separate manuscript existence and has been considered even by the diligent Kuppuswami Sastri as an independent work.... Its author Gangadhara is none other than the well known Gangadharadhvarin, author of the Rasikaranjani on Appayya Dikshit's Kuvalayananda and other works".

---

13 இவ்விருபத்தொன்பது வடமொழிப் பாடல்களையும் தமிழில் மொழிபெயர்த்துதவியமையோடு இந்நூல் பற்றிய செய்திகளையும் கூறி உதவியவர், தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்து வடமொழிப் புலவர் திரு. என். ஸ்ரீநிவாசன் ஆவர்.

14. Tanjore Saraswathi Mahal Series No. 54; Ṣahendra Vilasa of Ṣridhara Venkatesa (Ayyaval); Edited with Historical Introduction and notes by Dr. V. Raghavan (1952).

## அட்டவணை 1

**போன்ஸ்லே வமிசம்** *(கால்வழி முறை)*

சம்பு (பக். 2)
|
ஏகோஜி I (பக். 2)
|
சரபராஜா I (பக். 2)
|
மகாசேனர் (பக். 3)
|
(50 பிள்ளைகள்)
ஏகசிவராஜா (மூத்தவர்) (பக். 3)
|
ராமச்சந்திரராஜா (பக். 3)
|
பீமராஜா (பக். 4)
|
ஏகோஜி II (பக். 4)
|
வராஹராஜா (பக். 4)
|
ஏகோஜி III (பக். 5)
|
பிரம்மாஜிராஜா x (அனசாவு) (பக். 5)
|
சஹஜி I x (உமாவு) (பக். 5)
|
அம்பாஜி x (ரேணுகாவு) (பக். 5)
|
பரசோஜி x (உமாவு) (பக். 5)
|
பாபாஜி x (ரேகாவு) (பக். 5)

அட்டவணை II

பாபாஜி x ரேகாலூ (பக். 6)



## அட்டவணை III

### ஏகோஜி IV

(ஏகோஜிக்கு சஹாஜி யுவராஜ பதவியும் பெங்களூர்ப் பட்டமும் சகம் 1562இல் அளித்தார் பக். 33)
(சிவாஜி கொடுத்தார் பக். 62)
சகம் 1597-இல் தஞ்சை (பக். 90)
இறப்பு சகம் 1604 (பக். 91)

மனைவியர்



## அட்டவணை IV

சிவாஜி
பிறப்பு சகம் 1551 (பக். 22)
பட்டம் சகம் 1562 (பக். 33)
எட்டு மனைவியர் (பக். 74-75)



## அட்டவணை V

**துக்கோஜி (துளஜா I)**

பிறப்பு சகம் 1598 (பக். 90) பட்டம் சகம் 1649 (பக். 95)

இறப்பு சகம் 1657 (பக். 96) மகாதேவ பட்டணத்தில் சிறிது காலம் (பக். 94)

மனைவியர் (பக். 92)



அட்டவணை VI


பிரதாப சிம்மர்
மனைவியர் (பக். 93, 94)
அஹல்யாபாயி
யமுனபாயி
சக்பார்பாயி
திரௌபதிபாயி
(பக்கம் 99)
சேர்த்துக்கொள்ளப்
பட்ட எழுவருள்
ஒருவர்
அன்னபூர்ணாபாயி
(பக்.114)
உடன்கட்டை ஏறினர்
(பக். 129)
துளஜா II
பிறப்பு சகம் 1661
(பக். 99)
பட்டம் சகம்
1685 (பக். 129)
(அட்டவணை VII
பார்க்க)
ராமசாமி
(அமர்சிங்கு
பக். 115;129)
பட்டம் சகம்
1709 (பக். 144)
கிருஷ்ண
சாமி
(பக்.115)

## அட்டவணை VII

### துளஜா II

பிறப்பு சகம் 1661 (பக். 99)

பட்டம் சகம் 1685 (பக். 129)

இறப்பு சகம் 1709 (பக். 144)

மனைவியர்



## அட்டவணை VIII

த்ரயம்பக்ஜி (பக் 140)

கங்காஜி

- பூவாஜி
  - கங்காஜி
    - சுபான்ஜி
      - பூவாஜி
      - ஷாஜி
        - சரபோஜி (140) (பட்டம் பெற்றது சகம் 1720) (பக். 149)
- தாபூஜி

மனைவியர்

- முக்தாபாய் (சேர்த்துக்கொள்ளப் பட்டவர்) (பக். 154)
- யமுனாபாய் (பக். 156)
- அகல்யாபாய் (156)
  - சுலக்ஷணாபாய் (பக். 156)
  - ராஜகுமாராபாய் (பக். 156)

# History of the Maratha Rajahs of Thanjavur
## (Mackenzie Manuscript D 3180)
### (A COMPENDIUM)

**1 Ancestors of Shahji** The first in the line of Bhosala family was Narayana from whom descended Suryanarayana.

From Suryanarayana came Manu and in his lineage was born Ikshvahu.

In his line, in Kaliyuga, Sambhu of Mt. Sambhu became the ruler of Maharashtra.

His son was Ekoji (I).

By the blessings of Lord Sambha Siva, Sarabha Raja I was born to Ekoji (I).

Sarabha Raja (I) always meditated upon Somaskanda, and got himself initiated with "Mantras". The Padsha conferred on him the jagir of Pinthalipura. The son of Sarabha Rajah was Mahasena.

Mahasena begot fifty sons and the eldest was Eka Siva Raja.

His son was Ramachandra Raja and Ramachandra's son was Bhima Raja.

Bhima Raja's son was Ekoji (II).

Ekoji Raja got possession of the fort of Satara and his son was Varaha Raja.

Varaha Raja had 55,000 cavalry and waged war witn the Padsha successfully. His son was Ekoji (III).

Ekoji (III)'s son was Bramhaji.

Brahmaji's wife was Anusa and their son was Sahaji (I).

Sahaji (I) married Umavu and they had a son called Ambaji.

Ambaji's wife was Renukavu and their son was called Parasoji.

Parasoji's wife was called Umahu and they were blessed with a son called Babaji.

Babaji's wife was Rekavu and they had two sons Maloji and Vitthoji.

Vitthoji's wife was Anu Bài. Their daughter was named Amba Bai and they had eight sons.

In those days Nizan Shahi dynasty was ruling at Deogiri and Ali Adil Shah, son of Ibrahim Shah was ruling at Vijayadurg (Bijapur) When a war broke out between them, Nizam Shahi won the war with the help of Maloji and Vitthoji and Nizam Shah, much pleased, conferred on them the "Chouth" and continued them in his service.

Maloji had no children. Hence he approached a Fakhir, Shah Shariff Ali Kalandar who, offering him two swords called Nagini and Padmini, a "Langoad", the "Panja" etc., told him that he would be blessed with two sons who should be named after him. Accordingly in Shaka 1531 (A.D.1609) a son was born who was named Shahji and another Shariffji (or Sarabhoji).

When Shahji was five years old, Maloji died in a battle between Nizam Shah and the Rajah or Kolhapur.

As Shahji and his brother were very young, they were brought up by Vitthoji with paternal care.

When he came of age, Shaji took Tukka Bai as his first wife and in Shaka 1543 (A.D.1620) he became the ruler of Satara. Then Jadaw Rao gave his daughter Jija Bai in marriage to him.

Sarabhoji (Shariffji), the brother of Shahji, was married to Durga Bai the daughter of Viswasa Rao.

The eight sons of Vitthoji were in the service of Nizam Shah.

**2 Assasination of Jadaw Rao; Birth of Shivaji & Ekoji**

Once Nizam Shah conducted a Durbar. At its conclusion while all were returning, an elephant belonging to a Surda called Gandagle, went mad and trampled many. Dattaji son of Jadaw Rao, rushed to kill the elephant. Sambhaj and Keloji, the sons of Vitthoji, intervened; but Dattaji fought with them and met with death. At once Jadaw Rao, began to fight with Sambhaji and Keloji. Shahji intervened on behalf of his cousins unsuccessfully and Sambhaji fell down dead. On hearing what had happened, Nizam Shah bade them all to leave.

Jadaw Rao was in utter confusion. Now Ali Adil Shah welcomed him to his side to fight Nizam Shah. Jadaw Rao advised him to procure the help of Jehangir. Shahji, his brother Sarabhoji, Vitthoji's sons and many other nobles of Nizam Shah gathered together and defeated the army of Ali Adil Shah. Though Johor khan killed Sarabhoji, the brother of Shahji, Shahji returned victoriously with the spoils of war to Nizam Shah, followed by Ambar Khan, the commander. Shahji was now showered with lawrels of honour.

Keloji, son of Vitthoji, entertained jealousy on Shahji and desired such. honour to be conferred on him. Ambar Khan, who grew jealous of Shahji, also pleaded on his behalf and obtained great honours for Keloji. Shahji, disliking this, retired to Satara.

Ali Adil Shah on hearing the news of the defection of Shahji tried his best to enrol him in his camp. Shahji accepted the offer and invaded the domain of Nizam Shah. Ambar Khan was utterly defeated. Shahji was conferred with half of Ali Adil Shah's dominion as Jagir. Afterwards Shahji defated one Muthe Khan and then invading Kerala and other regions bade them pay tribute to Ali Adil Shah.

While Shahji was residing at Bijapur, in Saka 1549 (A. D. 1627), his second wife Jija Bai gave birth to a son who was named Sambhaji. Four more sons were also born to them and all died in childhood.

By this time Ambar Khan was dead and Ibrahim Khan, the father of Ali Adil Shah, also expired.

Now Jehangir sent Darya Khan with an army to attack Nizam Shah.

Nizam Shah sent for Shahji and Jadaw Rao and both came to Dharagiri.

In the vicinity of Dharagiri is Shivaneri which belonged to Viswasa Rao who had a daughter named Jayanthi Bai. She was given in marriage to Sambhaji, the son of Shahji.

Now Nizam shah bade Shahji to attack Darya Khan and sent word to Jadaw Rao to have an interview witn him.

At this juncture, Jija Bai, the second wife of Shahji was pregnant. Shahji left her at Shivaneri and marched against Darya Khan. While he was engaged in war with Darya Khan, Jija Bai delivered a male child in Saka

1551 (A. D. 1629). Shahji, after vanquishing Darya Khan, returned to Shivaneri, and named the child as Shivaji as he was born at Shivaneri.

In the mean time Jadaw Rao proceeded for an interview with Nizam Shah. Futeh Khan, the son of Ambar Khan, was at the helm of affairs. He thought that he would lose influence or power if Jadaw Rao was taken in. So he advised Nizam Shah to dishonour Jadaw Rao at the time of interview and told him, that, if he should return dissatisfied, he should be put to death. Nizam Shah cosnented to this ill-conceived plan. Jadaw Rao came; he was dishonoured and while he was returning enraged, he was killed.

Shahji came to know of the fate of his father-in-law and with disgust at the foul play of Nizam Shah, left Shivaneri and went to Satara with his family.

About this time there was a severe famine in the Deccan.

When Shahji was at Satara, his first wife Tukka Bai begot a male child in Saka 1552 ( A. D. 1630) and the child was named Ekoji. (He was Ekoji IV).

**3 Shahji imprisoned**

The vanquished Darya Khan remained on the banks of the river Tapti. Having heard that Jadaw Rao was assasinated and Shahji had left for Satara forsaking Nizam Shah, he once again invaded the territory of Nizam Shah. Nizam Shah was then at Dharagiri. Now Ali Adil Shah, thinking, that if Dhargiri were to fall in the hands of Darya Khan, he had to meet with difficulties, sent his army to attack that fort. As Delhi was informed about the action of Adil Shah, Aurangazeb came to Deccan and conducted warfare in his own way. Ali Adil Shah also waged war in another quarter. Nizam Shah had no other go than to yield to Aurangazeb. Then Aurangazeb directed his army against Ali Adil Shah and camped at Deogiri.

Now Shahji reoccupied his old jagir in Nizam Shah's territories and took possession of eight forts around Devagiri. The 96 Maratha families* offered their full support to Shahji and gathered under his banner.

The Sultan at Delhi, on hearing the congregation of the Marathas under Shahji, joined hands with Ali Adil Shah and encamped at the banks of river Bhima. Shahji had to fight with them for three full years. Now Shahji had a dream. His guardian deity told him that his son alone was

---

* List of names given in the manuscript

destined to subdue the Mughals and that he should in the meanwhile make peace with them. So he stopped fighting, gave up his territories and retreated to Satara.

Later on Ali Adil Sha invited Shahji and sent him to the South along with Randulla Khan with the intention of collecting the "Topha" due to him. Vira Bhadra of Ikkeri, Kong Naik, Jagdev of Kaveripatam, Gande Rao of Srirangapatam, Vijaya Raghava of Thanjavur, Venkata Naik of Senji, Tirumalai Naik of Madurai were all conquered. Ali Adil Shah was much pleased and rewarded Shahji by giving him the new province of Bangalore which he had conquered. Afterwards Bangalore became Shahji's permanent residence. Both Shivaji and Ekoji were educated there.

Now Shivaji was twelve years old. Lord Sambasiva appeared in the dream of Shahji and directed him to send Shivaji to Poona. Though Ekoji was younger than Shivaji, he deserved better honour as he was the son of his first wife. So he thought, and made him his successor at Bangalore in Saka 1562 (A.D. 1640). He then sent Shivaji to Satara and Poona.

While Shahji was at Bangalore Ali Adil Shah summoned him several times but in vain. So he sent Mustapha Khan, one of his nobles, to fetch him. Having scented the mission of Mustapha Khan, Shahji, having his son Sambhaji to help Ekoji in his absence, went to meet Mustapha Khan. Mustapha Khan asked Shahji to be with him for about a fortnight to discuss matters of immense importance. One day at midnight, while all were asleep, Mustapha Khan bade his nobles to besiege the tent of Shahji. In the scuffle that followed, Shahji fell down wounded. He was then arrested and conducted to Bijapur.

**4**
**The release of Shahji**

On receipt of the news of the capture of his father, Sambhaji declared war on Mustapha Khan. Shivaji, on hearing this, marched his troops against Ali Adil Shah. The latter sent three of his nobles to capture Shivaji. They at first attacked Fort Sirobal and taking possession of it besieged Purandhar. Shivaji sent his general Bhim who besieged the fort Sirobal and killing Ballala occupied it. Shivaji repulsed his enemies and killed Muse Khan when he attacked a second time.

At the fort of Chitragal there was a free-booter called Vichchagathi Parama. He, with three thousand cavalry on each side, marched to Bijapur and plundered the city.

Ali Adil Shah thought that it was wise to release Shahji. Adil Shah told him that he should leave Bangalore with his family for Satara, relinquish the fort of Simhagad, and subdue Parama of Chitragal. Accordingly Shahji vacated Bangalore, released the fort of Simhagad and marching against Parama, beheaded him and returned with all his "Birudas". Adil Shah was immensely pleased and offering him all the "Birudas", permitted him to go to Satara.

**5 The Episode of Afzal Khan**

Shivaji was at Purandhar. He sent for his minister Swarna alias Sonaji Pant and told him of his intention to suppress Aurangazeb and Ali Adil Shah. Swarna gave his assent. For this purpose Shivaji selected Javli near Pratapgarh in the west coast as the basis of his operations. As there were many who owed allegiance to Adil Shah, he wanted to win them over to his side. His first aim was to capture Simhagad. Hence he inaugurated his campaign on a Vijaya Dasami day. He subdued Bhaji Raja, Krishna Raja, Janaka Raja and Chandra Raja and annexing their fort, named it Raigarh and proceeded to Javli. He conquered Pratapgarh and garrisoned these two forts. He then marched to the west coast and erecting a fort, named it "*Shiva Lanka*", ascended the throne and introduced "*Shiva Shaka*", a coronation era in his name.

Chandra Raja of Javli reported those incidents to Ali Adil Shah. The latter asked Afzal Khan, a noble of the first rank, to go with all his twelve nobles to capture and bring Shivaji. Vakil Krishnaji Pant also followed him. They were informed that Shivaji had come to Poona. Chandra Raja advised Afzal khan to proceed at once to Javli by the way of Pandarpur. While he was marching, Fateh Laskar, the chief war elephant died.

Now Shri Jagadamba, the deity worshipped by Shivaji, came in the dream of Shivaji and advised him to go to Javli. On his way to Javli Shivaji instructed his nobles to hide their armies in the woods and allow Afzal Khan to proceed unhindered. He further instructed them to massacre one and all on hearing the blast of a horn.

Afzal Khan, while marching, committed sacrilege upon Vittobha and the god vanished from the scene. Then the Khan proceeded to Tulajapur where the goddess was not to be found. Then he tried to desecrate the temple of Shambu Mahdev. The Mahrata nobles protested against his vicious act. So he desisted and marched to Pallivana where Gande Rao (deity) also vanished.

Then from his camp, the Khan sent his envoy Krishnaji Pant. The Pant asked Shivaji to give up Simhagarh, Bhima and Purandar and seek an interview with the Khan. Shivaji accepted the offer of an interview.

On his way, the Khan was attacked by Sambhaji but the latter was killed. Shivaji was informed that on hearing the news of the death of Sambhaji, Shahji also died (in Saka 1580; A.D. 1658), that the obsequies of Shahji were performed by Ekoji and that Jija Bai had come to meet him. Shivaji asked Jija Bai to remain at Pratapgarh and awaited the arrival of Afzal Khan.

At the appointed place Afzal Khan waited and on the arrival of Shivaji Afzal Khan, embraced Shivaji and stabbed him with a "bichuva". As Shivaji was clad with steel covering, he escaped unhurt. And shivaji using his steel claws (Baghnakh) tore his bowels open. Then the Khan retaliated but Shivaji killed the Khan with his "Patta". (This happened in Saka 1581; A.D. 1659).

Krishnaji Pant took his sword to fight with Shivaji. Shivaji evaded him. But Shivaji's bodyguard cut Krishnaji Pant to pieces.

As pre-arranged the horn was sounded and the army of Afzal Khan was routed. The nobles who were arrested were treated with respect and sent back to their homes. Ali Adil Shah was much distressed to hear the sad news.

**6 Battles fought**

While Shivaji was proceeding to Javli, he asked his general Netaji to be at Poona. On hearing the fate of Afzal Khan, he came to meet Shivaji.

With the help of Netaji, Shivaji annexed several forts belonging to Ali Adil Shah. Shivaji garrisoned all the forts, and remained at Panhala. Rustum Khan who was sent to defend Panhala, sent word to Ali Adil Shah that Shivaji had occupied that fort before his arrival.

Aurangazeb was kept informed of all these events. He sent a sardar Zulup Khan with a large army. He in conjunction with Rustum Khan marched towards Panhala. Shivaji defeated Zulup Khan who conducted war for sixteen times; but he was finally routed.

Aurangazeb now sent Shaista Khan with strong forces to retrieve all the forts captured by Shivaji. He arrived at Chakravathi region (Chakan) and laid siege to it. Now Ali Adil Shah sent Johor Khan of Karnool to besiege Panhala.

Jija Bai heard that Shivaji was besieged at Panhala and that the forts of Sankrama and Chakravathi were besieged by Shaista Khan. She proposed to go to Panhala to help his son. At this juncture Netaji came with Hilal

Khan. Jija Bai frowned at them for their carelessness in not going to Panhala to help Shivaji. At once they marched towards Panhala. They were held up by an army sent by Shaista Khan. In the battle that ensued, the son of Hilal Khan met with death.

Shivaji now got the vision of Tulaja Bhavani in his dream. As instructed by the goddess, Trimbak Bhasker was asked to guard the fort of Panhala and Shivaji left the fort at dead of night and marched to Vishalgarh fifty miles from Panhala. Shaista Khan sent one Mahsud to follow Shivaji and capture him. Jeswant of Pallivana and Surya Raja of Shringarpur laid siege to Vishalgarh but in vain. Then Shivaji marched to Rajghar and paid respects to his mother.

As instructed by Shivaji ,Trimbak Bhasker gave up the fort of Panhala to Johor Khan and came to Shivaji. Ali Adil Shah suspected that Johor allowed Shivaji to escape by accepting a bribe and asked him to give away what all he received. Johor Khan being annoyed, left for Kurnool. Ali Adil Shah sent an army against him and he was poisoned and killed.

Shivaji now came to know that Shaista Khan had come along with Kar Talb Khan and encamped at Rajgarh. So be ordered his army to hide themselves in the forest. Kar Talb Khan, after conquering many forts entered the forest. In the battle Kar Talb Khan lost hopes of success and at the advise of Raja Vyagri, he sued for peace and returned to the camp of Shaista Khan.

Then Shivaji went to Pallivana whose ruler was Jeswant who was an ally of Surya Raja, the ruler of Shringarpur. Shivaji proclaimed a general amnesty and marching to Chitrapulina worshipped Parasuram, the deity of the place. Then he took in his favour Surya Rao to support his army at Sangameshvar, went to the west coast, subdued the foreign merchants and accepting as tribute all the articles of trade offered by them, encamped at Rajpur.

As instructed by All Adil Shah, Surya Rao of Prabbavali, attacked Sangameshwar during night. But Mallisur repulsed the invader. Shivaji came to Sangameshwar and again pardoning Surya Rao, bade him to join hands with him. But he failed. Then Shivaji conquered the fort, named it Mandanghar and marched towards Shringarpur. Surya Raja fled away and Shivaji annexed the fort, and bade Trimbak Bhasker to be at Prabhavali. Then he remained at Shringarpur. In the southern region he then conquered

